உ

கடவுள் துணை

# அரிச்சந்திர புராணம்

நெல்லூர் வீரனென்னும்

ஆசுகவிராயரவர்க ளியற்றிய மூலமும்,

திரிசிரபுரம் - மகாவித்வான்

வி. கோவிந்தப்பிள்ளையவர்கள் எழுதிய

பொழிப்புரையும்.

இவை

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் மாஜி தமிழ்ப்பண்டிதரும்,

உரையாசிரியரும், சைவப்பிரசாரகருமாகிய

ஈக்காடு - இரத்தினவேலு முதலியார்

அவர்களால்

முன்னிருந்த வழுக்களைக் களைந்து

தளை சீர் முதலியன செவ்வனே பிரித்து

பரிசோதித்தவை.



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாசம் அச்சியந்திரசாலை,

சென்னை.

1932.

இதன் விலை] [ரூபா 3-0-0.

உ

கடவுள் துணை

# அரிச்சந்திர புராணம்

## மூலமும் - உரையும்

---

## பாயிரம்

### கணேசர் வணக்கம்

எழுசீர்க்கழி நெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்

பெரும்புகழ் பெறும்படி யருந்துயர் கெடும்படி
பிரியம்பல வரும்படி யுளம்
விரும்பிய தனம்பெற மிகும்பெறு பதம்பெற
விளங்கிய தவஞ்செய நெடும்
கரும்பவல் பெரும்பய றருங்கனி ரசங்கொடு
கவர்ந்த தெனுவந் தருள்புரிந்
திருங்கரி முகன்சிறு சதங்கையொடு கிண்கிணி
யிலங்கிய பதம்பெ றுவனே.

இ-ள். பெரிதான புகழினைப் பெறவேண்டியும், (நீங்கற்கு) அரிதான துக்கங்கள் கெடவேண்டியும், எனக்கிஷ்டமானவைகள் பலவும் சித்தியாகவேண்டியும், மனோ இச்சைப்படி திரவியலாபம் பெறவேண்டியும், நன்மை மிகுவதாகிய பெறுதற்குரிய பதவியை அடையவேண்டியும், இவைகளுக்குத்தக்க தவங்களைச் செய்யவேண்டியும், நீண்ட கரும்பு - அவல் - பெரும்பயறு - அரிய கனிகள் ஆகிய இவைகளின் ரசங்களைக்கொண்டு புசித்து அந்தரசத்தின் இனிமைபோலவே வந்து திருவருள் செய்து (ஆண்டருளும்படி) பெரிய யானைமுகக்கடவுளுடைய சிறிய சதங்கைகளோடு கிண்கிணிகளும் விளங்குகின்ற பாதங்களை வணங்கப் பெறுவேன் எ-று. 1

கலி விருத்தம்

பரிதி தன்மர பில்வரு பார்த்திவன்
விரித ரும்புகழ் மேவரிச் சந்திரன்
சரித மன்னுந் தமிழ்க்குத் துணைசெயக்
கரிமு கன்பதங் கைதொழு தேத்துவாம்.

இ-ள். சூரியனுடைய குலத்திலே பிறந்த அரசனான நீண்ட கீர்த்தியைக் கொண்ட அரிச்சந்திர மகாராஜனுடைய சரித்திரமாகப் பாடுகிற தமிழ்ப்பாடல்

களுக்கு இடையூறில்லாமல உதவிசெய்யும்பொருட்டு யானைமுகக கடவுளுடைய பாதங்களை இருகரங்களையுங் குவித்துக கும்பிட்டுத் துதி செய்யக கடவோம எ - று. 2

## பரமசிவன்

அறுசீரககழி நெடிலடியாசிரிய விருத்தம

சீாகொண்ட செழுஙகமலத திசைமுகனு
 நெடுமாலுஞ் சிவனு மென்னப
பேர்கொண்ட மூவுருவு மீருருவு
 மோருருவாயப பிறங்குந தொல்லை
நீர்கொண்ட வண்டத்தும் தாவரத்து
 சங்கமத்து நிறைந்து நின்றோன
றாாகொண்ட தாளிணைக டமைகொண்ட
 வனபினொடு தலைமேற் கொளவாம.

இ - ள். புகழினைபெற்ற அழகுபொருந்திய தாமரைமலரிலே வீற்றிருக கின்ற பிரமனும, உலகளந்தருளின விஷ்ணுவும, பரமசிவனும என்று சொலவ தாகிய பெயாகளைககொண்ட மூன்று திருவுருவங்களும, பார்வதி பரமசிவ னென்கிற இரண்டு திருவுருவங்களும ஏகரூபமாகி, விளங்குகின்ற பழமையான நீரினையுடைய கடலாற்சூழபபட்ட அண்டங்களிலும் சராசரங்களிலும பூரண மாகி நிற்கின்ற கடவுளுடைய மலா்போன்ற இரண்டு பாதங்களையும் மிகுதியான பக்தியுடனே எமது சிரத்தின்மேலே சூடிக்கொளவோம எ - று 3

புகலரிய சதுமறையாய மறைப்பொருளா
 யுபநிடத்தாயப பூத மைந்தாய
அகிலமுமாய் மனனுயிரா யணுவிலணு
 வாயவற்றி னகமாய் மேலாய்ப
பகலிரவென றறியாத பராபரமா
 யறுசமயப பகுதி யாகிச
சகலமுமாய நிஷ்களமாய் நின்றோனறன்
 செழுஙகமல சரண்புக கேமால.

இ - ள். சொல்லுதறகரிய நானகு வேதங்களாய, அந்த வேதார்த்தங்களு மாய், நூற்றெட்டு உபநிஷத்துக்களுமாய, பஞ்சபூதங்களுமாய உலகமுமாய, உலகத்திலே நிலைபெற்ற சகல பிராணிகளுமாய, அணுவுக்குளணுவுமாய், அவைகளுக்குளளுமாய, புறமுமாய, பகலென்றும இரவென்றும அறியக கூடாத பராபரவஸ்துவாகி, ஆறுவகைச சமயப்பிரிவுகளுமாய, சகல வஸ்துவு மாய, நிஷ்கள வஸ்துவுமாய நின்றவனற கடவுளுடைய அழகிய தாமரைமலர் போலும பாதங்களையே கதியாக அடைந்தோம எ - று 4

ஆல - அசை

ஆதியா யண்டபகி ரண்டத்து
    மப்புறதது மடங்கா துறறு
நீதியாய் மணியொளியும் பாற்சுவையு
    மெனவனைத்து நிறைநது நினறும
பாதியா யொன்ருகி யருவாகி
    யுருவாகிப் பரநது மல்குஞ
சோதியான் முடிசூட்டத தனதுதிரு
    வடிசூட்டத துணிநத தூயோன.

இ - ள். சராசரஙகளுககெலலாம முதலாய, இநத அணடததிலும வெளி யணடததிலும, இவவிரணடுககும அப்புறஙகளிலும அடஙகாம லிருககினற நிறைவாய், மணிகளிலே ஒளியும, பாலிலே சுவையுமபோல எலலாவறறிலும வியாபிததிருநதும, பாாவதியோடுகூடிய பாதி வடிவுமாய்த தானே ஒருமுதலு மாகி, அருவமுமாகி, உருவமுமாகிப் பரவி விளஙகுவதான பரஞசோதி ஸவ ரூபனுனவன, நான என தலைமேலே சூடிககொளவதாகத தனது திருவடி களைச சூட்டுதறகுத துணிவுகொணட பரிசுததன எ - று. 5

உமாதேவி

கனததாளவெங கயமுகனுங கநதனுமசம
    பநதனுமபா லுண்ட குமப
தனததாளே யறமவளாதத கரததாளே
    திரிபுரங்க டழலாய வேவச
சினததாளே சிறியோாகள செயதபிழை
    பொறுததிரககஞ் செய்யுஞ செயய
மனததாளே நின்கமல மலாததாளே
    யென்றலைமேல வைததாள வாயே.

இ - ள். கனமான காலகளையுடைய வெவவிய யானைமுகக கடவுளும, முருககடவுளும, சமபந்தமூாததியும பால குடிபபனவான குடஙகளபோலும கொங்கைகளை யுடையவளே! முபபததிரணடு தருமஙகளையும வளாசசெய தருளின கைகளையுடையவளே! முபபுரஙகளும வெருபபாகி வேகுமபடி கோபிததவளே! அறிவீனாகள செயகிற குறறஙகளைப பொறுததுத தயவு செய்வதான செமமையுளள மனததை யுடையவளே! உனது தாமரை மலா போலும பாதஙகளையே அடியேனுடைய சிரசினமேலே வைதது அடிமை கொளளக கடவாய் எ - று. 6

விநாயககடவுள

வையாமான முகநதானை மறவிமைபோா
    டததுரநது வாழவ தெனறும

மெய்யாம்பன் முகத்தாலும் வேதத்து
மாகமத்தும விரித்த தென்றே
மொய்யாம்பன் முகத்தானைப் பொடியாகப்
பொருதுவினை முடித்து நீண்ட
கையாமபன் முகத்தானைக் காலையினு
மாலையினுங் கருது வோர்க்கே.

இ - ள். கூர்மையான பறகளைக்கொண்ட முகத்தையுடைய யமனை ஓடும்படி ஜயித்து வாழ்வைப்பெறுவது எக்காலத்தும சத்தியமே யாகும இது பல இடங்களிலும, வேதங்களிலும, ஆகமங்களிலும, சொல்லுகின்ற தல்லவா வென்கொண்டு, வண்டுகள் மொய்க்கின்ற மதமபொருந்திய கஜமுகாசுரனைத் தூளாகும்படிச் சண்டை செய்து அவனது கொடுந்தொழிலை முடிவுசெய்த நீண்டுள்ள துதிக்கையையுடைய யானைமுகக் கடவுளைப் பகலிலும இரவிலும தியானிப்பவர்களுக்கு எ - று.

தியானிப்பவர்களுக்குச் சத்தியமேயாகும என முடிக்க. 7

முருகக்கடவுள்

பெருமையிலுங் கதிமையிலு முதுமையிலு
முகிலெனவே பிறங்கு மேனிக
கருமையிலுங் கடுநதறுகட செமமையிலும
வெமமையிலுங் கலங்கேன காலா
எருமையிலும வெள்ளாட்டுப் பாலபோது
மெனப்பிறரை யெண்ணே னன்பால
வரு * மையிலும பொருமையிலும வரதனமகன
குகனுமென றன் மனத்தி லுண்டே.

இ - ள யமனே! நீ காலதூதர்களோடு கூடியிருக்கிற பெருமையினலும, உனது வேகத்தோடுகூடின ஆரவாரத்தாலும, உன்னுடைய வயது மூப்பினுலும, மேகம்போலவே விளங்குவதான உனது நிறங் கறுத்திருப்பதினுலும, கடுமையாக அஞ்சாதிருக்கிற உன கண்கள் சிவந்திருக்கிறதினுலும, உனது உக்கிரத்தினுலும உன்னைக் கண்டு அஞ்சேன. எருமைப் பாலைப் பார்க்கிலும் வெள்ளாட்டுப்பால் கொஞ்சமாயிருந்தாலும போதுமென்றெண்ணி முருகனல்லாதோரை மதியேன யாதினுலென்றால, அனபுகொண்டு முருகனேறி வருகிற மயிலும, அம் முருகன போர்செய்தற்குரிய வேலும, எல்லா வரங்களையுந் தருகிற பரமசிவனுடைய குமாரனை முருகனும எனது மனதிலே எப்போதும் உண்டாயிருத்தலால் எ - று.

உண்டாயிருத்தலால அஞ்சேன என முடிக்க. 8

* மயில்-அயில எனபன, மையில ஐயில எனப போலியாய வந்தன.

### காளியம்மன்

*எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

*அந்தரியா மளையமலை யால காலி*
*யம்பிகைமா தரிகெளரி யாளி யூர்தி*
*வந்தரிநான் முகன்வணங்கு மலர்த்தாட் சூரி*
*வைரவிதா ருகவைரி மதங்கி நீல*
*கந்திரியோ கினிசூலி நீலி நாக*
*கங்கணிசங் கரிவிமலை காளி வால*
*சுந்தரி சாமுண்டிதிரி சூலி கோலத்*
*துணையடியென் முடிமீது சூடி னேனே.*

இ - ள். அந்தரி! யாமளை! அமலை! ஆலகாலி! அம்பிகை! மாதரி! கௌரி! யாளியூர்தி! விஷ்ணுவும் பிரமதேவனும் சமீபத்திலேவந்து வணங்குகின்ற தாமரைமலர்போலும் பாதங்களையுடைய சூரி! வைரவி! தாருக வைரி! மதங்கி! நீலகந்தரி! யோகினி! சூலி! நீலி! நாககங்கணி! சங்கரி! விமலை! காளி! வாலசுந்தரி! சாமுண்டி! திரிசூலி! யென்னும் பல திருநாமங்களைக் கொண்டவளுடைய அழகிய இரண்டு பாதங்களையும் அடியேனுடைய சிரசின்மேல் சூடிக்கொண்டேன் எ-று. 9

### கலைமகள்

*மருப்பவள வாகக்குவிந்து திரண்டு முத்து*
*வடமணிந்து குடமெனவே வயங்கிச் செம்பொற்*
*பொருப்பவள வாவளர்ந்து ததும்பி விம்மிப்*
*புடைபரந்து களபநறும் புளகக் கொங்கைத்*
*திருப்பவள வாயாளைத் தேனை மானைச்*
*செழும்படிக நிறத்தாளைத் திகழ்வெண் கஞ்சத்*
*திருப்பாளை யுலகேழு மீன்ற தாயை*
*யென திதய கமலத்தே யிருத்தி னேனே.*

இ - ள். யானைக்கொம்பு அவ்வளவாகக் குவிதலாகித் திரட்சியாய் முத்து மாலையைக்கொண்டு குடம்போலவே பிரகாசித்துச் செம்பொன் மலையின் அவ்வளவாக வளர்ந்து, அசைந்து விம்முதலாய மார்பினிடமெல்லாம் பரவின சந்தனச்சேறு பரிமளித்தலாகிய கொங்கைகளையும், அழகிய பவளம்போலும் வாயையுமுடையவளாய்த், தேன்போல் மதுரவசனியாய், மான்போல நேத்திரங்களையுடையவளாய், தளமான பளிங்குபோலு நிறத்தையுடையவளாய், விளங்குகின்ற வெண்டாமரைப் பூவிலே வீற்றிருக்கின்றவளாகிய ஏழுலகங்களையும் பெற்ற தாயான சரஸ்வதி தேவியை என்னுடைய இருதய கமலத்திலே யிருக்கச்செய்தேன் எ - று. 10

## அவையடக்கம்

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

நீர்கொள்வார பாலோடு நேருற்றால்
 பதர்கொள்வார் நெலலோ டுற்றால
நார்கொள்வார பூவுறறாலவோ கொள்வா
 ரதிறசிறிது நறையுண் டாயின்
சீர்கொளவார புன்சொலலுஞ செஞ்சொல்லுஞ்
 சோநதொன்றிற் சோப புனசொல்
யார்கொளவா ரென்பதுசற றறியாமற்
 சிறியேனு வசைக்கின் றேனே.

இ - ள். நீரையும் விலைக்கு வாங்குவாாகள் அது பாலோடு கூடியிருந்தால்; பதரையும வாஙகுவாாகள் நெலலோடு கூடியிருந்தால; நாரையும வாஙகுவார்கள் பூவோடு கூடியிருநதால்; வேரையும் வாஙகுவார்கள் அந்த வேரிலே கொஞ்சம் பரிமள முணடாயிருந்தால; அபபடியே சிறப்பாக அங்கீகாரஞ் செய்வாாகள் புனசொலலா யிருந்தாலும செஞ்சொல்லோடு கூடியிருந்தால; அப்படிச் செஞ்சொல்லோடு கூடாத எனது புனசொலலை யாவாதாம அஙகீகரிப்பார்கள? ஒருவரும் அஙகீகரியாாகளெனபதைச் சிறிதும தெரியாமல் நான நாவை அசைத்துப் பாடலானேன எ - று.

(ஆனாலும, பெரியோாகள் அஙகீகரிககவேணடுமெனபது கருதது) 11

புருடனுர்க கேநதிழையாா பொருளுரைப்ப
 தெனபபிறாதம பொருளை வெளவுந
திருடனுா் மேலவருக கறபுரைபப
 தெனசசிறிய தெளகு துள்ளிக
கருடனுர்க் குபபறவை கறபிப்ப
 தெனவனநதங கண்ணுள் ளார்ககுக
குருடனுா வழிகாடட லெனப்பெரியோா
 முன்சிறியேன் கூற லுற்றேன.

இ - ள். தன நாயகனுககு மனைவியானவள விவேகம சொல்லுவது போலவும், அனனியர்களுடைய பொருளகளையே எப்போதும் திருடுகிற கள்வனுனவன மேலோருக்குத தருமநீதி சொல்வதுபோலவும், சிறிய கொசுவானது ஊபபிப் பறந்து கருடப்பட்சிககுப பறக்குஞ் செய்கையைக் கறறுக கொடுப்பதுபோலவும, அநேகங் கண்களை யுடையவர்களுக்குக குருடன் வழிகாட்டுவது போலவும், பெரியோா முனனே மிகச் சிறியேனுகிய நான் பாடததொடங்கினேன் எ - று. 12

## ஆக்கியோன் பெயர் முதலியன

### எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

தண்கவிகைக் குரிசிலரிச் சந்திரன் றன்
சரிதமதைத் தாரணியோர் விரும்ப மெய்த்
வண்கவிஞர் வகைவகையே வகுத்து ரைத்த
வடமொழியுந் தென்மொழியின் வழுவி லாத
வெண்கவியுங் கண்டாங்கின மாத ராடல்
விதங்கேட்டு மழையெனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயு நெல்லூர வீர
கவிராஜ னேவிருத்தக் கவிசெய் தானே.

இ-ள். குளிர்ந்தவெள்ளை வெள்ளைக் குடையையுடைய அரிச்சந்திர மகாராஜனது சரித்திரத்தை உலகத்தாரெல்லாம் சந்தோஷத்தையடைய அழகான வித்துவான்கள் சொல்லுங் கிரமப்படியே சொல்லிய பாடின வடமொழியிலுள்ள பாடல்களையும், தென்மொழியிலே யாதொரு தோஷங்களுமில்லாத வெண் பாவாலான பாடல்களையும் பரிசோதித்து, பெண்கள் ஆடுகிற இடத்தண்டான மத்தள ஓசையைக்கேட்டு அவ்வோசையை மேகத்வனியென்று பயந்து சோலைகளிலே குரங்குகள் குதித்து ஓடுவதான நெல்லூரிலேயிருக்கிற வீரகவிராஜனென்பவனே இப்படி விருத்தக்கவியாகப் பாடினான் எ-று. 13

விதியினர சிழந்தவரிச் சந்தி ரன்றன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காபத்
மாயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேன் மண்ட பத்துள்
நதிதருசீர் நெல்லூர்வாழ் வீர னாசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே.

இ-ள். ஈசுவரச் செயலினாலே தனது அரசாட்சியை விட்டுப்போன அரிச்சந்திரமகாராஜனுடைய பெரிய கதையாகிய வெண்பாவாலான பாடல்களை விருத்தப் பாடல்களாகச் செய்து, பலவிதங்களும் தோன்றுகின்ற கலியுகத்திலே வருவதான சாலிவாகன சகாப்தம் ஆயிரத்து நானூற்று நாற்பத்தாறும் வருஷத்திலே நான்கு வேதங்கள் ஆராய்ந்து சொல்லுகின்ற திருப்புல்லாணித் திருமால் சந்நிதியிலே சக்கரதீர்த்தக் கரைமேலிருக்கிற மண்டபத்திலிருந்து நல்ல கவியைத் தருவதான சிறப்பையுடைய நெல்லூரிலே வாழுகின்ற வீரனென்னும் ஆசுகவிராஜன் அந்த விருத்தப் பாடலான அரிச்சந்திரபுராணத்தை அரங்கேற்றுதல் செய்தான் எ-று. 14

பாயிர முற்றிற்று.

---

# நாட்டுச் சிறப்பு

### கலிநிலைத்துறை

முன்னூ றறியாப் பிறவிக்குரு டான மூடன்
றன்னூற ரொருபோ காதத்தினிடஞ் சாற்று மாபோல்
என்னா லறிதக்க தன்றென்னினு மன்னர் மன்ன
னன்னாட் டணியான் சிலவல்ல நடத்த லுற்றேன்.

இ - ள். முதலிலே வழிதெரியாத பிறவிக்குருடனான ஒருவனாலே பள்ளமான சமுத்திரத்தினுடைய வகைகளெல்லாங் கண்டு சொல்லத்தொடங்கினது போல, என்னாலே தெரிந்து சொல்லத்தக்கது அல்லவென்றாலும், ராஜாதிராஜனான அரிச்சந்திரனுடைய நல்ல நாட்டுச்சிறப்பில் நான் சிலவற்றைக் கூடியமாத்திரம் சொல்லத்தொடங்கினேன். எ - று 1

தடப்பாற் கடலா ரமுதங் கொழுமித் தழைத்து
நடப்பாற் புகுந்தா லெனவந்துவா வேலை நண்ணி
உடப்பாற் புனலுண் டெழுந்தோங்கிய காள கூடம்
விடப்பாற் பரந்தா லெனமேக மெழுந்த தன்றே.

இ - ள், குளிர்ந்த திருப்பாற்கடலிலே அரிதான அமுதமுண்டாகிச் சிறந்து தனக்கு உறவாகையினாலே லவணசமுத்திரத்துக்கு வந்தாற்போல வந்து அந்தக் கடலின் நீரை யுண்டு, முன்னாளிலே எழுந்து கிளம்பின விடமானது ஆகாயத்தினிடமெல்லாம் பரவினதுபோல மேகம் மேலே கிளம்பியது எ-று 2

அடியும் முடியுந் தெரியா திருண் டண்ட மெங்குங்
கொடியுங் குடையு மெனமாமுகிற் கூட்ட மீண்டிப்
படியும் விசும்பும் பகைத்தாலெனப் பார விறகோத
இடியுந் துளியுங் கணையாய்ப் பொரி தெய்த தன்றே.

இ - ள். கீழும் மேலும் தெரியாதபடி இருண்டு ஆகாயமெல்லாம் நீலக்கொடிகள் பறந்தாற்போலவும் நீலக்குடைகள் விரித்தாற்போலவும் நீலமேகக் கூட்டங்களைக்கூடி பூமியும் ஆகாயமும் பகைத்துச் சண்டைசெய்தாற்போல் கனமான இந்திரவில்லிலே கூட்டி இடிகளும் துளிகளும் அம்புகளாக மிகவும் எய்கிறது போற் பெய்தன எ - று. ௩

மீனந் திகழ்வே லையிற்றோன்றிய தென்ன விண்ணோர்
தானந் திகழ்* தாத திரியைப்பெருந் தாழி யாக்கி
வானந் தனைநெய் யரிவட் டகையாக்கி விட்ட
பானந் தனையொத்து விழுந்தது மாரி பம்பல்.

* தாததிரி - பூமி.

இ-ள். மீன்கள் சஞ்சரிக்கின்ற கடலிலே இம்மது வுண்டாகியதென்று தேவர்களாகிய மதுவடியபோர்கள் சராசரங்களுக் கிடமாக விளங்குகின்ற பூமியைப் பெரிய பானைபோலிருக்கிற சுரைக்குடுக்கையாகக் கொண்டு ஆகாயத்தை அந்தக் குடுக்கைமேலே மூடுகிற பன்னாடையான கிண்ணமாகச் செய்து அக்கிண்ணத்திலே ஊற்றுகிற மதுவானது பல சில்லிகளாலும் ஒழுகுகிறதுபோல ஒழுகின மேகத்தின் சொரிந்த துளிகள் எ-று. 4

விண்ணிற பொழியுங் கணைமாரி விழுந்து தைத்த
புண்ணிற பொழியுங் குருதித் திரள்போல வெங்கு
மண்ணிற பொலியிந் திரகோப மலிந்து தோன்றக்
கண்ணிற் கமையாப் புனல்வந்து கலித்த தன்றே.

இ-ள். மேகத்தாலே பெய்கிற பாணவருஷங்கள் விழுந்து அவைகள் பட்ட புண்ணினின்றும் சிந்துகிற ரத்தத்திரளைப்போல எவ்விடத்தும் பூமியிலே அக்காலத்திலே தோன்றுகிற இந்திரகோபப் பூச்சிகள் நிறைந்து விளங்க, கண்களுக்கடங்காத ஜலப்பிரவாகமாகி ஆரவாரித்தது எ-று. 5

கள்ளங் கொலைகட் புலைகாம மெனவைந்து மற்றுத்
குள்ளந் தெளிந்தோர் தருமுத்தம தான மென்னப்
பள்ளந் திடர்மால் வரைகானகப் பக்க மெங்கும்
வெள்ளம் பெருகிப் பரந்தோடி விரைந்த தன்றே.

இ-ள். களவு - கொலை - கட்குடி - பொய் - மிக்ககாமம் என்று சொல்லுகிற பஞ்சமாபாதகங்களையும் ஒழித்த நல்லோர்களுக்கு மனந் தெளிந்தவர்கள் கொடுக்கிற உத்தமதானம்போல பள்ளம் மேடு உயர்ந்தமலை காடுகளாகிய பக்கங்களெல்லாம் அந்தப் பிரவாகமானது பெருகிப் பரவி ஓடி வேகங் கொண்டது எ-று. 6

கருவிக் கணமா மழைபெய்து கலித்த வெள்ளம்
பரவிப் பலகோடி பருப்பதக் கோட்டொடுந் தாங்
கருவித் திரள்புக் கடங்கா திரைத்தோடி யார்த்துச்
சரயுத் தனிலே தலைவைத்துச் சரித்த தன்றே.

இ-ள். பூலோகத்துக்குத் துணைக்காரணமாய்க் கூட்டங்கொண்ட நீலமேகங்கள் பொழிதலாலே ஆரவாரித்து எழுந்த ஜலப்பிரவாகம் எங்கும் பரவி அநேகங்கோடி மலைச்சிகரங்களை முறித்து அந்தச் சிகரங்களினின்றும் வருகிற அருவிக்கூட்டமானவை இறங்கிக் கட்டுக்கடங்காமல் ஆரவாரித்து ஓடிப் பின்னும் முழங்கிச் சரயுநதியிலே வந்துகூடி வரலாயிற்று எ-று. 7

ஆரங் குளவஞ்சி யசோகு பலாசந் தேவ
தாரம் வகுளங் கடுச்சண்பகஞ் சாதி கல்யாணி
காருஞ் சுரபுன்னை கடம்புகச் சூரம் வெய்யகாப்
பூரம் பனையோடு புணைமிட்டப் போய தன்றே.

இ - ள். சந்தனமரம் - முசிவஞ்சிமரம் - அசோகமரம் - பலாசமரம் - தேவதாருமரம் - மகிழமரம் - கடம்பமரம் - சண்பகமரம் - சாதிலிங்கமரம் - கோங்குமரம் - சுரபுன்னைமரம் - பேரீந்துமரம் - மூங்கிலமரம் - கறபூரவல்லி - அரசமரம் ஆகிய இவைகளுடனே அலைகள் புரள அந்தச் சரயுநதி சென்றது எ - று. 8

ஏலந் தகர மிலவங்க மரித்திர நதக்
கோலம * வசவாசி செங்குங்கு மங்கோட்டம வாரித
தாலம பதினலு நடுங்கிடச் சார்ந்த வூழிக
காலந தனின்மோது கருங்கட லொத்தத சுமமா.

இ - ள் ஏலம - தகரம் - இலவங்கம - அரித்திரம - தக்கோலம - வசம்பு - செங்குங்குமம - கோட்டம ஆகிய இவைகளையெல்லாம வாரிக்கொண்டு உலகம பதினலும நடுங்கும்படி வந்த ஊழிக்காலத்திலே அலைகளை மோதுகிற கருங கடலை அந்தச சரயுநதி ஒத்தது எ - று. 9

நீலம வைரமவை டூரிய நித்தி லஞ்செங
கோலந திகழுந்துகிர் கோமளப பதும ராகம
தாலந் தனில்வந்தவிந்தி ரசாப மென்ன
ஓலந திகழாற்றி னெழுககெற்றந தோடிற் றன்றே.

இ - ள். நீலம - வைரம் - வைடூரியம - முத்து - சிவந்தநிறமாக விளங்குகின்ற பவளம - அழகான பதுமராகம ஆகிய இந்த ரதனங்களாலே உலகத்திலே நீண்டுவருவதான ஒரு இந்திரவில்லைபபோல ஒலியிருந்த அந்தச் சரயுநதி செல்லுதலாலே கரைகளை உடைத்துக்கொண்டு ஓடியது எ - று. 10

## கலி விருத்தம்

ஆடு நாகமு மத்திக ளுமவரை
யாடு நாகமு மத்திசை யேபுன
லோடு நாகமு முற்றிட லானதி
யோடு நாகமு மேருதியை யொத்ததே.

இ - ள். ஆடு நாகமும - படமெடுத்தாடுகின்ற பாம்புகளும், அத்திகளும் - எலும்புகளும, வரையாள - மலைமகள, துன - பாதியிறகலந்த, ஆகமும - திருமேனியும, அத்தி - அப்பாதி வடிவினளது, சை - கையிலேபிறந்த, புனலோடு - கங்கையோடு, நாகமும் - புன்னைமலரும, உற்றிடலால - பொருந்துதலால்; ஆடுநாகமும - ஆடுகின்ற வானரங்களும, அத்திகளும - அத்திமரங்களும, வரையாடும - வருடைகளும, நாகமும - யானைகளும, அத்திசையே - அவை கொண்டுபோகப்பட்டதிசையே, புனல - நீரினகண்ணே, ஓடு - ஓடுகின்ற, நாகமும - பாமபுகளும், உற்றிடலால - பொருந்துதலினுலே, நதி - சரயுநதியானது, ஓடும - கபாலத்தையும, நாகமும - மேருவையும, ஏந்தி யை - ஏந்திய கடவுளை ஒத்தது

* வசவாசி - வசம்பு.

கடவுண்மேற் செல்லுங்கால் வரையாடு நாகமென்றபாலது. அடி மடக்குஞ் சிலேடையுமாதலின் ஒரு அடியி னொப்புமைபற்றி வரையாடு நாகமெனப் பட்டது எ - று. 11

அம்ம டங்கலு மாழி கிளர்ந்தெழு
மம்ம டங்கலு மொப்பதை யன்றதின்
மும்ம டங்கலும் வெல்லு முதிர்கய
மும்ம டங்கலுங் கொண்டு முடுகிற்றே.

இ - ள். அம்மடங்கலும் - நீர்முழுதும், ஆழி கிளர்ந்தெழு மம்மடங்கலும் - கடலின்கண்ணே செழித்தெழாநின்ற அழகிய ஊழித் தீயையும், ஒப்பதையன்று - நிகராவதையன்றி, அதின் - அதினும், மும்மடங்கலும் - மூன்றுபங்கும், வெல்லும் - வெல்லாநின்ற, முதிர்கயமும் - பருத்தயானையையும், மடங்கலும் - அதனைவெல்லுஞ் சிங்கத்தையும், கொண்டு - தன் கண்ணே சேர்த்துக்கொண்டு, முடுகிற்று - விரைந்து சென்றது எ - று

அடங்கலு முடுகிற்று எனக் கூட்டுக. 12

முறியு மாறுந் தருவு முதல்கெட
முறியு மாறுந்தி முற்றிநன் மானமந்
வெறியு மாறடி யுங்கொடு வேகமும்
வெறியு மாறிலா வெங்களி றொத்ததே

இ - ள். முறியும் - தளிர்களும், மாறும் - வளார்களும், தருவும் - மரங்களும், முதல்கெட - அடியோடு கெட, முறியமாறு - சிதையும்படி, உந்தி - வீழ்வித்து, முற்றி - சூழ்ந்து, நல - நல்ல, மானமந் வெறியும் - பெரிய மதசல நாற்றத்தையும், மாறடியும் - மாறி வைக்கப்பட்ட அடிகளையும், கொடு - கொண்டு வருதலால், வேகமும் - விரைவும், வெறியும் - மயக்கமும், மாறிலா - நீங்காத, வெங்களிறொத்தது - வெவ்விய யானையை யொத்தது எ - று. ஏ - அசை. 13

வார ணத்தடங் கோடும் வளைகளும்
வார ணத்தடங் கோடும் வரன்றியே
ஆர ணத்துறை யந்தரி யுண்மகிழ்ந்
தார ணத்துறை யொத்தவ வாறரோ.

இ - ள். அவ்வாறு - அந்தச் சரயுநதி, வாரணத்து - யானைகளுடைய, அடு - கொலை செய்கின்ற, அம் - அழகிய, கோடும் - தந்தங்களையும், வளைகளும் - சங்குகளையும், வார் - நீசி, அண - பொருந்திய, அத்தடங்கோடும் - அப் பெரிய ஊது கொம்புகளையும், வாரணம் - தடையாகிய, தடங்கோடும் - தடாகக் கரைகளையும், வரன்றி - வாரிக்கொண்டு, ஆரணத்து - வேதத்தின் (ஞான பாதையிலே, உறை - தங்கிய, அந்தரி - பத்திரகாளி, உண்மகிழ்ந்து - திருவுளங் களிகூர்ந்து, ஆர் - பொருந்திய, ரணத்துறை - போர்க்களத்தை, ஒத்தது - ஒப்பாயிற்று எ - று.

ஆரெனபதன ரகரம் முதலாகா தகரமுதலாதலின் கெட்டது - அகரமுத னகரவிறுவா யெனபதுபோல. 14

துடிம ருஙகிற் கொடிசசியர் தோயவே
துடிம ருங்கிற பரப்பிச சுழிததுராய்க்
கொடிபு னைநத குகன்கழ றூழ்நதுபூங
கொடிபு னைநத குறிஞசி கடநததே

இ - ள. துடிமருஙகிற் கொடிசசியர் - உடுக்கைபோ லிடையுள்ள குற மகளிர், தோய - மூழ்க, துடி - ஏலசசெடிகளை, மருஙகிற பரப்பி - அருகே பரப்பிககொணடு, சுழிதது - சுழிகளை யுடையதாய், உராய் - உராயந்து, கொடி புனைந்த குகன் கழறூழ்ந்து - வெறறிககொடி தரிதத முருககடவுளி னடிகளை வணஙகி, பூஙகொடி - மலாக்கொடிகளுமம, புல - புற்களுமம, நைந்த - தனனுலே சிதைந்த, குறிஞசி-குறிஞ்சிமலைச சாரலை, கடநதது-கடந்து சென்றது எ - று.

புல - புலியுமாம. அவவாறெனனும எழுவாய வருவிததுககொளக 15

வீயும வேஙகையு மநதியு மேதகு
வீயும வேஙகையு மநதியும வீழபலாக
காயும பாலையில கைககய முஙகொடு
காயும பாலையில வநது கலநததே.

இ - ள. வீயும - பறவைகளுமம, வேஙகையும் - புலிகளுமம, மநதியும - குரஙகு களுமம, மேதகுவீயும - மேம்பாடு பொருநதிய மலாகளுமம, வேஙகையும - வேங கை மரஙகளுமம, மந்தியும - வணடுகளுமம, வீழ் பலாககாயும - விருமபப்பட்ட பலாககாய்களுமம, பால - தனன பககஙகளில, அயில் - நீருணகினற, கை - துதிக கையை யுடைய, கயமும - யானைகளும், கொடு - கொணடு, காயும - சுடுகினற, பாலையில் - பாலை நிலததில, வநது கலநதது - வநது கூடிறறு எ - று

அயில ஐயிலெனப போலியாய வநதது. 16

தேரு மாறுண ராசசின வேடாபேயத
தேரு மாறுமுட டேறருய பாலையில
ஊரு மாதரி யாரையு முநதிமான
ஊரு மாதரி தாடொழு துறறதே.

இ - ள. தேருமாறு - தெளியும வழியை, உணரா - அறியாத, சினவேடா- கோபததை யுடைய மறவா, பேயததேரும - கானலையும, ஆறும - வெளளததை யும், உள - உள்ளே, தேறரும - பகுததறிதல கூடாத, பாலையில - பாலை நிலத தில, ஊரும - அஙகுளள ஊாகளையும, மாதரியாரையும - மகளிா யாவரையும, உநதி - தள்ளிக்கொணடு, மான - கலைமானை, ஊரும - நடததுகினற, மாதரி - பததிரகாளியினது, தாடொழுது-தாளை வணஙகி, உறறது-பொருநதிறறு, எ-று.

இறவங கோஙக மிருபமபையின பூநதுணா
இறவங கோஙக வெரிமின மினியெனப

புறவ மேய்ந்த சுரம்விட்டுப் போய்ச்செழும்
புறவ மேய்ந்தது பூம்புன லாறரோ.

இ-ள். அங்கோங்கம் - அழகிய கோங்கினுடையவும், இருப்பையின் பூந்துணர் - இருப்பையினுடையவும் ஆய பூங்கொத்துகள், இற - கெடவும், இறவு - இறாமீன்கள், அங்கு ஓங்க - மேலெழவும், எரி - நெருப்பு, மின்மினியென - மின்மினிபோற் றோன்றவும், புறவ மேய்ந்த - புறாக்கள் மேய்ந்த, சுரம்விட்டுப்போய் - பாலைநிலத்தை விட்டுப்போய், செழும் - செழித்த, புறவம் - முல்லை நிலத்தில், எய்ந்தது - பொருந்தியது, பூம்புனலாறு - அழகிய நீரையுடைய ஆறானது, எ-று. 18

ஆடு மாசுரை யாவிடை யாழ்நீர்
ஆடு மாசுரை யாவிடை யோடவே
கோடு குத்திக் குலைந்தது கொன்றையின்
கோடு குத்திக் குலைத்துணர் வாரியே.

இ-ள் ஆடும் - முழுகுதற்குரிய, மாசுரையா - குறைசொல்லப்படாத, இடையாழும் - நடுவாழத்தையுடைய, நீர் - நீரானது, ஆடும் - ஆடுகளும், மா- பெரிய, சுரையா - கறவைப்பசுக்களும், விடை - எருதுகளும், ஓட - அஞ்சியோடும்படியாக, கொன்றையின் - கொன்றைமரங்களின், கோடு - கிளைகளை, உகுத்து - முறித்து, இக்குலை - இக்காய்க்கொத்துகளையும், துணர் - பூங்கொத்துகளையும், வாரி - சேர்த்துக்கொண்டு, கோடு - கரைகளை, குத்தி - மோதி, குலைத்தது - அழித்தது எ-று 19

அண்டர் தோயலை வாரி மராவழீஇ
அண்டர் தோயலை வாரியிற் சார்ந்தணி
கொண்ட லைத்தரிக் குருக்குருந் திற்கலை
கொண்ட லைத்தரிக் கொத்த குடிஞையே.

இ-ள். அண்டர் - ஆயர்து, தோயலை - தயிரை, வாரி - கொள்ளையிட்டு, மரா - மராமரத்தை, அழீஇ - அழித்து, அண்டர் - தேவர்கள், தோய - மூழ்கா நின்ற, அலை - அலைகளையுடைய, வாரியில் - கடலின் கண்ணே, சார்ந்து- கூடி, அணி - அலங்கரிக்கப்பட்ட, கொண்டலை - மேகத்தை தரிக்கும் - தரிக்கின்ற, குருந்தில - குருந்தமரத்தில், கலைகொண்டு - (ஆயச்சியர்) ஆடைகளைக் கொண்டு, மான்களைக்கொண்டு, அலைத்து - அலைசெய்து, அரிக்கு - திருமாலுக்கு, ஒத்த - ஒத்தது, குடிஞை - அவ்வாறானது எ-று.

ஒத்தது என்பது ஒத்தவென்க கடைகுறைந்து நின்றது. 20

உறவ ணங்கு மராவு முழக்கிவான்
உறவ ணங்கு மராவு மொசித்தது
மறைவ ணங்கு மரியை வணங்கல்போல்
மறைவ ணங்கு மரியை வணங்கியே.

இ - ள். உர - மிகவும், அணங்கும் - வருந்துகின்ற, அராவும் - பாம்புகளையும், உழக்கி - வருத்தி, வானுற - மேகந்தவழ, வணங்கும் - வளைந்திருக்கின்ற, மராவம் - மராமரங்களையும், ஒசித்தது - ஒடித்தது, மறைவு - மறைதல, அணை - பொருந்திய, நம - நமது, குமரிமை - கொற்றவையை, வணங்கல போல் - முன்பாலையில் வணங்கினமைபோல், மறை - வேதத்தினாலே, வணங்கும் - வணங்கப்பட்ட, அரிமை - திருமாலை, வணங்கி - முல்லையில் வணங்கி எ - று. 21

ஆவி யன்ன பெடைகளு மன்றிலும்
தூவி யன்னமுந் துன்னிய நாரையும்
மேவி யின்பம் விடாத நெடும்புனல்
வாவி சூழு மருதம் புகுந்ததே.

இ - ள். உயிரையொப்பான பெட்டையன்றில்களும் ஆண் அன்றில்களும் இறகையுடைய அன்னங்களும் நெருங்கியிருக்கிற நாரைகளும் கூடிச் சந்தோஷம் விலகாதிருப்பதான அந்த நெடிதான சாயுந்திப பிரவாகமானது குளங்கள் சூழ்ந்துள்ள மருதநிலத்திலே சென்றது எ - று. 22

வாழை பூக மகிழ்மரு தாசினி
தாழை கேசரஞ் சம்பகஞ் சன்மலி
ஞாழல் மாதுளை நாகம் விந்தத்தண்
சூழல் சேரத் தொலைத்தது தேயமே.

இ - ள். வாழைமரங்கள் - கமுகமரங்கள் - மகிழமரங்கள் - மருதமரங்கள் - பலாமரங்கள் - தென்னமரங்கள் - பூந்தாழைகளையுடைய சண்பகமரங்கள் - இலவமரங்கள் - குங்குமமரங்கள் - மாதுளமரங்கள் - புன்னைமரங்கள் முதலியவற்றை அந்தப்பிரவாகம் அழித்தது எ - று. 23

பாலக டோறும் பரந்து செறிந்தவக்
காலக டோறுங் கலந்த கடும்புனல்
வாலக டோயமகி டம்புக வான்படச்
சேல்கள் பாயுஞ் செழுந்தடம் புக்கதே.

இ - ள். அந்த மருதநிலத்தி னிடங்களெல்லாம் பரவி, அங்கங்கே பொருந்தியுள்ள அந்த வாய்க்கால்களிலெல்லாங் கூடின, வேகத்தையுடைய ஜலமானது வால்கள் தொங்குகின்ற எருமைகள் போய்விழ அந்த அதிர்ச்சியினாலே ஆகாயத்தளவாகச் சேறகண்டைகள் குதித்துக் கிளறுவதான செழிய தடாகங்களெல்லாம் பாய்ந்தது எ - று. 24

வாவி சேர நிரம்பி மதகினில்
தாவி நீள்வரை சாடி யுடைத்தலை
நீவி வண்டல் கொழித்து நெடும்புனல்
பாவி நீல வயலிற் பரந்ததே.

இ - ள். அப்படிக் குளங்களெல்லாம் நிரம்பச்செய்து, மதகுகளிலுமோதி நீண்ட கரைகளையுந் தாக்கி யுடைத்து, அலைகளாலே வீசிச் சேறுகளை ஒதுக்கி அப்பெரிய பிரவாக ஜலமானது எங்கும் பரவி நெடிதாக வயல்களெல்லாம் பாய்ந்தன எ - று. 25

வரம்பு டைத்துக் கரைதது மடுக்களின்
குரம்பு டைததுக் குமுதமுங் கஞ்சமும்
கரும்பு மிஞ்சிபு மஞ்சளுங் கட்டழித்
தரம்பை யோங்கு படப்பை யழித்ததே.

இ - ள். அந்த வயலகளிலுள்ள வரம்புகளை யுடைத்துக் கரையப் பண்ணி மடுககளுக்குப் பாய்கின்ற வாய்க்கால்களையு முடைத்து, குமுதமலர் களையுந் தாமரை மலர்களையுங் கரும்புகளையும், இஞ்சிகளையும் மஞ்சள்களையும் கட்டுக் குலையப்பண்ணி, வாழை மரங்கள் உயர்ந்துள்ள மருதநிலத்தூர்களையும் அந்தப் பிரவாக ஜலம் அழித்தது எ - று 26

ஏரி சேர வுடைத்தமிழ் ந் தினகனி
வாரி யோடி வளம்பயில் மள்ளருந்
சேரி சேர வழித்துச் செழும்புனல
பேரி யாறு பாந்து பெருகிற்றே.

இ - ள். பின்னும் பெரிய குளங்களெல்லாம் முழுதும் உடைத்துக் கெடுத்து, இனிதான பழவர்க்கங்களையும் வாரிகொண்டு சென்று, விளைவு செய்கின்ற உழவருடைய ஊர்கள் முழுதும் கெடுத்து, அந்தப்பிரவாக ஜலமானது பெரிய ஆறுகப் பரவிப் பெருகியது எ - று 27

நாடு தோறும விருந்த நறும்புனல
ஓடு மோதையு மோங்கு தடங்கரை
சாடு மோதையுந் தண்டலை வண்டுகள்
பாடு மோதையு மெங்கும பரந்தவே.

இ - ள். அப்படி அந்தக் கோசலநாடெல்லாம பாய்ந்த ஜலமானது ஓடுகிற சப்தமும் உயர்ந்த பெரிதான கரைகளை உடைக்கின்ற சப்தமும் சோலைகளிலே வண்டுகள் பாடுகிற சப்தமும் எங்கும பரவின எ - று 28

கள்ள லம்பிய வாயுங் களிமகிழ்
உள்ள லமபிய வுள்ளமுந் தோன்றவே
புள்ள லமபிய பொய்கைக் கரையெலா
மள்ளர் வந்து நெருங்கி மலிந்தனா.

இ - ள். கள் ஒழுகுகிறவாயும், கள் குடித்ததினலே சந்தோஷம் உள்ளே அடங்காதிருக்கிற மனமும் வெளியாக, பட்சிகளை கத்துகின்ற குளக்கரை களிலெல்லாம உழவர்கள் வந்து நெருங்கிக் கூடினாகள் எ - று.

அறிவை மயக்கவல்ல மதுவை உழவர்கள் மேலுமேலும் குடித்தலால், அது வாயினின் றொழுகுதலை யறியாது புத்திமயங்கின ரெனபார் "கள்ளலம் பியவாய்" எனவும், மதுவுண்போர் அதைதருந்தாதிருக்கையில் மனச்சோர்வுறு தலும், அருந்தினபின்னர்க களிகோடலும் இயல்பாதல்பற்றி "களிமகிழ் உள்ளலம்பிய உள்ளந்தோன்ற" எனவும் கூறினர். 29

கொட்டு வாஙகிக் குதிததது நிவப்புமண்
வெட்டு வார்சுமப் பாரமிதித்த துக்கரை
கட்டு வார்வன் கடிபபெடுத துக்கிணை
தட்டு வார்தூர கங்கொடு தாங்குவார்.

இ - ள். சிலர் மண்வெட்டிகளைக் கொண்டு சந்தோஷமாய் மேட்டிலுள்ள மண்ணை வெட்டுவார்கள். சிலர் அந்த மண்ணைச்சுமப்பாாகள். சிலர் காலால் மிதித்துக் கரைகட்டுவாாகள். சிலர் வலிதான தோற்கடிப்பைகொண்டு அந்த மருதநிலப் பறையைக் கொட்டுவார்கள் சிலா குதிரை மரங்களை நிறுததி வெள்ளமுடைக்காமல் கரையைக் காப்பார்கள் எ - று. 30

முழவெ ழுமபடி மொய்சிறை யிறகறங
கெழுவெ ருண்டய லன்ன மிரிநதிடப
பழுவ ரம்பு புதுக்கிப் பகடுசேர்த
துழவ ரெஙகு முழுமொலி யோங்குமே.

இ - ள். அப்படிச் சந்தோஷத்துடனே மருதநிலப்பறை யோசையுண் டாகுந் தன்மையால், நெருஙகிய இரண்டு சிறகுகளிலும் சுழல்காற்றுத் தோன்றப் பயந்து பககங்களிலுள்ள அன்னங்கள் பறந்தோட, உழவர்கள் வயல்களெங்கும் பழையவரம்புகளைப் புதிய வரம்பாகச்செய்து எருமைக் கடாக் களை ஏரிலே பூட்டி உழுகிற சப்தம மிகுந்திருக்கும எ - று. 31

வலமபு ரிததிரள வாள்வளை வெண்சலஞ்
சலம்பி ளப்பத தாளம பிளபபவுற்
பலம்பி ளப்பப் பதுமம பிளபபமீன்
குலம்பி ளபபக் கொழுச்செலுஞ் சாலெலாம.

இ - ள். வலம்புரிச்சங்கினங்களும், வெள்ளைச்சங்கினங்களும், வெண்மை யான சலஞ்சலஙகளும் உடைபடவும், அவைகளிலுள்ள முத்துககளுடை படவும், நீலோற்பலங்கள் சிதையவும், தாமரைமலர்க ளழியவும், மீன் கூட்டங்கள் நசுங்கவும், அவர்களுழுகிற நிலங்களினிடமெல்லாம் கலப்பை யிலுள்ள கொழுவானது செல்லாநிற்கும் எ - று. 32

இருமபொ டித்தன வேரடிக் கின்றகோல்
அருமபொ டிபொடி யாக வுரப்பிநீள்
கரும்பொ டிததுக் கடாவடித் தெங்கணுமம
பரம படிப்பவர் பற்பல கோடியே.

இ - ள். இரும்பாலாகிய ஒருமரத்திலே ஒடித்தாற்போலிருக்கிற ஏரிலே பூட்டின எருமைக்கடாக்களை, அடித்தோட்டுகிற கோலானது அரிதான தூள்தூளாக அதட்டி ஓட்டி, பின்னர் நெடியகரும்பை ஒடித்துக் கோலாகக்கொண்டு அந்த எருமைக்கடாக்களை அடித்தோட்டி எவ்விடத்திலும் பரம்படிப்பவர்கள் கணக்கில்லாத கோடிபேர்கள் எ - று. 33

கரும்புங் காவியுங் கஞ்சமு மாம்பலும்
அரும்புஞ் சேம்பு மலவனு மாமையும்
சுரும்பு நந்துஞ் சுரிமுக முஞ்செழும்
பரம்பு தோறும் படிந்து நெரிந்தவே.

இ - ள். கரும்புகளும் நீலமலர்களும் தாமரைமலர்களும் செவ்வாம்பல் மலர்களும் அங்கே முளைத்திருக்கிற சேம்புகளும் நண்டுகளும் ஆமைகளும் வண்டுகளும் நத்தைகளும் சங்குகளும் அந்தச் செழுமையான பரம்பு மரங்களின் கீழெல்லாம் அமிழ்ந்து நசுங்கின எ - று. 34

சாலெல் லாந்தர ளந்திரள் மள்ளர்தங்
காலெல் லாங்கம லக்கடி காரக்கடா
மேலெல் லாம்பொழி வேழத்தின் சாறந்நன்
வாலெல் லாம்பல மாமலர் மணமே.

இ - ள். உழுகிற படைச்சாலெல்லாம் முத்துக்கூட்டங்கள் கிடைக்கும். உழுகிறவர்களுடைய கால்களெல்லாம் தாமரைமலர் வாசமாயிருக்கும். கறுத்த எருமைக்கடாக்களின் மேலெல்லாம் அவற்றை அடிக்கிற கரும்பின்சாறொழுகுவதாயிருக்கும். அந்த எருமைக்கடாக்களின் வால்களிலெல்லாம் பலவித மலர் வாசமாயிருக்கும் எ - று. 35

போர டித்த விதியவன் போனறுமுன்
றார டித்தவ னூர்தியென் றெண்ணியே
ஏர டிப்ப விருசிறை யுங்கொடு
* மார டித்திரி யும்மட வன்னமே.

இ - ள். பொருதல் செய்த பிரமாவானவன் சிவனுக்கு அஞ்சுதல்போல் திரிபுரத்தை யெரித்த சிவபெருமானுடைய வாகனமென்று தெரிந்து உழவர்கள் ஏரிலே பூட்டின எருதுகளை அடித்தோட்டும்போது இள அன்னங்கள் இரண்டு சிறகுகளாலும் தமது மார்பிலேபட அடித்துப் பறந்தோடுவனவாயிருக்கும் எ - று.

அன்னங்கள் பயந்தோடுவனவற்றை தம்மை யூர்கிற பிரமனை வென்ற சிவபெருமானுடைய வாகனம் எருதாகையால், தங்களையும் வெல்லுமென்று கருதினதாகக் கூறியது [ தற்குறிப்பணி ] இதைப் பொருதல் செய்தவெனபது சிவபெருமானுக்கு ... 36

---

* மாரடி-மார் என விகாரமாயிற்று.

நன்னுரைத்தட நாண்மலர்த தாதுறீஇப்
பன்னுரைதத பகட்டின் பதக்குளம்
பென்னுரைப்ப திடமற வெங்கணும
பொன்னுரைதத நிறததகற் போன்றவே.

இ - ள். நல்ல நுரைகளையுடைய தடாகங்களிலே தினந்தோறும் பூதத தாமரைமலர்களிலுள்ள பொனனிறமான பராகப்பொடிகள பொருந்தியிருப்பதனலே, பறகளிலுள்ள நுரைகளையுடைய எருதுகளின கால்களிலுளள குளம்புகளுககு யாது நிகாசொலலததககது எனனில? அநதக குளம்புகள முழுதும இடமில்லாமல் எவவிடததிலும பொனனையுரைதத நிறததோடு கூடியிருககிற உரைகல்லை ஒததிருககினறன எ - று 37

தொககவேதியாக குநதுற வோாகடகுந
தக்க தானந தருபவா போலவே
பகக நோககிப பவிபபறிந தெஙகணு
மிகக செநநெலும வெணணெலும விததினா.

இ-ள். ஒருசேரககூடின பிராமணாகளுககும, சனனியாசிகளுககும தகுதியான தானததை வாரி வாரிக கொடுககிறவாகளபோல, நாலு பககங்களிலும பாாத்து அவவிடஙகள விளைவாகிற காலபககுவந தெரிந்து எவவிடஙகளிலும் மிகுதியான செந்நெற்களையும வெணணெறகளையும் விதைததார்கள் எ-று. 38

இறவு பாய விருஙகத விககனி
மறவி பாய்வருக கைககனி மாஙகனி
பிறவும வாய்விண்டு பீறிப் பொழிநதிடு
நறவு பாய்நதிட நாறு வளாந்தவே.

இ - ள். தேனகூட்டிலுள்ள தேன வழிந்து பாயதலினலும், பெரிதான வாழைககனி, தேனெழுகுகினற பலாககனி, மாஙகனி முதலான மறறைககனிகளும வாய்வெடித் துடைநது சிந்துகினற தேனகள் பாய்தலினலும அந்த நாறறுகள வளர்ந்தன எ - று. மறவி - கள 39

சேமபு தோனறுஞ செழுநதடந தினகரைத
தூமபு தோனறிய சோபுனற றோனறுவ
காமபு தோனறுவ ரைபபுழைக கடபெருமு
பாமபு தோனறுவ போனறன பாலெலாம.

இ - ள நீாசசேமபுகள முளைத்திருககிற செழுமைதஙகிய அகனற குளக்கரையிலுள்ள மதகின துவாரம நிரமப வருகிற நீாததோறறமானது மூஙகில்கள் முளைத்திருககினற மலையின குகையிலிருநது பெரும்பாம்பு வருகிறதுபோல் மதகுகள்தோறும காணப்படுகினறன எ - று. 40

இரவை வென்ற விருண்ட செழுஙகுழல்
அரவை வென்ற வகலணி யலகுல்வெஙக

பாலுங்கொண்டு, பசிய நிறத்தை யுடையனவாய்ப் பழுத்து விளைந்த செந்நெற் கள பதிவிரதைகளைப்போற் றலை வணங்கின எ - று. 44

தோடடு வார்நறை சூழ்வயல் சோர்வொரீஇப்
பூட்டு வார்கதிர்ப புள்ளங்கள் சூறசங்கில்
நீட்டு வார்மலர்ச் செநதிரு காணமுன்
நீட்டு வாரென நெல்லரி வார்களே.

இ - ள். பூவிதழ்களினின்றும ஒழுகுகின்ற தேனபாய்வதான வயல்களிலே மளளர்க ளிளைபபில்லாமற கைப்பிடியிலே கோததிருக்கிற நீணட ஒளியை யுடைய அரிவாள்களைக காப்பங்கொண டிருக்கிற சங்குகளிலே தீட்டிககொண டவாகளாய், தாமரை மலரிலுள்ள லட்சுமிதேவி பார்கக அவளுககு முனனே (வளையலாக அணிந்துகொள்ளச் சஙகுகளை அறுததுக) கைகளை நீட்டிக் கொடுக கிறவாகள்போல் விளைந்த நெறகளை அறுப்பார்கள எ - று. 45

சேறறு வாரகதிர சேரக கொணாநதுவைத
தாறறு வாரகளத தாறறி னடைநதுபோா
ஏறறு வாாபக டேறறி மிதிததநெல்
தூறறு வாாகுவிப பாாசுமப பார்களே.

இ - ள் அவவாறு சேறறில நீணடு கிடககிற நெற்கதிரகளை யறுதது ஒரு சேரக் கொணடுவந்து வைததுத தலைமேற சுமப்பார்கள். பினபு நெற களத துககு வழியாகவநது போராக ஏயாததுவாாகள. பினபு மாடுகளை மேலேற விட்டு மிதிப்பாாகள. அபபடி மிதிததுதிாநத நெறகளைப் பதர்போகக காற றிலே தூற்றுவாாகள. அப்படித தூறறின நெலலைக குவிப்பாாகள. பினபு சுமந்துகொண்டு போவாாகள எ - று 46

பகடு மடடறப பூடடிப படுநதநெல
சகடு முடடவிட டோநதுந்த தஙகுல
மகடு மககளுமு வைகுறும வாழ்மனை
முகடு முடட நிறைபபாகண முறறுமே.

இ - ள். எருதுகளை அளவிலலாமற பூட்டி மிதிப்பிதத நெலலை வணடி களில் நிரமப ஏறறி, அவறறை ஓட்டிககொணடுபோய, தங்கள தஙகள் குலத்து மனைவிகளு மககளுமிருககிற வாழ்க்கையுடைய வீடுகளின முகடுவரையினும முடடும்படி நிரப்புவாாகள எ - று. 47

நாடு தோறாமிவை மாறு நடப்பன
நாடு தோறுங களிமயி லாடுவ
வீடு தோறுந திருவிளை யாடுவ
கூடு தோறுங கருங்குயில கூவவே.

இ - ள். காடுகளிலெல்லாம் களிப்பையுடைய மயில்களாடுகின்றன. அவர்கள் வீடுகளிலெல்லாம் இலட்சுமி சந்தோஷமாய் வாசஞ் செய்வாள். மாடத்திலே கட்டியிருக்கிற கூடுகளிலெல்லாம் கரிய குயில்கள் இருந்துகொண்டு கூவுதல் செய்ய, அந்தக் கோசலநாடு முழுதும் இப்படி நடக்கின்றன எ - று. 48

பெடைகி டப்பவும் பிள்ளை கிடப்பவும்
இடைகி டப்ப விளவனச் சேவல்கள்
மடைகி டக்கும் வளைமுத்தை யண்டமென்
றடைகி டப்பன வன்னப் பெடைகளே.

இ - ள். பெட்டை யன்னங்க ளொருபுறத்திலே இருக்கவும், குஞ்சுக ளொருபுறத்திலே யிருக்கவும், இளமையான ஆணன்னங்கள் நடுவே கிடக்கின்றன. நீர்பாய்கிற மடையிலே யிருக்கிற சங்கின்று முத்துக்களைத் தங்கள் முட்டையென்று நினைத்துப் பெட்டையன்னங்கள் அடைகிடக்கின்றன எ - று.

சாலெ லாம்பரு வச்செழுஞ் சாலியின்
காலெ லாநதின் றுகன்னற படப்பையுள்
மேய லாவிள மேதிக ளின்கடை
வாயெ லாமுத்து மாலைக ளாலுமே.

இ - ள். கோரைகள்போல முழுதும் வளர்ந்து கிடக்கிற செழுமையான நெல்லின் கதிர்களை யெல்லாம் தின்று கரும்புத் தோட்டங்களிலே புகுந்து மேய்வதனாலே இளமையான எருமைமாடுகளின் கடைவா யெல்லாம் முத்துக்கோவைகள் தொங்கும் எ - று.

முத்தானது, மதி - மேகம் - சங்கு - சிப்பி - மீன் - நந்து - முதலை - உடும்பு - தாமரை - வாழை - கமுகு - கரும்பு - செந்நெல் - மூங்கில் - யானைக்கொம்பு - பன்றிக்கொம்பு - பசுவின் பால் - நாகம் - கொக்கு - நங்கையர் கழுத்து என்னும் இருபதிடங்களிலும் பிறக்குமென்பது பிரமாணம். இங்கு எருமைமாடுகள் கரும்புத்தோட்டத்துட் புகுந்து அதனைத் தின்னலால், கரும்புகளின் கணுக்களில் முளைத்திருக்கிற முத்துக்கள் அவ்வெருமை மாடுகளின் கடைவாய்களில் ஒன்றன்பின்னொன்றாக வொட்டிய கோவைபோலுந் தொங்குகின்றன வென்றார். 50

மட்டி லாமட வார்குடை வாவிவிட
டெட்டி யன்ன மிரிந்து பறக்கவாய்
விட்டி ரங்கிடு பார்ப்பினை மென்மலர்த்
தொட்டி லாட்டித் திரைக டுயிற்றுமால்.

இ - ள். அளவில்லாத பெண்கள் நீராடுகிற குளங்களை விட்டு அன்னங்கள் தூரமாய் ஓடிப் பறந்துபோக, அப்போது வாயைத்திறந்து கத்துகிற அவற்றின் குஞ்சுகளை, அலைகள் மிருதுவான தாமரை மலர்களையே தொட்டிலாகக்கொண்டு அசைத்துத் தூங்கச்செய்யும் எ - று. 51

பள்ள மேறபன சக்கனி யூறலவ்
வெள்ள மேற்கம லத்தலர் மேல்விழ
உள்ள மேற்கமு ழுண்ட வவாவினுல்
வள்ள மேற்பன போல்வன வாவியே.

இ - ள். மரததடியாகிய பள்ளங்களிலே கிடக்கிற பலாப்பழங்களினது தேனூறலானது, அங்குள்ள குளத்துநீர் மேல மலர்ந்திருக்கிற தாமரைமலரின மேலே விழுங் காட்சியானது, முன்னே மனந் திருப்தியாகக் குடிதத குளங்கள், ஆசையினாலே தொன்னைகளை ஏந்துவனபோலிருந்தன எ - று 52

பூகத தினசெழும பாளையைப் புனகவி
நாகத தின்பட மென்று நடுஙகியே
பாகத திற்றின்று விட்ட பலாககனி
மேகத திற்புரை வெங்கதி ரொக்குமே.

இ - ள் கமுகமரததினது செழுமையான பாளையை புததியீனமான குரங்குகண்டு பாமபினபடமென்று பயந்து ரசத்துடனே தின்றுகொண டிருந்து விட்டுவிட்ட பலாப்பழமானது, மேகததிலே பொருந்தியுள்ள சூரியனை ஒததிருக்கின்றது எ - று 53

சேறு பாயமலாந் தேறலொடு தீஙகனி
ஊறு பாயவு மொண்கரும பட்டதீந
சாறு பாயவுந தத்தம்மிற் கூடியே
ஆறு பாய்வன வெங்கங் கணாந்தமே.

இ - ள். நிலததிலே சேறுணடாகப பாய்கின்ற பூவிலிருந்து ஒழியுந் தேனுடனே இனிப்பான பழங்களிலூறுகிற தேனபாயவனவும், அழகிதான கருமபையாட்டின இனியசாறுகள பாயவனவும தம்மிலொன்றாகக் கூடி, ஆறாகப்பாயவனவாகிய அந்தநத இடங்களெல்லாம அநேகமுணடு எ - று. 54

மனறு றஙகு மலர்களின மேய்ந்திளந
தென்றல வந்தவன் சிந்திய தாதுகள
குன்றின் வீழ்பொன மழைக்குழு வெனனவே
முனறி லும்மணி மாடமு மொய்க்குமே.

இ - ள். இளந் தென்றலானது வந்து பரிமளந்தங்கிய மலர்களிலே பரவி, அங்கே உதிர்த்த பராகப்பொடிகள, மலைகளினமேலே பெய்கிற பொனமழைக் கூட்டம்போல, வாசல்களிலும அழகிய வீடுகளினமேலும நிரம்பப் படியும் எ - று. 55

உலக ருமபுனத திறகிளி யோசசுவார
அகல்க வண்கொண் டெறியு மாமணி
பகல்வி ழுஙகண மொபபன பாரெலாம
குகனி ருநத செழுநதண் குறிஞசியே.

இ - ள். முருககடவுள விளஙகுகினற செழுமையான குளிர்ச்சியை யுடைய குறிஞசிநிலமெங்கும, கெடுதலிலலாத தினைபபுனததிலே கிளிகளை ஓட்டுகிறவாகளாகிய குறவாகள அகனற கவணிலவைதது வீசுகிற நாகரததினஙகள் (மேலெழுந்து விழுகிற தோறறமானது), ஒவவொரு சூரியனகீழே விழுகிற திரட்சியை யொததன எ - று. 56

நெடிய நெய்தலி னிததில வண்டலில
கொடிய காதலிற கூட விழைததிடுங
கடிய நீலக் கருஙக ணுளைசசியா
மடியி லேறி வளைகண்முறத தீனுமே.

இ - ள். விசாலமாயிருககிற நெய்தனிலததிலே முததுகக ளொதுங்கிக கிடககிற சேறறுநிலததிலிருநது, கொடுமையான காமததினாலே சுழியிடடுக கொணடிருககிற பரிமளததைக கொணட நீலமலாபோலுங கரிய கணகளை யுடைய வலைசசியாகள மடிமேலேறி, சஙகுகள முததைபபெறும எ - று. 57

கலைய ளக்குங கருஙக ணுளைசசியா
புலைய ளககு நறைககும பொருநதிய
விலைய ளபபன வெணமுதத மெயற
னிலைய ளககும பரதவா நெயதலே.

இ - ள். தருமநிலையை அளவுசெயதிருககிற வலையாகளுடைய நெயதநிலததிலே, காமநூலை அளவுசெயது பாாககினற காிய கணகளையுடைய வலைசசியாகள, இழிகுணததுடனே அளவுசெயது விறகிற களளுககுச சமமதமாக, விலைககு அளவுசெயது கொடுபபனவை வெளளிய முததுககளை எ - று. நெயதல - கடறகரை. 58

நிலமலி ளககிடு நிததில நீலவுற
பலமலி ளககிடு பைமபுனல பணபினன
னலமலி ளககிடு நலலவா வாயமொழி
குலமலி ளககிடுங கோசல நாடரோ.

இ - ள். எலலா நாடுககும சிரேஷடமாக விளங்குவதான கோசல நாட்டில், முததுககள நிலஙகளெலலாம பிரகாசிததுக கொணடிருககும். பசுமையான ஜலஙகளிலே நீலோறபலமலாகள விளஙகிககொணடிருககும. நலலோாகளுடைய வாயசசொறகளிலே பிரயோசனமான நனமாாககஙகள விளஙகுவதாயிருககும எ - று. 59

நாடடுசசிறப்பு முறறிறறு.

ஆக பாடல - 73.

# நகரச்சிறப்பு

## கலி விருத்தம்

மகர தோரண வாயிலு நாஞ்சிலுஞ
சிகர மாமதி லுஞ்செறி பேரகழ்
சகரர் வானபுகழ் சாற்று மயோத்திமா
நகர மேன்மை சிறிது நடத்துவாம.

இ - ள். மகரதோரணங்கள் கட்டியிருக்கிற கோட்டைவாசலும், மதிலுறுப்புகளும், அவவுறுப்புகளையுடைய பெரிய மதிலுஞ் சூழ, அம மதிலைச் சூழ்ந்த பெரிய அகழியானது, இதுவே சகரா தோண்டிய கடலெனறு சொல்ல அந்தச் சகரர்களுடைய பெரிய புகழைப் பிரசித்தப்படுததுவதான அயோததிமா நகரத்தினது மேமபாட்டை (இனி எமமாலே கூடியவளவு) கொஞ்சம் சொல்லத் தொடங்குகிறோம் எ - று. 1

மாட மாளிகை யுமமடைப் பள்ளியுங்
கூட கோபுர முமபெருங் கோயிலு
மாட ரஙகு மணியறா சாலையும
பாட லங்கரி வைகிய பந்தியும.

இ - ள். வீடுகளும உப்பரிகைகளும மடைபபளளிகளும் கூடங்களுங் கோபுரங்களும் பெரிய அரணமனைகளும நடனம்பண்ணுகிற நாடகசாலைகளும் அழகிதான தருமசததிரஙகளும குதிரைகளும யானைகளும நிறகிற இடங்களும் மிகவுள எ - று 2

மார னன்னவா மாமயி லனனவா
தார டாநத புயமுந தனஙகளு
நேர டாநது நெருககலின வீழ்நதபொன
னூர மினனுவ வாவண வீதியே.

இ - ள். மன்மதனை ஒத்த புருஷாகளும், அழகிய மயிலையொதத சாயலையுடைய பெண்களும ஆகிய இவாகளுடைய மாலைகள் நெருங்கிய தோள்களும், கொங்கைகளும் நேரே பொருந்தி நெருங்குதலினாலே உதிர்ந்த பொன்னும முததும கடைவீதிகளிலெல்லாம் விளங்கிக கிடக்கின்றனவாயிருக்கும் எ - று. 3

அன்பு தங்கு மனததரிச் சந்திரன்
றனபு கழ்ககொழுந தோங்கித தழைத்தல்போற்
பொன்பு னைர்முலை யாபுலர்த் தும்மகி
லின்பு கைசென் றெழுமுக டெஙகுமே.

இ-ள். அன்புதங்கிய மனத்தினனாகிய அரிச்சந்திர மகாராஜனுடைய புகழானது கொழுந்துகொண்டு வளர்ந்து தழைப்பதுபோல், பொன்னிறமான தேமலைகொண்ட தனங்களையுடைய பெண்கள் கூந்தலைக் காயச்செய்கிறதற்கு மூட்டுகின்ற அகிற்கட்டைகளின் புகையானது ஆகாயமுகடெல்லாம் போய்ப் படரும் எ-று. அன்பு - தெய்வபக்தி. 4

சோனை யார்ப்பென வூழி தொடர்ந்தெனச்
சேனை யார்ப்பன தேரொலி யார்ப்பன
வானை யார்த்தெழும் வாம்பரி யார்ப்பன
வானை யார்ப்பன வாவண வீதியே.

இ-ள். கடைவீதிகளில் மேகங்கள் முழங்குவதுபோலவும் ஊழிக்காலம் வந்தாற்போலவும் சேனைகளும் சப்திக்கின்றன. தேர்களினொலியு முழங்குகின்றன. ஆகாயத்தை யளாவிச்செல்லவதாய்த் தாவுகின்ற குதிரைகளும் கனைக்கின்றன. யானைகளும் வீறிடுகின்றன எ-று. 5

வேத வோதை வியன்கலை யோதையின்
கீத வோதை கிளையோதை யாடுவார்
பாத வோதை பரிபுரத் தோதையாழ்
நாத வோதை நடப்பன நாளுமே.

இ-ள். வீதிகளிலே வேதகோஷங்களும், பெரிதான கலைஞான வொலியும், இனிய கீதங்களினொலியும், ஊதுகிற குழல்களினொலியும், ஆடுகிற வர்களுடைய காலிலுள்ள சதங்கைகளினொலியும், சிலம்புகளினொலியும், வீணையிலுண்டாகின்ற கானவொலியும் நாடோறும் உண்டாகிக்கொண்டே யிருக்கின்றன எ-று. 6

கிள்ளை பாடுவ கீதங்கள் சாரிகைப்
பிள்ளை பாடுவ வேதம் பிராமணர்
கொள்ளை பாடுவ ரின்னிசைக் கோதையார்
வள்ளை பாடுவர் மன்னவன் வண்மையே.

இ-ள். கிளிகள் பாட்டுகளைப் பாடுகின்றன. நாகணவாய்ப்புட்கள் மழலைச் சொற்களைப்போற் பேசுகின்றன. பிராமணக் கூட்டங்கள் வேதங் களைப் பாராயணஞ் செய்வர். இனிதான இசையினையுடைய பெண்கள் அரிச் சந்திர மகாராஜனுடைய உதார குணங்களை வள்ளையென்னும் பிரபந்தத்தில் அமைத்துப் புகழ்வார்கள் எ-று.

வள்ளை யென்பது, உலக்கை யோச்சுங் கால் தலைவன் வளங்கூறி மகளிர் பாடுவது. 7

கூட லோங்குவ கோதையர் யாவர்க்கு
மூட லோங்குவ தவ்வை யொருத்திக்கு

மாட லோங்குவ கண்ணுளர்க் கன்றன்றும
பாட லோங்குவ நித்தலும பாணர்க்கே.

இ-ள். (அவ்வயோத்திமா நகரத்திலுள்ள) பெண்க ளெல்லோருக்கும் எப்போதும தத்தம் நாயகருடனே கூடுதல அதிகமா யிருக்கும். மூதேவி ஒருத்திக்கு மாத்திரம (அந்நகரிற சேருதற கியலாமையா லுண்டாகிய) பிணக்கே அதிகமா யிருக்கும். நாடகிகளுக்கு அந்தந்த நாளகடோறும ஆடுகிற தொழிலே அதிகமா யிருக்கும. பாணாகளுக்கு நாடோறும பாடுகிற தொழிலே அதிகமா யிருக்கும எ-று. பாணா - புகழ்ந்து பாடுவோா. 8

பொறப ராககாப பூரப ராகசசெம
பறப ராக பயோதர வேசையா
விறப ராக மிராவிடி யனமுதற
கற்ப ராகம நாடக கானமே.

இ-ள். பொன்னிறமான கந்தப்பொடிகளும, பசசைககாப்பூரத தூள களும், சிவந்த பதுமராக மணிமாலைகளுங் கொண்ட கொங்கைகளையுடைய வேசையர்கள தங்கள் தேகத்தை (இச்சித்த புருடாகளுககு) இராக்கால முழுதும விலைககு விறபாாகள. இராகங்களும, அந்த நடனத்துககேறற பாடலகளும், விடியற்காலத்திறகுமுனனே கறறுககொள்வாாகள் எ-று. 9

எமமி னண்ணி யிருநதன யாவையும
வம்மி னென்ன வழைபபது மானவே
விமமி நின்ற வியனகொடி யெங்களும
தமமி னினறு நுடங்கித தயங்குமே.

இ-ள். அவ்வயோத்திமா நகரத்தாாகளுடைய வீடுகளினமேலெல்லாம் மிகுந்து நிற்கின்ற சிறந்த கொடியாடைகளானவை, தமககுள ஓங்கி நின்று, எங்களிடத்திலே சோந்திருககிற எல்லாப பொருள்களையும (ஆசையால) கொள்ள வாருங்கள் என்று கூப்பிடுவதுபோலத் துவண்டு விளங்கும எ-று. 10

முனனை மாதவத தானமுழு துககுநல
லன்னை யாமரிச சநதிரன றனனைமா
லென்ன மேல்வளைந தீண்டிய பாறகட
றனனை யொதத தவளக கொடிகளே.

இ-ள். வெள்ளைக் கொடிகளானவை, பூர்வத்திலே செய்த பெரிய தவத்தினாலே எல்லாப் பொருள்களுக்கும நலல தாய்போன்ற அரிச்சந்திர மகாராஜனை விஷ்ணுவென்று நினைத்து, மேலே சூழ்ந்து பரவின பாற்கடலை ஒத்திருக்கின்றன எ-று. 11

திருக நோககியற சித்திரப பாவையை
யருக நோககிய வனபரை வலலிய

ருருக்க நோக்கிய வூடலி னோக்குயிர்
பருக்க நோக்குஞ் சமனைப் பழிக்குமே.

இ - ள். (அந்தந்த வீடுகளில்) பிணக்கு நோக்குடையதாக எழுதியிருக்கிற சித்திரப் பிரதிமைகளை, தங்களை யணைக்க நோக்குவதுபோல் அணைக்கப் பார்க்கின்ற நாயகர்களை, கொடிபோலும் இடைகளை யுடைய பெண்கள் மனமுருகப் பார்க்கின்ற பிணக்குப் பார்வையானது, உயிரைக் கொள்ளை கொள்ளப் பார்க்கின்ற யமனைப் பழிக்கும் எ - று

திருக்க நோக்கியலாவது. முறுக்கிய முகத்தோடு பிணக்குப் பார்வை தோன்ற விருத்தல் 12

முரணொ டுங்குலி சத்தவன் மூண்டபோர்க்
கரண மக்கரிச் சந்திர னுமென்று
சரண டைந்த தடவரை யீட்டம்போற்
றிரணெ டும்பரித் தேரணி நிற்குமே.

இ - ள். மாறுபாட்டையுடைய நீண்ட வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரனவன் மூளுவதான சண்டைக்கு, நம்மைத் துன்ப நேராவண்ணம் காப்பவன் ரட்சகனை அரிச்சந்திர மகாராஜனே யாமென்று அடைக்கலமென்று வந்திருக்கிற பெரிய மலைக்கூட்டம்போல, திரட்சியாய நீண்ட குதிரைகள் கட்டுவதான தேரின் வரிசைகள் நிற்கும் எ - று.

பொன்னாட்டுக் கிறைவனாகிய இந்திரன், முன்னொருகால் தன் கைப்படையாகிய வச்சிராயுதத்தினால் மலைகளின் சிறகுகளைச் சேதித்தனனாதலின், அன்னோன் மீண்டும் அச்செயலை விளைப்பனென்னும் பீதியால் வரைகள் அரிச்சந்திரனைச் சரணடைந்ததுபோலத் தேர் வரிசைகள் நிற்கின்றனவென்னும் பொருள் தோன்ற இச்செய்யுளிற் கூறியது. அத்தேர்களினது உயர்ச்சியும் திரட்சியும் வியந்து கூறியபடி என்க 13

ஏம சாலையு மின்னிசைச் சாலையு
மோம சாலை யுடனறச் சாலையுந்
தூம சாலையுந் தோகையர் மாதவக்
காம சாலையு மெண்ணக் கில்லவே.

இ - ள். திரவியங்களிருக்கிற சாலைகளும் இனிய இசைநூல் கற்கிற சாலைகளும், ஓமம் பண்ணுகிற சாலைகளுடனே தருமசத்திரச் சாலைகளும், புகைகள் கிளறுகின்ற சமையற்சாலைகளும், பெண்களுடைய மிகப் பெரிதான காமானுபவம் பண்ணுகின்ற சாலைகளும் அந்நகரிலே அளவில்லை எ - று. 14

அறமி ருக்கு மனத்தி லனைவர்க்குந்
திறமி ருக்கும் புயந்திற் செறுநர்பால்
நிறமி ருக்கும் படையினக் கூர்மையின்
மறமி ருக்கு மடந்தையர் கண்ணினே.

இ - ள். அந்நகரமாக்களுடைய மனத்தில் தருமமே குடிகொண்டிருக்கும். தோள்களில் சாமர்த்தியமே நிலைகொண்டிருக்கும். ஆயுதங்களினிடத்திலே சூரியகாந்தியே நிலைபெற்றிருக்கும். பெண்களுடைய கண்களிலே பிணங்குங் குணமே யிருக்கும் எ - று. 15

தொட்டு மன்னன் சுடாமுடி சூடிய
மட்டு மேககமவ வாணகர்க் கில்லையு
ணட்டுண் பாரன்றி யாதுல ரினமையா
லிட்டு ணுக்குறை யென்பதொ ரேக்கமே.

இ - ள். அந்த அரிச்சந்திரமகாராஜன அரசாளுகையைத் தொடங்கி, பிரகாசங்கொண்ட திருமுடி சூடிக்கொண்டிருக்குமளவும் ஏக்கமெனபது அந்த ஒளியால் மிக்க பட்டணத்திறகு இல்லை சமைத்துணகிறவர்களே யல்லது, பிச்சைக்கு வருகிறவர்களில்லாமையினாலே, பிச்சையிட் டுணணுதற்குறையே யுண்டெனபதான இவவேக்கமொனறுமே அநதப் பட்டணத்திலுணடு எ - று. 16

கறறி டுஙகொலைக கண்கண்டு காமுகா
முறறி டுமபையு மோட்டிள்ங கொஙகையா
லிறறி டுமமருங கெனனுமி டுமபையு
மறறி டுமபையும மண்டலத் தில்லையால.

இ - ள். எப்போதும கொலைத்தொழிலைக கற்றுள்ள பெணகளின கண்களைக் கணடு காமுகரான புருஷர்கள் நிரமபக்கொள்ளுகிற துனபமும், உயாநத இளமைப்பருவத்தையுடைய கொஙகைகளின கனத்தாலே இடையானது ஒடிந்துபோகு மெனபதான துனபமுமே அந்நகரில் உணடேயனறி, வேறு துனபம அவவிடத்திலில்லை எ - று. 17

இபம ருப்பெனக கொஙகைசு மநதிடை
தபமு ரிநதிடுந தகககன றீதெனு
வுபய பாததத்தி் கொணபொற சிலமபிடு
மபய மன்றி யபயமற றிலலையே.

இ ள். யானைககொம்பு போலவனவான கொங்கைகளைத தாஙகி இடையானது கெடுதலாக ஒடிந்துபோகும தகுதியானதலல இதுவென்று இரணடு கால்களுக்கும் அழகிதான பொனனாலாகிய சிலமபுகளிட்டு ஒலிப்பதான அபயக குரலே யல்லாமல் அங்கு வேறு அபயககுரலில்லை எ - று

அபயககுரல - பயமில்லாமையை வேணடுங குரல. 18

நிறையுந தாமரை நீட்டத்தி னறபுனற
சிறையு மனறிச சிறைபிறி தில்லையால
பிறையு மெனமுலைப பேதையா சிறறிடைக
குறையு மனறிக குறைபிறி தில்லையே.

இ - ள். மாட்சிமைதங்கிய தாமரைமலர்களி னீட்சியினையுடைய நல்ல நீர்க்குளங்கள் முதலானவைகளுக்குச் சிறைசெய்வதேயன்றி, வேறு சிறை செய்ததில்லை. சந்திரப்பிறையும், மெல்லிய தனங்கள் வாய்ந்த பெண்களி னுடைய சிறிய இடைகளும் தேயுமேயல்லது வேறு தேய்வில்லை எ - று.

சிறை செய்தல்-காவல் செய்தல். 19

பொருநதி மானும் புலியும் புனலுட
னருநதி வாழு மொருதுறை யன்பினாற்
பருநதும பைங்கிளி யும்மொரு பஞ்சரத
திருநது வாழு மிரவும் பகலுமே.

இ - ள். ஒரு துறையிலே மானும் புலியுந் தண்ணீரைச் சேர்ந்து குடித் துக் கூடி வாழ்வதாயிருக்கும், பருந்தும பச்சைக்கிளியும் இரவும பகலும் அன் புடனே ஒரு கூட்டிலே கூடியிருந்து வாழ்வதாயிருக்கும் எ - று. 20

பொருளும் வேத புராணமுமம புந்தியிற்
றெருளுந் தான தியாகமுமம யாகமு
மருளின் மாதவ முமமவள முமமுயிர்க்
கருளுந தோன்றுறு மநநக ரத்தினே.

இ - ள். அந்த நகரத்திலே அர்த்தந்தெரிதலும், வேத புராணங்கள் பாராயணஞ்செய்தலும், அதனாலே புத்தியிலே தெளிவுடைத்தா யிருத்தலும், தானங்கொடுத்தலும், தியாகஞ் செய்தலும், யாகங்கள் பண்ணுதலும, மயக்க மில்லாத பெரிய தவங்கள் செய்தலும், சம்பத்துக்கொண்டிருத்தலும், ஜீவ காருணிய முண்டாயிருத்தலுமே விளங்கிக்கொண் டிருக்கும் எ - று. 21

மேற்படி - வேறு

அததிருந காக்குணிரை யாயிரம ணிததூண்
பததிகளு மத்தொகைய பைமபொ னுறு கோயிற்
சிததிரம ணித்தவிசின முததணிசெ முமபொற்
சத்திரநி ழற்றவரிச சநதிரனி ருநதான.

இ - ள். அப்படிப்பட்ட திருநகரததிலே வரிசையாக ஆயிரம் இரத்தினத் தூண்களுள்ள மண்டப வரிசைகளும், அந்த ஆயிரமாற்றுப் பசும்பொன் னாலே செய்திருக்கிற அரண்மனையாக அமைந்திருப்பதி லநேக சித்திர விசித்திரங்களாக இரத்தினங்கள் பதித்திருக்கிற சிங்காசனத்தின் மேலே முத்துக்களாலே அலங்கரித்திராநின்ற செழுமையுடைய பொனமயமான பூச் சக்கிரக்குடை நிழல் செய்ய, அதன்கீழே அரிச்சந்திரமகாராஜன் கொலு விருந்தான் எ - று. 22

என்னதிசை தென்னதிசை தென்றிருகை கூப்பி
மன்னவரி டுந்திறைகள் வநதினித ளப்பத்

துன்னுமறை யோர்கள்பலர் சோதிடமு ரைப்ப
மன்னுகவி வாணர்பலர் மங்கலமி யம்ப.

இ - ள். ஒருபுறத்திலே, என்னது இவ்வளவு, என்னது இவ்வளவென்று சொல்லி இரண்டுகைகளையுங் குவித்துக்கொண்டு அரசர்கள் கொடுக்கவேண்டிய பொருள்களைக் கொண்டுவந்து சந்தோஷமாக அளவுசெய்து கொடுத்துக்கொண்டிருக்கவும், ஒருபக்கத்திலே நெருங்கின வேதப்பிராமணர்கள் பலரும்வந்து பஞ்சாங்கமுதலான பொருத்த நிமித்தங்கள் சொல்லிக்கொண்டிருக்கவும், மற்றொருபுறத்திலே நிலைபெற்ற கவி வல்லவர்கள் பலருங்கூடிச் சுபமான கவிகளைப் பாடவும் எ - று.

இதுமுத லொன்பது பாடல்கள் * குளகம். 23

முந்தையிர விகுல முதற்றலைமை யோடும்
வந்தகுல மந்திரிகண் மண்டலிகர் சூழச்
சந்திரமு கத்தமணி யக்கனத னத்துச்
சுந்தரம டந்தையர்கள் சுற்றிபணி மாற

இ - ள். பழமையான சூரியகுலத்தோரறிய நாள்முதல் பிரதானமான சிறப்புடனேகூடி வந்திருந்துள்ள சிரேஷ்டகுல மந்திரிகளும், மண்டலிகர்களும் ஒருபுறத்திலே சூழ்ந்திருக்கவும், இருபக்கத்திலும் சந்திரனைப் போலு முகமும், பொன்மலைபோலும் கனமான தனங்களையுமுடைய சௌந்தரிய முள்ள பெண்கள், வெண்சாமரங்களைச் சுற்றிச்சுற்றி வீசுகிற செய்கைகளை மாறிமாறி நடந்துகொண்டிருக்கவும் எ - று. 24

ஆடகம ணிக்கடக கைத்தலம முந்த
மாடகமு றுக்குபு மடந்தையர்கள் பாடப்
பாடகப தப்பரி புரத்தொலி யெழும்பு
நாடகம டந்தைய ரசைந்துநட மாட.

இ - ள். பொன்னிலே செய்து இரத்தினங்கள் பதித்திருக்கிற கங்கணங்களணிந்த கை பதிய முறுக்காணிகளை முறுக்கி மடந்தைப் பருவப் பெண்கள் பாடிக்கொண்டிருக்கவும், ஒருபுறத்திலே பாடகங்களணிந்த கால்களிலே சிலம்போசைகள் கிளர நடனஞ்செய்கிற பெண்கள் அசைந்தசைந்து நடனஞ் செய்யவும் எ - று. 25

ஆகமிசை தங்குமணி யாரமுமி வற்றின
பாகமிசை சோதிவிரி பணமணியு மின்னக்
கோகனக மங்கையொடு கொற்றவையு மம்பொன
வாகுவல யங்களு மணிப்புயமி லங்க.

* "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்"—என்பது சூத்திரம்.

இ - ள். மார்பின்மேலே தங்கியிருக்கிற இரத்தினமாலைகளும், முத்து மாலைகளும், அவைகளின் நடுவே சோதிகளைப் பரப்புகின்ற பலவகை இரத்தினங்களும் பளபளென்னவும், செந்தாமரைமலரிலிருக்கிற லட்சுமியும், வீரலட்சுமியும் அழகிதான பொன்னாலாகிய அழகுகொண்ட கேயூரங்களும் அழகிய தோள்களிலே விளங்கவும் எ - று 26

சோமனைமு டித்தருளு மாபதிசு டாத
காமனிவ னென்னவொளிர் கட்டழ கிலங்க
மாமகர குண்டலம ணித்திருவில் வீசச
சேமவுடை வாளது திருக்கையிலி லங்க.

இ - ள். சந்திரனைச் சடைமேற் சூடிக்கொண்டிருக்கிற பார்வதி நாயகனை பரமசிவனாலே எரிக்கப்படாத மன்மதன இவனாறென்று சொல்லும்படி பிரகாசிக்கிற பேரழகு விளங்கவும், பெரிய மகரகுண்டலங்கள் இரத்தினங்களினுடைய சிறந்த காந்திகளை வீசவும், உயிர்க்காவல செய்கிற உடைவாளானது திருக்கையிலே விளங்கவும எ - று 27

துடிபபடுக ரததினடி யாதடொழு து நீற்றுப
பொடிபபடவ டுபபடுக றுபபுநுதல பொஙக
முடி ததலையு றத திசைமு கநதரர ருபநத
வடுபபடுக றுபபிரும லாககழலவி ளங்க.

இ - ள். உடுக்கை தங்கின கையையுடைய சிவனடியாரகளை வணஙகி விபூதி தாளிதந்தோனற வடுவாகிய கறுப்பான்து நெறறியிலே விளஙகவும், எட்டுததிககுகளிலுமுளள அரசாகள கிரீடமணிநத தலைகளபட (அரிசசநதிர மகாராஜன பாதங்களில வீழ்ந்து) வணஙகுதலினாலே, (அககிரீட) வடுவாகிய கறுப்பு இரண்டுமலர்போலும பாதஙகளில விளஙகவும எ - று.

அரிச்சந்திரமகாராஜன சிவனடியாரிடததும, எல்லாப் பாவங்களையும் போக்கவல்ல விபூதியினிடததும், மிகப் பறறுடையவனென்று இச்செயயுளால விளஙகுகிறது. சாவதாகாலமும விபூதியையணி நெற்றியிலே பூசுதலினாலுண டாகிய வடுதடதோன றுமெனபார். "பொடிப்பட வடுபபடு கறுப்புநுதல பொஙக" எனறார்.

## சிவனடியாரகளின் பெருமையினை

"எவரேனுந் தாமாக விலாடத திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி, யுவராதே யவரவரைககணடபோது உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோககி, இவாதேவ ரவாதேவ ரெனறுசொலலி யிரணடாட்டாதொழித் தீசன் றிறமே பேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே"—என்னும் திருநாவுககரசு சுவாமிகள அருளிச் செய்த தேவாரப் பதிகததா னறிக.

## விபூதி யணிதலினு லுண்டாகும் சிறப்பினை

"வேதத்தி லுள்ளதுநீறு வெந்துயர் தீர்ப்பதுநீறு
போதந் தருவதுநீறு புன்மை தவிர்ப்பதுநீறு
ஓதத் தகுவதுநீறு வுண்மையி லுள்ளதுநீறு
சீதப்புனல் வயல்சூழ்ந்த திருவாலவாயான் றிருநீறே" என்னும்

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரப்பதிகத்தா னறிக.

காலமது கண்டுகதி ருஞ்சசியு மொருங்கெண்
பாலளவு நீள்கதிப ரப்புவன போலக்
கோலமுக நின்றொளிகு லாவவதன் மீதே
சாலமணி மேவுமுடி நின்றொளித யங்க.

இ - ள். சமயந்தெரிந்து சூரியனுஞ் சந்திரனும் ஒருசேரக் கூடி எட்டுத் திக்குகள் முழுதும் நீண்ட கிரணங்களை விரிக்கிறதுபோல, அழகிதான திரு முகத்திலே நிலைகொண்டு ஒளிவிளங்கவும், அந்த முகத்துக்குமேலே மிகவும் இரத்தினங்கள் பதித்திருக்கிற கிரீடத்திலே நிலைகொண்டு ஒளி விளங்கவும் எ - று. 29

கண்ணக நிறைந்திமை கடந்துகடை தாவி
மண்ணகம டங்கலும டைந்துயிர்கள் வாழ
விண்ணளவு தாவிரிரு வெங்கலிக ரப்பத்
தண்ணளி நெடுங்கடலி டங்கொடுத் தைப்ப.

இ - ள். குளிர்ந்துள்ள கிருபையானது இரண்டு கண்களுக்குள்ளும் நிறைவாய் இமைகளுக்கு மேற்பட்டுக் கடைக்கண்களிலும் தாவுதலாய் இந்த மண்ணுலகமுழுதும் வியாபித்து உயிர்களெல்லாம் சுகத்தையடையவும் ஆகாயத் தளவுஞ்சென்று மிகுதியாகிற வெவ்விய கலிபுருஷன் மறைந்துபோகவும், நெடிய கடலைப்போல விசாலங்கொண்டு பெருகவும் எ - று. 30

வந்தெறிப யோததியின் மண்டுதிரை வானிற்
சிந்துநுரை யூடுதிகழ் செங்கதிர்க டுப்பச்
சந்தமுலை மாதரிடு சாமரையி னூடு
சுந்தரம ணிப்பணிது லங்கிடவி ருந்தான்.

இ - ள். கரைமேலே வந்து மோதுகிற கடலிலே நெருங்கின அலைகள் ஆகாயத்திலே வீசுகிற நுரைகளுக்குள்ளே விளங்குகின்ற இளஞ்சூரியனை ஒப்பாக, அழகான தனங்களையுடைய பெண்கள் வீசுகிற சாமரங்களுக் குள்ளே அதிக ரமணீயமான இரத்தினாபரணங்கள் விளங்க அரிச்சந்திர மன்னன் அரசிருந்தான் எ - று. 31

நகரச் சிறப்பு முற்றிற்று.

ஆகப் பாடல் - 104.

---

உ

கடவுள் துணை

# முதலாவது

# விவாக காண்டம்

---

### கலிநிலைத்துறை

இருந்த காலையி லியாவர்க்கும் விடைகொடுத் தருளித்
திருந்து மாமுடி மன்னவன் சிலருட னிருப்பப்
பொருந்து நன்னெறிப் புண்ணிய தீர்த்தங்க ளாடி
யருந்த வத்தின ரனேகர்வந் தந்நக ரடைந்தார்.

இ - ள். அவ்வாறிருக்கிற சமயத்தில் எல்லோருக்கும் உத்தரவுகொடுத் தனுப்பிவிட்டு, செவ்வையான பெருமை பொருந்திய கிரீடமணிந்த அரிச்சந்திரமகாராஜன் சிலபேருடனே அச் சபாமண்டபத்தி லிருக்கும்போது பொருத்தமுள்ள நன்மார்க்கத்துக்குக் காரணமான புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து அருமையான தவத்தையுடைய அனேக முனிவர்கள் வந்து அந்நகரத்திலே கூடினார்கள் எ - று. 1

சடையு முண்டமுஞ் சிகையு நுண்டாதுகற் றோய்ந்த
வுடையு மாமர வுரிகளு முடுத்தழ கிருந்த
விடையுந் தாழ்சிறு பண்டியு மெய்த்திளைத் தோய்ந்த
நடையும் வாழ்த்தலுஞ் சபித்தலு முந்துறு நாவும்.

இ - ள். சடைத்தலைகளும், மொட்டைத்தலைகளும், குடுமித்தலைகளும், மெல்லிதான காவிக்கல்லிலே தோய்த்திருக்கிற வஸ்திரங்களும், பெரிய மாவுரிகளும் உடுத்தி, அழகு குடிகொண்டிருக்கிற இடைகளும், தொங்குகிற சிறிய வயிறுகளும், ஆயாசமாயிளைத்து நடக்கிற நடைகளும், வாழ்த்தி ஆசீர்வதிக்கிறதும், கோபித்துச் சாபங்கொடுக்கிறதுமாகிய முந்திவருகிற நாக்குகளும் எ - று. (இது முதல் மூன்று பாட்டுகள் குளகம்) 2

நூலு மார்பமு நூலிடைத் திகழ்ந்தமா னடங்குந்
தோலு மங்குலித் தருப்பையுந் தூங்குறிமாண் செவியி
னூலும யாக்குண் டலங்களு நாண்மலர்ச் செப்பிமுகக்
கோலு மேந்திய குடைகளுங் குண்டிகைக் கரமும்.

இ - ள். முப்புரிநூலும், மார்பும், அந்த முப்புரிநூலினிடமாய் விளங்கி மிகவும் அசைகின்ற மான்தோலும் விரல்களில் தர்ப்பை மோதிரமும், அசைகிற அழகிதான காதுகளிலே தொங்குகிற பாகத்திலே சேர்ந்த வெண்மையாகிய குண்டலங்களும், நாணற்கு மேம்படமாக்கங்களுக் கொத்துக் குறிக்கண்டைகளும், தாங்கிக்கொண்டு வருகிற குடைகளும், கமண்டலங்கள் கொண்டிருக்கிற கைகளும் எ - று. 3

இன்ன கொண்டுள விருடிக ளியாவரு மெய்தி
யன்ன சத்திர மணைந்துபுக் கனரயர் வுயிர்த்து
முன்னம் வாரிதி யார்ப்பெடுத் தாலென முழங்கி
மன்னர் மன்னவன் மாளிகை வாயிலில் வந்தார்.

இ - ள். இவைகளையெல்லாங் கொண்டிருக்கிற முனிவர்களெல்லோரும் வந்து அந்த நகரத்திலுள்ள அன்னசத்திரத்திலே போய்க் கூடினவர்களாய் ஆயாசந்தீர்ந்து, முன்னே கடல்முழக்கங் கொண்டுவந்தாற்போல முழங்கிக் கொண்டு, அந்த இராஜாதிராஜனாகிய அரிச்சந்திரனுடைய அரண்மனை வாயிலுக்குள்ளே வந்தார்கள் எ - று. 4

வந்த மாதவ ரோரனைவரு மன்னவன் கேட்டுச்
சிந்தை யிற்பெரு மகிழ்வுறச் செனெடுந்தி கொண்டே
யெந்த மாதவ மின்றுவந் தெய்திய தென்று
வந்த மாதவ ரடிமலர் முடியுறத் தொழுதான்.

இ - ள். அப்படி வந்து கூடின மகரிஷிகளுடைய சப்தத்தை அந்த அரிச்சந்திரமகாராஜனானவன் கேட்டு, மனதிலே பெரிதான சந்தோஷமுண்டாகப் போய் எதிர்கொண்டு நான்செய்த எந்தப் பெரிதான தவப்பலனானது இப்போது வந்து சித்தித்ததென்று அந்த மகரிஷிகளுடைய பாதங்களைத் தன் சிரசிலே பொருந்தும்படி வணங்கினான் எ - று. 5

தொழுத காலையி லாசிக ளருந்தவர் சொல்லி
முழுது மாமறை முழங்கிட மண்டப முற்ற
வெழுது மாமணி யாசன மவைவாக விருந்து
பழுதி லாமொழி மன்னவ னிருந்திவை பகர்வான்.

இ - ள். அவ்வாறு அரசன் வணங்கினபோது அவ்வருமையான தவரிஷிகள் ஆசீர்வாதஞ்செய்து வாயாமுழுதும் பெரிய வேதங்களை முழங்குவதாக சபாமண்டபத்திலே வந்துகூடலே; ஒளிசெய்கிற பெரிய இரத்தினசிங்காசனங்களை அந்தந்த ரிஷிகளுக்குத் தக்கபடி கொடுத்துக் குற்றமில்லாத உபசார வார்த்தைகளையுடைய அரிச்சந்திரமகாராஜன் தன்னுடைய சிங்காதனத்திலிருந்துகொண்டு இந்த வார்த்தைகள் சொல்லுகிறான் எ - று. 6

எந்தத் தேயங்கள் கண்டனி ரெந்திசை புகுந்தீ
ரெந்தத் தீர்த்தங்க ளாடினீர் புதுமையென் கண்டீர்
முந்தக் கூறுமி னென்னரிச் சந்திரன் மொழிய
வந்த காலையி லரசனுக் கருந்தவ ருரைப்பார்.

இ - ள். ஓ மகரிஷிகளே! நீங்கள் எந்தெந்தத் தேசங்களைக் கண்டீர்கள்? எவ்வெத்திசைகள் போனீர்கள்? எந்தெந்தத் தீர்த்தங்களிலே முழுகினீர்கள்? அங்கங்கே என்ன ஆச்சரியங்களைக் கண்டீர்கள்? அவைகளை முன்னே எனக்

குத் தெரியச்சொல்லுக்கவென்று அரிச்சந்திரமகாராஜன் கேட்க, அப்போது அரிய தவத்தினையுடைய முனிவர்கள் அரசனுக்குச் சொல்லத் தொடங்கினார்கள் எ - று. 7

அங்கண் மாநிலத் தரியகன் ஞெசிநாட் டகத்துப்
பொங்கு கண்டகி யென்பதோர் புண்ணிய தீர்த்த
மங்கி யாம்புகுந் தாடிநின் னருண்முகங் காண
விங்கு வந்தன மின்னமுங் கேட்டியென் றிசைப்பார்.

இ-ள். அழகிய இடத்தையுடைய பெரிய உலகத்திலே அருமையான கனஞ்ஞெசிநாட்டிலே அலைகளை பொங்குவதான கண்டகி என்னும் ஒரு புண்ணிய தீர்த்தமுண்டு, அந்தத் தீர்த்தத்துக்கு நாங்களெல்லோரும்போய் அதில் மூழ்கி, உம்முடைய கிருபாசாரமுள்ள திருமுகத்தைக் காண்பதற்கு இங்கே வந்தோம். (ஓ அரசாககரசனே!) இன்னமும் ஒரு அதிசயமுண்டு; அதையுங் கேளுமென்று முனிவர்கள் சொல்லுகிறார்கள் எ-று 8

அந்த நாட்டினிற் கன்னமா புரிநக ராள்வோன்
சந்தி ரன்வழிச் சந்திர தயனற் றவம்புரிந்து
கந்த வார்சடைக் கடவுடன் வரத்தினாற் பயந்த
தந்த மாமுலைத் தையலச் சந்திரவதி யென்பாள்.

இ - ள். அந்தக் கனஞ்ஞெசிநாட்டிலே கன்னமாபுரி யென்னும் பட்டணத்தை யாளுகிற சந்திரனுடைய குலத்திலே பிறந்த சந்திரதயனென்னும் அரசனானவன் அனேக தவங்களைச் செய்து (கொன்றைப்பூமணம்) பரிமளிக்கின்ற நீண்ட சடைகளையுடைய பரமசிவனுடைய வரத்தினாலே பெற்ற யானைத் தந்தங்களைபோலும் பெரிய தனங்களையுடைய (அழகால் மிக்க) ஒரு பெண் சந்திரவதியென்பவள் எ - று. 9

மண் மடந்தையர் தம்முளும் வாசவ னுறையும்
விண் மடந்தையர் தம்முளு நிகரிலா விறல்வேற்
கண் மடந்தைகள் கருங்குழ லருந்ததி கற்பிற்
கெண் மடங்குகற் புடையளிந் திவையினு மெழிலாள்.

இ - ள் பூலோகத்திலுள்ள பெண்களிலும், தேவேந்திரன் வாசஞ்செய்கிற தேவலோகத்திலுள்ள பெண்களிலும் ஒப்பாகிறவர்களில்லாத வெற்றிவேலைப் போலுங் கண்களையுடைய பெண்ணானவள். பின்னும் குளிர்ந்த கருமையான கூந்தலையுடைய அருந்ததியினுடைய பதிவிரதா தர்மத்திற்கு எட்டுப்பங்கு அதிகமான பதிவிரதாசிரோன்மணியானவள். மாரனிடசுமியைப் பார்க்கிலும் மிகுந்த அழகையுடையவள் எ - று

இனி அடியில்வரும் ஏழு பாடல்களால் அவளழகின் வரலா றுரைக்கப் பட்டது. 10

### எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

முகிலைவென் றறலைக் கடிந்துசை வலத்தை
முனிந்துபொற் கடுக்கையை முடுக்கி
யகின்றும் புகையுந் தகரமும் புழுகு
மளாவிப் பனிநீரிலே நனைந்து
பகலவற் குடைந்த வசையினால் வெள்கிப்
பலமலர்த் தாரணிந் தவனோ
டிகல்செயக் கருதி யிருட்டிரண் டாலித்
தெழுந்தன செழுந்தடங் குழலாள்.

இ-ள். மேகத்தை வென்று, கருமணலையும் ஒதுக்கித் தள்ளி, பாசியையும் வெறுத்து, அழகிய கொன்றைக்காயையும் துரத்தி, அகிலினது நல்ல வாசனைப்புகையும் மயிர்ச்சாந்தும் புழுகும் பொருந்துதலாய், பனிநீரிலே நனைதலுமாய், முன்னே சூரியனுக்குத் தோற்ற பழிப்பினாலே நாணமுண்டாகி, இப்போது பல மலர்களாலும் புனைந்த மாலையை யணிந்து அந்தச் சூரியனுடனே யுத்தம்பண்ணுதற்கு இருளானது திரண்டு சந்தோஷித் தெழுந்தாற்போலவே தான செழுமையான நீண்ட கூந்தலையுடையவள் எ-று. 11

பயிர்கடந் தனவும் பட்டமா மரமும்
பண்டைநா ளுக்கவெள் ளென்பு
முயிர்பெறப் பொருட்டுப் பளிதமும் பாலு
மொழுகிய தேனுமா ரமுதுங்
குயிலினிற் குரலுங் கிளியினின் மொழியுங்
குழலுமியா ழுங்குழைத் திழைத்து
மயிலியற் சாயல் வாணுதற் றனக்கு
மலரயன் வகுத்ததென் மொழியாள்.

இ-ள். தீய்ந்த பயிர்களும், பட்டுப்போய்க்கிடக்கிற பெரிய மரங்களும், முன்னாளிலே உடம்பினின்றும் கழிந்துகிடக்கிற வெள்ளை எலும்புகளும், (இவள் பேசுதலாலே) உயிருண்டாகும்படி கண்ட சர்க்கரையும், பாலும், ஒழுகுகின்ற தேனும், அரிய அமுதமும், குயிலினிடத்தில் தொனியும், கிளியினிடத்திலே பேச்சும் புல்லாங்குழலினிசையையும், வீணையினிசையையும், குழப்பிக் கூட்டி, மயில்போலும் அழகிய சாயலையுடைய ஒளிபொருந்திய நெற்றியை யுடைய அந்தப் பெண்ணுக்குத் தாமரைமலரி லிருக்கிற பிரமதேவன் செய்துள்ள நல்லிசைபொருந்திய வசனத்தையுடையவள் எ-று.

பாளிதம் பளிதமென்றாயது குறுகல் விகாரம். 12

கடலினைக் கயலைக் கணையைமென் பிணையைக்
காவியைக் கருவிள மலரை
வடுவினைக் கொடிய மறலியை வலையை
வாளைவென் றுறுவுநீண் டகன்று

கொடுவினை குடிகொண் டிருப்புற தாவிக்
குமிழையுங் குழையையுஞ் சீறி
விடமெனக் கருப்புற் றரிபரந் துன்கை
வேலினுங் கூரிய விழியாள்.

இ-ள். கடலையும், கெண்டைமீனையும், அம்பையும், மிருதுவாயிருக்கிற மானையும், நீலமலரையும், கருவிளம்பூவையும், மாவடுவின் பிளப்பையும், கொடுமையைக்கொண்ட யமனையும், வலையையும், வாளையும், வெல்லுதற்காக நீட்சியும், விசாலமுள்ளதாய், கொடிய செய்கையானது குடிகொண் டிருப்பதாய், இரண்டு காதுகளினிடத்திலும், தாவுதலையுடையதாய், குமிழம்பூவைப் பாதத மூக்கையும், குண்டலமணிந்த காதுகளையுங் கோபிப்பதாய, விடம்போற் கறுப்புள்ளதாய செவ்வரிகள் பரவி, உன் கையிலுள்ள வேலைப்பார்க்கிலும், கூர்மையைக்கொண்ட கண்களையுடையவள் எ-று. 13

இருப்பைவிட டயனா நெடிதுநாட் டவஞ்செய்
திருகையும சிறதையும வருநதிச
செருப்பையின றிறநத மதனனைச சூடடத்
திருமுடி வேண்டுமென றியானை
மருப்பையுங் குமபத தலத்தையுஞ் சகர
வாகததை யுமவட கனகப
பொருப்பையும படைத்துத் தெளிநதபின படைததத
புளகித பூரண முலையாள்.

இ-ள். பிரமனானவன் தானிருக்குமிடத்தை விட்டுப்போய் நெடுங்காலந் தவத்தைச்செய்து தன் இரண்டு கைகளும் மனமும், வருத்தங்கொண்டு சிவபெருமானோடு சண்டைசெய்து இறந்துபோன மன்மதனுக்குத் திருமுடி சூட்டுதற்காகத் திருமுடி வேண்டுமென்று நினைத்து, யானைக்கொம்பையும், அந்த யானையின் குமபத்தலத்தையும், வட்டவடிவாகிய சக்கரவாளகிரியையும், மேருமலையையும் சிருஷ்டித்துக் கைதேர்ந்த பின்பு சிருஷ்டித்த புளகாங்கிதம் நிரம்புதலான தனங்களையுடையவள் எ-று.

பயினறெனபது பையினறு எனப போலியாயது. 14

அறந்திகழ் தவமு மகிலமு மிதனு
லழியுமென றயன்படைத் திலனே
சிறநதவேல விழியை முனபடைத்த தயாநது
செங்கரஞ் சோாநததோ திகைத்து
மறநததோ கரநது வைத்ததோ களப
வனமுலைப் பொறைசுமந் துருகி
யிறநததோ வுளதோ விலலையோ வினிமே
லெய்துமோ வறியொணு திடையே.

இ - ள். தருமம் விளங்குவதான தவமும் மற்றை யாவும் இந்த இடையி னாலே அழிந்துபோகுமென்று நினைத்துப் பிரமதேவன் உருவமுண்டாக்காமல விட்டானோ! அவளுடைய சிவந்த கைகள் சிறப்புள்ள அந்த வேல்போலுங் கண்களை முனனே சிருஷ்டித்துச் சோர்ந்து இளைத்துப்போயினவோ! அல லது மயங்கி அக கைகள் மறந்துபோயினவோ! அன்றி அவளுருவிலேயே மறைத்துத்தான வைததிருக்கின்றதோ! சந்தனச்சேறு பூசலான அழகிய தனங்களினுடைய கனத்தைத்தாங்கி உருகுதலாய் இறந்துபோயிற்றோ! அல் லது இறவாமலிருக்கின்றதோ! முழுதும் இல்லையேயோ! அல்ல தினிமே லுண் டாகுமோ! என்பதாதியவற்றைத் தெரிந்து சொல்ல வியலாது எ - று. 15

செருக்குமோ கனரசெந திருமக ளுறையுஞ
சேயிதழ்த தாமரை மலரும
பெருக்குமா மறைநா லுரைததநான் முகத்தோன்
பிறந்தசெங் கமலமும வெள்க
முருககுமாம பனுமென் காவியுங குமிழு
முல்லையும வளளையு மலாநது
திருககிளா கமல மிதுவெனச செவ்வி
திகழ்வெயா செறிதிரு முகததாள்.

இ - ள். களிப்பினையுடைய திருமாலையும மயஙகச்செய்வதான வசீகரத தையுடைய செவவிய லட்சுமிதேவி வாசம்பணணுகின்ற சிவநத இதழ்களை யுடைய தாமரைப்பூவும், விரிவான பெருமையையுடைய வேதசாஸதிரஙகளைச் சொனன சதுர்முகப் பிரமதேவன உறபததியான செந்தாமரைப்பூவும் நாண, முருக்கம்பூவும், செவவல்லிப்பூவும, மிருதுவான நீலப்பூவும, குமிழம்பூவும, முல்லையரும்பும, வளளைக்கொடியும, விகசிதமாய் அழகு விளஙகுகின்ற தாமரைப்பூவும இதுவென்று சொல, அழகு விளஙகுவதான வியாவை பொருந்துகின்ற திருமுகததையுடையவள் எ - று

இதழ் - வாய் - கண் - நாசி - பல - காதுகளையுடைய தாமரை மலர்போலு முகமென்று கொள்க. எனவே, முருககம்பூவையொதத இதழும், செவவல்லி மலரையொதத வாயும், நீலோறபல மலரையொதத கணகளும, குமிழம்பூவை யொத்த மூககும, முல்லைமலரையொத்த பறகளும், வளளைப் புட்பதைதயொதத செவிகளுமுடைய ஒரு முகமெனக. 16

கடிகமழ் மலருங் கலவையு மழகுங்
கதிரமணிப பணிகளுஞ சுமநது
கொடியென விசைநது நிறைவுறப பூதத
கொமபென வசைநதசைந தொலகி
யடியிணைப் படியிற படப்பொறு தஞ்சி
யன்புறு கடகரிப பின்போம
பிடியெனக கன்னி நடையயி லனனப
பெடையென மடநடை பெயர்வாள்.

இ - ள். வாசனை பரிமளிக்கின்ற பூவும், கூட்டுவெருக்கச் சந்தனமும், அழகும், ஒளியையுடைய இரத்தினாபரணங்களுந்தாங்கி ஒரு கொடிபோல் வாவென்று சொல்லுதற்கு நிகராய சிரமப மலர்ந்தகொம்புபோல துவண்டு துவண்டு நுடங்கிக் காலகளிரண்டும பூமியிலே படுவதற்குச் சகியாமல் வருந்தி, ஆசைகொண்ட மதயானைக்குப பின்னே செல்லுவதான ஒரு பெண்யானை போலவும், இளமையான நடைநடக்கிற பெட்டை யன்னத்தைப்போலவும மிருதுவான நடை நடப்பாள் எ - று. 17

அன்னதனை மையலை யரிதினிற் பிறந்தத்
வணங்கபி டேகத்தை யனைந்த
மன்னர்தந் தமக்கு மணஞ்செயக் கருதி
மணமொழிந் தவர்களெலாங் கொடாது
முன்னமெம் பெருமான் மொழிந்தவாக் கன்றி
முடிக்கிலேன் கடிமண மென்னச்
சொன்னதோர் மொழியுங் கேட்டன மவனின்
றோள்களுக் கிசைந்தவ ளென்றார்.

இ - ள். அப்படிப்பட்டவளை அமுதத்திலேதோன்றின லட்சுமிக்கும் சிறந்த திருமுடிபோல்வாளாா சந்திரமதியை அனேகம அரசர்கள் தங்கள் தங்களுக்குக் கலியாணஞ் செய்துகொள்ள வெண்ணிக் கலியாணத்தைக்குறித்து வந்து பேசினவர்களுக்கெல்லாம் கொடாமல் முன்னே எமது கடவுள் சொன்னவனுக்கேயல்லாமல் கலியாணஞ்செய்து கொடேனென்றுசொன்ன ஒரு உறுதி வார்த்தையுங் கேட்டிருக்கிறோம். அந்தப் பெண்ணானவள் உன்னுடைய தோள்களைக் கூடத்தகுந்தவளென்று கூறினார்கள் எ - று.

சந்திரதயவரசன் புத்திரப்பேற்றை விரும்பிப் பெரிதுந் தவங்கிடந்த போது சிவபெருமான் அவன்முன்றோன்றி, 'அரச! நீ யாற்றிய தவத்துக் குளமகிழ்ந்தோம். நினக்கு பிறக்கையிலேயே மாங்கலியசூத்திரத்தோடும கூடிய ஒரு பெண்மகவு தோன்றும ஆயினம்மாங்கலியம் பிறர் கண்ணுக்குத் தோற்றுவ தன்று. அதனைத் தெரிந்துகூறு மகத்துவமனனவனே, அவனே அவட்குரிய கொழுநனாவான். அவனொருவனாலே நீ பெரிதுங் கீர்த்தியடைவை" என்று வரமளித்துச் சென்றாராதலின், அப்பெருமானது கட்டளைப்படி நடப்பேனென்பார், "முன்னமெம்பெருமான் மொழிந்தவாக்கன்றி முடித்திலேன் கடிமணம்" என்றாரென்று கூறினார் 18

பாதக மென்னுங் கடிந்தகா மத்தீப
பங்கமுற் றுரைவிடம் பெருந்து
மாதவ ருரைத்த மொழிவழி வந்து
மன்னவன் செவிவழி புகுந்தாங்
கூதைவந் தலைக்கும் வெளிவிளக் கதனி
னுளமலை வுறவலைத் தோங்கிக்

காதலங் கொழுந்து வளர்ந்திட வுருகிக்
கனலினி லிடுமெழு கானான்.

இ-ள். முன்னே பாவமென்று நீக்கியிருந்த காமாக்கினியானது பங்கப்பட்டுத் தணக்கிருக்க இடங்கிடையாமல மகரிஷிகள்கூறிய சொல்லே வழியாக நடந்துவந்து அரிச்சந்திரனுடைய காதாகிய நிலவாயிலிலே நுழைந்து அங்கே காற்றுவந்துமோதி யசைக்குவதான வெறுவெளியிலேயவைத்த விளக்கைபோல அவனை மனமலைய அலைச்சறபட்டு அயர்ந்து ஆசையாகிய (மாதருக்கு) கொழுந்து தளிர்த்துவளர அரிச்சந்திரன நெருப்பிலிட்ட மெழுகுபோல மனமுருகினன எ-று. 19

சந்திர கலையா னெகருநீர் பொழிவ
சந்திர காந்தமே யலலா
* லந்தர சாதிச சிலையினுண் டாகா
தவளிவன் மனைவியென றயனார்
முந்தவே விதித்த விதியினு லடங்கா
மோகமுந் தாகமு மிகுந்து
புந்திகெட டறிவு நிறைபொறை தோற்றப
போகினன யாக்கையுந் தளர்ந்தான.

இ-ள். சந்திரகிரணத்தாலே கரைந்து நீரைச சிந்துவது சந்திரகாந்தக கல்லே யல்லாமல வேறுசாதிக்கலலாலே நீரைச சிந்தமுடியாது. அப்படி அந்தச் சந்திரமதியே இந்த அரிச்சந்திரனுக்குப பாரியாகிறவளென்று பிரமதேவன முன்னேதானே அமைத்திருக்கின்ற அமைவினலே அடக்கக்கூடாத காமமயக்கமும அதனாலே மனவருத்தமும அதிகரித்துப புத்திமயங்கிக கலவி அறிவு அடக்கம பொறுமை பிரதாப முதலானவைகளை யெல்லாம தன்னினின்றும பிரிந்துபோகச செய்தவனுய உடம்பெல்லாந் தளர்ந்துமாயினன எ-று

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

கரையழி காத லாற்றை யறிவெனுங் கரைசெய் தாற்றி
வரையன புயத்து மன்னன முனிவரை நோக்கி மாதர்க
கரசியை யடிய னேனுக கணிமணம புணர்க்க நுமவா
யுரையுள தாயி னென்மாட் டுயிருள தாகு மென்றான.

இ-ள். அப்படிக் கரைகடந்து செல்வதான ஆசை என்னும ஓராற்றைத தனது கலவியறிவென்னுங் கரையையிட்டு அடக்கி மலைபோலுந தோள்களையுடைய அரிச்சந்திரமன்னன அந்த மகரிஷிகளைப பார்த்து அப்பெண்களுக்கு அரசியானவளை அடியேனுக்கு அழகான கலியாணஞ்செய்து கொடுக்கும்படி உங்களுடைய வாயாலே சொல்லுவதுண்டானால், என்னுடைய உடலிலே உயிரிருக்கிறதாயிருக்கும் என்று கூறினன எ-று. 21

* அந்தரசாதிச் சிலை - வேறுசாதிக்கல.

அங்கண்மா ஞாலங் காக்கு மரசனே யரச ரேறே
திங்கண்மா முகத்து வாமத் திருவைநீ வதுவை சூட்ட
வெங்களாற் செய்யு மாறே தியம்பென முனிவர் கூறச்
செங்கண்மா லனையான் செவ்வாய் செங்கையாற் புதைத்துச் செப்பும்.

இ - ள். அழகிய இடத்தையுடைய இந்தப் பெரிதான உலகத்தை யாளுகிற அரசனே! ராஜாக்களுக்குச் சிங்கமானவனே! பூரணசந்திரனைப்போலும் ஒளிபொருந்திய முகத்தையுடைய அழகாலே லட்சுமிக்கொப்பான சந்திரவதியை நீர் கலியாணஞ் செய்துகொள்ளுதற்கு எங்களாலே செய்யும் வகையென்ன? சொல்லுமென்று அந்த முனிவர்கள் கேட்க, சிவந்த கண்களையுடைய திருமாலுக்கொப்பான அரிச்சந்திரன் தனது சிவந்த வாயைச் செவ்விதான கைகளாலே மூடிக்கொண்டு சொல்லுகிறான் எ - று. 22

அல்லியங் குழலா டன்னை யருமண மதுவேன் சூட்டக்
கல்லியற் சுரமுங் காடுங் கடந்துகால் வருந்த நீர்போய்
வல்லியைப் பயந்தோற் கண்டு மணமொழிந் தந்த வேந்தன்
சொல்லிய நெறிகேட் டென்பால் வருகவென் றினிது சொன்னான்.

இ - ள். அகவிதழ்களால் அலங்கிருதமான கூந்தலையுடைய சந்திரவதியை நான் அரிதான விவாகஞ் செய்துகொள்ளுமாறாக, கற்கள் கிடக்கிற பாலையும் காடுகளுங் கடந்து, உங்கள் கால்கள் வருந்த நீங்கள் போய், அந்தப் பெண்ணைப்பெற்ற அரசனைக் கண்டு கலியாணக் காரியத்தைக் குறித்துப்பேசி, அவ்வரசன் சொல்லும் வகைகளைக் கேட்டுக்கொண்டு திரும்பவும் இங்கென்னிடம் வரவேண்டுமென்று மிகவும் உபசரித்துச் சொன்னான் எ - று. 23

காதலான் மன்னன் கூற மாதவர் கருணை வெள்ள
மீதலா மெழுந்து பொங்க வேந்தகேள் மீண்டி யாங்கள்
போதலுஞ் செய்வே முங்கள் புதுமணங் காண்பே மாயி
னீதலா லுறுதி வேறொன் றில்லையென் றெழுந்தி ருந்தார்.

இ - ள். அவ்வாறு விருப்பத்தோடு அரிச்சந்திரன் சொல்ல, அந்த மகரிஷிகள் அரசனிடத்திலே கிருபைபெருக்கம் மேன்மேலாகக் கிளர்ந்து பெருக, அரசனே! கேளும், நீர் சொன்னபடியே மீண்டும் நாங்கள் போகிறோம், உங்களுடைய விசேஷமான திருக்கலியாணத்தைப் பார்ப்போமானால் இதைப்பார்க்கிலும் வேறொரு நன்மையில்லையென்று எல்லோரும் எழுந்திருந்தார்கள் எ - று. 24

சந்திர வதிதன் பார நயகுன்றன் வாசல் நாம
சுந்தர மாரியின் முழுகு முழு ... வெள்ள வாழ்த்தி
மந்திர முனிவர் ... நீங்கி
யிந்திர புரியே யன்ன வெழினகர் கடந்து போனார்.

இ-ள். (எப்படியாயினும்) அந்தச் சந்திரவதியினுடைய கனத்த தனங்கள் உன்னுடைய மலைபோலவுதான மாலையணிந்த அழகிய மார்பிலே படியும்படி செய்கிறோமென்று ஆசீர்வதித்து வேத மந்திரங்களெல்லாந் தெரிந்த முனிவர்களெல்லோரும் அந்தச் சபாமண்டபத்தைவிட்டுச் சென்று தேவேந்திரலோகம் போலவுதான அந்த அயோத்தியாபுரியைக் கடந்து சென்றார்கள் எ-று. 25

மாதவர் போன பின்னர் மண்டப நீங்கி மன்ன
ஞதுலா போலப் பள்ளி யறைபுகுந் தமளி நண்ணி
மீதெலா மனங்க வாளி குனிந்திட வெளியிற் புக்குக்
காதலங் கடலுட் டாழ்ந்தான் கரைநிலை கண்டி லாதான்.

இ-ள். அந்த மகரிஷிகள் போனபின்பு, அரிச்சந்திரமகாராஜன் சபா மண்டபத்தை விட்டுப்போய் யாருமில்லாத வறியவரைப்போற் சயனமாளிகையுட்புகுந்து படுக்கு மெத்தையிற் சயனித்து உடம்பெல்லாம் மன்மத பாணந் தைக்கப் பின்பு வெளியில்லையென்று அப்படி மாறி மாறி ஆசையாகிய கடலிலே முழுகினவனாய அந்த ஆசைக்கடற்குக் கரையும் நிலையுங் காணாதவனானான் எ-று. 26

மயங்கினான் வருந்தி னான்மெய் வாடினான் மதன னம்பாற்
றியங்கினான் வளர்ந்த காமத் தீயினாற் செயலற் றாவி
தயங்கினான் றீரா மோகத் தாகத்தாற் றளர்ந்து மேன்மே
லுயங்கினா னுருகி மெய்சோர்ந் துளத்தொடு முரைப்பா னானான்.

இ-ள். மயக்கங் கொண்டான், அதனாலே வருத்தப்பட்டான்; அதனாலே உடம்பு மிகவு மிளைத்தான்; பின்னும் மன்மதபாணத்தினாலே நொந்தான்; அப்படியாக மூண்ட காமாக்கினியினாலே எந்தச் செய்கையு மில்லாமல் உயிர் கலங்கினான்; அப்படி மனங் கலங்கி நீங்காத மோகதாகத்தினாலே சோர்ந்து மேலு மேலும் வருந்தினான்; மனமுருகி உடம்பிளைத்துத் தன் மனத்துடனே சொல்லத் தொடங்கினான் எ-று 27

தந்தமால் களிற்றி யானைச் சந்திர தயன்றன் பாவை
வந்தமா முனிவ ரோடும் வந்திவண் மாய மாகி
யெந்தமா ருயிரை வௌவி யெம்முளம் புகுந்து கைக்கொண்
டந்தமா முனிவ ரோடு மகன்றதோ வறிகி லேமால்.

இ-ள். கொம்புகளையுடைய உயர்ந்த யானைமேலேறுகின்ற சந்திரதய வரசனுடைய மகளானவள், இங்கே வந்த மகரிஷிகளுடனே மாயாரூபமாக வந்து, என் மனத்துள்ளே நுழைந்து, என்னுடைய அரிய உயிரையும் பறித்துத் தன் கைவசமாக்கிக்கொண்டு அந்த மகரிஷிகளோடு கூடவே போயினளோ? நமக்கு ஒன்றுந் தெரியவில்லை எ-று 28

ஒற்றையா ழியந்தே ருந்தி யுலகெலாங் காவல் பூண்ட
வற்றைநாண் முதலாகக் கள்ள நெறியே யமர்ந்த தந்தோ

பிறைறைநாள் வலியி னாலோா பெண்கொடி யெந்த மாவி
யிற்றைநாள் கரந்து கொண்ட தேழமை யெமக்கு மனனே.

இ - ள். சூரியனுடைய ஒற்றைத்தேர்ச்சக்கரம சூழ்வதான இவவுலக முழுதும் நான பாதுகாததுககொண்டிருக்கிற அந்நாள முதலாக இதுவரையிலும் (இந்த வூா) திருட்டிலலாமலே யிருந்தது ஐயோ! பின்பு இந்த நாளிலே பலாத காரததினாலே ஒரு பெணகொடியானவள என னுயிரை இன்றைய தினததிலே மறைந்துவந்து கொணடுபோனதைப பார்ததால அறியாமையே யாயிறறு எ - று. 29

தனக்குறுந் தமாக்கு முதான றனைககாந தரிநிற கொளளுமம
வனக்குறும பருக்கு வாகைக குறுவனே மயிலே மானே
யெனக்குறு மென று காதத வெனனைவிட டுனபால வநதா
லுனக்குறு மென று நீயென னுளளததைக கொணடா யெனறான.

இ - ள. தனக்கு அனுகூலனுயத தன உறவினாக்கு அனுகூலனுகாதவ னுன ஒருவனை மறைத்து அவன பொருளைத தங்கள கொடுஞ செயலையினாலே திருடிககொணடுபோகிற காட்டிலே சஞ்சரிப்பாரான வேடாகளுக்கு, அவாகள் வெறறிகொளளும்படியாயத (தனக்கே யனுகூலனுன) நான சமமதிப்பேனோ? மயிறசாயலையுடையவளே! மானபோலுங கணகளையுடையவளே! எனக்கே தகு மென று நான அடக்கி வைததிருந்த என்னைத தவிாநது உனனிடததே வருமா னுல அது உனக்குத தகுமென று நீ எனது பொருளான என மனததை உன வசமாககிக கொணடாய எனறு கூறினன எ - று 30

மைதிகழ வாரி சூழு மாநிலத தோாகட கெலலாம
பெயதவம பழிபி றஙகாப பிளளையைப பெறுத லெனபாா
செயதவ மனறுன றனதை சனனஙக டோறுஞ செயத
கைதவ மாவி கொளளுங களவினிற பயநத தெலலாம.

இ - ள கருமைபாய விளங்குகினற கடல சூழயதான இநதப பெரிய வுல கததிலுளளவாகளுக்கெலலாம நனமையைக கொடுக்கிற தவமானது குறறஞ செயயாத பிளளையைப பெறவேணடியதென று சொலவாாகள. அபபடி யிருக்க, உன தகப்பன செயது நனமையைச செயவதான தவமென று தான கொணட பிறப்புகளெலலாம அவன செயதிருக்கிற வஞசனையினாலே உயிரைத திருடுகிற களவினையுடைய வுனனைபபெறறது முழுதும எ - று. 31

மாறுகொண் டனைய வல்லி வாடடிய வாடடஞ சொலலி
யாறுதற கெனபா னணணி யணையுமோ வணைகி லாமல
வேறுமிப படியே வாதை விளைக்குமோ விளைக்கும வாதை
யேறுமோ குறைறு மோமெனன றிருநதன னிறைவன பால.

இ - ள. இப்படி மாறுபட்டாக என்னை அநதக கொடிபோலபவள வாட டின வாடடததையெலலாம நான சொலலி மனமாறுதறகு எனனிடததும

கிட்டி வருவாளோ? அப்படி வராமல் வேறேயுமிப்படிக்கே துன்பத்தைச் செய்வாளோ? இப்படி உண்டாக்குகிற துன்பம் அதிகப்படுமோ? அல்லது குறைவுபடுமோ? என்றிவ்வாறு அரிச்சந்திரமகாராஜன் எண்ணிக்கொண்டிருந்தான். பின்பு எ-று. 32

மானவன் வதுவை கூட்ட மணமொழி வதற்கு நண்ணிப்
போனமா முனிவர் பூகப் பொழிலுடன் பொய்கை நீங்கிக்
கானமு மலையும் யாறுங் கடந்துகன் னோசி யென்னு
மானக ரணுகிக் கொற்ற மதிதயன் சபையிற் புக்கார்.

இ-ள். இந்த மகானுபாவனான அரிச்சந்திரன் கலியாணஞ் செய்து கொள்ளுகிறதற்கு விவாகவார்த்தை பேசுவதற்காக இங்கே வந்துபோன மகரிஷிகள் கமுகந்தோட்டத்துடனே வழியிலேயுள்ள குளங்களையுங் கடந்து சென்று காடுகளும் மலைகளும் ஆறுகளுங் கடந்து கன்னோசியென்கிற பெரிய நகரத்தை நணுகி அந்த வெற்றிபொருந்திய சந்திரதயராஜனுடைய சபைக்குள்ளே போனார்கள் எ-று 33

மேருவை வெளிசெய் தன்ன மேனிலை மணிமா டத்து
வாரிதி யெழுந்த தென்ன வந்தவன் றாளைப் போற்றத்
தேருமா னையுமி ழிந்து திறையிடு மரசர் நிற்கக்
காருநீள் கடலும் போலக் கதிர்மணி முரச மார்ப்ப.

இ-ள். மகாமேருவைத் துவாரஞ்செய்து வைத்திருக்கிறதுபோ லிருக்கிற மேலுப்பரிகையையுடைய அழகிதான கொலுமண்டபத்திலே, கடல் பொங்கி வந்தாற்போல வந்து அந்தச் சந்திரதயனுடைய பாதங்களைத் துதிசெய்யத் தேர்களையும் யானைகளையும் விட்டிறங்கிக் கப்பங்கள் கொடுக்கவேண்டிய அரசர்கள் ஒருபால் நிற்க, மேகங்களையும் நெடிய கடலையும்போல பிரகாசமான அழகிய பேரிகைகள் முழங்கவும் எ-று

இது முதல் மூன்று பாடல்கள் குளகம் 34

வெயில்விரி மகுடம் பொங்க விடுசுடர்க் கழல்வி ளங்கக்
கையில்விரி கடக மின்னக் கதிர்மணிக் குழைக டாழப்
பயின்மணி மரக தத்தாற் பசுங்கதிர் பரப்பு மாடச்
சயிலசா ளரங்க டோறும் வலயத்தின் கிரணந் தாக்க.

இ-ள். சூரியப்பிரகாசத்தைக் காட்டுகின்ற கிரீடங்கள் பொலியவும், வீசுகிற ஒளியையுடைய வீரக்கழல்கள் விளங்கவும், கைகளிலே ஒளி விரிகின்ற கங்கணங்கள் மின்னவும், பிரகாசமான ரத்நகுண்டலங்கள் தொங்கவும், அவனிருக்கிற அழகிதான மரகதத்தினாலே பசிய ஒளியை விரிப்பதான சபாமண்டபமான பொன்மலையிலேயுள்ள சன்னல்களெல்லாம் அவனுடைய தோளிலேயணிந்த கேயூரத்தின் சோதிகள் வீசவும் எ-று 35

கொம்பனார் முலையார் செப்பொற் செழும்பனிக் கவரி வீசப்
புகரன வசைசார் போற்றப் புரிதவ முனிவர் வாழ்த்தப்

பகர்தரு மறையோர சூழப பாவலர கவிகள பாட
மகரதோ ரணக்கீழ் மனனன மடஙகலர தனதநி ருநதான.

இ-ள். மலைச்சிகரமபோலும் பெரிய தனஙகளையுடைய பெணகள் செம்பொனனாலும செழுமையான மணிகளாலும் சாமரஙகள வீசவும், சுககிரபகவானுககொபபான மந்திரிகள துதிககவும, தவஙகளைச்செய்த முனிவர்கள் வாழ்த்தவும, வேதபாராயணஞசெய்கிற பிராமணாகள சூழவும், வித்துவான்கள் பலவகைக கவிகள் பாடவும இப்படியாக மகரதோரணத்தின கீழே அச்சந்திரதயன சிஙகாசனத்திலே யிருநதான எ-று. 36

அந்தவே லககந தன்னி லருநதவ முனிவ ரெலலாம
வநதனர் வநத போது மன்னவ னெழுநதி ருநது
சுநதர மகுடந தாழத தொழுதன னவரை வாழ்த்திச
சிநதையின மகிழ்சசி பொஙக விருநதபின செபப லுறறான.

இ-ள் அபபடிக கொலுவிருக்கிற சபையிலே, இஙகிருந்துபோன அருமையான தவமுனிவர்களெலலாரும வநதார்கள். அபபடி அவாகள் வந்தவுடனே அநதச் சநதிரதப னெழுநதிருநது வநது அழகிதான கிரீடம படிய வணஙகினான். அஙஙனம வணஙகின அரசனை (முனிவர்கள) ஆசீர்வதிதது மனததிலே சந்தோஷமபெருக இருநதபினபு, (அரசன) சொலலததொடஙகினன எ-று 37

வானநீர் பொழிநது முதத மணிகொழித தருவி பாய்நத
கானநீா பெருகுந தெய்வக கண்டகி யெனனுந தீாததத
தானநீ ராடியென றன றலைககடி முடிகள சூட்டிப
போனநீ ருடனே மீணட வருததியென புகலு மென்றான.

இ-ள். மேகஙகள நீரைப்பொழிதலாலே முததுககளையும ரததஙகளையும கொழிததுககொணடு அருவிபாயதலான காடுகளெலலாம நீர் பெருகுவதான தெய்வத்தனமையுளள கணடகியெனனும தீாததத் தடததிலே நீராடி முனனே எனனுடைய சிரசுககு உங்களுடைய பாதஙகளைக கிரீடமாகச் சூட்டிவிட்டுப்போன நீஙகள உடனே திருமபிவந்த இச்சையெனன சொலலுஙகளென்றான எ-று. 38

மன்னுகோ செனற யோதநி மாநகா புகுநது யாஙக
ளநநகர்க் கரச னீதி யருளரிச சநதர னென்பா
னினனகர் வளமும நினற னெறியுநின மகடனேருஞ்
சொன்னபி னினபா லெய்து முவகையே துணிநது நின்றான்.

இ-ள். அரசனே! கேட்பாயாக: நாஙகள் உடனேபோய அயோததிமாநகரிலே புகுந்து அநநகருககரசனான நீதியுந தயவுமுள்ள அரிசசந்திரனெனபவனிடததில் உனது நகரின வளமையும உனனுடைய சனமார்ககமும் உன புததிரியினுடைய அழகும சொனனபினபு உனனிடததிலேவநது கணடு பேசுவதான சந்தோஷவாாததையைக்கே துணிந்தவனாயினன எ-று. 39

அறநெறி மிக்கோர் தம்பா லருந்ததிக் கற்பி னுளைப
புறநெறி போகா வண்ணம் வருந்தியும் பொருந்தச் செய்தன்
மறநெறி யன்று மாயா மாதவந் தன்னின் மிக்க
திறநெறி யதனு னின்பாற் சேர்ந்தன்ரு செல்வ வென்றார்.

இ - ள். செல்வத்தின மிக்க அரசனே! தருமமார்க்கத்திலே மிகுந்துள்ள வர்களிடத்திலே அருந்ததிபோலுங் கற்புடைய புத்திரியைத் தருமத்துக்கு வேறானவழியிலே போகாதபடி வருந்தப்பட்டாவது பொருந்தப்பண்ணுகிறது தீயசெய்கையன்று. எக்காலத்தும் அழியாத பெரிய தவத்தினாலே மிகுந்த உறுதியான நல்வழியேயாதலால், உன்னிடத்திற்குத் திரும்பவும் வந்தோ மென்றார்கள் எ - று. 40

புவனமுள் ளளவும் யாங்கள் புக்கறிந் தநேக கோடி
நவநர பதிக டம்மைக் கண்டனம் நறுந்தார் வேந்தே
சிவனலக் கீயந்த திருமக டனக்குக் கேள்வ
னவனல தில்லை யென்ன வருந்தவ ரெடுத்து ரைத்தார்.

இ - ள். நல்ல பரிமளத்தையுடைய மாலையணிந்த சந்திரதயவரசனே! இந்த லோகமுள்ள அளவும் நாங்கள் போய்ப் பார்த்து அனேககோடி புது மையையுடைய அரசர்களையெல்லாம் கண்டுவந்தோம். பரமசிவன் கட்சிக்க நீ பெற்ற திருக்குமாரிக்கு நாயகன் அந்த அரிச்சந்திரனை யல்லது வேறொருவரு மில்லையென்று அரிய தவத்தையுடைய முனிவர்கள் விசே ஷித்துச் சொன்னார்கள் எ - று. 41

மையலாற் றியகு ணத்து மாதவ ருரைப்பக் கேட்டுப்
பொய்யிலா மொழியா னுள்ளம் பொருந்தியும் பொருந்தா னொந்து
தையலாள் பங்கன் மேனாள் சாற்றிய தகைமைக் கேது
செய்யலா நம்மா லென்னத் திகைத்திருந் துரைக்க லுற்றான்.

இ - ள். மயக்கத்தைப் போக்கின நற்குணங்களையுடைய மகரிஷிகள் அப்படிச் சொல்லக்கேட்டுப் பொய்யில்லாத வார்த்தைகளையுடைய சந்திர தயராஜன் மனது சம்மதித்தும் சம்மதியாதவனாய், பார்வதி சமேதனான பரமசிவன் முன்னாளிலே சொன்ன தகுதிக்கு நம்மாலென்ன செய்யக்கூடு மென்று திகைத்திருந்தவனாய்ப் பின்பு சொல்லத் தொடங்கினான் எ - று. 42

மூவரா யவரின் முன்னு மூர்த்தியா ரருளிச் செய்த
தேவரா சியமொன் றுண்டா மன்னது தெரிய வல்லார்
யாவரா யினுமியான் பெற்ற விளங்கொடி தனக்குக் கேள்வ
ராவரா லவனிங் கெய்தி னறியலா மதைப்பு மென்றான்.

இ - ள். அரியாப பிரமாதிகளாய், அவர்களில் முதலான பரமசிவனானவ ரருளிச்செய்த தெய்வரகசிய மொன்றுண்டு, அப்படியுண்டாகிய அந்த ரகசி யத்தைத் தெரிந்துகொள்ள வல்லவர்கள் யாராயிருந்தாலும் நான்பெற்ற இளமை

யான கொடிபோல்வாளுக்கு நாயகராவார். ஆகையால், அந்த அரிச்சந்திரன் இங்கே வந்தால் தெரிந்துகொள்ளலாகும்; அவ்வரசனை இங்கே வரச்செய்யுங்களென்று சொன்னான் எ - று. 43

அரசையிங் கழையு மென்ன வகமகிழ்ந் துவகை கூர்ந்து
விரைவுட னெழுந் திருந்து வேதமா முனிவர் போனா
ரிருநிலத் தரசர்க் கெல்லாஞ் * சுயம்வர மேழு நாளென்
றுரைசெயு மென்று தூது மோலையும் போக விட்டான்.

இ - ள். அந்த அரிச்சந்திரமகாராஜனை இங்கே வரச்செய்யுங்களென்று அரசன் சொல்லவே, வேதப்பிராமணர்களான மகரிஷிகள் மனஞ் சந்தோஷித்து ஆனந்தமடைந்து சீக்கிரமாக எழுந்திருந்து சென்றார்கள். அவர்கள் போனபின்பு சந்திரதயராஜன் பெரியவுலகத்துள்ள அரசர்களுக்கெல்லாம், 'அரசர்களே! என் கன்னிகையானவள் உங்களில் யாரேனும் தனக்குச் சம்மதியான ஒருவரைக் கலியாணம் செய்துகொள்ள விரும்பியிருக்கிறாள்; அதற்கு ஏழுநாளளவுள்ளதென்று சொல்லுங்க'ளென்று தூதரையும் ஓலையையும் போக அனுப்பினான் எ - று. 44

தொழுங்கழன் மன்னர் மன்னன் றூதர்சென் றுரைத்த போதே
யழுங்கிய வாசை யோடு மளவிலா வுவகை யோடுஞ்
செழுங்குடை மன்ன ரெல்லாந் தேசமு நகரு நீங்கி
யெழுங்கடல் வளைந்த தென்ன வீண்டிவந் தடைந்தா ரன்றே.

இ - ள். எல்லோரும் வணங்கத்தக்க பாதங்களையுடைய ராஜாதிராஜனான சந்திரதயன் அனுப்பின தூதர்கள் போய்ச் சொன்னவுடனே, மிகவும் வருத்தஞ் செய்கிற ஆசையோடு அளவில்லாத சந்தோஷத்தையுடையவர்களாய்ச் செழுமையான வெள்ளைக்குடையையுடைய அரசர்களெல்லோரும் தங்களுடைய நாட்டையும் நகரையும் விட்டுவந்து பொங்குகிற கடல் சூழ்ந்தாற் போல அக்கன்னோசிநாட்டிலே வந்து நெருங்கிக் கூடினார்கள் எ - று. 45

சோலைக டோறு நன்னீர்ச் சுனைகடோறுந் தேவ
ராலயந் தோறு மாத ரரங்குக டோறு மாட
மூலைக டோறுஞ் சீர்சா னுனறிலக டோறு மேம
சாலைக டோறு மன்னர் தானைவந் திறுத்த தன்றே.

இ - ள். அந்த நாட்டிலேயுள்ள சோலைகளிலும், நல்ல ஜலத்தையுடைய குளக்கரைகளிலும், தேவர் கோயில்களிலும், பெண்களாடுகிற நாடகசாலைகளிலும், ஒதுக்கமான மூலைகளிலும், சிறப்பமைந்த வெளி முற்றங்களிலும், பொன்மயமான சத்திர சாலைகளிலும் அரசர்களுடைய சேனைகள் வந்திறங்கின எ - று. 46

---

* சுயம்வரம் என்பது—கன்னிகையானவள் ஒருவனைக் கணவனாகத் தானே வரித்தல்.

மானைவென் றடருங் கண்ணாண் மணமகன் வருமுன் வந்த
வேனைய வேந்தர்க் கெல்லா மிமையவர்க் கறிய வொண்ணா
யானையுந் தேரு மாவு மாதரு மமைச்சர் தாமுஞ்
சேனையு மளவிட் டார்க்குஞ் செப்பலாந் தகைமைத் தன்றே.

இ - ள். மானை மருட்சியாலே ஜயித்து நெருங்குகின்ற கண்களையுடையவளான சந்திரவதிக்கு மாப்பிள்ளையாகிறவன் வருவதற்கு முன்னே, மற்ற அரசர்களுக்கெல்லாம் (முன்னே தாயவ் வந்திறங்கின) தேவர்களுக்கும் அறிந்து சொல்லக்கூடாத யானைக் கூட்டங்களையும், தேர்க் கூட்டங்களையும், குதிரைக் கூட்டங்களையும், மங்கையர் கூட்டங்களையும், மந்திரிகள் முதலாயினோர் கூட்டங்களையும், காலாள்களான கூட்டங்களையும் இவ்வளவென்றளவுசெய்து எப்படிப்பட்ட புலவர்களாலுஞ் சொல்லலாகிய தகுதியுடையதன்று எ - று. 47

இந்நகர் முழுது மன்ன ரீண்டிய பின்ன ரயோத்தி
நன்னகர் தன்னிற் புக்கார் நற்றவ முனிவ ரெல்லா
மன்னவ னெழுந்தி ருந்து வணங்கிவாய் புதைத்து நீங்கள்
சொன்னதுங் கேட்டவாறுஞ் சொல்லுமென் றெடுத்துரைத்தான்.

இ - ள். இந்தப் பட்டணமெல்லாம் அரசர்கள் வந்து கூடின பின்பு, நல்ல தவத்தையுடைய முனிவர்கள் எல்லோரும் அயோத்தி என்கிற அந்நன்மைபொருந்திய பட்டணத்துக்குள்ளே போனார்கள். அதுகண்டு அரிச்சந்திரமகாராஜன் எழுந்திருந்து வந்து வணங்கி, தன் கரத்தால் வாயைப் பொத்திக்கொண்டு, 'முனிவர்களே! நீங்கள் போயச் சொன்னதும், அதைக் கேட்டு அந்தவரசன் சொன்னவகையும் சொல்லுங்'களென்று துதிசெய்து கேட்டான் எ - று. 48

அருந்தவ முனிவ ரெல்லா மரசனை நோக்கி யைய
பெருந்தவ முடையா ரண்ணி னீயலாற் பிறரு முண்டோ
திருந்திழை தனையு னக்கே திருமண முடிக்கத் தாதை
பொருந்தினன் வல்லை நீயு மெம்முடன் போது மென்றார்.

இ - ள். அதற்கு அரிதான தவங்கள் செய்யவல்ல முனிவர்களெல்லோரும் அரிச்சந்திரமகாராஜனைப் பார்த்து, 'ஓ அரசனே! உலகத்திலே பெரியதவத்தையுடையவர்கள் நீயேயல்லாமல் வேறே சிலருமுண்டோ? அந்தச் செவ்விதான ஆபரணங்களை யணிந்துள்ள சந்திரவதியை உனக்கே திருக்கலியாணஞ் செய்துமுடிக்க அவள் தகப்பன் சம்மதியாயினான்; விரைவிலே நீயும் எங்களுடனகூடவே வரக்கடவா'யென்று சொன்னார்கள் எ - று

என்றினி துரைத்த லோடு மெழுந்தபே ருவகை வெள்ள
நின்றினி தோங்க வாகு வலையங்க ணிமிர்ந்து நீங்கக்
குன்றினு முயர்ந்த செம்பொற் கோயிலைவிட் டெழுந்து போந்து
முன்றிலின் வந்து மன்ன னிலையன மொழிய லுற்றான்.

இ-ள். என்றிப்படி முனிவர்கள் சந்தோஷமாகச்சொன்ன அளவிலே, அரிச்சந்திரமன்னன் மனத்திலுண்டான பேரின்பக்கடலானது நிலைகொண்டு கன்றுகவளரவும், தோள்வலயங்கள் தோளுக்குப்போகாமற் கழன்றுபோகவும், உடனே மலையிலுமுயர்ந்துள்ள தனது செம்பொன்மயமான அரண்மனையை விட்டெழுந்திருந்துபோய ஆசாரவாசலிலே வந்து நின்று, இவ்விதமான சில வார்த்தைகள் சொல்லத்தொடங்கினன் எ - று. 50

கன்னலங் கழனி வேலிக் கன்னோசி நோக்கி யிவ்வூர்
மன்னரு மமைச்சர் தாமுஞ் சேனையு மாத ராரு
முன்னரே செல்க வென்று மொழிந்துசூ தனைக்கண் சாரதி
வன்னமா மணித்தேர் கொண்டு வருகென வருளிச் செய்தான்.

இ-ள். கரும்புகள் விளைகிற அழகிய வயல்களை வேலியாகச் சூழ்ந்துள்ள கன்னோசி நாட்டைக்குறித்து, இவ்வூரிலுள்ள அரசர்களும், மந்திரிகளும், சேனைகளும், இவ்வகையோர் பெண்களும் முன்னே நடக்கக்கடவதென்று உத்தரவுசெய்து, தனது சாரதியைக் கண்களால் நோக்கி, என்னுடைய அலங்கிருதமான பெரிய ரத்நகசித்தமாகிய தேரைக்கொண்டு வரக்கடவாயென்று உத்தரவு பண்ணினன் எ - று. 51

கலிவிருத்தம்

மாதங் கமடங் கலவயப் பரிமா
பூதம் பலதே ரொடுபூ ணகிற்றிசை
சூதன் கொடுவந் துசுடர்க் கழலோன
பாதங் களின்மீ துபணிந் தனனே.

இ-ள். சாரதியானவன் அநேகம் யானைகளையும், அநேகம் சிங்கங்களையும், அநேகம் வெற்றிபொருந்திய குதிரைகளையும் அந்தத் தேரிலே சேரக்கட்டி நிறுத்திக்கொண்டுவந்து காட்டி, பிரகாசமுள்ள வீரகண்டாமணி கட்டின அரிச்சந்திரனுடைய பாதங்களின்மீது விழுந்து வணங்கினன் எ - று. 52

வாரே றுசெழுந் தடமா முரசம்
நீரே றியசங் கமுழங் கினபதிரா த
தாரே றுபுயங் கடதும் பநெடுந்
தேரே றிவிரைந் துசெலுத் தினனே

இ-ள். தோலால் விறக்கக்கட்டியிருக்கிற அழகிய வகையான பெரிய பேரிகைகளும், முன்னே நீரிலே சஞ்சரிப்பதான சங்குகளும் நிலைகொண்டு முழங்க, மாலைகள் தங்கின தோள்கள் பூரிக்க, அந்த நெடிய தேரின்மேலேறி அதிசீக்கிரமாகச் செலுத்திக்கச் சென்றான் எ - று. 53

நற்றே ரினிமன்ன னடந் திடவே
சுற்றே றநிறைந் தயலுன் னினவால

குற்றே வல்செயும் பலகொற் றவர்தம்
பொறறோ சதகோ டிபொருப பெனவே.

இ-ள். அந்த அழகிய தேரை அரிசசநதிரன செலுததிககொண்டு போமபோது, இவனுககுச் சிறியபணிவிடைகள செய்கிற அநேகவரசர்க ளுடைய பொன்மயமான நூறுகோடி தேர்கள் மலைபோலச் சுற்றிலும் அதிக மாக நிறைந்து, பககங்களிலும நிறைநதன எ-று. 54

கவிகைப் படுநீ ழலகவிப பமணிச
சிவிகைத திரளின மிசைசென றனராற
புவிகைக கொளமைச சாபுகழ்ந தரசைக்
குவிகைத தலமிட டொருகோ டியரே.

இ-ள். அரசாகள, குடைகளிலுணடாகுகிற நிழல்சூழ் ரதநபபலலககு களினமேலே போனார்கள். உலகஙகளைத தஙகள கைவசபபடுததிககொண டிருககிற ஒருகோடி மநதிரிமாாகள அரசனைப புகழ்ந்துகொணடு குவிதத கை களுடனே எ-று. 55

வனனக குவிமா முலைவல லியருங
கனனற் சிலைவே ளனகா ளையரு
மன்னத திரளோ டரியின றிரளவந
தென்னக கடிதெய் தினரெங கணுமே.

இ-ள். பொனனிறமான குவிநத பெரிய தனஙகளையுடைய கொடி போனற பெணகளும, கருமபுவிலலையுடைய மனமதனை யொப்பான யௌ வன புருஷர்களும, அனனககூட்டததுடனே சிஙககூட்டஙகள் வந்தாறபோல எவவிடத்தும விரைந்து வரலானாாகள எ-று. 56

சிறையோ திமமேல் வருதே வனெனப
பொறையோ டொளிரவெண சிவிகைப பொலிவுற
றிறையோ டுடைமைச சரிறைஞ சிடமா
மறையோ திவசிட டனுமவந தனனே.

இ-ள். இறகையுடைய அனனவாகனததின்மேல் வருகிற பிரமதேவனை போல, தாஙகுகிறவர்கள் சுமததலுடனே பிரகாசிககினற வெளளை முத்துப் பல்லககிலே விளங்குகிறவராய், அரசருடனே மநதிரிகளும் வணஙகப பெரி தான வேதஙகளைச் சொல்லிககொணடு வசிஷடமுனிவருங கூடவே பிரயாண மாய் வந்தார எ-று. 57

தரைசோ கடலொத தனதா னைகடற
றிரைபோ லநடந தனதிண் பரிமா
விரைசே ரருவித திரள்வீழ் பலமால

இ - ள். சேனைகளெல்லாம் பூமியிலே வருகிற கடலை ஒப்பாயின; வலிய குதிரைகள் அந்தக்கடலிலே கிளறுகிற அலைகளைப்போறச் சென்றன, யானைகள் வாசனைபொருந்திய அருவிக்கூட்டங்கள் விழுகிற அநேகமான உயர்ந்த மலைகளைப்போறச் சென்றன எ - று. 58

கல்லார் நெறிசெல் வதுகால் களபொரு
வெல்லா மிகுவா தனைமே வுமென்ச
சொல்லா முனமே துறவோர் விரைவிற
* செல்லா நெறியே றினர்சென் றனரால்.

இ - ள். கற்கள் நிறைந்த வழியிற் செல்வதற்கு நமது கால்கள் சகியா குதிரை முதலிய வாகனங்களும் மிகவுந் துன்பத்தையே செய்யவனவாமென்று அரசன் சொல்லுமுன்னமே சந்நியாசிகள் அதிசீக்கிரத்திலே ஒருவராலும் போகக்கூடாத ஆகாசமார்க்கமே வழியாகக்கொண்டு சென்றார்கள் எ - று. 59

பலவெண் குடையும் பவளக் குடையுங்
குலவும் பலசெம் மணியின் குடையு
முலவுங் கதிருஞ் சதகோ டியுவா
நிலவும் மெனவெங் குநிறைந் தனவால்.

இ - ள். அநேகம் வெண்முத்துக் குடைகளுட், அநேகம் பவளக் குடைகளும், கொண்டாடத்தக்க அநேகம் ஜீவரத்நக் குடைகளும், ஆகாயத்திலே உலாவுகிற நூறுகோடி சூரியரும், நூறுகோடி பூரணச் சந்திரர்களும்போல எவ்விடத்தும் நிரம்பின எ - று. 60

ஆதித் தனருங் குலமன் னவர்தந்
நீதிப் புகழெங் குநிறைந் தனபோற்
சோதிக் கவரித் தொகையுங் கொடியும்
வீதித் தலைதோ றுமிடைந் தனவால்.

இ - ள் சூரியனுடைய அருமையான குலத்திலே பிறந்த அரசர்களுடைய நீதிமார்க்கமான புகழானது எவ்விடத்திலும் நிரம்பியதுபோலப், பிரகாசத்தையுடைய சாமரக் கூட்டங்களுங் கொடிகளும், இவர்கள் செல்லுகிற வீதியினிடங்களெல்லாம் நெருங்கின எ - று. 61

காற்றோ டுநிகர்த் தகடும் பரிவா
னேற்றோ டுநிகர்த் தனயா னைவரைக்
கூற்றோ டுநிகர்த் தனதேர் குலவு
மாற்றோ டுநிகர்த் தவனீ கம்மோ.

இ - ள் வேகத்தையுடைய குதிரைகள் வாயுவேகத்துடனே ஒப்பாகிச் சென்றன, யானைகள் மேகத்தையும் அதன் முழக்கத்தையும் ஒப்பாகிச்

* செல்லாநெறி - ஆகாசமார்க்கம்.

சென்றன; இரதங்கள் மலைகளின் வெவ்வேறான உயர்வை ஒப்பாகிச் சென்றன; சேனைகள் சூழ்ந்து செல்லுகிற ஆறுகளை ஒப்பாகிச் சென்றன எ - று.

மழுவுங் கரவா ளமும்வார் சிலையு
மெழுவுங் குலிசங் களுமே திகளுங்
கொழுவும வளையும பலகுந் தமுநீண்
முழுவெஞ் சுடர்வேல் களுமொய்த் தனவால.

இ - ள். (அப்படிச் செல்லுகிற சேனைக்கூட்டங்களிலே) மழுவாயுதங்களும், கைவாள்களும், நீண்ட விற்களும், எழுத்தண்டங்களும், வச்சிராயுதங்களும், தோமரங்களும், கொழுக்களும், சக்கரங்களும் அநேகங் கைவேல்களும், முழுதும் வெப்பத்தைக்கொண்ட ஒளிபொருந்திய நீண்ட சூலங்களும் நெருங்கின எ - று 63

மீயுற றுடனொன் றியவெம படையின
வாயுற றெழுவெம பொறிமண் டுவநீள
வேயுற றபெருங் கிரிமீ தெரியுந
தீயுற றனவொத் தனசே ணளவும.

இ - ள். ஆகாயத்தளவும மேலே நீண்டு ஒன்றுடனேயொன்று மோதுதலாகிய அந்த வெவ்விதான ஆயுதங்களின் வாய்களிலே உண்டாகி எழுகின்ற வெவ்விய நெருப்புப்பொறிகள், நெருங்குவனவாய நீண்ட மூங்கில்கள் பொருந்திய பெரிய மலைகளின்மேலே எரிகிற நெருப்புப் பற்றினதை யொத்து ஆகாயத்தளவும விளங்கின எ - று. 64

நலிவுற றுநுடங் கிடைநன் னுதலார
பொலிவுற றணிதோ ளிசைபோ யினரால
கலியுற றெழுநீள் கனகக் கிரிமேல
மலிவுற றெழுவஞ் சிகணமா னுமென.

இ - ள் கடலிலே தோன்றி யுயர்ந்திருக்கிற நீண்ட பொன் மலைகளின் மேலே மிகுதிகொண்டு உயர்ந்துள்ள பொன்னிறக்கொடிகளை ஒப்பா யிருக்கின்றனவென்று சொல்ல, இடையானது வருத்தங்கொண்டு துவளுகிற நல்ல நெற்றியையுடைய பெண்கள், நிறைவுகொண்டு அழகிய தோள்மேலேறிச் சென்றனர் எ - று. 65

கருமா முகிலன் னகவின் குழலார
பெருமால் கரியின் பிடர்மேல் வருமா
திருமா முகிலுக் கிடையே யெழுமின
வருமா றுநிகர்த் தனவை யமெலாம.

இ - ள் கருமையான நீலநிறத்தையுடைய மேகத்தையொத்த அழகிய கூந்தலையுடைய பெண்கள், உடல் பெரிதா யுயர்ந்திருக்கிற யானைகளின்

முத்துக்களின்மேலே ஏறி வருதலானது, மிகப் பெரிதான மேகத்தின் நடுவே தோன்றுகின்ற மின்னலானது (மறையாமல் விளங்கிக்கொண்டு) வருவன வற்றை ஒப்பாயின. அவர்கள் செல்லுமிடங்களெல்லாம் எ - று. 66

விலையுன் னரிதா கியவெம் பரிமேற்
சிலைநன் னுதலார் பலர்சென் றனரா
லுலையும் புனல்வா ரியலூ றையிற்
லலையுந் திரைமேல் வருமன் னமென.

இ - ள். தளும்புகின்ற நீரையுடைய கடலின்கண், காற்றினாலே கிளரு கின்ற அலைகளின்மேலே வருகிற அன்னங்களைப்போல, வில்லையொத்த நன்மையான நெற்றியையுடைய பெண்கள் பலரும், விலைமதிக்கக்கூடாத வேகத்தினையுடைய குதிரைகளின் மேலேறிச் சென்றார்கள் எ - று. 67

பரிதுன் னநெடும் படைதுன் னமதக்
கரிதுன் னவிழிந் துகடந் தனனால்
விரிகின் றசெழுஞ் சுடர்வெண் டரளஞ்
சரிகின் றபுனற் சரயுத் தனையே.

இ - ள். விரிவான செழுமையுள்ள ஒளியையுடைய வெண்முத்துக்கள் ஒதுங்குகின்ற அந்தச்சரயுநதியை, குதிரைகளிறங்கிச் செல்லவும், நெடிய சேனைகளிறங்கிச் செல்லவும், மதயானைகளிறங்கிச் செல்லவும், அரிச்சந்திர மகாராஜனும் இறங்கிக் கடந்துபோயினன் எ - று. 68

விரையே றியதார் புனைவே லிறைவ
னிரையே றுமனீ கநெருங் குதலாற்
றரையே றியதண் புனல்பா ளைநெடுங்
கரையே றியவா ளைகணக் கிலவே.

இ - ள். பரிமள மிகுவதான மாலையணிந்த (கொலைத்தொழில் செய் கிற) வேலாயுதத்தைத் தாங்கிய அரிச்சந்திரமகாராஜனுடைய வரிசை வரிசையாய்க் கரையேறுகிற சேனைகள் நெருங்குகிறதினாலே, நிலத்தினுடைய மேலே பொருவதான குளிர்ந்த நீரானது மோதி வீசக் கரைமேலே செல்லு கின்ற வாளைமீன்களுக்கு ஓரளவில்லை எ - று. 69

அரியன் னவர்மின் னனையார் கடன
நெறியும் படிதுன் னிநெருங் குதலாற்
பரியும் பணிமா லைகள்பா கிலாகீழ்ச்
சரியும் மணிமே கலைதா மறியார்.

இ - ள். சிங்கங்களையொத்த புருஷர்களோடுகூடி நடக்கிற மின்னலை யொத்த பெண்களுடைய கொங்கைகள் பிதுங்கும்படி சேனைகள் நெருங்கு கிறதினாலே அறுந்துவிழுகிற ஆபரணங்களையும், மாலைகளையும் அப் பெண்கள்

நோக்கிலர். பின்னுங் கீழே சரிந்து விழுந்திருக்கிற மணிமேகலைகளையும் தாங்கள் தெரிந்துகொள்ளாமற் (செல்லுகிறார்கள்) எ - று. 70

அரனார் முனியா மதனன் னவர்தோட்
பரநா ரியர்கொங் கைபடப் படமு
னொருநா ளுளவா நிறையொண் ணுதல்பால்
வருநாண் மனுநீ திவழங் கியதால்.

இ - ள். சிவபெருமானாலே கோபித்தெரிக்காத மன்மதனையொத்த புருஷர்களுடைய தோள்களிலே அன்னியர் மனைவிகளுடைய கொங்கைகள் (சந்தடி நெருக்கத்தினால்) மோத மோதச் செல்லுகிறதினாலே, முன்னே ஒருநாளாயினும் அழியாத கறபுள்ள அழகிய நெற்றியையுடைய பெண்கள், இப்போது கலியாணத்திற்கு வருகிறநாளிலே, பரபுருடருடைய தோள்களிலே அன்னிய ஸதிரீகளுடைய கொங்கைகள் படலாகாதென்று மனுஸமிருதி கூறவில்லை (என்றார்கள்) எ - று. 71

வெளிறுனு சுடாவே விளவே லனையான
பிளிறுங் கரிதுள ளவிழுந துபெயாந
தொளிருந் தனவல லியொருத தியையக
களிறென றிருகை கொடுகட டினனே.

இ - ள். வெண்மையான ஒளியையுடைய வேலைக்கொண்ட மன்மதனையொத்த ஒருவன், முழங்குகின்ற யானை வெருண்டசையக் கீழேவிழுந்து புரண்டு விளங்குவதான கொங்கைகளையுடைய கொடிபோலபவளான ஒருத்தியை அந்த யானை யாமென்று தன்திருக்கைகளாலுந் தழுவினான் எ - று. 72

ஆடுங கழனமன னனனே கருட
னூடுந தருவும பலநண் ணிநெடுங
காடுங கிரியும பலகண் டுநடந
தோடுங் குளிர்கோ மதியுற றனனால்.

இ - ள் அலம்புகின்ற வீரககழலையுடைய அரிச்சந்திர மன்னன இவவாறு அநேகம அரசர்களுடனே நாடுகளும மாசசாலைகளும் பலவாறாக வுளளவெல்லாம் கிட்டி, பின்னா நெடிதான காடுகளும் மலைகளும பலவாறாகக் கண்டுகொண்டேபோய, ஓடுவதான குளிர்ந்த புனலையுடைய கோமதியாற்றினருகே சென்றான எ - று. 73

**மேற்படி வேறு**

கானயா றனைத்தையுங் கடநது கௌசிக
மானயா றுயகோ மதியை நண்ணியே
யானையு மிரதமு மிவுளி யீட்டமுஞ
சேனையு மன்னனுஞ் சென்றி றுத்தவே.

இ - ள். அப்படிக் காட்டாறுகள் முழுதுங் கடந்துபோய், கௌசிகை யென்னும் பெயர்கொண்ட கோமதியாற்றையடைந்து, யானைகளும், இரதங் களும், குதிரைக்கூட்டங்களும, காலாளகளும், அரிச்சந்திர மகாராஜனும்போய் இறங்கலாயின எ - று. 74

தோய்கதிர் வேற்படை சூழ்ந்து துன்னிட
வாய்கதிர் முடியினு ளாற்றை நண்ணினன
பாய்கதிர்ப படலைபுட சுருக்கிப பையவே
காய்கதிர்ச செல்வனுங் கடலை நண்ணினன்.

இ - ள். ஒளிதோய்ந்த வேலாயுதங்களையுடைய சேனைகள் எங்குஞ் சூழ்தலாய் நெருங்க, எங்கும பரவுவதான ஒளியையுடைய கிரீடமணிந்த அரிச்சந்திரமன்னனும அந்தக் கோமதியாற்றினருகே போயிறங்கினன. அப போது எங்கும் பரவுவனவான கிரணக்கூட்டங்களைத தன்னுள்ளே ஒடுக்கிக் கொண்டு வெப்பமின்றிச் சுடுகிற ஒளியால மிக்க சூரியனும மேலைக்கடலிலே போயிறங்கினன எ - று. 75

ஆழவேழ் கருங்கட லதனில வெய்யவன
வீழலு மன்னனும வேந்தா மக்களு
மேழையா யாவரு மிரத முங்கட
வேழமுஞ் சிவிகையும விட்டி றங்கினா.

இ - ள். ஆழத்தையுடையதா யலைகளெழுகிற கறுத்த கடலிலே சூரியன போய் முழுகினவுடனே, அரிச்சந்திரமகாராஜனும, மற்றுமுள்ள ராஜகுமாரா களும, பெண்களெல்லோரும, இரதங்களையும, மதயானைகளையும, பல்லக்கு களையும விட்டுக் கீழேயிறங்கினார்கள் எ - று.

எழு வெண்பது நீட்டல விகாரம்பெற்று ஏழென வந்தது 76

மண்டல வேந்தரு மாத ரீட்டமுந
திண்டிற லமைச்சருஞ் சேனை வெள்ளமுந
தண்டா ளமவளை தவழு மாநதி
வண்டலி லிடமற வந்தி றுத்தவே.

இ - ள். உலகத்தரசர்களும, அவர்களுடைய பெண்டுகளின கூட்டமும, மிகுந்த (புத்தி) வல்லமையுடைய மந்திரிகளும, மற்றச் சேனையின கூட்ட மும தண்ணிதான முத்துக்களைத் தருகின்ற சங்குகள தவழுவனவான அந் தக் கோமதியென்னும் பெரிய ஆற்றினகரையிலே வெற்றிடமில்லாதிருக்கும படி வந்திறங்கின எ - று. வண்டல - சேறு. 77

மட்டினு மணியினும படங்க மைந்துவிண
முட்டிய செமபொனின் முடி களை தைந்துமேற
கட்டியும பதாகையுங் கட்டி நீடுழை
விட்டனர் மன்னரு மினன ருமே.

இ - ள். அரசர்களும், அவர்கள் பெண்டுகளும், பட்டினரும், மணிகளாலுஞ் செய்திருக்கிற கூடாரங்கள் நிறுத்தி, ஆகாயத்தையளாவுவதாகச் செம்பொன்னாற்செய்த சிகரங்கள் வைத்து, மேற்கட்டிகளும், கொடிகளுங்கட்டி நீண்டதிரைகளுஞ் சூழவிட்டார்கள் எ - று. 78

சண்பகத் தருவினுஞ் சந்த னத்தினுந்
திண்பணை யகிலினுந் தேவ தாரத்துந்
தண்பரும் பலவினுந் தாறு பாய்பசும்
புண்படு கரிகளும் பரியும் பூட்டினார்.

இ - ள். சண்பகமரங்களிலும் சந்தனமரங்களிலும் வலிய கிளைகளையுடைய அகில்மரங்களிலும் தேவதாரமரங்களிலும் தண்ணிதாய்ப் பருத்துள்ள பலாமரங்களிலும், அங்குசம் பாய்தலினாற் பசிய ரணம்பொருந்திய யானைகளையும், குதிரைகளையும் கட்டினார்கள் எ - று. 79

நிலைமரம் பிளந்திட நிவந்து குத்திய
கொலைமத யானையின் கோடு போலவே
சிலைமத னனையவர் மார்பிற் றேனனார்
முலைமத யானையின் கோடு மூழ்கின.

இ - ள். அங்கே நிற்கிற மரங்கள் பிளக்க, உயர்ந்து குத்தின கொலை செய்கிற மதயானையின் கொம்புபோலவனவாய் வில்லையுடைய மன்மதனையொப்பான புருஷர்களுடைய மார்பிலே, தேனைப்போலும் வசனத்தையுடைய பெண்கள் முலையாகிய மதயானையின் கொம்புகள் அழுந்தலாயின எ - று. 80

மோதுகொண் டலைபொரு மூரி யானைதம்
மீதுகொண் டலைத்தமெய்ம் மெலிவு மாறவே
தாதுகொண் டலைகுழற் றையலார் முலை
வேதுகொண் டொற்றினார் வீரர் மீதெலாம்.

இ - ள். கடலிலே மோதுவதான மேகத்தையொப்பாகப் பகைவர்மேலே மோதுகின்ற பெரியயானைகளின்மேலேறிவந்த உயர்வான வுடம்பின்மெலிவு தீர, மெல்லிய பராகங்களைக் கொண்ட மலர்களணைகிற கூந்தலையுடைய பெண்கள் தங்கள் தனங்களாகிய வெம்மையைக்கொண்டு அந்த வீரர்கள் உடம்பெல்லாம் ஒற்றுதல் செய்தார்கள் எ - று. 81

அகிலொடு சந்தனத் துணியி னூக்கிடு
துகில்பொதி மணிபுரை யெரியுந் தூமமுந்
திகிலெனப் பலபல செக்கர் வானம்வெண்
முகில்பொதிந் தனவென மூண்டெ ழுந்தவே.

இ - ள். அகிற்கட்டைகளுடனே சந்தனக்கட்டைகளையும் மூட்டியுண்டாக்கிய சீலையிலே முடிந்துள்ள செம்மணியை யொத்த நெருப்பும், புகையும் கண்டவர் நெஞ்சு திடுக்கிட, அநேகமான செவ்வானமானது வெள்ளிய மேகத்தினாலே மூடப்பட்டதுபோல் மேன்மேலாய்க் கிளர்ந்தன எ - று. 82

ஆறிலா தணிபடங் கத்து ளேற்றிய
மாறிலாத துளங்கெழின் மணிவி ளக்கொளி
தேறலாந தகைமைய சிலமபி நூலபொதி
தூறெலா மின்மினித தோற்ற மென்னவே.

இ - ள். (புகுதற்கு விட்டவழியல்லது வேறு) வழிகளில்லாமல எங்கும் கிரப்புதலான கூடாரத்துளளே ஏற்றிவைததிருககிற காறறுகிய பகையில்லா மல் விளங்குகின்ற அழகையுடைய இரததின விளககுகளின ஒளியானது, சிலம்பிப்பூச்சியாலே கட்டப்பட்ட நூற்படலைகள் முழுதும மினமினிப் பூச்சி களினுடைய தோறறமெனறு சொல்லும்படி துணிந்து சொல்லலாகிய தகு தியை யுடையன எ - று. 83

குசைநெடுங் கடுமபரிக கொறற மனனவன்
வசையிலா நஙகுல மடநதை மாமுலைக
கிசைவனே வென்றுவந தெடடிப பாரதநெனத
திசையெலாங கதிர்விரித தெழுநத திஙகளே.

இ - ள். கடிவாளததையுடைய நீணட வேகமான குதிரைமேலேறுகிற ஐயததைககொணட அரிச்சந்திரமகாராஜனுனவன யாதொரு பழிப்புமில்லாத நமது குலததிலவதரிதத சந்திரவதியினுடைய பெரிய தனஙகளுககுத தகுநத வனே வெனறு அவனை யெட்டிப் பாரபபதுபோல சந்திரனானவன சநதோ ஷிதது எட்டுத்திககிலுங் தனது கிரணஙகளை விரிததுககொணடு உதயமாயி னன எ - று. 84

செஙகய லனையகட டெரிவை தனறிரு
மஙகல முணாநதுமண் மடநதை யடடதோர
பஙகமி லிரசிதப பாலை மேலவழி
பொஙகலிற புதுநிலாப பொலிநத தெஙகுமே.

இ - ள். சிவந்த கயறகெணடை மீனையொதத கணகளையுடைய சந்திர வதியின திருககலியாணததைத தெரிநது, பூமிதேவி சமையல்செயததாகிய ஒரு தோஷமுமில்லாத வெள்ளிப்பானைமேல விரிந்து பொஙகுகிற பாறபொங் கலபோல எவவிடததும புதிதான சநதிரிகை நிறைநது விளஙகின எ - று 85

பெருததவா னிலவிடைப பேதை மாதரைக
கருததுறக காதலா கலநது றஙகினா
வருததமுங காதலும வளர மன்னவ
னொருததனே தனிககிடந துறககம் நீஙகினான.

இ - ள். அபபடிப பாலின வெணமையான சநதிரிகையாலே, அறியா மையையுடைய பெணகள மனதொருமிககு, அவாகளுடைய நாயகாகள கூடி நித்திரை செயகாாகள அரிசசநதிரன ஒருவனே மனவருததமும ஆசையும மேனமேலாகி வளரத தனியனாயபபடுத்து நிததிரையிலலா திருநதான எ - று.

உருவெளி னோக்குவ னுவபப னுன்னவன்
கரவினு லேஙகுவன கலங்கு வன்மதி
மரபினு டனகணென் மனது போமவழி
யிரவுபோ தறகிட மிலலை யோவென்பான்.

இ - ள். அப்படி நித்திரைகொள்ளாமல் சநதிரவதியினுடைய உருவெளித தோறறததைப் பார்பபான; சந்தோஷிபபான, அதையே கருதுவான; அதை மறந்தபோது துககிபபான; கலஙகுவான; சந்திர குலததினனாகிய சந்திரவதியினிடததிலே என மனது போவதாகிய வழியில் இராததிரியிலே மாததிரம போவதறகு இடமிலலையோவென்று புலமபுவான எ - று. 87

கொடியமா மதனையுங கொழுநி லாவையு
நொடியினு மொருகுறை சொலலி நோகிலான
படிகிலா விழியையும பாரில வோரிநீஇ
விடிகிலா விரவையும வெறுககும வேளையில.

இ - ள். கொடுமையையுடைய பெரிய மனமதனையும, செழுமையான சந்திரனையும ஒரு நொடிபபொழுதாயினும எநதனுமொரு குறையைசசொல்லி நொந்துகொளளாதவனுய, தூஙகாத கணகளையும, உலகததிலே வேரூனறி விடியாதிருககிற இராததிரியையும வெறுததுககொண டிருககிற சமையததில் எ - று. 88

மையலுங கஙகுலு மதியும வாடடவிவ
வையனே வெளியனென றனிவ யிற்றினிற
கையினு லறைநது கூய்க காமா வாரணம
வெய்யவா விரையவா வெனவி ளிததவே.

இ - ள். அரிசசநதிரனைக காமமயககமும அந்த இராததிரிகாலமும், சந்திரனும வாடசசெய்வனவாயிருகக, அபபோது அழகான கோழிகள இந்த ஐயனான அரிச்சநதிரனே எளியவனுயிருககிறுனெனறு தமதழகிய வயிறறில (இறகாகிய) கையினுலே மோதியடிததுககொணடு சூரியனே! உதயமாகி விரைவில் வாவெனறு கூபபிடடன எ - று 89

ஊழிவெங கதிரவ னுதய முனனறிந
தாழியுந திஙகளு மாரபப டஙகின
கோழியு மாரதன குககி லாததன
சூழியிற புளளொலாந துளளி யாரததவே.

இ - ள். வெயிலையுடையவனுன வெவவிய கிரணததைக்கொணட சூரியனுதிப்பதை முனனே தெரிநது கடலுஞ சநதிரனும தங்கள் ஆரவார மடஙகின. அப்போது கோழிகளெஙகுங கூவின செமபோததுகள கததின. குளஙகளிலே தூஙகுகிற படசிஜாதிகளெலலாந துளளிககுளளிச சபதிததன எ - று.

குககில-செமபோதது. சூழி-குளம். 90

நங்குலத் தரசனை நலிந்த பாதகக்
கங்குலைத் திங்களைக் கனன்று தோகடா
யங்கண்மா ஞாலமவிட் டகறறு வேனெனுச
செங்கதிரக் கடவுளுஞ் சிவந்து தோன்றினன்.

இ - ள். நமது குலத்திலே பிறந்த அரிச்சந்திரனை வருத்தப்படுத்தின பாவியான இரவையும், சந்திரனையும் கோபித்துத் தனது தேரைச் செலுத்திக்கொண்டு அழகிதான இடத்தையுடைய பெரிய வுலகத்தைவிட்டுப் போம்படி செய்கிறேனென்று சிவந்த சூரியபகவானுந் தனது கண்கள் சிவப்பாயுதயமாயினன் எ - று. 91

படாகெடுத் தறநிலை பரித்த மன்னனுக்
கிடர்விளைத் தெய்திய விராமன் டநதையிப்
புடவிவிட் டேகினும் போன திக்கெலாந்
தொடாமினென றெண்ணிலாச சுடரை யேவினன்.

இ - ள். உலகத்திலுள்ள அனபத்தைப் போக்கித் தருமத்தினது நிலையைக் காத்த அரிச்சந்திரமகாராஜனுக்குத் துனபத்தை யுண்டாக்கிக்கொண்டிருந்த இராகிய பெண்ணை, அவள் இந்த வுலகத்தைவிட்டுப் போனாலும் அவளோடிப்போன திசைகளெல்லாம் தொடாந்து பறறுங்களென்று சூரியனானவன் கணக்கிலலாத தனது கிரணங்களை யனுபபினன் எ - று. 92

அலரிவந் தெழமுரச் சதிர வாழிபோற்
புலரியி லரனடி பூசித் தண்ணலுஞ்
சிலர்சில சுடாமணித் தேரி லேறினா
பலாபல கரிகளும பரியு மேறினா

இ - ள். அப்படிச் சூரியனுவந் துதயமாகவே, கடலைப்போற பேரிகைகள் முழங்க, விடியறகாலத்திலே சிவனடியைப் பூசைபண்ணி அரிச்சந்திர மகாராஜனும அவனைக் கூடிவருகிற சிறசிலரும ஒளியையுடைய இரத்தினகசிதமான தோமேற் கொண்டவாகளாக மறறைப் பலரும பலபலவான யானைகளின மேலுங் குதிரைகளின்மேலு மேறினாகள எ - று. 93

அநதமா லாறறைவிட் டகன்று மன்னவன
முநதமால கரிபரி நடப்ப மொயததுடன
கநதமா லைககுழற கடலு டனவரச
சநதமால வரைததடஞ் சார னண்ணினன.

இ - ள். உடனே அரிசசந்திரமகாராஜன அநதப பெரிதான கோமாநியாற்றைக் கடந்து நீங்கி உயாநத யானைகளும், குதிரைகளும நெருங்கத்தலாய முன்னே நடக்க, பரிமளத்தையுடைய மாலைகளணிந்த கூநதலையுடைய பெண்கள கூட்டமான கடலுந் தொடாநதுவரச் சந்தனமரங்களோடுகூடி உயாந்துள்ள மலைகளினுடைய பெரிய சாரலைப்போய்ச் சோநதான எ - று. 94

அரிதகி பலாசமா திலக மாசினி
விரிமலர்ச சண்பகம வேங்கை கோங்கமை
சொரிமலர்ச சுரபுனை யசோகு துன்னிய
வரிமணற் காவிடை வந்து வைகினன்.

இ - ள். கடுக்காய்மரம் - பலாசமரம் - மாமரம் - மஞ்சாடிமரம் - பலாமரம் - விரிகிற மலர்களையுடைய சண்பகமரம - வேங்கைமரம - கோங்குமரம் - மூங்கில்மரம் - சொரிகின்ற மலர்களையுடைய சுரபுன்னைமரம் - அசோகம (ஆகிய இவ்வகை மரங்களில) நெருங்கிய (கீள்ளைகள்) இசையினை மிழற்றுகின்ற மணத்தைககொண்ட சோலையிலே வந்து தங்கினன எ - று. 95

அலைசுனை யாடவு மருவி யாடவு
மலைமிசைப் பிடியுமவன் களிறு மானவே
சிலைநுத லாருஞசெல் வருஞசென் றேறினா
முலையொடும் புயதநோடு நிகாத்த மொய்மபின.

இ - ள். அலைகளையுடைய சுனைநீராடவும, அருவிநீராடவும, மலைமேலே பெணயானையும வலிதான ஆணயானையும் போல, விலலைப்போலு நெற்றியை யுடைய பெணகளும, புருஷர்களும போய ஏறினாகள. அம மலையானது ஸ்திரீகளினுடைய கொஙகைகளையும, புருஷா தோள்களையும ஒப்பான சிகரங்களுடையதா யிருக்கின்றது எ - று.

மொய்ம்புதோள-மலைதநோள, சிறு குன்றுகள். 96

அருவிக ளாடுவாா சுனைக ளாடுவார்
வெருவிவந தகன்கரை மீதி லேறுவாா
சருவிநின றோடியப புனலிற் றுவுவாா
மருமலா கொய்குவார் மலைநது மீள்குவாா.

இ - ள். அருவிகளிலே நீராடுகிறவாகளும, சுனைகளிலே நீராடுகிறவாகளும, அப்படி நீராடுவதற கஞ்சிவந்து அகன்ற கரைமேலேறுகிறவாகளும், சைகை செய்து விளையாடிககொணடு நின்று அந்நீரிலே குதிககிறவாகளும, பரிமளத தையுடைய பூக்கொய்கிறவாகளும், அப்பூவைச் சூடிககொணடு திரும்புபவர் களு மாயினாகள் எ - று.

சருவல்-சைகை செய்தல 97

அருவியுஞ சுனைகளு மாடி நுண்மணல
மருவிய வணடலு மணநத சோலையும
பருவரைக் குடுமியும பளிக்குப பாறையும
பொருவிலாப புனஙகளும புகுநது நோககுவாா.

இ - ள். அபபடி அருவிகளிலுஞ சுனைகளிலும் நீராடி, நுணணிய மணலகளையுடைய வணடலிலும, அவவணடலகூடின சோலைகளிலும, பருதத

மலைச்சிகரங்களிலும், பளிங்குப் பாறைகளிலும், ஒப்பில்லாத தினைப்புனங்களிலும் போய் வேடிக்கை பார்ப்பார்கள் எ - று. 98

அன்றிருந் தணிவரைச் சாரல் வைகியே
துன்றிருள் விடிந்தபின் சோதி வேலினான்
சென்றிருஞ் சுடர்மணித் தேரி லேறியே
வென்றிவெம் படையொடு விரைந்து போயினான்.

இ-ள். அழகிதான மலைச்சாரலிலே அன்றையதினந் தங்கியிருந்து நெருங்கின இருளையுடைய இராத்திரி விடிந்தபின்பு ஒளியைக்கொண்ட வேலாயுதத்தையுடைய அரிச்சந்திரன் எழுந்துபோய் மிக்க பிரகாசத்தையுடைய இரத்தினமயமான தேரின்மேலேறிக்கொண்டு, ஜயத்தையுடைய குரூரமான சேனைகளுடனே அதிசீக்கிரத்திலே போயினான் எ - று. 99

வேயிருங் கானமும் வெற்பி னுச்சியு
மாயிரும் பொழில்களு மடிந்து நுண்பொடி
யாயின விசும்பினை யடைந்த தூளியுஞ்
சேயிருஞ் சுடர்மணித் தேர்கள் செல்லவே.

இ-ள். மிகவுமுயர்ந்து பெரிதான காந்திகளையுடைய இரத்தினகசிதமான இரதங்கள் செல்லுதலாலே; மூங்கில்களுடைய பெரிய காடுகளும், மலைச்சிகரங்களும், மிகப்பெரிதான சோலைகளும் அழிந்து சிறிய பொடிகளாயினவாய், அதினின்றுமெழுந்த தூளிகளெல்லாம் ஆகாயத்திலபோய்ச் சேர்ந்தன எ - று 100

செந்நிறப் பொலன்கதிர்த் தேரி னாழியுந்
தந்நிற மவ்வழி யனைத்து மாதலாற்
பன்னிறக் கிரிகளும் பரந்த பாறையும்
பொன்னிற மேருவே போற்பொ லிந்தவே.

இ-ள். அரிச்சந்திரனுடைய சிவந்த நிறத்தையுடைய பொன்னிறமான ஒளியைக்கொண்ட தேரினுருளைகள் படிந்து, அந்தத்தேரினிறமே அவ்வழிமுழுதும் மாகிறதினாலே, பலநிறங்களுடைய மலைகளும், பரவுதலான கற்பாறைகளும் பொன்னிறமான மகாமேருவைப்போல விளங்கின எ - று. 101

வானமுற் றெழுந்தமா மலையு மாலகரித்
தானமுற் றொழுகிய தடமுஞ் சாரலு
நானமுற் றெழுநறும் பொழிலு நண்ணிவெங்
கானமுற் றருநெறி கடந்து போயினான்.

இ-ள். ஆகாயத்தைத் தொட்டுக்கொண்டுயர்ந்திருக்கிற பெரிய மலைகளும், உயர்ந்த யானைகளுடைய மதங்களபட்டுயர்ந்துகிடக்கிற மேடுகளும், அந்த மலைப்பக்கங்களும், கஸ்தூரி வாசங்கொண் டெழுந்துள்ள

நல்ல மலர்ச்சோலைகளும், வெப்பமாகிய காடுகளும் கடந்துபோய், இப்படியே பல அரிதான வழிகளெல்லாம் அரிச்சந்திரன கடந்துபோயினன எ - று. 102

விரிந்த வெங் கமர்களும வெயிலின் வெந்துகீழ்
சரிந்தமா மலைகளுஞ் சருகு வெந்துமேற
பொரிந்தமா மரங்களும் புகைந்து மாமிசை
யெரிநதெழு கடுஞ்சுரத தெலலை யெய்தினன.

இ - ள். இப்படி விரிந்திருக்கிற செவவிதான விடாகிலங்களும், வெயிலினாலே வெந்து கீழே சரிந்துகிடக்கிற பெரிய மலைகளும, சருகுகள் வெந்து மேலே பொரிந்திருக்கிற பெரிய மரங்களும, புகைதலாய் கிலத்தினமேலெல்லாம எரிந்தெழுகிற கடுமையைக்கொண்ட பாலைவனத்தினெல்லையை யரசனணுகினன எ - று 103

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

என்றுமம ரர்க்குவினை யின்றியரன் முப்புர மெரிதத கனலும
வென்றிமத னைப்பொடி படத்திரு நுதற்கணை விழித்த கனலும
வன்றிரை யெறிநதெழு கடற்குணடு வைத்த வடவைக கனலுமுற்
றொன்றுபட வந்துகுடி கொண்டவ ணுறைநதன வுருபப மெழமே.

இ - ள. இனி எக்காலத்தும தேவாகளுககுத் துனபவினை யிலலாமல் சிவபெருமான திரிபுரததை எரித்த நெருபபும, வெற்றியையுடைய மனமதனைச் சாம்பலாக அழகிய நெற்றிககண்ணைத திறந்தெரிதத நெருப்பும், வலிதான அலைகளை வீசி எழுகிற கடலுக்குள் நடுவே வைததிருககிற வடவாக்கினியும கூடி ஒன்றுகவந்து குடிகொண்டு எவவிடததும வெப்பம் வீசி அஙகுத தங்குதலாயின எ - று. 104

கானமு ழுதுநதெறு கனற்றிரளில் வெநதெழு கதிர்ச்சுடரின் வெந
தூனமுற வற்றியுர கததலை வெடிபபவத னுசசி வழிபோய்
வானள வெழுநதுபுவி மீதுவிழு கின்றமணி வநது பகலவான்
மீனமவிழு கின்றபடி யாமென விளஙகின வெளிப்புற மெலாம்.

இ - ள். அந்தக காடுமுழுதும் சுடுகிற நெருப்புச் சுவாலையினாலும, ஆகாயத்தி லெழுந்துவருகிற சூரியகிரணததினாலும் வெந்து பழுதாக வுலர்ந்து வற்றுதலாய், பாமபுததலைகளும் பிளப்ப அதனுடைய தலையினினறும போய் ஆகாயத்தளவுமெழுந்து மணமேலேவந்து விழுகினற நாகரததினங்கள், பகற்காலததிலே உதிருகிற நட்சததிரககூட்டஙகள் ஒப்பாமெனன, அந்த வெறுநில வெளியிடங்களெல்லாம விளங்கின எ - று. 150

கருமபுய லருந்துளி கரநதுடல் கரிநதயல கலைநது நெடிதாய்
வருமபருவ முநதலை மயங்கிமழை யென்பது மறநத வதனாற்

பெரும்புவி பிளந்தது லனந்தன்முடி யிற்சுடர் பிறங்கி யெழுமா
விரும்புவி சினந்தழ லுமிழ்ந்தவத னைச்சுட வெழுந்த தெனவே.

இ - ள். காரியமேகங்கள் பெய்கிற அரிதான மழைத்துளிகளில்லாமல் அந்தநில வெப்பத்தினாலே உடலெல்லாந் தீய்ந்து அந்நிலத்துக்கப்பாலே தங்கள் கூட்டங்களைத்துபோய் (நாலுமாதவளவாக) வருவதான பருவகாலமுந் தடுமாறி மழைபெய்கிறதென்பதை மறந்துபோனதனாலே, அப்பெரிதான நிலமெல்லாம் வெடித்தது, அவ்வழியே ஆதிசேடனுடைய தலையிலுள்ள இரத்தினசோதிகள் விளங்கிக்கிளருந் தன்மையானது, அப்பெரிதான பாலைநிலம் கோபித்துத் தன மேல் நெருப்பைக் கக்குகிற சூரியனைச் சுடுதற்காக மேலே கிளம்பினது போலிருந்தது எ - று. 106

சுரப்புறு சிறைப்புன லெனக்கருதி வற்றிய துவைடசி யத்தனு
னிரப்புறு தவிப்பினை யொழித்திட மனத்தினி னினைந்து மையெலா
மிரப்பவரை நித்தலு நடத்தியுமொ ரற்பமு மிரக்க மிலாபாற்
பரப்பவரை யொத்தன கரப்பவரை யொத்தன பசாச ரதமே.

இ - ள். மானகளெல்லாம் உடம்பிளைத்துவறறிப தளாச்சியினாலே தம க்கு நிரம்புதலான தாகத்தை நீக்கிக்கொள்ள, பேயத்தேரான கானலைப் பெருகுகின்ற குளத்து நீரென்று நினைத்து, யாசிப்பதாக ஒருவரிடத்திலே தினந்தோறுஞ் செனறும ஒரு சிறிதேனுங்கொடுக்க இரக்கமில்லாதவர்க ளிடத்திலே பாவி யலைகிறவர்களை யொப்பாயின. பேயத்தேரான கானல் அவர்களுக்குக் கொடாமல மறைந்துகொண்டு திரிகிறவர்களை யொத்தன எ-று.

அடுந்திறலு மவ்வவர் படுந்திறலு நாமமு மனைத்து மெழுதி
நடுங்கலு நருமபுன றவிர்ந்துடல பதைத்துயிர நடுங்கி யுழலுங
கொடுங்கரி மருப்பும்வெருள் கற்றிடரு மற்றுள குவட்டி னிடையு
நெடுங்கட றடந்திரை கிளர்ந்தென முழங்குறு நெடிந்திர ளெலாம.

இ - ள். பகைவரைக் கொல்லுகிற சாமாத்தியமும, அவரவர் படுவதாகிய சாமர்த்தியமும், பெயருமுதலான எல்லாமெழுதி நட்டப்பட்ட கல்லும், கல்ல நீர்கிடையாமல் உடல்பதைபதைத்து உயிருமஞ்சி யலைவதான கொடிய யானைக் கொமபுகளும, பயப்படத்தக்க கல்லுமேடுகளும, இன்னமுமுண்டான குனறு களினிடத்திலும் நெடிதான கடலிலே பெரிய அலைகள் ஒலிப்பதுபோல, சிள வண்டுகளின் கூட்டத்தோசை முழங்குவதாயிருக்கும எ - று

நடுங்கல் - நடப்பட்டகல். நெடி - சிளவண்டு. 108

அந்தவெயி லத்தகல் விசும்பிடை வெடித்துவிழு மானை யினொடுந
தந்தமணி யைத்துளி யெனக்கருதி யுண்டுழலவ சாதக மெலாம
வெந்ததரி கொளுஞ்சரு கெழுந்துவிழு கங்குலில் விரிந்த நிழலில
வந்தடரு மெண்குமரை யுங்கடமை யங்கலையு மானி னமுமே.

இ - ள். சாதகப் பட்சிகளெல்லாம், அந்த நிலத்திலே எரிகிற வெயிலி னாலே அகன்ற ஆகாயவரையிலும் வெடித்துச் சென்று விழுகிற யானையி னுடைய நீண்ட கொம்பிலுள்ள முத்துக்களை மழைத்துளியென் றெண்ணி யுண்டு அலைகின்றன. வெந்து எரிகிற நெருப்புக்கொள்ளுகிற சருகுகள எழுந்து விழாநின்ற இருட்டிலே விரிந்திருக்கிற நிழலில் காடிகளுங் கானக் குதிரை, கடம்பைகளும், மான் கூட்டங்களும் வருவதுபோல் வந்து விழுந்து நெருங்குவ தாகும் எ - று. 109

மண்மக ளுடுத்ததிரை வாரிவட வைக்கனலை மாற்றி யிதிலோர்
வெண்மணலை வைக்கிலர மங்கைய ரிருமபதியும வெநது விடுமாற
கண்முழுதை யுமபுடை பெயர்நதுகவ ருஙகடை யுகததி விதிலோர்
நுண்மணறெ றிததுவிழி னுமபிரள யப்புனலை நுங்கி விடுமால்.

இ - ள். பூமிதேவி ஆடையாக உடுத்தியிருக்கிற அலைகடலிலுள்ள வடவா முகாக்கினியை (வேறிடத்தில்) மாற்றி, அஃதிருக்கிறவிடததில இந்த நிலததி லுள்ள ஒரு வெண்மணலைக் கொண்டுபோய் வைததால், அரம்பையர்க ளிருக கிற பெரிய தெய்வலோகமும அதன சுவாலையிலே வெந்துபோம். இந்தப் பூமியினிடங்களெல்லாம் தானிருக்குமிடததை விட்டுவந்து கவளீகரிககிற யுக முடிவிலே இந்த நிலததிலுள்ள ஒரு நுண்ணிய மணல்தெறிதது விழுந்தாலும் பிரளயகாலத்து வெள்ளத்தையும குடித்துச் சுவறப் பண்ணும் எ - று 110

வெங்கதிர்தெ றுங்கொடிய விண்டுவனம் வெநதெரியும வெந் தழலின்
யங்கதமி றந்துமத குஞ்சர மிறநதுட லழிநதிட மெலாரு [வா
செங்குருதி யங்கடலின் மண்டமுது வாரியலை சிநது நுரைபோ
லெங்கணும் விளஙகுவன வெண்குவ டெனுமபரி செலுமபு மலையே.

இ - ள் சூரியனாலே சுடப்படுகிற நீண்ட மூங்கிற்காடு வெந்து எரிகிற வெப்பமான நெருப்பினிடத்திலே, பாமபுகளும் மதயானைகளும விழுந்து செதது, அவைகளினுடம்புக ளழிநது எவவிடங்களிலும் பெருகின சிவந்த இரததமானது அழகிதான கடலிலே போய்க கலகக, அந்தப் பழைய கடலினலைகள் சிந்துகின்ற நுரைபோல வெளளை மலைகளெனனுமபடி எலுமபு மலைகள் எவ்விடததிலும் மிதப்பனவாயின எ - று. 111

வெங்கரி யுரித்திடை புனைநதவள் சலஞசலை விளங்கு சடிலச
சங்கரித்ரி சூலதரி தாருக விநாசனி சவுநத ரிசெழும
பொங்கரி மணிப்பரி புரத்திரு பதததினள் பொருபப னதனத
தெங்கடனி நாயகி யிருநதசம யத்தில்பெ டுத்து ரைசெய்வாம்.

இ - ள். வெவவிய யானையை யுரிதது அதனதோலைப் புனைந்தவள்; கங்காசலமும் சந்திரனும் விளங்குகிற சடையையுடைய சங்கரி; திரிசூல தரி; தாருகவிநாசனி; சவுந்தரி; செழுமையாக ஒலிக்கின்ற கற்களாக முத்து முதலிய இரததினங்களையிட்ட சிலம்புகளணிந்த இரண்டு திருவடிகளை யுடைய வள்; மலைகளை யொப்பான தனங்களைக் கொண்ட எங்களுடைய ஒப்பற்ற குல

தெய்வமான காளிகாதேவியா யிருக்கிற சபையி னிலக்கணத்தை இனி ஒரு வகையாக வியந்து சொல்லுகிறோம் எ - று. 112

எறித்தசெழு முச்சுடரு மொதத்தொரு தலத்திடை யெழுந்த தெனவே, தெறித்திரு புறைக்கடை சிவத்திடை கறுத்தகண் மிகச்சு ழலவே, சிறுத்தவிடை யிற்கரத லத்தின்முடி யிற்றிகழ் செறித்த வரவப், பொறிக்கண் பணத்தலை மணிச்சுடிகை யிறகதிர்கள் பொங்கி யெழவே.

இ - ள். விளங்குகின்ற செழுமையான சோமசூரியாக்கினிக ளென்கிற மூன்று சுடர்களு மொருங்குசேரக்கூடி ஒரிடத்திலே உதயமானாற்போல செறிந்து விளங்கி இருபுறத்திலுங் கடைசியிலே சிவந்து நடுவே கறுத்திருக்கிற கண்கள் மிகவுஞ் சுழல்வனவாக, சிறிதான இடையிலும், கைகளிலும், தலையிலும விளங்குவனவாக அணிந்த சர்ப்பங்களினது புள்ளிகளையுடைய கூட்டமான படங்களைக்கொண்ட தலைகளிலுள்ள இரத்தினங்களை யுடைய உச்சிகொண்டை களி னொளிகள் மிகுந்து கிளரவும் எ - று.

இதுமுதல் பதினமூன்று பாடல்கள் குளகம். 113

மிடித்தவர் களைப்பொருண் மிகுத்தவா வினைத்தொழில விளை ப்ப தெனவே, கொடிபபடா பொருபபென விடைககிடர்வி ளைத்தன குமபவழகுந, தடித்தினடி நிற்குமிர த்தைநிகா பொறகடி தடத்தி னழகும, பொடிதழ்தெழு வெயாதிரு முகத்தழகு நினறொளி பொழிந தொழுகவே.

இ - ள். வறுமையுற்றவர்களைக் கண்டு திரவியத்தின மிகுந்தவாகள சண் டைத்தொழில செயவதொப்ப, ஒரு கொடிமேலே தஙகுகினற (இரணடு) மலை களைபபோல, இடைக்குத் துனபத்தைச் செய்கிற குடங்கள் போனற தனஙகளி னழகும, ஒரு மினனலினடியிலே நிற்கினற தேரை ஒப்பான அழகிய சடி தடத்தினுடைய அழகும, பொடிப்பொடியா யெழுகினற வெயர்வையை யுடைய திருமுகத்தினழகும் நிலைகொண்டு ஒளிவழிந்தொழுகவும் எ - று. 114

வேலைக ளெழுநதுலக மேழினுட னேழையும் விழுஙகி விடுமக் காலமுடி விறகொடிய வூழிநெடு வெஙகனல கனனறெ ரிதலபோற் சாலவினை கொண்டுபொரு தாருகனை வெனறவுணர் தஙகள குடரை மாலையிடு கின்றதிரி சூலமிசை வெங்கனல் வளைநதெ ரியவே.

இ - ள். கடல்கள் கிளர்ந்து உலகங்கள் ஏழோடேழான பதினனகையுங் கவளீகரித்துக்கொள்ளுகிற கலிகாலமுடிவிலே, கொடுமையையுடைய ஊழிக காலத்து நெடிய வெவவிதான நெருப்புக கொதித்தெரிகிறதுபோல மிகவும் சண்டைகொண்டு பொருதுகினற தாருகாசுரனை வென்று, அசுரர்களுடைய குடலை மாலையாக அணிநதுகொள்ளுகினற திரிசூலத்தின்மேலே வெவவிய நெருபபானது சூழ்ந்து எரியவும் எ - று. 115

பொடிப்பொடி திசைத்திசை தெறித்திடு சுடர்த்திரி புரத்தழ லெனத்
தடித்தெழு வலத்தது தடக்கைவடி வாளொளி தயங்கி யெழவே
வடிக்கடி யெதிர்த்தலை யடித்தெழு முகக்கட லதிர்ச்சி யெனவே
விடிக்குரன முழக்கென விடக்கையின மணிக்கடகமிரைத் தசையவே.

இ-ள். எந்தத் திக்குகளிலும் பொடிப்பொடியாகத் தெறிக்கின்ற சுடரான து, திரிபுரத்தை நெருப்புப்போல் மின்னலெழுகின்ற பலத்தை யுடையதாய் வலது தடக்கையிலேயுள்ள கூர்மைகொண்ட வாளின் து ஒளியான து விளங்கி யோங்கவும், திரும்பத் திரும்பக் கரையோ டெதிர்கொண்டு அலைமோதி யெழுகின்ற யுகமுடிவில் முழங்குகிற கடலின் முழக்கம்போலவும், மேகமண்டலத்தில் முழங்குகின்ற இடிபோலவும் இடது கையிலே இருக்கிற மணிக்கடகமான து ஒலித்து அசையவும் எ - று. 116

பட்டய மெடுத்தொருகை பந்திர மெடுத்தொருகை பற்று மழுவுஞ்
சொட்டையு மெடுத்திருகை சக்கர மெடுத்தொருகை சுற்று மயிலும்
வட்டமு மெடுத்தொருகை வச்சிர மெடுத்தொருகை மற்க ரதல
மெட்டினும விதிர்ப்பன சுழற்றுவன வெந்தழ லெழுந்தெ ரியவே.

இ-ள். பட்டயத்தைக்கொண்டு ஒரு கையும், வாளைக்கொண்டு ஒரு கையும், பற்றுகின்ற மழுவையும் வளைதடியையுங்கொண்டு இருகைகளும், சக்கரத்தைக்கொண்டு ஒரு கையும், சுற்றுவதான வேலும் கேடகமுங் கொண்டு இரு கைகளும், வச்சிராயுதத்தைக்கொண்டு ஒரு கையும், இப்படிப் பலங்கொண்ட எட்டுக் கைகளினாலும் வெம்மைகொண்ட நெருப்பெழுந் தெரியும்படி வீசுகிற தாகவும் சுழற்றுகிறது முதலாகவும் செய்கின்றனவாகவும் எ - று.

சொட்டை-வளைதடி. 117

ஆடக மணிக்குழைகள் பாரிய சரப்பணிக ளத்த கடகஞ்
சூடக மிரட்டையடி தாரமொடு பட்டமணி தோளவளை செழும
பாடக மெழிற்பரிபு ரங்கழல ரதங்கைகள பத்தக முடனே
நீடெழின மந்நாணிக ளலைந்து திசை யெங்குமொளி நின்றடரவே.

இ-ள். பொன்னாற்செய்து இரத்தினங்கள் பதித்த குண்டலங்களும், கனமான சரப்பணிகளும், அஸ்தகடகங்களும், கங்கணங்களும், இரட்டையாகச் சூழுகின்ற அரைநாண் மாலைகளுடனே நெற்றிப்பட்டமும், அணியத்தக்க தோள்வளைகளும், செழுமையான பாடகங்களும், அழகிதான சிலம்புகளும், காலி லணிகின்ற சதங்கைகளும், பதக்கத்துடனே நீண்டுள்ளதான அழகைக்கொண்ட மற்றுமுள்ள ஆபரணங்களும், எட்டுத் திக்கிலும் அசைதலாய அவைகளின் சோதி நிலைகொண்டு நெருங்கவும் எ - று. 118

நித்தில நிரைத்துவயி ரத்திண மழுத்திமுழு நீல நிறுவிப
பத்திபட வொப்பரிய பச்சைவிர விப்பதும ராக மலவிச

சித்திர மியற்றிய மணிக்கலையு மப்பரிசு செய்த கிரணத்
துத்தரிய முந்தொடையு முற்றுநில வும்வெயிலு மொக்க விழவே.

இ - ள். முத்துகளை வரிசைப்படுத்தி, வயிர ரத்தினஙகளின் கூட்டஙகளைப் பதித்துள்ளதாய், முழுநீலத்தையும் நிலைக்கச்செய்து, வரிசையாக ஒப்பரிதான பச்சையுங் கலந்து, பதுமராகத்தையுங்கூட்டிப பலவித சித்திரங்களுஞ் செய்துள்ள மணிமயமான இடையிலுள்ள வஸ்திரமும, அப்படியே செய்திருக்கிற காந்தியையுடைய மார்யாப்பும மாலைகளுங்கூடி முழுதும் சந்திரிகையையும், வெயிலையும ஒத்து (ஒளிகள்) சிந்தவும எ - று. 119

காவன்முறை நிறபவொரு கோடியுள கறபனைகள கறறுவழுவா
தேவலிடை நிற்பவொரு கோடியுள கூடிய விடாகி னிகண்மே
லாவலொடு நிறபவொரு கோடியுள நனனெறி யமைச்ச ரெனவே
போவனவு மீளவனவு மாவவொரு கோடியுள பூத கணமே.

இ - ள். காவலாக வரிசைகொணடு நிறபவைகளாயுள்ள ஒருகோடி பூதஙகளும், பலவிதமான கறபனைகளுங்கறறுத தப்பாமற சொனன பணிவிடைகளின படியே நடப்பவைகளாயுள்ள ஒருகோடி பூதஙகளும, அவைகளோடு சோநது மேனமேலான அனபுகொணடு நிறபவைகளாயுளள ஒருகோடி இடாகினிகளும, நனமாாககஙகளைச் செய்கிற மநதிரிகளபோலப போகுமவைகளும, திருமபிவருமவைகளும செயவனவாகவுளள ஒருகோடி பூதகணஙகளும எ - று. 120

அசசம தறததம துயிாகொடை யளிததவ ராறுதத தலையை
வசசிர மணிககடக நறகர தலததினிடை வைபப சிலவே
யிசசையி னரபபலிக ளிட்டதலை யைககடி தெடுததி றைவிமுன
பசசுதிர முறறொழுக வைபபசுத கோடிகள பசாச கணமே.

இ - ள் சில பிசாசுகள், பயமிலலாமல் உலகததிலே தங்களுயிரைப் பிறருககுக கொடையாகக கொடுததவர்களுடைய அறுதத தலைகளை, வயிர இரததினஙகள பதிதத கடகஙகளணிநத காளியினுடைய நலமான கையினகண கொணடுவந்து வைககவும, நூறுகோடி கணககுள்ள பசாசுககூட்டஙகள் தங்களிச்சைபபடியே நரபலிகளாகக கொடுதத தலைகளை விரைவிலே யெடுததுக கொண்டுவந்து காளிகாதேவிமுனனே பசுமையான உதிரமானது முழுதும ஒழுகவொழுக வைககவும எ - று. 121

ஈடுபடு நுண்ணிடை நுடங்கமிகு சாமர மிரண்டு புறமும
போடுமவ ருமபரி புரததிரு மலாததுணை பொருததி முடிமேற
சூடுமவ ருஙகவி தொடுககுமவ ருமபவுரி சுறறி முறைநின
றாடுமவ ருமமிசைகள பாடுமவ ருமபல வரமபை யாகவே.

இ - ள். நிமிர்வதும துவளவதுமான நுண்ணிய இடைகள தடுமாற, மிகுதியான வெணசாமரஙகளை இருபுறததிலும வீசுகிறவாகளும், தேவியுடைய சிலமபுகளணிநத இரணடு பாதஙகளையுங கூட்டிச் சிரசினமேலே சூடிககொளளு

கிறவர்களும், பாட்டுகள் பாடுகிறவர்களும், அவவாட்டத்திற்கேற்க அசைகளாகிய பாடல்கள் பாடுகிறவர்களுமாகிய அநேக வரம்பைப் பெண்களும் எ - று. 122

மஞ்சன மெடுப்பவரு மாமலர் தொடுப்ப வரும் வாள்விழிகளுக்
கஞ்சன மளிப்பவரு மாரமு தளிப்பவரு மன்னை திருமுன்
கஞ்சனை பிடிப்பவரும் வஞ்சனை யறப்பரி கலத்துட னெடுத
தின்சொல்வழி நிற்பவரு மெண்ணரிய கோடிக ளிடாகி னிகளே.

இ - ள். திருமஞ்சன மெடுக்கிறவர்களும், பெரிதான புஷ்பமாலைகள் தொடுக்கிறவர்களும், வாள்போல்வனவான தேவி கண்களுக்கு மையிடக் கொடுக்கிறவர்களும், அரிதான திருவமுது நிவேதிக்கிறவர்களும், அந்தத் தாயான தேவி சந்நிதிமுன்னே கண்ணாடி காட்டுகிறவர்களும், கபடமில்லாமல் பரிகலத்துடனே மற்றும் வேண்டியவைகளைக் கொண்டு தேவியினுடைய இனிதான சொல்வழியே நிற்கிறவர்களுமாகவுள்ள எண்ணுதற்கரிதான கோடி இடாகினிகளும் எ - று. 123

பண்ணவர் திரண்டுபகா முன்றிறனில் வநதடி பணிநது தொழவே
மண்ணவர் விழுநதுதம தெண்ணமுடி யுமபடி வரஙகள் பெறவே
கண்ணருள் சுரநதுதறு கண்ணரி சுமநதகன கததவி சின்மேற்
பெண்ணர சிருநதனன் பிறங்குசடி லம்புடை பெயர்ந தலையவே.

இ - ள். தேவர்கள் திரட்சியாய்ககூடிக துதிப்பதான திருமுற்றத்திலே, மண்ணுலகததுள்ளவர்கள வந்து கீழேவிழுகது தேவி பாதஙகளை வணங்கிக கும பிடவும், கும்பிட்டுத தங்களுடைய எண்ணங்கள் நிறைவேறும்படி வேண்டிய வைகளைப் பெற்றுக்கொளளவும், விளங்குகினற சடைகள் பக்கங்களிலெல்லாம் அசைந்தாட, கிருபாதிருஷ்டிகொணடு அஞ்சாத சிங்கந் தாஙகுகினற பொன்னு சனததினமேலே (இவவளவு சமபிரமஙகளுடன) பெணகளுககரசியான காளிகா தேவி வீற்றிருந்தாள் எ - று. 124

அமபொனின் மணிததவிசி னமபிகை யிருபப வரசாக கரசனுங
கமபகர டககளிறு வெம்பரி பதாதிகள் கடைததலை நிறீஇக்
குமபமுனி தமபியொ டருநதவா குலததரசா கூடி வரவே [ன்.
வம்புகுடி கொண்டமுலை மஙகை திருமுன்றி லிடைவநது தொழுதா

இ - ள். அழகிய பொன்னாலும், இரத்தினங்களாலுஞ் செய்த சிங்காசனததில் காளிகாதேவி வீற்றிருகக, அப்போது ராஜாதிராஜனான அரிச்சந்திரன தானில கட்டுவதான மதச் சுவட்டையுடைய யானைகளும், வெவவிதான குதிரைகளும, காலாள்களும் கடைவாயிலே நிறபனவாகச் செய்து, வசிஷ்டருடனே அருமையான தவமுனிவர்களும், தனது குலத திலே தோன்றின அரசர்களும் கூடிவருபவர்களாக, பரிமளமே நிலைகொண முள்ள கொங்கைகளுடைய தேவி திருமுற்றததிலே வந்து வணங்கினன எ-று

## மேற்படி வேறு

*நற்றேரை விட்டிறங்கி நாயகியைத் தொழுதிறைஞ்சி நண்ணி ராசன், முற்றேரை நோக்குதலு முடிவேந்தன் கருணைவிழி முனைக டாக்கக், கற்றேருங் கற்பரியுங் கற்சிலையுங் கற்கணையுங் கன்னிமு ன்னே, பொற்றேரும் பொற்பரியும் பொற்சிலையும் பொற்கணையும் பொலிந்த வன்றே.*

இ - ள். அரிச்சந்திரன் தனது அழகிய தேரைவிட்டிறங்கித் தேவியை வணங்கித் துதித்துக்கொண்டுபோய், தன முன்னேநின்ற தேரைப் பார்க்கு மளவில், அந்தக் கிரீடாதிபதியான அரிச்சந்திரனுடைய கிருபாதிருஷ்டியின் கூர்மைகள் சென்று தைக்க, அவ்வளவில் முன்னே கல்லாயிருந்த தேரும், கல்லாயிருந்த குதிரைகளும, கல்லாயிருந்த வில்லும், கல்லாயிருந்த அம்பும, அந்தக் காளிகெதிரேதானே பொனனுலாகிய தேரும, பொனனிறமான குதிரைகளும், பொனமயமான வில்லும, பொனமயமான அம்புகளுமாக விளங்கின எ - று. 126

முன்னுளிற் கல்லான முடிதடேருமவாமபரியும் மூரி விலலும்
பொன்னுகக கண்டிறைவன புநமகிழ்ந தநிசயிததுப புளகமெய்தி
யென்னுக வநததிது வெனககருது மவவளவி லிருண்ட மேனிப்
பொன்னுருங் களபமுலைபபுரிசடையாண் மணிவாயிறபுறத்துவநதாள்

இ - ள். முனனுளிலே கலலாயிருந்த சிகரத்தையுடைய தேரும், தாவுகிற குதிரைகளும, பெரிய வில்லும, அமபும பொனனுயிருககக் கணடு அரிச்சந்திரமகாராஜன மனமகிழ்ந்து ஆச்சரியமுறறு புளகாஙகிதங்கொண்டு இவைகள எனன காரணததினுலே இவவாறுயிறறென றெணணுகிறபோது, இருணடிருககிற நிறததையுடைய பொனமயமான சந்தனச்சேறு பூசின கொஙகைகளைக கொணட சுருண்ட சடையையுடைய காளிகாதேவியானவள் தனது அழகிய வாயிலுககு வெளியே வந்தாள எ - று. 127

*மாதங்கி வநதிடலு மலாக்கரங்கண் முடிமீது வைததுச செம் பொற், பாதங்கண் மிசைவீழ்நது பணிநதெனது தவபபயன்றுன் பலித்ததென்னுப, பூதஙகள் விளையாடுந் திருவாயிற் கறறேர்போ ய்ப பொற் றேரான, திதென்று நீயருள்வா யெனக்கேடகக் குமரி யெடுத தியமப லுற்ருள்.*

இ - ள். காளியானவள் அப்படி வெளியே வந்தபோது, தாமரை மலர் போலுங கைகளைத் தலைமேலே குவித்து, அவளுடைய செம்பொனமயமான பாதங்களிலே விழுந்து வணங்கி எனனுடைய தவப்பலனுனது இப்போதுதான பலிதமாயிற்றென்று பூதங்கள விளையாடுகிற திருவாயிலிலேநினற கல்லாயிருந்த தேர்வடிவுபோய் இப்போது பொற்றேரானது இன்னகாரணத்தினுலென்று அருளிச்செய்யவேண்டுமெனறு கேட்க, அதற்குக் காளியானவள் அதன வரலாற்றை யெடுத்துக கூறலாயினுள் எ - று. 128

உவராழி மண்ணுளைசை யொழித்தகலு மடல்வருண னுலகில்யா ருங், கவராது பொற்றேரைக் கற்றோரா கசசபித்துக் கண்முன் கா ட்டி, யெவரானு மிதுநோக்கி னிவ்வுருப்போய்ப் பண்டையுரு வெய் துமாகி, லவராகு மிதற்குரியோ ரவர்தமக்கே கொடுப்பதென வளி த்துப் போனன்.

இ - ள். இந்த உப்புக்கடல் சூழ்ந்த உலகத்தாசையை நீக்கிச் செல்லு கின்ற பலிஷ்டனான வருணபகவான், உலகத்திலுள்ளவர்கள் எவர்களும் கொண்டுபோகாதபடி பொற்றேரைக் கற்றேராக நியமித்து என் கண்களுக்கு முன்னே காட்டி, இனி யாவராலும் இந்தத் தேரைப் பார்த்தபோதில் இக் கல்வடிவு போய்ப் பழைய பொனவடிவமாகுமானல், அவவாருகப் பார்த்த வர்களே இந்தத் தேருக்குரியவர்கள். அவர்களுக்கே நீ கொடுக்கக கடவை யென்று எனவசம் கொடுத்துச் சென்றன எ - று. 129

மன்னுகே ளென்னுடைய மணிவாயி றனில்வருணன் வைததுப் போன, அநநாடொட டிநநெடுநா ளளவாகக கலலாய்நின் னருட்க ணேக்கப், பொன்னன செழுநதேர்நீ கொடுபோவென் றினிதளிக் கப் புகழ்ந்த யோததி, நனனுடன ருன்வாஙகி நவமணிததே ரதி லேறி நடததினனே.

இ - ள். அரிச்சந்திரமகாராஜனே! கேட்பாயாக: என்னுடைய திரு வாயிலிலே வருணனனவன வைததுச்சென்ற அந்நாள் தொடங்கி இக் கெடுங்காலமளவும கலலாயிருந்து இப்போதுனனுடைய கிருபைக்கண்ணுலே பார்க்கவே பொனனன இச் செழுமையான தேரை நீயே கொணடுபோ வெனறு சந்தோஷித்துக கொடுகக, அயோததியைச் சூழ்ந்த நல்ல கோசல நாட்டையுடைய அரிசசநதிரமகாராஜன அககாளியைத துதிததுப் பெறறுக கொண்டு ஆநத நவரததின கசிதமான தேரினமேலேறிச் செலுததினன் எ - று. 130

## கலி விருத்தம்

வாள்செலச சிலைசெல மாத ரார்செல
வாளசெலத தேர்செல வானை செல்லநீ
டோள்செலு சுடர்மணித தொடியி னன்பல
நாள்செலக் கனேசிமா நாடடை நண்ணினன்.

இ - ள். வாள்கள் செலலவும் விற்கள செலலவும இப்படிப் பெண்கள் செல்லவும காலாள்கள் செல்லவும தேரகள் செலலவும் யானைகள் செலலவும் நீண்ட தோள்களிலே புகுந்திருப்பதான ஒளியையுடைய இரத்தினங்கள் பதிதத கேயூரமணிந்த அரிச்சந்திரன பலநாள் கழிவதாகப் பினபு கனோசிமா நாட்டைப் போய்ச் சேர்ந்தான எ - று. 131

தாழையின் முதிர்பழங் கமுகின் றாறுதே
மாழையின் கனிவிழை வருக்கை யின்பலங்
கூழைவெண் குரங்கயல் குதிப்பக் கூன்குலை
வாழையின் கனியெலா மடிய வீழுமால்.

இ - ள். (அந்நாட்டில) தெனனமரங்களினுடைய முற்றின தேங்காய்களும், கமுகினது குலைகளும், தேன்பொருந்திய மாமரத்தின கனிகளும், விரும்பத்தக்க பலாவின் பழங்களும் (மிகுந்திருப்பதனால) வாலையுடைய வெண்மையான குரங்கு ஒரு தெனனமரத்திலேயிருந்து மற்றொரு தெனனமரத்திலே குதிக்க, அந்த அதிர்ச்சியினாலே விளைந்த குலைகளையுடைய வாழை மரங்களின பழங்களெல்லாம அழிந்து சிந்திவிழும் எ - று. 132

கூன்கடு வனறலை குரும்பை வீழ்தலின்
றீங்கனி வருக்கையிற புதைந்த செம்முக
வான்கவி வாலபிடித திழுத்து மந்தி முன
றுன்கொடு கதலியும படப்பை சாருமால்.

இ - ள். கூனலான ஒரு ஆணகுரங்கு பாயகிற அதிர்ச்சியினாலே தெனனங்குரும்பை தன றலைமேல விழ, அந்தப் பயத்தினாலே இனிதான பழங்களையுடைய பலாமரத்திலே மறைந்திருந்த சிவந்த முகத்தையுடைய ஒரு பெரிய குரங்கானது வாலைப்பிடித்திழுத்துப் பெணகுரங்கை முனனே தான கூட்டிக்கொண்டு வாழைச்சோலைக்குளளே போய்ப்புகும எ - று. 133

பலவளை மணிகளும பதும ராகமு
நிலவெழ வெயிலெழ நீலம பங்கயம
புலரியு மாலையும புகுத லிலலென
மலாதலுங குவிதலு மறந்த வாவியே.

இ - ள். பலவிதமான சங்கும முத்துக்களும பதுமராகமணிகளும் ஏககாலத்திலே நிலவுதோனறவும, வெயிலெறிக்கவும விளங்குகிறதினாலே, குளங்களில் நீலமலாகளும, தாமரைமலர்களும, விடியறகாலமும மாலைக்காலமும தோனறுகிறதிலலையெனறு மலாகிறதும குவிகிறதும மறந்திருக்கினறன எ - று. 134

தாள்களுந துடைகளுந தையலாா மனரித
தோள்களு முலைகளுஞ சோலை காட்டுவ
நீள்கனங் குழைகளு முகமு நீலக்கண்
வாள்களும வாய்களும வாவி காட்டுமே

இ - ள். அசோகினறளிர்களாலே காலகளையும, வாழைகளாலே துடைகளையும், மூங்கில்களாலே பெணகளுடைய அழகிய தோள்களையும, கோங்கரும்புகளாலே கொங்கைகளையும் சோலைகள் தோனறச்செயவன. கருங்களாலே நீண்ட கனமான குழைகளையும், தாமரைமலர்களாலே முகங்களையும்,

நீலமலர்களாலே கருத்த கண்களாகிய வாள்களையும், செவ்வாம்பல்களாலே
வாய்களையும் குளங்கள் தோன்றச் செய்வன எ - று. 135

திருதிகொன் றலைபுனன் மதகு சிந்தவு
பகுதியுட் பகுதியுட் பற்ற றுதென
வெகுதிரைப் பேரொலி வேலை யேழுமுட்
புகுதினு நிறைவுறா தளவில பொய்கையே.

இ - ள். திருதிகொன்று அலைகள் முழங்குகின்ற நீரை மதகுகள் பாய விடுகிறதினாலும், காலப்பகுதிகள்தோறும் காலப்பகுதிகள்தோறும் நீரைக் கொண்டிருத்தலின், குறைவுபடாதென்று சொல்லும்படி யநேகமான அலைகளின் பெரிய ஒலிகளையுடைய கடல்களேழும் உள்ளே புகுந்தாலும் அப் பொய்கை நிறைவுகொள்ளாது இதிலுள்ள நீரளவின்றாலே எ - று.

கஞ்சி நாட்டில் ஒரு குளத்திலுள்ள நீரளவுக்கு எழுகடனீரளவும் பற்றாது. வருஷங்கள்தோறும் வயல்களுக்கு மதகின்வழியே நீர் பாய்ந்து கொண்டிருந்தாலும் நீர் வற்றுகிறதில்லை யெனக. 136

துகிரினுஞ் சிவந்ததாட் டுணைவெண் பேடையோ
டுகிரினு மலகினு மொடுக்கு மீனுடற
றிகிரியம் புள்புடை பெயரத திண்சிறை
பகிரினீர் கடையுகப் பௌவ மன்னதே.

இ - ள். பவளத்தைப் பார்க்கிலுஞ் சிவப்பான கால்களிரண்டையுடைய வெண்ணிறமான பெட்டையுடனே காலுகிரினாலும் வாய் மூக்கினாலும் ஒடுக்கங்கொண்ட மீனுடனே சக்கரவாளப்பட்சிகள் பக்கத்திலே செல்லுவதான அந்தத் திண்ணிய பொய்கைக் கரையினின்றும் வயல்களுக்கு நீரை மதகின வழியே பகுத்துவிட்டால அந்த நீரளவு கடைகாலத்திலே பொங்கிவருகிற கடலைப்போல்வது எ - று.

அத்திண்சிறை - அத்திண்ணிய பொய்கைக் கரை. 137

கூடிய பிறனலக் கொள்கை கண்டழன்
றூடிய வோதிம மொளித்த தாமரை
வாடிய வாறுகண் டாவி மாய்ந்திடத்
தேடிய சேவறன் னுளநதெ ளித்திடும்.

இ - ள். வேறொன்றைக் கூடினதன்னில வேறான சுகங்கொண்டதைக் கண்டு கோபித்துப் பிணங்கின பெட்டையன்னமானது வேறொரு தாமரை மலரிலே போய் மறைந்துகொண்டது அப்போது அதிலிருந்த தாமரைமலர் குவிந்த தன்மையைக் கண்டு தனதுபெட்டை அம்மலரோடு மூடுதலாயிறந்து போயிற்றென்று தானு முயிரைவிட்டு மடியத்தேடிய சேவலன்னத்துக்கு (மற்றொரு பூவிலிருந்து பெட்டையன்னம்) மனந்தெளிவு பெறச் செய்யவும் எ - று.

காற்றினிற் கலைந்துயர் சினையிற் கான்றதே
றாற்றினிற் பறந்தகல் வாவி யண்மியே
சேற்றினிற் பழகிய வயலிற் செந்நெலி
னாற்றினிற் பறப்பன நாலு பாலுமே.

இ-ள். வீசுகிற காற்றினாலே கலைந்தாய் உயர்ந்த மரக்கொம்பினின்று மொழுகின தேனானது, ஆற்றைப்போல் பரவி அகன்ற குளத்தைக்கூடிச் சேற்றினாலே இறுதலையுடைய வயல்களிலே நட்ட சிவந்த நெற்களினுடைய நாற்றுகளிலே நாலு பக்கத்திலும் போய் பரவுவன எ-று. 139

பிணையன விழியினா நடைபெறக் கெழீஇத்
துணைபுணர் ரோதிமந் தொடர்ந்து பின்வரத்
திணைபல படர்ந்துதிண் டேரி ழிந்தும
னிணைமருப் பியானையி னெருத்தத் தேறினான்.

இ-ள் மானைப்போலுங் கண்களையுடைய பெண்கள் நடையைத் தானும் பெறுவதாகக்கூடிச் சேவலோடு கூடியிருந்த பெடையன்னமானது தொடர்ந்து வருவதான நிலங்கள் பலவுஞ் சென்று, திண்ணிதான தேரைவிட்டிறங்கி, அரிச்சந்திரமகாராஜன் இரண்டு கொம்புகளையுடைய யானையின் பிடரியின்மேலேறினான் எ-று. 140

இடியென முழங்கிட வியம்பி யங்களால்
வெடிபடு முலகமும் விசும்பு மென்னநீள்
கொடிகளுங் குடைகளுங் குழுமக் கொற்றவன்
கடிகமழ் கங்கையின் கரையை நணணினான்.

இ-ள். இடியைப்போல முழங்குவதாகக் கொட்டுகிற வாத்தியங்களாலே உலகமும் ஆகாயமும் வெடித்துப்போகுமென்னும்படி நீண்ட கொடிகளுங் குடைகளுந் திரண்டு செல்ல, அரிச்சந்திர மகாராஜன் வாசனை பரிமளிக்கிற கங்கையாற்றின் கரையைப் போய்ச் சேர்ந்தான் எ-று 141

முன்னரோர் முனிவரன் மொழிந்த சாபத்தாற்
பன்னகந் தரித்துயிற் பாற்கட் றக்கணே
பொன்னகர் வளனெலாம் புகுத் தாமென
மன்னவன் கங்கையில் வந்தி றங்கினான்.

இ-ள். முற்காலத்திலே ஒரு துருவாசமகாமுனிவர் இட்ட சாபத்தினால் பாம்பினமேல் மகாவிஷ்ணு தூங்குவதான திருப்பாற்கடலிலே, தெய்வ லோகத்திலுள்ள செல்வமுழுதும் போனாற்போல, இந்த அரிச்சந்திர மகாராஜன் தன் செல்வத்துடனே கங்காநதிக்கரையினருகே வந்திறங்கினான் எ-று. 142

மின்னிற நுண்ணிடை மின்ன னாருலைச
செந்நிறச் சுண்ணமுந் திமிர்ந்த சாந்தமு

நன்னிறக் குங்குமச் சுவடு நண்ணிவான்
வின்னிற மொத்தது விமல நீத்தமே.

இ-ள் அப்பரிசுத்தமான கங்காஜலம், மின்னலைப்போற் றுவளுவதான ஒளியைக்கொண்ட சிற்றிடைகளையுடைய பெண்கள் தம் கொங்கைகளி லணிந்த சிவந்த நிறத்தைக்கொண்ட கந்தப்பொடியும், நிறையப் பூசின சந்தனமும், நல்ல நிறத்தையுடைய குங்குமமும் படியக்கொண்டு ஆகாயவில்லினுடைய நிறத்தை யொப்பாயிற்று எ-று 143

வரைசெறி வேழமு மாவின் கூட்டமும்
விரைசெறி தாரபுய வேந்தர் மக்களும்
பிரசமார் மலர்க்குழற் பேதை மாதரு
மரசனுங் கங்கைநீ ராடி யேறினர்.

இ-ள் மலைகளைப்போல நெருங்கின யானைகளும், குதிரைக்கூட்டங் களும், பரிமளமிக்க மாலைகளணிந்த தோள்களையுடைய இராஜகுமாரர்களும், தேன் பெருகுதலைக்கொண்ட பூவையணிந்த கூந்தல்களையுடைய பெண்களும் அரிச்சந்திரமகாராஜனும் கங்காநதியில் மூழ்கிக் கரையேறினார்கள் எ-று. 144

அங்கைவேன் மன்னவ னருளி னோக்கினோ
மங்கைதன் கற்பினோ வமைச்சர் மாண்பினோ
வெங்கயற் கட்பெரு வெள்ளத் தோடும்போய்க்
கங்கையைப் பெரும்படைக் கடலக் கடந்ததே.

இ-ள். அழகிய கையிலே வேலைக்கொண்ட அரிச்சந்திரமகாராஜனுடைய கிருபாதிருஷ்டியினாலேயோ, சந்திரவதியினுடைய கற்பினாலேயோ, மந்திரிகளுடைய சாதுர்ய நற்செய்கைகளாலேயோ கடுமையாகிய சேற்கெண்டை மீன் களையுடைய நீர்ப்பெருக்கைக்கொண்ட அந்தக் கங்காநதியை இப் பெரிதாகிய சேனைக் கடலானது கடந்து போயின எ-று 145

அன்னமா டுந்துறை யகழும் வாவியும்
வன்னமா மதில்களு மாடக் கூடமும்
பொன்னின்மா மேடையும் பொலிந்து தோன்றவக்
கன்னமா புரிதனைக் கண்ணி னோக்கினன்.

இ-ள் அன்னங்கள் விளையாடுகிற நீர்த்துறையையுடைய அகழும், குளமும், பொன்னிறமான பெரிய மதில்களும், மாடகூடங்களும், பொன்மயமான பெரிய உப்பரிகைகளும் நிறைவுகொண்டு தெரிய, அந்தக் கன்னமாபுரத்தை அரிச்சந்திரமகாராஜன் தன் கண்களாலே கண்டான் எ-று 146

இந்நக ரெந்நக ரென்று கூறவே
முன்னவாக் குணாத்திய முனிவர் நோக்கியே
மன்னவ சொன்னவவ் வலவி வாழ்திரு
நன்னக ரீதென நயந்து கூறினார்.

இ - ள். இந்தவூ ரெந்தவூரென்று அரிச்சந்திரன் கேட்க, முன்னே அவனுக்குத் தெரியப்படுத்தின தவமுனிவர்க ளவனைப் பார்த்து ஓ அரசனே! முன்னமே நாங்கள் சொன்ன சந்திரவதியிருக்கின்ற அழகிதான நல்ல நகர் இதுதானென்று சந்தோஷித்துக் கூறினார்கள் எ - று. 147

வல்லிதன் னகரிது மன்ன வாவெனச்
சொல்லிய பொழுதினிற் றுணுகக மெய்தியே
யல்லியந் தாரினா னவளை யின்புறப்
புல்லிய கலவியிற் புளக மெய்தினன்.

இ - ள். அரசனே! சந்திரவதியிருக்கிற பட்டணம் இதுதான் என்று சொன்னபோது, அகவிதழ்களுடைய மலர்மாலை யணிந்த அரிச்சந்திர மகாராஜன் கூசுதல் கொண்டு, அரசசந்திரவதியைச் சந்தோஷமாகக் கூடிய புணர்ச்சியுள்ள சந்தோஷத்தைப்போல உடம்பெல்லாம் மயிர்ப்புளகித்தலைக் கொண்டான் எ - று. 148

### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

சனந்தொடர்ந்து பின்வரத் தடங்கடந்து சென்றுவெஞ்
சினந்தொடர்ந்த வெம்பரித் திரிசங்குதந்த மைந்தன்முன்
மனந்தொடர்ந்து கொண்டவல்லி மன்னுகின்ன மாபுரிக்
கனந்தொடர்ந்த மாமதிற் கபாடவாயி லெய்தினன்.

இ - ள். பரிசனங்கள் தொடர்ந்து பின்னேவர வழிமுழுதுங் கடந்து போய், வெவ்விதான கோபங்கொண்ட கடினவேகத்தையுடைய குதிரை (மேலேறுகின்ற) திரிசங்கு மகாராஜன் பெற்ற அரிச்சந்திர மன்னுடைய மனமானது முன்னர் (அவாவித்) தொடர்தலைக் கொண்ட சந்திரவதி யிருக்கிற மேகங்கள் சஞ்சரிப்பதான பெரிய மதில்சூழ்ந்த கன்னமாபுரத்தினது கதவையுடைய கோட்டைவாயிலுக் கருகே சென்றான் எ - று. 149

மடங்கலுற்ற வாயிரண்டு மகரதோர ணங்களு
மிடங்கணிப் பொறிப்பரப்பு மெண்ணிறந்த மாமதிற்
கிடங்கடங்க நீதமுங் கிளர்ந்தமுந்த கஞ்சமு
மிடங்கருங் கணங்குமீ னினங்களும் பெருத்தவே.

இ - ள். இருபுறத்திலும் சிங்கங்களையுடைய வாயில்முழுதும் மகரதோரணங்களும், சங்கிலிக்கோத்து நீளக்கட்டியிருக்கிற வரிசைகளெல்லாம் சித்திர நிரைகளும், அளவில்லாத பெருமையையுடைய மதில்களும், அகழ்கிடங்குமுழுதும் நீலமலர்களும், நீண்டுமலர்ந்து விளங்குகின்ற தாமரைமலர்களும், அதிலே முதலைகளும், நீர்நாய்களும், சலசரங்களும் மிகுத்துத் தோன்றின எ - று.

இடங்கணி - சங்கிலி. 150

நிகரிலாத பொற்குவட்டை யுட்டிறந்து நீணிறை
நகரியெங்கும் வைத்ததொத்த நகருமாட கூடமுஞ்

சிகரநேமி வரை திரித்த தன்புறஞ் செறிததநீர்
மகரவாரி யொத்தசெம்பொன் மதிலுநீள்கி டங்குமே.

இ - ள். ஒப்பிலலாத பொன்மலையி னடுவிலே துவாரஞ்செய்து நீண்ட வரிசையான பட்டணமுழுதையும் வைததிருககிறது போலான வீடுகளும் மாடகூடஙகளும, அந்தமதிலும், நீண்டகிடஙகும சிகரததையுடைய சககிர வாளகிரியைச் சூழ்வதாககொணடு, அச்சககிரவாளகிரிககுப் புறமாகத திரண்ட சலத்தையுடையதாய், மகரமீனகளைககொண்ட பெருமபுறக் கடலையு மொத் திருக்கின்றன எ - று 151

பங்கயச்ச காயவண்ண றனகுலபப கீரத
னங்கண்வா னகததுநின்ற் றாறறைதத னன்முன
மங்கையைப் பயநதமன்னன் மாநகாககு ளெண்ணிலாக
கங்கைதநது ளாநெனக் கலிததகே தனங்களே.

இ - ள். தாமரைககுத துணையான சூரியனுடைய குலததிலே தோனறின பகீரதவரசன முனனே அழகிய தான இடததையுடைய ஆகாயததி லிருந்து ஒரு ஆற்றை உலகததிலே வருமபடிச செயதான. இப்போது சந்திரவதியைப் பெறற சந்திரதயாாஜன தனது பெரிய நகருககுள்ளே கணககிலலாத கஙகா நதிகளை வரவழைத் திருககிறு னெனனுமபடி கொடிகள் ஒலிததன எ - று. 152

விண்டலதது மாதரிநத மேதினிககி றஙகவு
மண்டலதது மாதாவானின் வணமைசெனறு காணவுங
கொண்டலவிண்டெ முசசமைதத கூடமாட கோபுர
மண்டரண்ட மூடறுதத றகுமபபு றததவே.

இ - ள. ஆகாயததிலுள்ள பெணகள இந்தப் பூமியிலே வந்திறஙகவும், பூமியிலிருககிற பெணகள் ஆகாயததிலுள்ள அழகுகளைப பலலா மஙகேபோயக காணவும, மேகமணடலததுககு மேலிட்டு உயாவதாகச் செய்திருககிற கூடஙக ளும, மாடஙகளும, கோபுரஙகளும, எலலா அணடஙகளுககு மேலிட்டுச்சென்று அங்குள்ளலோகஙகளுககும அப்பாலுயாந திருககின்றன எ - று 153

நெடியமாட நேததிரததி னிரைவகுதத சாளரத
திடையின்மாத ரெழினமுகஙக ளெஙகணுமவி ளஙகுதற
கடிகொளவெறபின மீதெழுநத கதிரதனைதது ளைததி
னடுவுதித்த நளிாமதிககு நிகரெனபபொ லிநதவே.

இ - ள். அப்படி உயாந்திருககிற வீடுகளுககு கணகள்போல் வரிசை யாகச் செய்திருககிற சனனல்களினிடஙகளிலே இடைதோனறுந பெண்களி னுடைய முகஙகள் எஙகும விளஙகுவனவானது, ஒளியைககொணட உதயகிரி மேலே தோனறுகிற சூரியனைத துவாரஞ்செய்து அதனடுவிலே உதயமான குளிர்ந்த சந்திரனுககுச் சரியெனறு சொலல விளங்கின எ-று. 154

அலங்கறங்கு வேலினா னனீகவெள்ள மந்நகர்ப்
பொலங்கலந்த மாமதிற் புறம்பெலா நிறைந்துபி
னிலங்கவர்ந்தி டச்செறிந்த நீலவேலை யேழுமோர்
பிலங்கலந்த தென்னவே பெருத்தவாயில புக்கதே.

இ - ள். வெற்றிமாலை தங்கின வேலையேந்திய அரிச்சந்திரமகாராஜனுடைய சேனைக்கடல், பொன்னிறமாக அழகுகலந்துள்ள அந்த நகரின பெரியமதிலுக்கு வெளியெல்லாம நிரம்புதலாகிப் பின்பு உலகத்தைக் கவளீகரித்துக்கொள்ளப் தொடங்கின நீலக்கடல்கள் ஏழும் ஒரு குகைக்குள் போய்ப் புகுந்தாற்போல் அந்தக் கன்னியாபுரத்துக்குப் பெரிதாயிருக்கிற கோட்டை வாயிலுக்குள்ளே போய் நிறைந்தன எ - று. 155

தோரணத்து நீழன்மன்னு சோதிரத்ந வேதிகைப்
பூரணக்கு டங்களும்பொ லிந்திலங்கு தீபமுங்
காரணத்த மைச்சர்தந்தெ ருக்களுங்க டந்துபோய்
வாரணத்தி ழிந்துமன்னன் மண்டபத்தி லெய்தினான்.

இ - ள். அரிச்சந்திரன், தோரணங்களின் காந்தி வீசுவதாயிருக்கிற சோதியைக்கொண்ட மாணிக்கத் திண்ணைகளின்மேலே நிறைகுடங்களும், நிறைந்து விளங்குகின்ற விளக்குகளும், பிரதானிகளாயமைந்த மந்திரிகளின் வீதிகளும் கடந்து சென்று, யானையைவிட்டிறங்கி, சந்திரதயனுடைய சபா மண்டபத்துக்குள்ளே சென்றான எ - று. 156

தருவிருந்த கரனிருந்த சபைகொண்மண் டபத்திலே
மருகன்வந்து புகுதலுந்தன் மனமகிழ்ந்து மதிதய
னருகிருந்த வரசரோடு மாதனத்தி ழிந்துபோ
யிருகரங்க ளிறுகநண்ணி யெதிர்நடந்து தழுவினான்.

இ - ள். கற்பகத்தருவினுடைய செய்கை குடிகொண்டிருப்பதான கையையுடைய சந்திரதயராஜன், சபைகூடியிருக்கிற கொலுமண்டபத்துக்குள் மருகனான அரிச்சந்திரமகாராஜன் வந்துகூடுகிறபோது, அச் சந்திரதயன் மனது சந்தோஷித்துத் தன் பக்கத்திலேயிருந்த அரசர்களுடனே சிங்காதனத்தைவிட்டு இறங்கிப்போய் எதிர்கொண்டுசென்று அன்புடனே இரண்டு கைகளாலும இறுகத்தழுவி எதிர்சென்று ஆலிங்கனஞ்செய்தான எ - று 157

முனிவருக்கு மரசருக்கு முழுதுமாத னங்கொடுத்
தினிதுகூறி யவ்வவ்வணி யாவருமி ருந்தபி
னனிகவேலை மதிதயன்ற னாதனத்தி ருந்துளங்
கனியவாச முகமலர்ந்து கண்களிப்ப நோக்கினான்.

இ - ள். (தன்னுடன்) வந்த முனிவர்களுக்கும, அரசர்களுக்கும முழுதும் ஆசனங்கள் கொடுத்து உபசாரவார்த்தைகளைச் சொல்லி, அந்தந்த இடங்களிலே எல்லோரு மிருந்தபின்பு, சேனைக்கடலையுடைய சந்திரதயராஜன

தன்னுடைய சிங்காதனத்திலே யிருந்துகொண்டு மனது சந்தோஷிக்கப் பரிமளிக்கின்ற தாமரைமலர்போல முகமலர்ச்சியாய்க் கண்களிகூர மருமகளைப் பார்த்தான் எ - று. 158

வெற்றிமன்ன னும்மணம் விரும்பிவந்த மன்னரும்
சுற்றிநின்ற மாதருந் துலங்குதார மைச்சரும்
பற்றியுற் றெதிர்ந்தகண்கள் பசுமரத்தி லாணிபோற்
சற்றிமைக்க லாதுவள்ள றன்முகத்தை நோக்கினார்.

இ - ள். அப்படி அந்த ஜயத்தைக்கொண்ட சந்திரதயராஜனும், கலியாணத்தை இச்சித்துச் சந்தோஷித்து வந்திருக்கிற அரசர்களும் சுற்றிநின்ற பெண்களும் விளங்குகின்ற மாலையணிந்த மந்திரிகளும் அன்புகொண்டு பார்த்த கண்கள் பச்சைமரத்திலே ஆணியைத்தாற்போலச் சிறிதேனும் இமையாமல் அரிச்சந்திரமகாராஜனைப் பார்த்தார்கள் எ - று. 159

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

மாந்தரு மாத ராரு மன்னரு மமைச்சர் தாமு
மேந்தலைப் பார்த்த கண்க ளிமைத்திலர் பிறிது நோக்கார்
மாந்தளி ரனைய மேனி வாணுத லிரதி யென்பாள்
காந்தனு மிவனே வேறு காமனு முளனோ வென்பார்.

இ - ள். புருஷர்களும், பெண்களும், அரசர்களும், மந்திரிகளும் வேறொன்றையும் பாராதவர்களாய், அரிச்சந்திரமகாராஜனைப் பார்த்த கண்களிமையாதிருந்தார்கள் மாந்தளிர்போலு மேனியையுடைய ஒளிபொருந்திய இரதிதேவி யென்பவளுக்கு நாயகனானவ னிவனேயல்லாமல், வேறே மன்மதனு முண்டோவென்பார்கள் எ - று 160

சித்திரம் போல மன்ன னிருந்தனன் றிகைத்தும் வேறோ
ருத்தர முரையா னாகி யுள்ளுளே மகிழ்ச்சி பொங்க
வத்திர விழியாண் மேனா ளருந்தவ முடையா ளாயி
னித்திருப் புயமு மார்பு மெய்துமென் றெண்ணி னைந்தான்.

இ - ள். சந்திரதயராஜன் சித்திரத்தைப்போல் மறந்தும் வேறொரு வார்த்தையுஞ் சொல்லாதவனாகி உள்ளுக்குள்ளே சந்தோஷமதிகமாக அம்பு போலுங் கண்களையுடைய சந்திரவதியான நமது பெண் முன்னாளிலே அரிய தவமுடையவளானால் இந்த அழகிய (அரிச்சந்திரனுடைய) தோள்களையும் மார்பையுஞ் சேர்வாளென்று ஆலோசித்து வருந்தினன் 161

சிவனமக் கருளிச் செய்த திருவுளப் படியே காண்ப
திவனறனக் கெய்து மாயி னேழையு மியானுஞ் செய்த
தவமுமா தவமா மல்லா றவமுமென் றனையப் பேறு
முவமென வெண்ணி யெண்ணி யுளவிலா தழுங்க லுற்றான்.

இ - ள் சிவபெருமான் நமக்குச் சொன்ன அவர் திருவுளப்படியே (நமது புதல்வியின கழுத்திலுள்ள மாஙகல்யததைக) கண்டுகொள்வது இந்த அரிச் சந்திரனுக்கு கூடுமானல், நமமுடைய பெணணும், நாமுஞ்செய்த தவமும் பெரிய தவமேயாம. இவன அதைக காணககூடாதானல நான செய்த தவமும் நான புததிரியைப் பெறறதும வீணென்றெண்ணி மிகவுங் கிலேசிககலானன எ - று. 162

காளைதன் முகததை நோக்கிக் கடவதொன் றில்லை யெம்மால்
வேளைவென் றிலங்கு கண்ணன் விதிததவா றளிததும யாமே
வாளைவென் றிலங்கு கண்ணன் மாமணக் காவ ணததுள்
நாளைவந தெய்து மின்று நடமினுஞ சாரபி லென்றான்.

இ - ள். சந்திரதயவரசன, யௌவனபுருஷனன அரிச்சந்திரன முகத தைப் பார்த்து, இனி எம்மால செயபததகக தொனறுமிலலை. மனமதனை எரிதது விளஙகுகினற நெறறிககணகளையுடைய கடவுள அருளிசசெய்த படியே நாங்கள தொடுக்ககடவோம. இநதப பெரிதான கலியாணப பநதலுக குள்ளே வாளாயுததததைச் சயிதது விளஙகுகினற கணகளையுடையவள நாளை யத்தினம் வநது சேர்வாள். இனறு உஙகளிடததுககுப் போய வாருங களெனறு கூறினன எ - று. 163

கைததலஞ் சற்றுநீட்டி மதிதயன கடடு ரைக்கத
தத்தமக களிதத சார்பிற் சாரநதன ரரச ரெலலா
முத்தம குணததி னுனு மோஙகுமண் டபததி னீஙகி
மததகக் களிற்றிலேறி மாளிகை யிடததுச சாரநதரன.

இ - ள. இவவாறு சநதிரதயவரசன சிறிதுகையை நீட்டி, உறுதி வார்த் தைச்சொலலவே, அரசாகளெல்லோரும் தஙகள் தஙகளுக கமைததுவிட டிருக் கிற இடஙகளுககுப் போனர்கள். உததமகுணஙகளுடைய அரிசசந்திர மகா ராஜனும உயர்ந்துள்ள சபாமணட பததி னினறு நீஙகிக குமபங்களையுடைய யானைமே லேறிக்கொணடு தானிருககததக்க மாளிகைக்குள்ளே போனன் எ-று.

வாரணாத தண்ண லேக மதிதய னவையி லுற்ற
காரண மனைத்துங் கேட்டுக் காரிகை யொருததி யோடித்
தோரண வாயி னீங்கித துடியிடை யமுதச் செஞசொற
பூரணக் களபக் கொங்கைப பூவைதன் கோயில புககாள்.

இ - ள். அரிச்சந்திரமகாராஜன யானைமேலேறிக்கொண்டு போகவே, சந்திரதயராஜனுடைய சபையிலே நடநதகாரணஙகள முழுதும் ஒரு பெண் ணனவள் கேட்டு, தோரணங் கட்டியிருககிற வாயிலைக கடநது உடுக்கைபோலும இடையும் அமுதம்போலும செவவிதான சொல்லும நிறைய, சந்தனச்சேறு பூசின கொங்கைகளுங் கொணட சந்திரவதி யிருக்கிற மாளிகைககுள்ளே விரைந்து சென்ருள் எ - று. 165

புக்கவ டன்னை நோக்கிப் பொற்கொடி யதிச யித்திங்
கிக்கணத் தோடி வந்த வருத்தமென் னியம்பு கென்ன
வக்கணத் தரிவை செம்பொ னடியைத்தன் முடியிற் சூட்டிப்
பக்கமு மிடமும் பார்த்துப் பவளவாய் பதைத்து ரைப்பாள்.

இ-ள். அங்கேபோய் (அவசரப்பட்டு) நின்ற அப்பெண்ணை, பொன்
கொடிபோன்ற சந்திரமதியானவள் பார்த்து ஆச்சரியப்பட்டு, இவ்விடத்தே
விரைந்துவந்த (காரணமான) உன் துன்பத்தை என்ன சொல்லென்று கேட்க, அப்
படிச் சொன்னவளவிலே சந்திரமதியினுடைய செம்பொன் மயமான பாதங்
களை (அப்பெண்) தனது முடிமேலே சூடி வணங்கி, நாலுபக்கமும், செல்லு
மிடமும் பார்த்துத் தனது பவளம் போலும் வாய் பதைப்பதாய்ச் சொல்லு
கிறாள் எ-று. 166

செந்திரு வனையா யுன்னைத் திருமண முடிக்க வேண்டி
வந்தன ரனேகர் நந்த மன்னவன் சபையிற் புக்கா
ரந்தமன் னவர்க ளுள்ளு மரிச்சந்தி ரன்றன்
சுந்தர முகங்கண் டிங்கே வரமனந் துணிந்தி லேனே.

இ-ள். செவ்விய இலக்குமி போலபவளே! உன்னைத் திருக்கலியாணஞ்
செய்துகொள்ள விரும்பிவந்தவர்களாகிய அநேக அரசர்கள் நம்முடைய ராஜ
னது சபைக்குள்ளே இருந்தார்கள். அவ்வரசர்களிலே வெற்றிகொண்ட அரிச்
சந்திர மகாராஜனுடைய அழகிதான முகத்தை நான் பார்த்தபின்பு உன்னிடத்
திற்குவர மனந்துணிவுகொள்ளாமல் இவ்வளவு காலமும் அவனழகையே பார்த்
துக்கொண்டு நின்றேன் எ-று. 167

உடுக்குநீ ருலக மேழு மொன்றினமே லொன்றை வைத்தே
யடுக்குநீள் புயமுஞ் செய்யா ளாவிபு மனமுந் தாவிப்
படுக்குமவாள் விழியு மார்பும் பரிசிலர் மகிழ நாளுங்
கொடுக்குமவர் கரமு மாத ருளமெலாங் கொள்ளை கொள்ளும்.

இ-ள். கடல்நீரால் சூழப்பட்ட இந்த ஏழுலகங்களையும், ஒன்றின்மே
லொன்றாகவைத்து, அடுக்கத்தக்க நீண்ட தோள்களையும், இலக்குமிதேவியி னுயி
ரும் மனமும் தாவுதலாய்த் தங்கத்தக்க ஒளிகொண்ட கண்களும், மார்பும், யாச
கர் சந்தோஷிக்கத்தக்க தினந்தோறுங் கொடுப்பதான நீண்டகைகளும் பெண்
கள் மனமெல்லாங் கொள்ளையிடுவதாகும் எ-று 168

திருக்கிளர் முகமும் வேர்வுஞ் சிறந்தசெம் பவள வாயு
மருக்கிளர் மாலை மார்பு மகரகுண் டலமுங் காதுஞ்
சுருக்கிய மருங்குங் கண்டாற் றுடியிடை மடவா ராவி
யிருக்கினு மிருக்கு நில்லா திறக்கினு மிறக்கு மன்றே.

இ-ள். அழகு விளங்குவதான முகமும், அதிலே துளிக்கின்ற வேர்வை
யும், சிறப்பான செம்பவளம்போன்ற வாயும், பரிமளிக்கின்ற மாலையணிந்த

மார்பும், மகரகுண்டலங்களும், அவையணிந்த காதுகளும், சுருங்குதலையுடைய இடையும் பார்த்தால், உடுக்கைபோலும் இடையைக் கொண்ட பெண்களுடைய உயிர்கள் அப்பெண்களுடம்பில் நின்றாலும் இறக்கும் நில்லாமற்போனாலும் போகும் எ - று. 169

நிரந்தர வுரோம ரேகை நீலமும் வயிறு மார்பும்
புரந்தர சாப மொத்த புருவமு நுதலும் பட்ட
மரந்தழைத் திடந கைக்கு முறுவலு மாயன் றனபாற
காந்தவா ரமுதச சொலலுங் கந்தற்கு மிலலை மனனே.

இ-ள் எப்போதும் முள்ளதான உரோம ரேகையினது கருப்பும், வயிறும், மார்பும், இந்திரவில்லைப் போல்வதான புருவங்களும், நெற்றியும், பட்ட மரங்களும் தழைக்கச் சிரிக்குஞ் சிரிப்பும், மகா விஷ்ணுவினுடைய சயனத்தானமான திருப்பாற்கடலிலே மறைந்திருப்பதான அருமையாகிய அமிர்தம்போலும் வசனமும் முருகக்கடவுளுக்கு மில்லையாம் எ - று 170

இதையமு முருகக்கு மின்பந் திறைவனை யுற்று நோக்கிந்
ததையுமா மலாததாா வேந்தா தங்களைச் சூழ நோக்கிற
புதையிருள் கடிந்து வேலைப புவியினை விளக்குஞ் சோதி
யுதயனைக் கண்ட கண்கட் குடுக்களைக் கண்ட தாமே.

இ-ள். பெண்கள் மனத்தை உள்ளுருகச் செய்வதான இன்பத்தைச் செய்கிற அரிச்சந்திர மன்னனைப்போய்க் கண்டு, நெருங்கின மலர்களா லமைத்த மாலையணிந்த (மற்றுமுள்ள) அரசர்களையும் கண்டால், மூடுகின்ற இருளைப் போக்கிக் கடல் சூழ்ந்த வுலகத்தை விளங்கச் செய்கிற ஒளியையுடைய சூரியனைக் கண்ட கண்களுக்கு, நட்சத்திரங்களைக் கண்டதுபோலாகும் எ - று

அரிச்சந்திர மன்னனைச் சூரியனுக்கொப்பாகவும், ஏனைய அரசர்களை நட்சத்திரக் கூட்டங்களுக்கொப்பாகவும் உவமித்தபடி 171

மின்னனே ரிடையாள கூறக் கேட்டலும் வேந்தன பாவை
தன்னையு மறந்தா ளிட்ட சங்குமங் கலையு நீத்தா
ளன்னையை மறந்தாள பேசும வாசக மயாந்தாள வேறு
பின்னையு மிழந்தாள் காதல பெற்றதொன றன்றி யின்றே.

இ - ள. (இவ்வாறு) மின்னலைப்போன்ற இடையையுடைய அப் பெண்ணின் சொல்லைக் கேட்டவுடனே, சந்திரதயாஜனுடைய குமாரியான சந்திரவதி தன்னையு மறந்தாள்; கைகளிலிட்டிருந்த சங்கவளையலும், இடையிற் கலையும் நெகிழலானாள்; தாயையு மறந்தாள்; பேசுகிற பேச்சு மறந்தாள்; வேறுந் தனக்குள்ள எல்லா மிழந்தாள்; ஆசையென்பதொன்றைக் கொண்டிருந்தாளே யல்லது வேறொன்று மில்லையாயினாள் எ - று. 172

வாசமென் கலவைச் சேறு நானமும புழுகும வாரிப்
பூசவு மேனி யெங்கும் பொறுக்கெழ வியன்சாந் தாற்றி

வீசவு மெண்மேற் காம வெநதழன் மண்டப் பின்னு
மாசையங் கடலுட் டாழ்ந்தா ளருக்கனுங் கடலுட் டாழ்நதான்.

இ - ள். பரிமளமுள்ள மிருதுவான கலவைச்சந்தனச்சேறும், கஸ்தூரியும, புனுகும அள்ளியள்ளிப் பூசப்பூச உடம்பெல்லாம் பொருக்குப் பொருககா யுதிரவும், பெருமைமிகக மயிற்றோகையால் வளைந்த விசிறிகொண்டு வீசவீச மேலுமேலுங் காமமாகிய வெப்பஙகொணட நெருப்பு மூளவும, மறுபடியும் ஆசையாகிய நீரக்கடலிலே மூழ்கினள் எ - று. 173

அறநெடுஞ் செங்கோல வேநத ராண்டபார் பிறர்க்கி ரஙகா
மறநெடுங கொடுஙகோல் வேந்தர்க் களித்தவா னமபுக காற்போற
புறநெடுங கிரிசூழ் வேலைப புவியெலாங கொடிய நீல
நிறநெடுங கஙகுற காக்கி நெடுமபக னீஙகிற றன்றே.

இ - ள். தருமமாககமாக நீணட செஙகோல் செலுததிவந்த அரசர்கள் தாம ஆணட வுலகததை, பிறருக்கிரககஞ் செய்யாத பாவச்செயலையாலே நீண்ட கொடுங்கோல்கொணட அரசா வசமாகக கொடுததுவிட்டு அவவரசர்கள் காட்டிலே தவஞ்செயயப் போனறபோல, புறமாகச சககரவாளகிரி சூழ்ந்த கடல்புடைசூழவும உலகமெலலாம, கொடிதான நீலநிறததை யுடையதாய் நீண்ட இருளுககுக கொடுததுவிட்டு நெடிய பகறகாலம போய்விட்டது எ - று.

செங்கோல - நீதி. கொடுங்கோல் - அநீதி. 174

மஞசடை வானமீறாய் மண்முதலாய பூத
மஞசடை யப்பே ரூழி யகணடபூ ரணமாய் நின்ற
நஞ்சடை கண்டத தண்ண லுடைக னடிததஞான்று
செஞசடை விரிநத தெனனச செறிநதது செககர் வானம.

இ - ள். மேகங்கள் பரவுவதான ஆகாயங் கடையாக, மண முதலாகிய பூதஙகளைஞசும் அடஙகும பெரிதான ஊழி வந்தபோது, அகணடபூரணமாய் நிலைகொணடு நிற்கினற நஞசுதஙகின கணடததையுடைய கடவுள் கூததாடுகிற போது அவருடைய சிவந்த சடைகள் விரிந்தாறபோற செவவானம எங்கும் பரவிறறு எ - று. 175

நாட்படத் தருமச செஙகோ னடததிய வேநதர் நாட்போய்த
தோடபடுத தவர்தம மககட் சூடாமுடி சூடு முன்னா
கோடபடையிழைத்தி ருநத குறுநில வேநத ருய்ககும
வாடபடை புகுநத தென்ன வநதது மருள்கூர் மாலை.

இ - ள். வெகுகாலமாக தருமநீதியை நடததிவந்த அரசர்களது காலங் கழிந்து, அந் நீதியரசாகளுடைய புததிரர்கள் ஒளிபொருந்திய முடிசூடிக கொண்டு, பூமிபாரததைத் தோள்மேற சுமநது கொள்ளுதறகு முனனே, அவ விராச்சியததைக் கைககொள்ளுவதற்காகச் சேனைகளைக கூட்டிககொண்டிருந்த

சிற்றரசர்கள் அனுப்பின வாள்களையுடைய சேனைகள் உத்தாறபோல மயக்கஞ் செய்வதான மாலைக்காலம் வந்தது எ - று. 176

மறைநதது பரிதி மேன்மேல் வளர்நதது கங்குற் கால
மறைநதது வாடை வானத தருமபின வனநத மீனகள்
குறைநதது கொடிய மாலை கூரிருட் பிழமபு துன்றி
நிறைநதது நீல வேலை நிலமெலாங கவர்நத தென்ன.

இ - ள். சூரியன மறைந்துபோயிறறு. இராககாலம் மேலும மேலும் வளர்கிறதாயிற்று; அப்படிச் சொலலலான இராககாலம் சிறிது விளங்க, அநேகம நடசததிரஙகள ஆகாயததிலே பூததன. கொடிதான மாலைக் காலம் குறைதலாயிறறு. கருதத கடலசூழ்நத உலகமெல்லாந் தானே அரசாட்சி கொண்டாறபோல இருட்செறிவு மிகுந்து நெருஙகி நிறைதலாயிறறு எ - று.

அருகிய மருங்குற் பேதை யழன்றெழு காமத தீயா
லுருகிய வுள்ளந தாவி யுலகெலா மேவிக காயநது
கருகிய தென்னத தேவா கடைநதநா ளெழுநத வாலம
பெருகிய தின்று மென்னப பிறஙகிருள செறிநத தனறே.

இ - ள். சுருங்கின இடையை யுடைய சநதிரவதியானவள கொதித் தெழுகினற காமாககினியினாலே உருகின மனமானது பரவி உலகமெலலாம் வியாபிதது எரிததுக கருகியதுபோலவும், தேவாகள பாறகடலைக கடைகிற காலததிலே உண்டான நஞசு இபபோது பெருகலாயிறறெனறு சொலலவும விளஙகுகினற இருளானது நெருஙகியது எ - று. 178

முனனரே பொருது வெல்லாத தலைவரை முனிநது செஙகோன்
மனனவா கோபங கொணடு வாளவிதிரத தெழுநத தேபோ
லின்னமு மிவட ணுவி யிறநதில தெனறு சீறித
துனனிரு ளிரிய நூறி யெழுநதது சுடாவெண் டிஙகள.

இ - ள். முனனேதானே சணடைசெய்து வெலலாமல் விடடிருநத கொடுங்கோலரசை வெறுததுச செங்கோலரசாகள கோபஙகொணடு கததியை உருவிககொண டெழுநதாறபோல, இனனமும இநதச் சந்திரவதியினுடைய உயிாபோகா திருககிறதெனறு கோபிதது நெருஙகின இருளோட, ஒளியை யுடைய வெணமையான சநதிரன உதயமாயினன எ - று. 179

இருளையொத திலங்கு மேனி யிறைகடல கடைநத காலம
பொருளையுற் றிடாத வெலலாம புரநதரா தியாககு நலகி
உருளவே திரடடி வாரி யுளவைதத வமுத சாரத
திரளைமேன மிதநத தெனனத திஙகளவந தெழுநத தன்றே.

இ - ள். இராததிரியை யொபபாய விளஙகுகினற திருமேனியையுடைய திருமால, பாறகடலைக கடைந்தகாலததிலே, இந்திராதி தேவர்களுககுக

கொடுத்த, திரவியத்தைப்போல் அவர்களுக்குக் கொடாத எல்லாவற்றையும் உருட்சியாகத் திரட்டி, அப்பாற்கடலுக்குள்ளே வைத்திருந்த அமுதசாரமான திரட்சி மேலே மிதந்தாற்போல, சந்திரன் வந்து உதயமானான் எ - று. 180

திங்கள்வெண் குடைக்கீழ் தென்றற றேர்மிசை யேறி வாரி
மங்கல முரசமார்ப்ப மகரகே தனநின் ருேங்கக்
கங்குல்வெங் களிறு சூழக கடுங்கிளிப புரவி தூண்டி
அங்கண்மா ஞால மெலலா மனங்கவேள பவனி வநதான.

இ - ள். மன்மதனானவன, சந்திரனை வெள்ளைக்குடையினகீழே, தென்றற் றேரினமேலே ஏறிககொண்டு, கடலான மங்கல முரசு முழங்க, மகரக கொடியானது நிலைகொண்டுவளர, இருளாகிய வெவவிய யானையுஞ்சேர, கடுமையான வேகததையுடைய கிளியாகிய குதிரையைச் செலுததிககொண்டு அழகிய இடததையுடைய பெரிய வுலகமெல்லாஞ் சூழ்ந்து வந்தான எ - று.

கருப்புவார சிலையை யூன்றிக காலவளை த திசைகள பாடுஞ
சுருப்புநா ணேற்றிக் கஞ்சந தளவுட னசோகஞ் சூத
மருப்புவார கணைக டுணி யகததிடை யெடுததொன ருன்று
விருப்பினுல் வருநது மானை வெவவினைப பூச விட்டான்.

இ - ள். (மதனன) கருமபாகிய நீணட விலலைநிறுததி, அதனிரண்டு காலகளையும் கூடடவளைதது இராகஙகளைப பாடுவதான வணடாகிய நாணை அந்த வில்லிலேபூட்டி, தாமரை - முலலையுடனே அசோகம் - மா - இவற்றின மலாகளாக நீணட அம்புகளை ஒவவொனருக அமபுககூட்டினின்று (அரிச்சந்திரன மேலாசையாய்) வருநதுகிற சநதிரவதியுடனே கொடிய செய்கையான சணடைசெய்தான எ - று. 182

மாரவேள் பகழி வாரி வலலியி னுடலை முறறு
மீரவே திஙகட செநதீ யெரிககவே யெரிய தாகி
வீரவே ளனையான் றநத வேடகைமீ தூரக கண்ணீர
சோரவே யமளி மீது சுழனறுவீழ்ந தினைய சொலவாள.

இ - ள். இப்படி மனமதனானவன அமபுகளைக கையிலேகொணடு, சந்திரவதியினுடைய உடல்முழுதுந தொளைககவும், சநதிரன தனது கிரணமாகிய சிவந்த நெருப்பா லெரிககவும, வீரததையுடைய மனமதனையொதத அரிச்சந்திரனானவன கொடுத்த ஆசை, நெருப்பாய் மேனமேலாகவும, கணகளில நீரொழுகவும் படுககை மெததைமேலிருந்து சுழனறு கீழேவிழுநது இவவாறு சொல்லலானாள எ - று. 183

**கலி விருத்தம்**

கண்ணிலாப் பாதகக காம னெய்தவெம
புண்ணிலா ருயிரபொடித் தகலப் போனவா

றெண்ணிலா தெனைச்சினந் தெழுந்த வெவ்வினை
வெண்ணிலா வேயிது வீர மல்லவே.

இ - ள். இரக்கமில்லாத பாவியாகிய மன்மதனெய்த அம்பினாலுண்டான வெவ்விய புண்ணினவழியே எனதுயிர் பொடியாய் என்னுடலை நீங்கிப் போயினபடியே எண்ணாமல், என்மேற் கோபங்கொண்டுவந்த கொடிய செங்கையையுடைய வெள்ளைச்சந்திரனே! இது உனக்கு வீரத்தன்மையன்று எ-று.

மேற்படி வேறு

உன்னைக் கொன்றன் றுருவிலி யாக்கினோன்
றன்னைக் கொல்லுவ தாண்மைத் தனமலாற்
பின்னைக் கொலவதென் பெண்பிறப பாகிய
வென்னைக கொல்லுவ தேழைமைப பாலதே.

இ - ள். மனமதனே! உன்னையெரித்து உருவமில்லாதவனாகச் செய்த சிவபிரானை நீ கொல்லச்செல்வது உனக்கு ஆண்மைத்தனமே யல்லாமல், வேறே நீ யாரைக கொலலத்தக்கது? பெணபிறப்பைக் கொண்ட என்னை நீ கொல்லததொடங்குகிறது அறிவினமையே யாகும் எ - று. 185

உருவக் காமன் றுணிதத வுடறனைச
செருவிற் கொலல வெழுநதவெண் டிங்களே
யொருவற் கீவதங் கோருயி ரன்றியெற
கிருவர்க கீய விரண்டுயி ரில்லையே.

இ - ள். எங்கும் அவாரமாக மனமதன் துளைதத வுடம்பைச் சண்டை செய்து கொலல, உதயமான வெள்ளைச்சநதிரனே! மன்மதனுக்கு ஒருவனுக்குக கொடுகக என்னிடதது ஒருயிரே யலலாமல, உனககும அவனுககும கொடுகக எனககிரண டுயிரிலலையே (என்செயவேன) எ - று. 186

முனனி னைநதலா தொடடவன மூண்டபோா
தனனி னைநது தளாநதவென மேனியைத
தின்னி நின்சலத தின்கலைத திஙகளே
யென்னி னைநதெனை யிபபடி காய்கின்றாய்.

இ - ள். என முனனே என்னைககுறிததுப பூஙகணை தொடுக்கிற மனமதன மூண்டு நிறகின்ற சணடையை எண்ணிச் சோாந்திருககிற என்னுடமபைத தினகிறாய்; உன கோபததினாலே சோடசகலைகளைக கொணட சந்திரனே! யாது பயனைக கருதி என்னை யிப்படி யெரிககிறாய் எ - று.

முனனின் - ஆலோசிக்குமிடததில் ஐந்தலர் - ஐந்து பூதக்கணைகளை யென்பதுங் கொள்க. 187

உன்னைக் காய்நத பணிக்குற வென்றுகொ
லென்னைக் காய்நதனை யேநதிளா திங்களே

முன்னைக் காய்ந்திலை யென்னுயிர் முற்றிய
பின்னைக் காய்ந்து பிழைப்பிக்க வல்லையோ

இ - ள். இளமையைக்கொண்ட சந்திரனே! உன்னைக் கடித்து விழுங்குகின்ற பாம்புக்கு உறவான அல்குலையுடையவளென்றோ என்னை இப்படி எரிக்கிறாய்? நேற்று முந்துநாள்களில் இப்படி எரிக்கவில்லை. என்னுயிரை நானிழந்த பின்பு இப்படியே குளிர்ந்த காந்திகொண்டு வீசி என்னைப் பிழைக்கச் செய்யவும் உனக்கு வல்லமையுண்டல்லவோ! எ - று. 188

அருத்தி யோடுதம் மென்முலை யன்பர்தோள்
பொருத்தி யோகைகொண் டாடுவர் பூவைமார்
வருத்தி யோய்வுற வாட்டினை யென்னையா
னொருத்தி யோவுனக் குட்பகை கங்குலே.

இ - ள். உலகத்திலுள்ள பெண்கள், ஆசையுடனே தம்முடைய மெல்லிதான கொங்கைகளைத் தங்களுக்குப் பிரியரான நாயகர் தோளோடு பொருந்தச் செய்பவராய் சந்தோஷத்தைக்கொண்டு சுகித்திருக்கிறார்கள். அப்படியிருக்க, என்னை வருத்தப்படுத்தி நானோய்ந்து போமபடியாக வாடச்செய்தாய். இந்த உலகத்திலே நானொருத்திதானோ உனக்கு உட்பகையானவள் எ - று. 189

வெங்கை யாதபன் வீழ்தலும் யானுனை
செங்கை கூப்பிய தீவினை நோக்கியோ
வங்கை யாலெடுத தாரழற் கொள்ளியென்
கொங்கை மீது கொளுததினை திஙகளே.

இ - ள். சந்திரனே! வெப்பமான கிரணத்தையுடைய சூரியன் மேலைக் கடலிலே போய் விழுந்தவுடனே, நான உன்னைநோக்கிச் சிவந்த கைகளைக் குவித்துக் கும்பிட்டது தீயசெய்கையெனறுகொண்டோ நிறைந்த நெருப்புக் கொள்ளியை உனதழகிய கையிலேகொண்டு, எனது கொங்கைகளின மேலே கொளுத்தினாய் எ - று. 190

குன்று லாவு கொடுநதிறற் றென்றலங்
கன்று லாவிய கண்ணகல விண்ணொலாரு
சென்று லாவு திரைக்கட லன்னமா
னின்று லாவவென் னெஞ்சிடம் போதுமோ.

இ - ள். இடமகனற ஆகாயமெல்லாம் போய் வுலாவுவதான அலைகளையுடைய கடலுக்கொப்பான ஆசையானது நிலைகொண்டுலாவுகின்ற எனது மன இடம், பொதியமலையிலே உலாவுவதான கொடுமையாகிய வல்லமையுடைய இளந்தென்றலானது சஞ்சரிப்பதற்குப் போதுமோ? எ - று. 191

போத நோதக வாக்கியும் போகிலாய்
பாத நோதக வேபணிக் கங்குலே

சூத ளேதமுற் றேன்றியு மிற்றைநாட்
காத ளேதலுங் கற்றிலே போலுமால.

இ - ள். பனியோடுகூடிய இரவே! என்னை மிகவும் நோவுமபடிச் செய்தும் போகாதிருக்கிறாய். உன காலகளுக்கு நோவுண்டோ? அருணன கடலின மேல் உனக்கு முனனே தோனறுகிறதாகியும், நான இனறையதினம் ஆசையினாலே வருந்துகிறதும் நீ தெரிந்துகொண்டிலே போலும எ - று.

சூதன் - அருணன. 192

நிரவுந தென்றலு நீளவிசும பெங்கணும
பரவுந திங்களும பாய்திரை யோதையின
வரவும் போரவின் மதனனும போகிலா
விரவொன் றேகினு கியாருமோப பிலலையே.

இ - ள். எங்கும நிரமபுவதான தென்றற காற்றும, நீண்ட ஆகாயமுழுவதும் பரவுவதான சந்திரனும, கரைமேலே மோதுகிற அலைமுழக்கத்தின வருதலும், போருககுரிய வில்லைககொண்ட மனமதனும போகிறதில்லை. இந்த இராத்திரி யொனறுமாத்திரம் போனாலே எனககு யாரும நிகரிலலை எ - று. 193

பூழி சென்று புரண்டபொற பாவையைத்
தோழி சென்று தெருட்டலுந தோழியை
யாழி சென்றென் றடைநதபி னெததனை
யூழி சென்றவென் றுண்ணுதற கேட்டனள.

இ - ள். (எனறிப்படிப்) புழுதியிலே போய்க்கிடந்து புரளுகிற பொன பாவைபோனற சந்திரவதியை, அவளுடைய தோழியானவள கிட்டேபோய்த் தெளியச்செய்யுமளவில, ஒளிபொருந்திய நெறறியையுடைய சநதிரவதி அத தோழியைப் பார்த்து, சூரியன ஒறறைபுருளைக தேருடனே கடலிலே போய் விழுந்தபினபு எத்தனை ஊழிகால மாயினவென்று வினவினாள் எ - று.

என்று - சூரியன. 194

தோழி கைததலங் கூபபியித் துனனிருள
நாழி கைக்கிட மேநலங கேளென
வாழி கைப்பிடி வநதுமன னுவெனுக்
கோழி கைததலத தைககொட்டிக கூவிற்றே.

இ - ள். அதறகுத் தோழியானவள் தன கைகளைக குவித்துக கும்பிட்டு, இந்த நெருங்கிய இருளானதுபோக இனனமொருநாழிகை யளவுதான (இருக்கிறது). இனி நல்ல வார்ததை கேட்பாயென்று சொலல, அவவளவிலே சேவலானது தனது கைகளான இறகை அடித்துக்கொண்டு அரிச்சநதிரமகாராஜனே! சந்திரவதி வாழ்வாளாக. விரைவிலே வந்து அவள கையைப பிடிககக கடவாயென்று கூப்பிட்டது எ - று.

கைப்பிடித்தல் - பாணிக்கிரகணம. 195

வேய டங்கின வேலை யடங்கின
தீய டங்கின திங்களுங் கங்குலும
போய டங்கின மன்மதன் போரெலாம்
வாய டங்கின வண்குமு தங்களே.

இ - ள். மூங்கிற் குழலோசை யடங்கினதுபோற் கடலொலியு மடங்கின நெருப்புப்போல் சந்திரனும் இராததிரியும் அடங்கலாயின. மனமதனுடைய சண்டைமுழுதும அடஙகுதலாயின. அழகிய குமுதமலர்கள் வாய்மூடுதலாயின எ - று. 196

காரி சங்கந துயிலெழக் கன்னிமால்
பாரி சங்கம பொறுததது பாாக்கவே
வேரி சஙக மெழுநது முழங்கிட
வாரி சங்கண் மலாநதன வெஙகுமே.

இ - ள். கரிக்குருவியும், விடியற்காலத்துச் சங்கும் நித்திரை தெளிந்து முழங்கலாயின. பெண்ணுன பூமிதேவி அரசருவந்திருக்கிற அரசர் கூட்டங் களைத் தாங்கிக்கொண்டிருப்பதைப் பார்க்கிறதறகாகக குளங்களிலுள்ள சஙகுக ளெழுந்து எவவிடதது முழங்குவதாகத தாமரைமலாகளாகிய முகங்கள் எவ விடத்தும் மலர்ந்தன எ - று.

காரிசங்கம் - காகதைக கூட்டமுமாம் மாலபாரி - பூமிதேவி. 197

கொல்வ ஞயினுங் கோதையைச சநதிரன்
வெலவ ஞயினு மேலவ னைசசெயல
சொல்வ ஞெனன்று துண்ணெனச செஙகதிரச
செல்வ ஞழியந தோமிசைத தோன்றினன.

இ - ள். சந்திரவதியைச் சந்திரன கொலலுகிறவனேயானுலும, அவலது கொன்று வெல்லுகிறவனேயானுலும், இனிமேல் அந்தச் சந்திரனை நோக்கி, அப்படிச் செய்யாதை யெனறுசொல்ல வலலவன நானேயெனறு சூரியபக வான் விரைவிலே ஒற்றையுருளைத தேரினமே லுதயமாயினன எ - று. 198

சோலை யெஙகுந தொழுதிக ளார்ததன
வாலை யங்தொறுஞ் சஙகஙக ளாாததன
மாலை வெண்குடை மன்னவர் முன்றில்வாய்க
காலை மாமுர சங்கள் கறஙகின.

இ - ள். சோலைகளெல்லாம் பட்சிகளினேசை முழங்கலாயின; கோயில்க ளெல்லாஞ் சஙகுகள் முழஙகலாயின; மாலைகளையும வெள்ளைக்குடைகளையு முடைய அரசாகள் திருமுறறஙகளிலே விடியற்காலத்தில் முழங்குகிற பெரிய முரசுகள் முழங்கின எ - று.

ஆலயமெனபது எதுவைநோக்கி ஆலையமெனருயது போலி. 199

முன்ன மன்னன் முகுர்த்தமோ ரேழெனச்
சொன்ன நற்றினம் வந்து தொடங்கலும்
மன்ன னுமமறை யோர்களு * மாதருங
கன்னலந் திருக் காவணத் தெய்தினர்.

இ-ள். முன்னே சந்திரதயராஜன் முகூர்த்தம் ஒரேழுநாளளவென்று சொன்ன நல்ல நாளவந்து கூடுமளவில், அந்தச் சந்திரதயராஜனும் வேதப் பிராமணர்களும், பெரியோர்களும், கருப்புகள் முதலானவைகளாலே அலங் கிருதமான கலியாணப்பந்தலுக்குள்ளே வந்து கூடினார்கள் எ-று. 200

வேந்த ரீண்டினர் வேதிய ரீண்டினர்
மாந்த ரீண்டினர் மங்கைய ரீண்டினர்
ராய்ந்த நீதி யமைச்சரு மவ்வவர்
சேர்ந்த சேனையுஞ் சேரவந் தீண்டின.

இ-ள். அரசர்களெல்லோரும் வந்து கூடினார்கள், பிராமணர்களும் வந்து கூடினார்கள், மற்ற எல்லோரும் வந்து கூடினார்கள், பெண்களெல்லோரும் வந்து கூடினார்கள்; ஆராய்ந்துணர்ந்த நீதியுள்ளவர்களாகிய மந்திரிகளும் வந்து கூடினார்கள்; அவர்களைச் சேர்ந்த சேனைகளும் வந்து கூடின.

வாகை யுற்ற மதனொரு பாலவர
வோகை யுற்றுவண் டோலமிட் டேவரப்
பாகை யுற்ற பனிமொழிப் பைந்தொடித்
தோகை கைகொடுத் தோழியர் தோன்றினர்.

இ-ள். ஜயத்தை யுட்கொண்ட மன்மதன் ஒருபுறத்திலே வரவும், வண்டுகள் களிப்பையுடைகொண்டு பாடிக்கொண்டு கூடவே வரவும், தேனைப் பாகு போன்ற குளிர்ந்த சொல்லையுடைய பசிய வளையல்களையணிந்த மயிற்சாயலைக் கொண்ட சந்திரவதியைக் கூட்டிக்கொண்டு தோழியர்கள் வந்தார்கள் எ-று.

அங்கை யிற்பொலி சங்கின மார்த்தெழச்
செங்க யற்கண் டிருக்குழை யைப்பொரக்
கொங்கை யென்றிரு குன்று சுமந்தெழின
மங்கை மாளிகை வாயிலின் மேயினள்.

இ-ள். அழகிய கைகளிலே விளங்குகின்ற சங்கு வளையல்கள் கலகலென்று சப்திக்கவும், சிவந்த கயல்போலுங் கண்கள் அழகிய காதிலணிந்த குழைகளோடு பொருதவும், கொங்கைகளென்று பெயருடையனவாக இரண்டு மலைகளைத் தாங்கிக்கொண்டு, அழகிய சந்திரவதியானவள் தனது திருமாளிகை வாயிலுக்குமுன்னே வந்தாள் எ-று 203

* நாதரும என்றும் பாடம்.

வல்லெ னப்புடைக் குந்தன வன்பொறைக்
கில்லெ னக்கரு துமமருங கிற்றிடு
மெல்லெ னப்பதம் வைததுமிதிததுமுன்
செல்லெ னபபொற் சிலமபு புலம்புமால்.

இ - ள். சூதாடு கருவிபோல விம்முதலைக் கொண்டுள்ள கொங்கைக ளாகிய வலிய கனத்தைத தாங்குதற்கு உருவமில்லையென்று நினைககத் தகுந்த இடையான தொடிகதுபோகும ஆகையால், கால்களை மெதுவாகத் தூககிவைத துப் பூமேல மிதிததுககொணடு முனனே போககடவாயென்று பொனனஞ் சிலம்புகள் ஒலிககினறன எ - று. 204

நீடி வார்நது நெறிதத குழற்சிகை
யோடி யுட்சுழி யுமபுன லொததா
லாடி நோககி யணிநத வணிசசுடா
கோடி சூரியர் கூடிய தொததமே.

இ - ள். நீண்டு சிககவிழ்ந்து நடுவே வகிர்ந்தெடுததுள்ள கூநதலாகிய கொணடையானது, நீணடு உளளே சுழிததலையுடைய ஒரு ஆறறுநீரை யொப்பாயிருந்தது. அதிலே கணணாடி பாரககச்செய்து அலங்கரிதத ஆபரணங் களின சோதியானது, கோடி சூரியாக ளொரிடததிலே கூடினதுபோ லிருந்தது எ - று 205

நசசுக கட்டிய நலலமுதும மிக
வைசசுக கடடிய மாமுலை யாலுல
கசசுக கடடழி யுமமழி யுமமெனக
கசசுக கட்டி மறைததனா கண்ணையே.

இ - ள். நஞ்சுககட்டியையும நலல அமுததததையும மிகுவதாக வைத துக்கட்டி யமைநதிருககிய பெரிய தனஙகளாலே உலகமானது தனது நிலையான கட்டுக குலைந்துபோகுமெனறு இரவிககைகொணடு கட்டி அவைகளின கண களை மறைபசசெய்ததாகள எ - று.

கஞசுககட்டி போல்வது முலைககாமபு. அமுதம அவறறி லுளதாகு கினற பால். கணணெனபது முலைககாமபே 206

ஆதி நூலும மைத்துல குங்கெடு
நீதி யனறிவ ணீசெலவ தென்னவே
காதி யோடிய கண்களைக் காதுபோய்ச
சோதி வார்குழை தொடடு மறிககவே.

இ - ள். ஆகியாகிய வேத சாஸதிரஙகளும, எலலாவுலகங்களும் கெடுவன வாகும். ஆகையால், இஙகே நீ செல்லுதல் நியாயமலலவெனத தமமை வென்று நீளுவனவான கணகளைக, காதுகளான ஒளியைககொணடு தொங்குவன வாகிய குழைகளைககொணடு தடுககவும் எ - று.

ஒருவரைத் தடுத்தல் கையாலேதொட்டல் செய்வதாகலாலே குழை தொட்டென்றார்.

இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம். 207

காவென் றெண்ணுங் கரத்தரிச் சந்திர
வாவென் றெண்ணரு மன்னரை யப்புறம்
போவென் றெண்ணிப் புகல்கின்ற போலவே
தாவு சோதிக் கலாபந் தழங்கவே

இ-ள். கற்பகத்தருவேயென்று மதிக்கலான கையையுடைய அரிச்சந்திரமகாராஜனே! வரக்கடவீரென்றும், எண்ணுதற்கரிதான அரசர்களையெல்லாம் அப்பாலே தூரப்போங்களென்றும் ஆலோசித்துச் சொல்லுகின்றமை போலத், தாவுகின்ற ஒளியைக்கொண்ட கலாபமென்கிற அரைநூன்மாலை ஒலிக்கவும் எ-று. 208

கைத்த லத்துணை வீசிக் கதிர்மணிப்
பத்தி பின்னுமுன் னுஞ்சென்று பாயவே
யெய்த்த நுண்ணிடை யிற்றிடு மென்றுமேல்
மொய்த்த வண்டு கலந்து முழங்கவே.

இ-ள். கைகளிரண்டையும் வீசிக்கொண்டு வருகிறபோது, ஒளியை யுடைய இரத்தினவரிசைகள் பின்னாலு முன்னாலுஞ் சென்று காந்திவீசவும், இளைத்த நுண்ணியதாகிய இடையானது ஒடிந்துபோமென்று மேலே மொய்த்திருக்கிற வண்டுகள் கலந்தலாய் முழங்கவும் எ-று. 209

சென்னி நின்றிரு சீறடி மட்டும்வான
மின்னி னாலமைத் தன்னசெம் மேனியைப்
பொன்னி னும்மணி யாற்புதைத் தேயெழிற்
கன்னி தன்மணக் காவணத் தெய்தினாள்.

இ-ள். தலையிலிருந்து இரண்டு சிறிதான கால்களளவும் மேகத்திலுள்ள மின்னலாலே அமைத்தாற்போலிருக்கிற சிவந்த திருமேனியைப் பொன்னாலும், இரத்தினங்களாலும் மறைப்புச் செய்துகொண்டு அழகுள்ள இளவயதுடைய சந்திரமதி தனது கலியாணப்பந்தலுக்குள்ளே வந்தாள் எ-று. 210

பெடைந டத்திருப் பெண்ணர செய்திய
திடையி னின்றவ ரேத்தி யியம்பிடக்
கடையு கத்திற் கடல்கிளர்ந் தாலென
அடைய மன்னவ ராலித் தெழுந்தனர்.

இ-ள். பெட்டையன்னம்போலு நடையையுடைய இலட்சுமிபோன்ற பெண்களுக்கரசியான சந்திரமதி வந்ததை, நடுவே நிற்கின்ற சிலர் போய்ப் புகழ்ந்துசொல்ல, முடிவான யுகாந்தத்திலே கடல்பொங்கி வந்தாற்போல் இங்கே வந்து கூடுவதாக அரசர்களெல்லோரும் சந்தோஷித்தெழுந்தார்கள் எ-று. 211

தேரி னேறித திசையெங்க ணும்வரப்
போரின் வீரர்கள் பொமமென் றதிர்நதெழு
மூரி வீரமு ரசமுங் காளமும
பேரி யுஞ்சங்கும பீலியு மார்ததவே.

இ - ள். யுத்தததுக்குத தக்க வீரர்களெல்லாம் இரதஙகளிலே யேறிக கொண்டு நானகு திசைகளிலும் பரவிவர, அப்போது பொம்மென்று அதிர்ந்து வருவனவான பெரிய வீரமுரசங்களும், எகாளஙகளும், பேரிகைகளும, சஙகு களும் மற்றுமுள்ள வாததியஙகளும ஒலிக்கலாயின எ - று.

பொம்மெனபது - ஒலிககுறிப்பு. 212

தாள மத்தளந தண்டிகை யாழ்தெரு
நீள மட்டு நிறைந்தன சககர
வாள மடடு மலிநதன தூளண்ட
கோள மட்டுங் கொடிததிர ளூற்றவே.

இ - ள். கைத்தாளஙகள், மததளஙகள, வீணைதண்டஙகள், இராகம் பாடு கினற தம்பூருகள் இவைகளெலலாம் தெரு எவவளவு நீளமுளளதோ அவவள வும் நிறைதலாயின. (அதனாலெழுந்த) செமமணலேளிகள் சககரவாளகிரிவரையி லும் போயின. அண்டகோளவரையிலும கொடிக்கூட்டஙகள செனறன எ - று ()

பாரி னினறு பரநதெழுந தண்டர்தம
ஊரி னோடி யுயாநத பெருநதுகள
காரி னுண்டுளிக கண்மறைந தெணடிசை
மூரி யானை மதததுளே மூடிறறே.

இ - ள். பூமியிலிருந்து பரவிச்செ று தேவர்களுடைய ஊரளவிலும போய் அதறகுமேலு முயாந்தபோன மணலேளிகளாலே, மேகததின சிறு துளி மழைக்கண்க ளடைபட்டு எட்டுததிககிலு நிறகிற யானைகளினுடைய மதத துவாரஙகளு மடைபட்டன எ - று

எண்டிசை யானைகளாவன:—கிழககாதிமுறையே ஐராவதம, புண்டரீகம், வாமனம், குமுதம், அஞசனம், புட்பதநதம, சாருவபூமம, சுபரதீபம இவையே யட்டதிக கயங்களாம். இவறறிற்குமுறையே பிடியானைகளாவன:—அப்பிரமை, கபிலை, பிங்களை, அனுபமை, தாமிரபருணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி எனப. 214

யானை யுமபரி மாவு மிரதமுந
தேனை வென்ற திருமொழி மாதரு
மேனை நின்ற விருபிறப பாளருஞ
சேனை யுநதிசை தோறுஞ செறிநதவே.

இ - ள். யானைகளும், குதிரைகளும், இரதங்களும, தேனின இரசத்தை வெல்லுவதான அழகிய வசனங்களை யுடைய பெணகளும், மறறுமுள்ள பிராமணர்களும் சேனைசளும்கூடிந திசருகளெலலாம் நெருஙகின எ - று. 215

இமக்கு டங்க ளிரண்டு தனமெனச
சுமக்கு மென்கொடி சூட்டுஞ் சுயமவர
மெமக்கெ மக்கென வெண்ணி வருமவர்
தமக்குப் பின்னரிச சநதிரன் ருேன்றினுன்.

இ - ள். குளிர்ந்த நீர்க்குடஙகளை இரணடு கொங்கைகளென்று சுமப்பதான மிருதுவாகிய கொடிபோனற சந்திரவதி சூட்டுவதான சுயமவரமானது எனக்குண்டு எனக்குணடென்று நினைதது வருகிற அரசர்களுககெல்லாம் பினனே அரிச்சந்திரமகாராஜன வந்தான எ - று 216

அன்ன காலையி னஙகைகக ணீட்டியே
கன்னன் மாமொழிக காரிகை தோழிமார்
மனனர் நாமமு நாடும வழிகளு
மினன தினன தெனவெடுத தோதுவார.

இ - ள் அந்தச் சமயததிலே, அழகிய கைகளை நீட்டிக கரும்பின இரசம் போலும பெருமை பொருந்திய சந்திரவதியின தோழிமாரகள், வந்திருக்கிற அரசர்கள் பெயரும, நாடுகளும, குலமுறைகளும் இனன இனனபடியென றெடுததுச் சொலலத தொடஙகினுர்கள் எ - று. 217

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

அதிபார தனபார வதிரூப மலாமானை யனையா யிவ
னதிபாய வியாபோதி னறைபாய நிறையாத சிறைவா வியில்
மதியாமல் வலைகீறி வெடிபோன பருவாளை வளைபூக மேற்
குதிபாய மடல்கீறி விழுதேறல் கரைசாடு குடநா டனே.

இ - ள அதிக கனஙகொண்ட தனபாரங்களையும் மிகக அழகையுமுடைய லட்சுமிதேவியை ஒப்பான சந்திரவதியே! இங்கே யிருககினற அரசன, ஆறு பெருகிப்பாய அதனுலே மேலேயுயாகிற மலரிலுள்ள தேனெழுகுவதனுலே முழுதும் நிரம்புதலாடுகினற கட்டுககுளங்களிலே சட்டைபண்ணுமல் வலையைக் கிழிததுத் துள்ளிப்போன பருதத வாளை மீனுனது, வளைவான குலைகளை யுடைய கமுகமாததினமேலே குதிகக, அதன மடலானது கிழிந்து விழுகிற தேன பெருககானது குளககரையை யுடைப்பதான குடநாடனுகிய சோரன் எ - று. 218

இருணுறு நஞ்சொாதத விழியாய்து வண்டெய்தத விடையா யிவன்
சுருணுக பநததி னியல்பாம ருஞ்சித்ர தொடியே வியே
முாணுா மன்றிட்ட மகவானெ டுங்கொற்ற முடிசா டினுேன்
சரணுா விநததது மகராலயந துற்ற தமிழ்மா றனே,

இ - ள். இருள் தோன்றுவதான விடத்துக்கொப்பாகிய கண்களை யுடைய வனே! துவண்டு இளைத்திருக்கிற இடையையுடையவனே! இந்த அரசன சுருண்டு பாம்பு மண்டலித்திருக்கின்றதுபோல்வதாய் மருவுகின்ற அதிசயத்தை யுடையதான (சிவன கொடுத்திருந்த) வளையைவிட்டுத் தனது வலிமைதோன்ற முன்னொருகால் எதிர்த்த இந்திரனுடைய நெடிதாகிய வெற்றிகொண்ட திரு முடியை உடைத்தவன; பின்னும் தனது பாதாரவிந்தத்திலே வருணனவந்து வணங்கலான தமிழ்ப்பாண்டியன எ - று. 219

மலிவாச மலர்பூசி யளிபாடு நறையோதி மயிலே யிவ
னொலியேறு திரைமோது முவராழி யுலகேழு முடனு கவே
வலியோர்க ளெளியோரை நலியாம லசையாத மணிவா யிலான்
புலியேறு வடமேரு கிரிமீதி லிடுமீளி புனனு டனே.

இ - ள். மிகுந்த பரிமளத்தையுடைய பூமபராகங்களைப் பூசிக்கொண்டு, வண்டுகள் பாடுவதான மணங்கொண்ட கூந்தலுடன மயிறசாயலையுடைய வனே! இந்த அரசன ஒலிமிகுந்த அலைகள மோதுவதான உப்புககடல சூழ்ந்த உலகங்களேழும் ஒரு பிரகாரமாய நடககவும், வலியவாகள் எளியவாகளை வருத தப்படுத்தாமல் அசையாத ஆராய்ச்சிமணி கட்டியிருககிற வாயிலையுடையவன, தனது புலிக்கொடியான தேறியிருககிறதாக வடமேருகிரிமேலே எழுதின இடியையொதத சிங்கம்போலும் வீரத்தனமையையுடைய புனனுடனாகிய வேந் தன எ - று. 220

விடமேவு கடல்போலு மடனீடு கணைபோலும விழிமா தராய்
வடமேரு கிரிபோலு முயாதேரி னிடையேறி வருகோ மகன
றடமாடு மடமாதர் தனபார நிகரான தடவா யிலார்
குடகேறி வளையார மணியீனு மணிமேவு குருநா டனே.

இ - ள். நஞ்சுபொருந்திய கடலைப்போலவும், வெறறிமிகுந்த அமபைப் போலவும கண்களையுடைய பெண்ணே! வடககே யிருககிற மேருமலையைப் போல்வதான உயர்ந்த தேரினமேலேறிவருகினற இந்த அரசன, குளத்திலே நீராடுதலையுடைய யௌவன பருவததைககொண்ட பெண்களுடைய தன பாரங்களை யொப்பான பெருமையுடனே நீர முகககிற வழியையுங்கொண்ட குடததிலே, சஙகானதுசேர்ந்து முததுமணிகளைப பெறுவதான அழகு பொருந் திய குருநாட்டினன எ - று 221

முருகோடு புழுகோடு பணியோடு பிரியாத முலையா யிவன
பொருகோடு கொடுவாச மலர்சாடி யிளமேதி புனல்பா யவே
ஒருகோடி கயலோட வொருகோடி யளியோட வொருகோடி வெண்
குருகோட வொருகோடி சினவாளை கரையேறு குருநா டனே.

இ - ள். பரிமளமும் புனுகும் ஆபரணஙகளும நீங்காதிருககினற தனங்களை யுடையவளே! இந்த அரசன, சண்டைசெய்கின்ற கொமபினாலே பரிமளத்தை

புடைய தாமரைமலர் முதலானவற்றைச் சிதைத்து இளமையான எருமைகள் நீரிலே குதிக்க, அதனாலே ஒருகோடி மீன்களோடவும், ஒருகோடி வண்டுக ளோடவும், ஒருகோடி வெள்ளைக் குருகுகளோடவும், ஒருகோடி கோபதைை யுடைய வாளைமீன்கள் கரைமேலே பாய்வதான குருநாட்டினா எ - று. 222

முயருவி யணுகாது வியாதாவு மதிபோலு முகமா தராய்
புயருவு முயர்தேரி னிடையேறி வருமாலை புனைமார் பினான்
கயருவு நறுநீல முகைபீறி மடையூடு கமழ்தே றல்போய்
வயருழு வயலூடு வளாசாலி கதிதாழு மகதே சனே.

இ - ள். முயலானது தாவுதலாயச் சோாமல வெயாவையைக்கொண்ட சந்திரனபோல்வதான முகத்தையுடைய பெண்ணே! மேகந்தவழுதலாக உயர்ந்த தேரினமேலேறி வருகின்ற மாலையணிந்த மார்பையுடைய இந்த அரசன தெண்டைநீன துள்ளிவிழ அதனாலே, நல்ல நீலமலரி னரும்புடைந்து மடைவழியே பரிமளித்தலையுடைய தேனானது சென்று வயலிலேபாய, அதனாலே அந்த வயலினிடத்துள்ளதாய் வளாகிற நெற்கள் கதிர்விடுவதான மகதநாட்டினன எ - று. 223

மூளையேறு வண்கிரண விருதோ ணாறுஙகுதலை மொழிமா தரா
யுளையேறு திண்புரவி கரிசூழ விஙகுவரு முயாதே ரிறுன்
றளையேறு கினறவய றணிலேயெ மூஙகமல தள மீதிலே
வளையீனு மொண்டாளா மதிபோலெ மூஙகவுட வளநா டனே.

இ - ள். மூஙகிலபோல் நீணடு அழகிதான ஒளியையுடைய இரணடு தோள்களைகொணட நலல மழலைசசொறபோலும் மொழியையுடைய பெண்ணே! புறமயிாகள நீணடு வலியைககொணட குதிரைகளுமயானைகளுஞ சூழ இஙகே வருவதான உயாநத தேரையுடைய இவவரசன, பாதசாலங்கள் ளொலிக்கின்ற பெணகளுடைய வயலிலே மூளைபபதான செழித்த தாமரை யிதழிலே சங்குகள் பெறுவதான அழகிய முத்துகளை சநதிரனைபபோல விளஙகுகின்ற கவுடவள நாட்டினன எ - று. 224

அரிசிந்து விழியாயி லணிதேரின் மிசையேறி யடைகோ மகன்
விரிசிந்து விளையுண்ட வொருசிநது முனிதஙகு கிரிசிந துகால்
பொறிசிநத வலாபுன்கு பொருளசிநத வலாகொன்றை பொரிவண்
வரிசிநத மகரநத மலர்சிநத வருசிநது வளநாடனே. [டினம

இ - ள். செவவரிகள் சிதறிய கணகளை யுடையவளே! இந்த அழகான தேரின்மேலேறிவந்த அரசன, விரிவான கடலை யுணட ஒரு குருமுனியான அகத்தியர் தங்குகின்ற பொதியமலை பெற்றுவிடுகிற தெனறறகாறறினாலே அலர்ந்த புனகு மரஙகள பொரிபோல மலரைச் சிந்தவும், அலர்ந்த கொனறை மரங்கள் பொனனைப்போல் மலரைச் சிந்தவும், புள்ளிகளையுடைய வண்டுககூட்டங்கள் பாட்டுகளைச் சிந்தவும், மகரந்தஙகளான தேனை மறறை மலாகள் சிந்தவும வருவதான சிந்துவெனனு நதியையுடைய சிந்துவள நாட்டினன எ - று. 225

சுராங்க மிகநொந்து கடைகின்ற தினம்வந்த சுதையென் சொலாய்
நராங்க மலைகொண்டு சதுரங்க விரிசிந்து நடுமிந்த மால்
பராங்க மிகவென்று வினைகொண்டு சிலைகொண்டு படை வந்தநாள்
வராங்க தரர்கொன்ற மதனங்க முகுமங்க வளநா டனே.

இ - ள். தேவர்கள் தங்களுடைய உடம்பு மிகவு நொந்து கடைகின்ற நாளிலே உண்டான அமுதமே என்னும்படியான சொற்களை யுடையவளே! மனிதருடைய தேகமாகிய மலையைக்கொண்டு சதுரங்கமாக விரிகின்ற கடலிலோடுவதான இந்தத் திருமால்போன்ற அரசன், அன்னியர்களுடைய உடல் மிகவு மழித்து, அந்தச் செய்கையைக்கொண்டு கரும்பு வில்லுடனே அம்புகளுங் கொண்டு தன்னிடத்து வந்தகாலத்தில் சிரேஷ்டரான பிரம்ம விஷ்ணுக்களுடைய எலும்புகளைத் தரித்த சிவனுடைய எரித்த மன்மதனுடைய உடல பொடியாகச் சிந்தின அங்கவள நாட்டினன் எ - று. 226

தேஞ்சாலு மிருகுன்று களையெஞ்சு மிடையஞ்சு திருவே யிவ
னீஞ்சாலு மிரவாலு மிறலான திடைபீறி யிழிதே றலும
காய்ஞ்சாலு கதிர்சாட மாஞ்சோலை யிடைசோரு கனியூ றலும
பாய்ஞ்சாலை வயலூறு பூஞ்சாலி வினைவேறு பாஞ்சா லனே.

இ - ள் மாலையினின்றுந் தேனொழுகுவதா யமைந்த இரண்டு தனங்களாகிய மாலைகளைத் தாங்கமாட்டாமல் குறைவுபடுவதாய் இடையஞ்சுவதான லட்சுமிக்கொப்பானவளே! இந்த அரசன், ஈஞ்சு முள்ளாலும் இறால மீன்களாலும் தேனகூடானது நடுவே கிழிந்து வழிகிற தேனும், பழுத்தசைகிற சோளக்கதிர் மோத அதனாலே மாந்தோப்பிலே அந்த மாங்கனி நைந்து அக்கனியினின்று மொழுகின்ற தேனும் பாய்ந்து ஆலைக்கரும்புசாறு பெருகுகின்ற வயலுள்ள அழகிய நெற்களின் விளைவு மிகுந்திருக்கின்ற பாஞ்சால நாட்டினன் எ-று.

ஈஞ்சு - ஈந்து, இறல - இறாலின் விகாரம். 227

தேம்போதி னீர்ந்தாது பூம்பாளை நீங்காத தேங்கோ தையாய்
கூம்போடி வானேறு மானேறி லீண்டாசை கூர்ந்தே றினோன்
றாமபோடு கூன்கோடு வாநதோடி யீன்றேறி தோய்ந்தே றவே
காமபோடு சேமபோடு சோநதார மார்ந்தோடு காந்தாரனே.

இ - ள். தேனையுடைய மலர்களில் பாகங்களுள்ளதாய கூந்தற்பனையினது பாளைபோல் நீண்டுள்ளதாய்ப் பரிமளம விலகாத கூந்தலை யுடையவளே! சிகரமானது நீண்டு ஆகாயத்தை யளாவுவதான குதிரை கட்டின தேர்மேலே இங்கே ஆசைமிகுந் தேறிவந்த இவ்வரசன், மதகினவழியே ஓடுகின்ற கூனிய சங்கானது அந்த மதகினிருடனே நீணடோடிப்பெறறு மீண்டும் குளத்திலே போய்க் கூடுதலாக, காம்புடனே நீளுவதான நீர்ச்சேம்புடன மோதி அச் சங்கு பெற்ற முத்துகள நீரிலே நிறைதலாய நீரோடு செலவதான காந்தார நாட்டினன எ - று. 228

அடர்ந்தோடி நெஞ்சமக வாநதேவ ருங்கண்ண ணங்கே யிவன்
றடநதோறு மஙகஙகு ழன்றான ருநதுஞச யஙகூர்க ராத
தொடர்ந்தோட வெஙகுங்க லைநதோடி யஞசுஞசு ணஙகாழி நீர்
கடநதோடி யென்றுங்க ரும்பூடு றங்குங்க லிஙகே சனே.

இ-ள். நெருங்கி நீண்டு புருஷர்களுடைய மனதைக கிரகிததுககொ ண்டு வருவனவான கணகளையுடைய பெண்ணே! இந்த அரசன குளங்களி லெலலாம அங்கங்கே அலைந்து மீன புலாலை எண்ணுகினற வலிமையால், மிகுவ தான முதலையானது பினதொடர்ந்து செல்ல, (அதனால்) எவவிடத்தும நிலலா மல் ஓடிப் பயப்படுவதான நீர நாயானது அநத ஆழமுள்ளதான குளதது நீரை விட்டுப்போய எபபோதும கருமபுததூரிமேல தூஙகுவதான கலிங்க நாட்டி னன எ-று. 229

இகழ்நதிடும தனபுவிபு ரநதிடவ ளாநதெழுமி ளங்கொடி யிவ
னிகழ்நதவர விநதமணி தண்கழனி யெஙகணுநி றைநதுநி ரவப்
புகழ்நதகட வினகனவி ருமபனகு ளமபிடைபு தைநது முனையி
னகழ்நதுழுத டஙகொழுநெ டுநதலைம டிநதிடும வநதிய ரசே.

இ-ள. (துறவிகள்) இகழ்வதையுடைய மனமதன உலகததையாளும் படி வளர்நதெழுவதான இளமையான கொடிபோலபவளே! இநத அரசன, நீரிலே சஞ்சரிததுளள தாமரை முததுகள் குளிர்ந்த வயலகளெங்கு நிறைத லாய்ப் பரவ அநத முததுகளை புகழததகுந்திருககினற எருமைககடாவினுடைய கனமான இரும்புபோனற குளம்பிலே, அழுததுதலா யுதிரநது பினபு தனது கூர்மையினலே, கிழிதது நிலததிலே செலலுவதான பெரிதாகிய கொழுவி னுடைய நீணட நுனியினலே உடைந்துபோவதான அவநதி நாட்டினன எ-று.

புததமுத மொததமொழி வெறபைநிக ரொததத்தன பொறமெருடி யிவ
சுததநிபு ணககுசலர் சொறகரிவ ழுககரிய சுததநெறியான [ன
முததணி நகைசசியாத னததிடைதி மிாதநெறி முழுகக லவையில
மததகர டககரிவ ழுககுறுநெ ருசசெறியு மததிரா பிரான.

இ-ள. புதிதான அமுரததததை ஒபபான வசனமும மலைகளை நிகர்வதற குச் சரியான கொஙகைகளையுமுடைய பொனவளைய லணிந்தவளே! இந்த அர சன, பரிசுததமான கலைவலலவாகளான பெரியோாகள சொலலுககுத தன னறிவு வழுவுதலிலலாத நலல நீதியை யுடையவன. முததுப்போலும அழகி தான பல வரிசையையுடைய பெணகள கொங்கைகளினினறும வழிந்தொழு குவதான மணமிகுநத கலவைச சநதனச்சேறறிலே மதசசுவடுகொணட யானை கள் வழுககி விழுவதான வீதிகள நெருஙகின மததிராதேசாதிபதி எ-று. 231

கருமசச மனையொதத கொலைவைதத விழிபெறற களிமா தராய்
பெருமசச மருமிகக விரததி னிடையுறற பெருமா னிவ
னிருமசச னயனததர் முலைமுததில விழுமசச விடையிற் றென
வருமசச மலர்தற்ப மனமச்ச முறுமசச வளநா டனே.

இ - ள். புண்ணிய பாவங்களை விசாரிக்குந் தொழிலையுடைய யாவரு மகிழத்தக்க அழகை யுடையவளே! பெரிய மச்சுவீடுபோ லிருப்பதான உயர்ந்த தேரினமேலவந்த பெருமையுள்ளவனான இநத அரசன, இரணடு கெண்டை மீனபோலுங் கண்களையுடைய பெணகள கொங்கைகளி லணிந்த முததுமாலைகளின கனததாலே துவண்டு விழுவதாகிய இலேசான இடையானது இத்தன்மையதெனறு வருகினற பயம்போலவே, விரிவான படிகளையிலும் புருஷர்கள் மனதிலே பயநகொள்ளுவதான மச்சவள நாட்டினன எ - று.

பெருமச்சு - பெரியமச்சு. 232

கடனாக மொருகோடி வயவாசி பலகோடி கடல்போ லவே
யுடனாக வரமேக வளவாய வொருதேரி னுறுகோ மகன்
விடனாக மடலபூக விரிபாளை யெனநாணி வெளிமேய் கிலா
மடனாக மிசைத்தோகை மயிலேறி மலருடு மறைகேக யன.

இ - ள் மத்தத்தையுடைய யானைக ளொருகோடியும, வெறறி பொருந்திய குதிரைகள பல கோடிகளும, கடலைபபோல தன கூடவே வர, மேகமண்டலத்தினளவு உயர்ந்த ஒரு தேரினமேலே வருகினற இவவரசன, மடலையுடைய கமுகமரத்திலே விரிகினற பாளையை; விஷத்தையுடைய பாமபென றெணணி வெட்கங்கொணடு வெளியே மேயகிறதறகு வாராதிருககிற அறிவறற சாபபத்தை, உணணுகினற கலாபமயிலானது, அந்தக் கமுகமரததினமேலேறி, அதன பாளையிலுள்ள பூவிலே மறைவதான கேகயநாட்டினன் எ - று.

சர்ப்பததின படம்போல விரிகினற கமுகினபாளை, தனனினுமிககிருந்தலைக் கண்ட சர்பபம வெட்கங்கொணடு வெளியே வராதிருககிற கேகய நாடெனபது பொருள். 233

வாடிவிழு நூலுமிரு மால்வரையு நேரிடையு மாமுலை யுமாச
சூடிமிக வாணிழிய ஞாலமவிளை யாடிவரு தோகை மயிலே
வாடிநிழல போலுனுள மேவியணி தேரமிசையு மாகி வருவோ
னுடியற நாளுமுயா கோசலம தானகுல நாடனிவனே.

இ - ள். துவணடு விழுகினற நூலையும, இரணடு பெரிய மலைகளையு மொபபான இடையும், பெரிய தனஙகளுமாகக் கொணடு, மிகவு மேகஙக ளிறங்க உலகிலே விளையாடிககொணடு திரிகிற தோகைமயிலபோனறவளே! கணணாடி நிழலைப்போல உன மனததிலே குடிகொணடு அழகிய தேரினமேலுந் தோனற வருகிற இவவரசன, தேடித்தேடித தருமமே தினந்தினமும வளாததா யிருககிற கோசலமெனகிற சிரேஷ்டமான நாட்டை யுடையவன எ - று. 234

கலி விருத்தம்

மநதர மனையதோள் வளனல பேர்சொலச
சுநதரந தோகைமாா தோளைத தாழ்நதியச
சநதிய வதியரிச சநதிரன றனைக
கநதர நீடியுட் கருததது நோககினாள்.

இ - ள் மந்தரமலைகளைப் போன்ற தோள்களைக் கொண்ட பிரபுவான அரிச்சந்திரனுடைய பேரைச் சொல்லும்போது அச் சந்திரவதியானவள், அவ்வாறு சொன்ன அழகான பெண்களுடைய தோள்களைத் தாழச்செய்து, அரிச்சந்திர மகாராஜனைத் தன் கழுத்தை நீட்டிப் பார்த்து அவனுள்ளக் கருத்தையும் எண்ணினாள் எ - று. 235

அங்கைவேன் மன்னனு மாசை மீக்கொள
மங்கைதன் பங்கய வதன நோக்கினன்
செங்கயற் கண்ணிறு டிருக்க முத்தினில்
மங்கல நாணுறீஇ வயங்கக் கண்டனன்.

இ - ள் அழகிய கையிலே வேலையுடைய அரிச்சந்திரமகாராஜனும் தனக்கு ஆசை மேன்மேலாக, சந்திரவதியினுடைய தாமரை மலர்போலு முகத்தைப் பார்த்தான். சிவந்த கயல்போலுங் கண்களையுடைய சந்திரவதியின் அழகிதான கழுத்திலே திருமங்கிலிய சூத்திரம் பொருந்தி விளங்க அதையுங் கண்டான் எ - று. 236

கன்னியென் றெண்ணினங் கன்னி யோவலண்
முன்னரே மங்கலம் பூண்டி மொய்குழ
லின்னமு மொருவருக் கெய்து மோவென
மன்னவன் மாதுலற் குரைவ ழங்கினன்.

இ - ள். இவள் விவாகமாகாத பெண்ணென்று நினைத்திருந்தோம்; அப்படியன்றி, முன்னே தானே மாங்கிலியம் சூட்டப்பட்ட பெண்ணாயிருக்கிறாள். இன்னமும் ஒரு புருஷனுக்குப் பாத்தியப்படத் தகுமோ? என்றரிச்சந்திரமகாராஜன் (தன்னுட் சிந்தித்து) மாமனான சந்திரதய வாசனைப் பார்த்துச் சில சொற்கள் சொன்னான் எ - று

மொய்குழல் - நெருங்கின கூந்தலாள். 237

பொறுத்துமுன் மங்கலம் பூண்ட பேதையை
மறுத்திரண் டாவது மணமு டிப்பரோ
சிறுத்தவர் செய்தொழி றிரைவ ளைப்பிதி
னிறுத்தினீர் நீரெனு நெடித்து கூறினன்.

இ - ள். முன்னே ஒருவன் விவாகஞ்செய்துகொண்டபோது, தரித்த மங்கிலியத்தை இன்னமும் கட்டிக்கொண்டிருக்கிற பெண்ணை, அதை நீக்கி இரண்டாவது கலியாணம் ஒருவர் செய்துகொள்ளுவரோ? சிறிய ஜாதியார் இப்படிச்செய்துகொள்ளுகிறது உண்டு, கடல்சூழ்ந்த பூமண்டலத்திலே இச் செய்கையை நீங்களும் செய்வதாகச் சுயம்வரம் நாட்டினீர்களென்று அதிக விகாரங்களைச் சொன்னான் எ - று. 238

வள்ளலீ துரைத்தலு மதித்த யன்றன
துள்ளமவிட் டோங்கிய வுவகையம் பெரு

வெள்ளமுள் ளடக்கியே வேந்தாகா ளிவன்
கள்ளமோ மெய்ம்மையோ கட்டு ரைத்ததே.

இ - ள். இவ்வாறு பிரபுவான அரிச்சந்திரன் சொன்னபோது, சந்திரதய ராஜன் தன்னு மனத்தினின்றும் பொங்குகின்ற சந்தோஷமாகிய பெரிய வெள்ளத்தை உள்ளே யடக்கிக்கொண்டு, அரசர்களே! இம்மன்னன் சொன்னது திருட்டுத்தனமோ அல்லது உண்மைதானோ எ - று. 239

தையலாள் கருத்தினிற் றாலி யுண்டெனிற்
கையினாற் கண்ணாற் காட்டு நீரெனச்
செய்யகை யறைந்தணி மூக்கிற் சோத்தியிவ
வையனும் பொய்யனென் றரசர் கூறினார்.

இ - ள் சந்திரதயவரசன் (அரசர்களை நோக்கி) இந்தப் பெண்ணினுடைய கழுத்திலே தாலியிருக்குமானால், உங்கள் கையாலாவது கண்ணாலாவது நீங்களே காட்டுங்களென்று சொல்ல, அதைக்கேட்ட அரசர்கள் தங்கள் சிவந்த கைகளைத் தட்டி அதிசயித்து, அழகிய மூக்கிலே விரல்வைத்து இந்த மகாப்பிரபுவான அரிச்சந்திரன் பொய்யனாயிருக்கிறான் என்றார்கள் எ - று. 240

மண்டல வேந்தனெம் மடந்தை மங்கலங்
கண்டது நீங்கட்டாங் கண்டி லாத்தும்
திண்டிற லீரொரு தேவ ராசிய
முண்டென மதிதய னுரைப்ப தாயினான்.

இ - ள். மிகுந்த சாமாத்தியத்தையுடைய அரசர்களே! இந்தப் பூமண்டலத்தையாளுகின்ற அரிச்சந்திரமகாராஜன் எங்கள் பெண்ணின் கழுத்திலே தாலியிருக்கக் கண்டதற்கும், நீங்களெல்லாருங் காணாதிருக்கிறதற்கும் ஒரு தேவ ரகசியமுண்டென்று சந்திரதயராஜன் சொல்லுகிறான் எ - று. 241

அண்டர்நா யகனவர மளித்த நாளையில்
வண்டணி குழலியோ டுதித்த மங்கலம்
கண்டவர் பதியிவட் கென்ற கட்டுரை
உண்டஃ தன்றியே வுண்டு கேட்டிரால்.

இ - ள். தெய்வநாயகனான சிவபெருமான் எனக்கு வரங்கொடுத்த காலத்திலே, வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய இந்தச் சந்திரவதியுடனே பிறந்த திரு மங்கிலியத்தைக் கண்டவனே இவளுக்கு நாயகனென்று சொன்ன உறுதிவார்த்தையுமுண்டு. அதுவன்றி, வேறேயு மொன்றுண்டு கேளுங்கள் எ-று.

மஞ்சனச் சடையினான் வரத்தில் வந்தநாள்
கஞ்சன நீழலிற் காண்ப தன்றியே
அஞ்சனக் கண்ணிக்கு மங்கைக் கெய்திடா
தெஞ்சலில் யாவரு மியானுங் கண்டிலேம்.

இ - ள். கங்காஜலாபிஷேகத்தைக் கொண்ட சடாபாரத்தையுடைய பரம சிவனுடைய கொடுத்தவரத்தினாலே, இவள் பிறந்தநாள்முதல் கண்ணாடி நிழலிலே இவள் மங்கிலியத்தை நாங்கள் பார்த்திருக்கிறதேயல்லது, மைபிட்ட கண்களையுடைய அச்சந்திரவதிக்கும் அவளுடைய அழகிதான கைக்கும் தொட அகப்படாது குறைவில்லாமல் எங்கள் வீட்டிலுள்ள எல்லோரும் நானும் நாளதுவரையில் பார்த்ததில்லை எ - று. 243

மேற்படி வேறு

என்றலும் வல்விழு னெண்ணிய நாம
மொன்றல துள்ளுற வுன்னல ளாகிச
சென்றவன மார்பிது சேர்கென வுன்னு
மன்றலா மாலையை வானி லெறிந்தாள்.

இ - ள். என்று சொல்லும்போது, சந்திரவதியானவள் தான முன்னே நினைத்த அரிச்சந்திரனுடைய பெயரொன்றையல்லது வேறேயொரு பெயரை யும் தனமனத்தில நினையாதவளாய இந்த மாலைபோய் அரிச்சந்திரமகாராஜனு டைய மார்பிலே விழக்கடவதென்று நினைத்து, மணம விரிக்கின்ற பூமாலையை ஆகாயத்திலே எறிந்தாள் எ - று. 244

வார்பயில் பூண்முலை மாலைபு நெஞ்சும
பார்பயின் மன்னவர் பற்பலர் கண்ணுந
தார்பயிலவே லரிச சந்திர னெனபான்
மார்பி லணைந்து மலர்ந்தன மன்னே.

இ - ள். இரவிக்கைபொருந்தின ஆபரணங்களை யணிந்த தனங்களை யுடைய சந்திரவதி எறிந்தமாலையும, அவள மனமும, அந்தச் சபையிலே யிருக்கிற அரசர்கள பலபலபேர்களுடைய கணகளும, மாலைபொருந்தின வேலைக்கொண்ட அரிச்சந்திரமகாராஜனுடைய மார்பிலேகூடி விகசிக்கலாயின எ - று. 245

வஞ்சி வழங்கிய மாலைய ணிந்தோன்
செஞ்சுட ரின்முக நினறொளி செய்ய
வெஞ்சுடர் முனசசி யாமென மிக்கோர்
கஞ்சமு கங்கள கரிந்தன வன்றே.

இ - ள். அப்படிச் சந்திரவதி எறிந்த மாலையை யணிந்துகொண்ட அரிச் சந்திர மகாராஜனுடைய முகமானது சிவந்த சூரியனைப்போல நிலைகொண்டு விளங்க, அப்படிப்பட்ட வெப்பத்தையுடைய சூரியனுக்கு முன்னே சந்திரன போல அங்கு மிருந்துள்ள அரசர்களுடைய தாமரை மலர்போன்ற முகங்கள் வாடி ஒளி மழுங்கின எ - று. 246

மாதாக ளார்த்தனர் வானவ ரார்த்தார்
கிதர்க ளார்த்தனர் கேளிரு மார்த்தார்

சூதர்க ளார்த்தனர் துறவரு மார்த்தார்
வேதர்க ளார்த்தனர் வேலை யடங்க.

இ - ள். அப்போது கடலோசை யடங்கும்படி பெண்களெல்லாரும் ஆரவாரித்தார்கள், தேவர்களும் ஆரவாரித்தார்கள், கீதங்கள் பாடுகிறவர்களும் ஆரவாரித்தார்கள், சந்திரவதியினுடைய உறவினரெல்லாரும் ஆரவாரித்தார்கள், துறவினராகிய முனிவர்களும் ஆரவாரித்தார்கள், வேதப் பிராமணர்களும் ஆரவாரித்தார்கள் எ - று. 247

நல்லிய னூலறி நாவலர் பாடப
பல்லிய மும்பல பாடலு மார்ப்ப
வல்லிம லர்த்தொடை மாலை யணிந்த
வல்லியு மன்னனு மாளிகை புக்கார்.

இ - ள். கலல இலக்கிய விலக்கண நூல்களை யுணர்ந்த வித்துவான்கள் பாடவும், பல வாத்தியங்களும பலவகைப் பாடல்களு முழங்கவும், அக விதழ்களையுடைய பூமாலையைச் சூட்டின சந்திரவதியும, சூடிக்கொண்ட அரிச்சந்திர மகாராஜனும் படுக்கை வீட்டுக்குள்ளே போனார்கள் எ - று 248

மின்னிய தாம விளக்கொரு கோடி
கன்னியர் வந்து கலந்தொ டெடுப்ப
மன்னிய மாமணி மஞ்ச மணைந்தே
பொன்னின் முலைக்கொடி யோடு புணர்ந்தான்.

இ - ள். மினனுகின்ற ஒளியைக்கொண்ட ஒருகோடி மாணிக்க விளக்குகளை அதன பாத்திரத்துடனே பெண்களவந்து தாங்கிக்கொண்டு நிற்க, நிலைகொண்ட பெரிதான இரத்தினகசிதமான கட்டில் மெத்தைமேலே போய் பொன்போலுந் தேமல் படர்ந்த முலைகளையுடைய சந்திரவதியுடனே (அரிசசந்திரன) கூடினான எ - று. 249

ஆரம கிறபுகை காசறை நீர்காப
பூரந ரநதம ணிநது மலாததிப
பாரத னததினி விட்ட பராகஞ
சோரவ ணிநதெறி சுண்ணமெ றிநது.

இ - ள். சந்தனச்சேறு, அகிற்புகை, கஸ்தூரி, பனிநீர், பச்சைக் கர்ப்பூரம், சவ்வாது ஆகிய இவைகளெல்லாம அணிந்து உலரச்செய்து கொண்டு, கனமான தனங்களிலே அணிந்த கந்தப்பொடிகளுதிரப்பூசி வீசி விளையாடுகின்ற பொன்னிறப் பொடிகளை ஒருவரமே லொருவர் வீசி விளையாடி எ - று.

காசறை - மயிர்ச்சாந்துமாம. 250

மல்லிகை சண்பக மாதவி புன்னை
முல்லைகு ராமகிழ் முண்டக நீல

மல்லிநி றைநதசெ வநதிசெ ருநதி
புல்லிதழ் வாசம ணைநதுபு னைநதார்.

இ - ள். மல்லிகைப்பூ, சண்பகப்பூ, குருக்கத்திப்பூ, புன்னைப்பூ, முல்லைப்பூ, குரவம்பூ, மகிழம்பூ, தாமரைப்பூ, நீலப்பூ, அகவிதழ் திரம்பியுள்ள செவ்வந்திப்பூ ஆகிய இவைகளிலே கூடின இதழ்களின் பரிமளங்களைச் சேர்த்து முடித்துக்கொண்டார்கள் எ - று. 251

அங்கையொ டங்கைய ணைததுட லொன்றக்
கொங்கைபு யததிரள குன்றில ழுநதச்
செங்கயல் சென்றுதி ருககுழை தாவ
மங்கையு மனனும கிழ்நதுபு ணர்நதார்.

இ - ள். அழகிய கைகளுடனே கைகளை யணைத்து உடம்பெல்லாம் ஒருமிக்க, கொங்கைகள், தோள்களாகிய திரண்ட மலைகளிலே யழுந்த, சிவந்த கெண்டைமீனபோனற கண்களபோய அழகிய குண்டலமணிந்த காதுகளிலே பாய, இவவாறு சந்திரவதியும அரிச்சந்திரனும சந்தோஷித்துக் கூடினார்கள் எ - று. 252

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வாசமா மாலை மனனவன முனனுண் மருவிடா வெகுளியின் மலைந்து, பூசலவேள பலகா லெய்தபுண் ணுககுப புணர்முலை வேறுகொண் டொற்றி, மாசிலா மணிசெய் சூடகக் காநதண் மலாககா மாக மேற் கட்டி, யாசைநோய் தீர வமுதவா யுதக மளித்தன ளரிவையர் பெருமாள.

இ - ள். பெண்களுக கரசியான சந்திரவதி, மணமிராமபின மாலையைச் சூடின அரிச்சந்திரமகாராஜன முனனே தனனைவநது கூடாத கோபத்தினாலே சணடை செய்கிற மனமதன பலதரமுமெய்த அம்புகளபட்ட புண்களுககுத தனதிரண்டாகிய கொங்கை வெப்பததைக கொண்டு ஒற்றி, குறறமிலலாத மாணிககஙகள் பதித்திருக்கிற கங்கணஙகளணிந்த காநதள் மலாபோலுங் கைகளாலே அவன மார்புமேலழுநதக கட்டியணைத்து அவனுடைய காமவியாதி நீங்கத் தனது அமுதவாயிலுள்ள நீரைக கொடுததாள எ - று. 253

கண்டகண் வாஙகா திருவரு மதனாற் கலவியும புலவியும் விளைதது, முண்டக வதனம வெயாரும பிடினு முகிழ்முலை வடமசைந்திடினுங, கொண்டலங குழலில் வண்டலம பிடினுங் குறைவிலா நிறையிட ரெய்தி, மண்டலத் தரசன சிநதையம மஙகை மருங்குலி னொருவழித தன்றே.

இ - ள். ஒருவரையொருவர் பாரததகண் பாாவை நீங்காமல், மன்மதனுடைய உபததிரவததினாலே கூடலும ஊடலுஞசெய்து, தாமரைமலர் போனற முகததிலே சந்திரவதிககு வெயர்வை உண்டானாலும், தாமரை யரும்பு

போன்ற தனங்களிலே முத்துமாலைக ளசைந்தாலும், மேகம்போற் கருநிறத்தா லழகிதான கூந்தலிலே வண்டுகள் முழங்கினாலும் (இடை தாங்கமாட்டாமல் வருந்துமென்று) பூமண்டலத்துக்கெல்லாம் அரசனென அரிச்சந்திரன மனமானது குறையாமல் நிரம்புவதான துணைபதத்தைக்கொண்டு அச்சந்திரவதியினுடைய இடையினாலே ஒருவழிப்படா நிருக்கின்றது எ - று. 254

உடைப்பெரும பண்ட மிக்ககலத தேறறி யொலிகட னீந்தி யோர் துறைசேர, தடைப்பெரும பாரத்தாற் முழுமென றேடி யறப்பயந திறக்குவார் போலப், படைக்கல விழியா ளணியொடு கலையும பணிமலாத தொடையலும பரமாய், யிடைக்கிடா விளைக்க விறுமெனப் பதறி யிருகையாற களைநதரு குறுததான

இ - ள. தங்களுக்குச் சொந்தமான பெரிதான சரக்குகளதிகமாகக் கப்பலிலே யேறறி ஒலிக்கின்ற கடலைக்கடந்து ஒரு இறங்குந் துறையை யடுத்து, தாங்களேறறின பெரிய கனத்தினாலே அமிழ்ந்துவிடு மென்று நினைத்து மிகவும பயப்பட்டு விரைந்துவந்து அப்பண்டங்களை இறக்குகிறவாகளைப்போல, வாளாயுதம்போலும் கண்களையுடைய சந்திரவதியினுடைய ஆபரணங்களுடனே கலையும, குளிர்ந்த மலர்மாலையும கனமாகி இடைக்குத துன்பத்தைச செய்தலினாலே இடை ஒடியுமென்று அரிச்சந்திரமன்னன பதறினவனுயத தனது இரண்டு கைகளாலும அவைகளை நீக்கிப பக்கத்திலே வைத்தான எ - று 255

தானைசென் றாக்க மங்கல மிடறறுச சஞ்சலம புலம்பிடத் தனக்கோட, டானைசென் றடர மாதநலை மயங்க வலகுலந தேரினைச் செலுத்தி, மீனைவென றடுகண வேலபடப புருவ விலவளைந தயோத்தியா வேநதைத, தேனைவென றினித்த செஞ்சொலா ளின பச் செருத்தொழில பறபல விளைத்தாள

இ - ள். மேகலையாகிய சேனைகூடி ஒலிக்கவும், திருமங்கிலயத்தையுடைய கழுத்தாகிய சஞ்சலச்சங்கு ஒலிக்கவும், கொங்கைகளாகிய கொம்பானைகள சேர்ந்து நெருக்கவும, வண்டுகளாகிய குதிரைகள அவவிடத்தே ஒலிக்கவும், அல்குலாகிய அழகிய தேரைச்செலுத்தி, மீனைவென்று சொல்லுவனவாகிய கண்களென்கிற வேலாயுதம தைக்கப் புருவமாகிய விலலைவளைத்து, அயோத்திநகருக்கு வேந்தனை அரிச்சந்திரனோடு, தேனினது இரசத்தை வென்று அதிலும இனிப்பான செவவிய சொலலையுடைய சந்திரவதியானவள் கலவியாகிய சண்டைச் செய்கைகள பலபல விதங்களாகச் செய்தாள எ - று. 256

இந்நெறி தவறு திறைவனு மயிலு மினபமுண் டிடைவிடா திணங்கிக், கன்னமா புரியிற் சிலபகல கழிஇப்பின கடிநக ரெய்து வான் கருதி, மன்னனு மன்ன மெனுநடை மயிலு மணிநெடுந தேர்மிசை யேறிப், பொன்னணி குடுமி நன்னெடுங் கபாடப் புரிசைநீத தப்புறம் போனார்.

இ - ள். இவ்வாறு தப்பாமல் நாள்தோறும் அரிச்சந்திரனுஞ் சந்திரவதியும் காமரசத்தை யனுபவித்து இடைவிடாமற்கூடி அந்தக் கன்னமாபுரியிலே சிலகாலங் கழித்துப் பின்பு தனது காவலையுடைய அயோத்தியாபுரிக்குப் போகநினைத்து, அரிச்சந்திரனும் அன்னநடை என்கிற நடையையுடைய மயிற்சாயலைக்கொண்ட சந்திரவதியும் அழகிதான நீண்ட தேர்மேலேறிக்கொண்டு பொன்னாலலங்கிருதமான சிகரங்களும் நீண்ட கதவுங்கொண்ட கோட்டை மதிலைக்கடந்து அப்பாற் போனார்கள் எ - று. 257

பன்னிறத் தனந்தங் கதிரெழுந் தனபோற் பலமணிக் குடைகண்மே னிழற்ற, நன்னெறித் தவளக் கொடிமிசை நெருங்க நவமணிக் காகள மார்ப்ப, மின்னிறக் கொடிமென் மருங்குலார் மருங்கு மிடைந்துவெண் சாமர மிரட்ட, வன்னிறப் பொழில்சூழ் கன்னமா புரியி னரணமு மகழுமவிட் டகன்றார்.

இ - ள். பலநிறங்களைக்கொண்டு ஆதிசேடனுடைய சிரோரத்தினச் சோதி மேலே கிளர்ந்தாற்போல, அநேக இரத்தினக்குடைகள் மேலே நிழலைச்செய்யவும், நன்மார்க்கம்போல பரிசுத்தமான வெள்ளைக்கொடிகள் மேலே நெருங்கவும், நவரத்தினமயமான எக்காளமூதவும் மின்னலைப்போல ஒளிபொருந்திய கொடிபோற் றுவளுகின்ற மிருதுவான இடையையுடைய பெண்கள் பக்கங்களிலே நெருங்கி வெண்சாமரம் வீசவும் இருள்நிறமான சோலைகள் சூழ்ந்த கன்னமாபுரியினுடைய மதிலும் அகழும்விட்டு நீங்கினார்கள் எ - று. 258

காந்தளஞ் செங்கைக் கன்னியர் சிலரோர் கைதொழு திடையிடை மீள, மாந்தர்கள் வணங்கி வவ்வவ ருடனே மந்திரத் தலைவர் மீண்டேக, வேந்தர்வீழ்ந் திறைஞ்சிப் பணிவிடை கேட்டு விடைகொடு மீண்டுமூ ரெய்தப், போந்தன்ன களிறும் புரவியுந் தேரும் புடைதொறுங் கடலெனப் பொலிய

இ - ள் காந்தட்பூப்போலுஞ் சிவந்த கைகளையுடைய (வழிவிடவந்த) சிலபெண்கள் கைகளால் வணங்கிக்கொண்டு நடுவே திரும்பிப்போகவும், மற்ற மனிதர் வணங்கிக்கொண்டு கூடவேவர, அவ்வவர்களுடன் மந்திரிப் பிரதானிகள் திரும்பிப்போகவும். அரசர்கள் காலில் விழுந்து வணங்கிக்கொண்டு சொன்ன உத்தரவு கேட்டுச் செல்வுபெற்றுக்கொண்டு திரும்பிக் கன்னமாபுரத்துக்குப்போகவும், யானைகளும், குதிரைகளும், தேர்களும் நாலு பக்கங்களிலும் நிறையவந்தன எ - று. 259

தோடு துன்றிய மரைமிசைத் துணைபுண ரன்னம
மாடு நிரைந்தோர் மதிநிழ றனைக்கண்டு மறந்துபோர்
பெடு நிலைபெறுஞ் சேவலைப் பிரிந்தயன் மலர்சேர்ந்
தூடு கின்றவச் செழும்புனற் றண்பணை யுற்றார்.

இ - ள். இதழ்கள் நெருங்கின தாமரைமலர்கள் மேலே தனது ஆண்பட்சியுடனே கூடிக்கொண்டிருந்த பெட்டையன்னமானது, அவ்விடத்தே மேலே

நின்றதாகிய ஒப்பற்ற சந்திரனுடைய நிழல் தோன்றக்கண்டு வேறே ஒரு பெட்டை மேதானுடனே கூடியிருக்கிறதென்று தனது சேவலைவிட்டு நீங்கி, வேறொரு பூவிலேபோ யிருந்துகொண்டு, பிணங்குவதான அந்தச் செழிப்பை யுடைய நீர் சூழ்ந்த குளிர்ந்த மருத நிலத்திற்கு வந்தார்கள் எ - று. 260

கோடு வார்மலர்ப் பொழிலையுங் குளிர்தடத் தினையும்
நீடு வார்சிறைப் பறவையின் குழாத்தையு நிறைநீர்
ஆடு வாரையு மவ்விடத் தணிமலர் கொய்து
சூடு வாரையுங் காட்டுவான் றேகைக்குத் துணைவன்.

இ - ள். கொம்புகள் நீண்டுள்ள பூஞ்சோலைகளையும், குளிர்ந்த தடாகங் களையும், அதிகமாக நீண்ட சிறகுகளையுடைய பட்சிக் கூட்டங்களையும், நிறை நீர்க்குளங்களிலே நீராடுகிறவர்களையும், அந்த இடங்களிலே அணிந்துகொள்ளப் பூக்கொய்து சூடிக்கொள்ளுகிறவர்களையும், சந்திரமதிக்கு நாயகனான அரிச் சந்திரமகாராஜன் காட்டலாயினன். 261

செய்ய மாமல ரடுத்துமொண் பெடைகளோ டருந்தாப்
பைய வேசுரும் படைவழி பார்த்தினி துறலால்
தைய லாருண வமைத்தனர் தாமவர் நோக்கஞ்
செய்யு நாளொத்த செழுமலர்க் காவெலாந் திருவே.

இ - ள். இலட்சுமிபோல்பவளே! இந்தப் பூஞ்சோலைகளெல்லாம், அழகிய பெட்டை வண்டுகள் வருகிற வழியைப் பார்த்துக்கொண்டு அதுவரைச் சந்தோ ஷித்திருக்கிறதினாலே, உலகத்திலே பெண்கள் சோறுசமைத்துத் தங் களுடைய நாயகர்கள் வரவைப் பார்த்துக்கொண்டிருக்கிற காலத்தை யொத்தி ருக்கின்றது எ - று. 262

கடிம னைக்கணே தமரிறீஇ யேதிலார்க் கடியுங்
கொடியார் போலத்தம் பிள்ளையைக் கூட்டினிற் கூட்டி
வடிநெ டுங்கணாய் மலர்நெடுஞ் சோலைக டோறும்
கொடியி னங்கருங் குயில்களைத் துரப்பன குறியாய்.

இ - ள். கூரிய நீண்ட கண்களையுடையவளே! காவலையுடைய தங்கள் வீட்டிலே தம்மைச் சேர்ந்தவர்களை இருக்கச்செய்து, அந்நியரை நீக்குகின்ற கொடுஞ்செய்கை யுடையவர்கள்போல, நீண்ட பூஞ்சோலைகளிலெல்லாம் காக் கைக் கூட்டங்கள் தமது குஞ்சைக்கூட்டிலே யிருக்கச்செய்து, கருங்குயில்களை ஓட்டச்செய்வனவற்றை நீ பார்ப்பாயாக எ - று. 263

ஆர ணீன்மடைப் படைப்பையிற் புகாதிடை யழுந்து
தூர வோடியே வெளியினிடைப் பரவுறுந் தோயந்
தார மானவள் வருந்திடக் கணிகையைச் சாருஞ்
சோர னொத்தன முத்தனத் திருநகைத் தோகாய்.

இ - ள். முத்துப்போலும் அழகிய பல்வரிசையைக்கொண்ட மயிலே! வரம்புகள் நீண்டுள்ள வயலின் மடைகளையுடைய மருதநிலத்தூர் வழியே போகாமல், நடுவே பள்ளமாயமுழுந்துகிடக்கிற நீண்ட வெகுதூரம்வரையிலுஞ் சென்று வெறு வெளியான நிலங்களிலெல்லாம் நீர பரவுகிறதானது, மனைவியானவள் வருத்தப்பட வேசையை யடைகிற கள்ளரை யொப்பாயின எ - று.

சோரரென்றார். அவர் மனைவிமக்களுக்குக் கள்ளராதலால். 264

மன்றல வண்டிசை பாடமா மயினட மாடத்
தென்றல வந்தலைத் தலைபல முழவொலி செய்ய
நின்ற பூகங்க ளிலைபழுக் காயெதிர் நீட்டக்
கொன்றை பொன்சொரி வளமைபா ராய்குலக் கொடியே.

இ - ள். எனது குலத்துக்கேற்ற பெண்ணே! (மலர்களிலே பெரிதுந் தங்குதலினாலே) மணங்கொண்ட வண்டுகள் பாட்டுகளைப் பாடவும், கறுத்த மயில்கள் நடனஞ்செய்யவும், தென்றற்காற்றுவந்து வீசுதலினாலே பல அலைகள் மத்தளம்போலொலிக்கவும், அங்கே நிற்கின்ற கமுகமரங்கள் வெற்றிலைக் கேற்ற பாக்குகளை எதிரே நீட்டிக்கொடுக்கவும், கொன்றைமரங்கள் (ஆடுகிற பேருக்குப்) பொன் கொடுப்பனபோல மலரைச் சொரிகின்ற அழகையும் நீ பார் எ - று. 265

மதக்கு மங்கல முரசெழ வண்டுவாழ்த் திசைக்க
உதிர மொத்தசெந் தாமரை யோமத்தீ வளரப்
புதும லாத்துணை புணரிள வன்னமும் பெடையும்
வதுவை செய்வன வொப்பன கண்டருண் மயிலே.

இ - ள் மயில்போலுஞ் சாயலையுடையவளே! மங்கலவாத்தியம்போல் மதகுநீ ரொலிகிளரவும், (பல்லாண்டுகள் சொல்வதுபோல) வண்டுகள் வாழ்த்துப் பாடவும், ஓமாக்கினிகள்போல இரத்தின மயமான செந்தாமரை மலர்கள் விளங்கவும், புதிதாக மலர்ந்த பூவிலே சோடாகக் கூடுகின்ற இளமையான ஆணன்னமும் பெடையன்னமும் விவாகஞ் செய்துகொள்வனவற்றை ஒத்திருக்கின்றன நீ பார்த்தருளாய் எ - று

தாமரைமலரி னிதழ்கள் செம்மைநிறமுண்மையைப்பற்றி "உதிரமொத்த செந்தாமரை' என்றார். 266

வெடித்த வாற்சிறு கன்றுகண் மேதியின் முலைப்பால
குடித்த வேம்பலா லரும்பலா கோகன கப்பூக்
கடித்து வாங்குத லூடலின் மகளிரைக் கணவர்
பிடித்து வாங்குத லொப்பது பெண்கொடி பாராய்.

இ - ள். பெண்கொடியே! மேலேதூக்கிக்கொண்ட வாலையுடைய இளங் கன்றுகளானவை, எருமைமாட்டினது முலைப்பாலைக் குடித்த சந்தோஷத்தினாலே, அரும்பாகி மலருகின்ற தாமரைப்பூவைக் கடித்து இழுத்துக்கொண்டு

நிற்பதானது பிணங்கின சமயத்திலே பெண்கள் கையைப் பிடித்து நாயகரிழுப் பதுபோ லிருக்கின்றது நீ பார் எ - று. 267

இத்த டத்துமீ னருந்திய வன்னங்க ளெல்லாம
அத்த டத்தின்மொய்த் திழிவன வருநிதி யெல்லாந்
தத்த வக்களித் திழந்தவர் தங்களைத் துறந்து
கைத்து ளார்கட்செல் கணிகைய ரொப்பன காணாய்.

இ - ள். இந்தக் குளத்திலே மீனைப் புசித்த நீர்ப்பறவைகள் முழுதும் அந்தக்குளத்திலே நெருங்கிப்போ யிறங்குகின்ற தன்மையானது, அருமையான திரவியங்களை முழுதும் தங்களுக்குக்கொடுத்து இல்லாமையைக் கொண்டவர்க ளிடத்திலே போகின்ற வேசையரை யொப்பா யிருக்கின்றன (பெண்ணே!) பார் எ - று. 268

மேயு மோதிமஞ் சேலினைக் கவர்ந்திட வெருண்டு
பாயு நீள்கயல் செங்கம லத்தலர் படிவ
ஆயின் மிக்கநற் கணவனை யமரிடை யிழந்து
தீயில் வீழ்குவா ரொப்பன திருந்திழை காணாய்.

இ - ள். திருத்தமான ஆபரணங்களை யணிந்தவளே! குளத்திலே மேய்கிற நீர்ப்பறவைகள் சேல்கெண்டையைப் பிடித்துத்தின்ன, அதற்குப் பயந்து பாய்கிற நீண்ட கயற்கெண்டைகள் செந்தாமரைப் பூவிலேபோய் விழுகின்றனவானது, தன் தாயைப் பார்க்கிலும் மிகுந்த அன்புள்ள கணவனைச் சண்டையிலே போய்ச் சாவக்கொடுத்துத் தீயிலே விழுகிற பெண்களை ஒப்பாயிருக்கின்றன நீ பார்ப்பாயாக எ - று. 269

கூடு மன்னங்கள் பறந்திரை கவர்ந்திடக் குழாத்தில்
ஊடு மன்னமொன் றுயர்ந்ததா மரைமிசை யுகளல்
நீடு வார்கழை யேறியே நிறையவை நடுநின்
றாடு வேழம்ப மாதரை நிகர்த்தலபா ரணங்கே.

இ - ள். ஓ பெண்ணே! கூடியிருக்கின்ற அன்னங்கள் பறந்துபோய இரைகொண்டு தின்ன, அக்கூட்டத்திலே பிணங்கின ஒரு அன்னமானது உயர்ந்து தோற்றுகின்ற தாமரைமலரின்மேலே வருந்திக்கொண்டு நிற்பதானது, மிகவும் நீண்ட மூங்கிலின்மேலே யேறி நிறைந்த சபை நடுவே நின்று ஆடுகிற கழைக்கூத்தாடிச்சியை ஒப்பாயிருக்கின்றது நீ பார் எ - று. 270

நன்பு னற்பது மந்துதைந் தளிநற வுண்டால
வன்பி னிற்பிடித் தூடிய மகளிரை மணாளர்
அன்பு றத்தெவிட் டாவித ழூறமு தருந்தும
இன்ப மெல்லலை யொப்பன விளங்கொடி காணாய்.

இ - ள். இளங்கொடிபோலும் பெண்ணே! அந்த நல்ல நீரிலே மலர்ந் திருக்கிற தாமரைமலரிலே வண்டுகள் நெருங்கி மொய்த்துத் தேனைக் குடிக்கிற

தினுலே, பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டு பிணங்கின பெண்களை நாயகர்கள் பிரீதியாகத் தெவிட்டாத இதழ்களிலுள்ள அரிய அமுதத்தைப் பருகுகின்ற சுகத்தை யுடையதாகிய மிருதுவான மெத்தையை ஒத்திருக்கின்றன நீ பாராய் எ - று. 271

துஞ்ச வந்தநா டோழரை விட்டய றுறக்கும்
வஞ்ச நெஞ்சர்போ லாதுவண் டணிகுழன் மாதே
அஞ்ச லாதுநின் றவருட னிறந்தநல் லவர்போல்
கஞ்ச நெலுட னறுப்புண்டு கிடப்பன காணாய்.

இ - ள். வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய பெண்ணே! சாவு வந்தபோது அந்த நண்பரை நீங்கி வேறே செல்லுகின்ற வஞ்சனையையுடைய மனத்தினரை யொப்பாகாமல், பயப்படாமல் அந்த நண்பருடனே சாகிற நல்லோரைப்போற் றாமரைமலர்கள் நெல்லுடனேகூட அறுபட்டுக் கிடக்கின்றவற்றை நீ பார்ப்பாயாக எ - று 272

அடல னங்கனுக் கணியபி டேகமே யனையாய்
மடல்கொள் வாவிநீர் குடைந்திடப் பாய்கின்ற மடவார்
மிடனொ டுஞ்சிலை புயல்பிறை சுமந்துபன் மின்போய்க்
கடலில் வீழ்ந்திடுங் காட்சியை நிகர்ப்பது காணாய்.

இ - ள். எல்லாவற்றையும் ஜயங்கொள்ளுகிற மன்மதனுக்குச் சூட்டுவதான கிரீடம்போன்றவளே! பூவிதழ்களைக்கொண்ட குளத்து நீரிலே விழுகிற பெண்களுடைய தோற்றம் பலங்கொண்ட நீண்ட விலலும் மேகமும் பிறையுங் கொண்டு பல மின்னல்கள்போய்க் கடலிலே வீழ்கிற தோற்றத்தை ஒத்திருக்கிறதை நீ பாராய் எ - று 273

ஏந்தி ளந்தனத் தொருத்தியின் புனல்குடைந் தெழுந்து
கூந்த லங்கையான் முறுக்குவாள் குளிர்முகத் தோற்றங்
காந்தண் மாமல ருடுபோய்த் திங்களைக் கரிய
பாந்த டண்டுவ தொப்பது பசுங்கொடி பாராய்.

இ - ள் பசுங்கொடிபோல்பவளே! தாங்குகின்ற இளமையான கொங்கைகளையுடைய ஒருபெண்ணானவள் இனிதான நீரிலே முழுகி எழுந்திருந்து கூந்தலைத் தனதழகிய கையினுலே முறுக்கி நீரைப்பிழிகிறவளுடைய குளிர்ந்த முகத்தின் தோற்றமானது, காந்தளின் பெரிய மலருள்ள விடத்திலே போய்ச் சந்திரனை ஒரு கரும்பாம்பு பிடித்தலை ஒத்திருக்கின்றதை நீ பார்ப்பாயாக எ - று. 274

சிறுந் தறபெருங் கண்ணியோர் தெரிவைநீர் மூழ்க
நறும லர்க்குழல் வண்டெழுந் தலமந்து நாலவ
அறநெ றிப்படி புரந்தகோ லரசாக ளிறக்க
மறுகு மக்குடி போல்வன காண்டிமா மயிலே,

இ - ள். கறுத்தமயில்போலும் சாயலையுடையவளே! சிறிதான நெற்றியையும், பெரிதான கண்களையுமுடைய ஒரு பெண் நீரிலே முழுகுவதற்குச் செல்ல, அப்போதவளுடைய மணங்கொண்ட பூவையணிந்த கூந்தலி லிருந்த வண்டுகள் கிளம்பிச் சுழன்று அலைவனவானது, தருமநீதியாக உலகையாண்ட செங்கோலையுடைய அரசர்களிறந்துபோகவே துன்பப் படுகிற அந்தக் குடிகளை ஒத்திருக்கின்றன நீ பார் எ - று. 275

மஞ்ச னங்குடைந் தாடியோர் வாணுதன் மடந்தை
கஞ்ச நன்மலர்க் கடைந்ததன் மிசைக்கரம் வைத்தல்
சஞ்ச லந்தவி ரென்முகந் தனைக்கண்டு தளும்பா
தஞ்ச லென்றுகை யமைப்பது நிகர்த்ததல்பா ரணங்கே.

இ - ள். ஓ பெண்ணே! ஒரு ஒளிபொருந்திய நெற்றியையுடைய மங்கையானவள் திருமஞ்சனமாக நீரிலே முழுகி விளையாடி ஒரு தாமரையினது நல்ல பூவைக்கிண்டி அதன்மேலே தன் கையை வைத்திருத்தலானது; என் முகத்தைப் பார்த்துக் கண்ணீர் துளும்பாமல் துன்பத்தை விட்டிரு; பயப்படாதே யென்று தனது கையா லமைக்கின்றதை ஒத்திருக்கின்றது நீ பார் எ - று. 276

கானி ரைப்பெரு நீழலின் வருமொரு கன்னி
தேனி ரைத்தமென் சிகழிகை நறுமலர் தெரிவ
வானி ரைத்ததண் கருமுகி லிடையிடை வயங்கி
மீனி ரைத்தன வொப்பன காண்டியான் மினனே.

இ - ள். பெண்ணே! சோலையினது மரவரிசையிலுள்ள பெரிய ஒரு நிழலிலே வருகின்ற ஒரு மங்கையினுடைய வண்டுகளொலிக்கின்ற மிருதுவான கொண்டையிலே மணங்கொண்ட மலர்கள் விளங்குவனவானது, ஆகாயமெல்லாம் பரவிக்கொண்டிருக்கிற குளிர்ந்த கறுத்த மேகத்தின் நடுவே விளங்குகிற தாய் நட்சத்திரங்கள் பரவினவற்றை ஒத்திருக்கின்றன பார் எ - று. 277

பணைம லர்த்தடமூழ்குவா ளுசியிற பலகால
மணம றிந்திட வைத்தவிந் தீவர மலர்தான
இணைவி ழிகளுமுன் றோற்றிணக் குதற்கிசைந் தயலோர்
துணைபி டித்திதஞ் சொலவது போலவது தோகாய்.

இ - ள். பெண்ணே! பூத்திருக்கின்ற மலர்களையுடைய குளத்திலே முழுகுகின்றவள் தன் மூக்கிலே எப்போதும் வாசம் வீசுவதாக வைத்திருக்கின்ற நீலோற்பல மலரானது அவளிரண்டு கண்களுக்குந்தான் முன்னே தோற்றுப் பின்பு சமாதானஞ் செய்வதற்காக வேறொருவரைத் துணையாகக்கொண்டு நன்மை சொல்லுகிறவர்களை ஒத்திருக்கின்றது எ - று. 278

அடலை யுற்றவேல் விழியினுள் வாய்கண்ட வாமபல்
உடலி னுடபசந் துடடுளைப பட்டசைந் தொல்கி
மடலெ டுத்திரு மலரடி பூணலான மயிலே
படர்த டங்குடைந் தேறுவாள் படுமபடா பாராய்,

இ - ள். பெண்ணே! வெற்றியைக்கொண்ட வேல்போலுங் கண்களையுடைய ஒருத்தியின வாயைககணட செவவலலி மலரானது தனதுடமபுக குள்ளே பசுநிறததைககொணடு உள்ளே துவாரமுடையதாய்த துவணடு இன்னமிங்கே பூவிதழ்களைக கொய்துகொண்டிருமெனபதுபோல, தன திதழ்களாலே அவளுடைய இரண்டு கால்களையுப பூணடுகொளளுதலாலே, அந்த விசாலமான குளததிலே முழுகிக கரையேறுகிறவள் படுகிற துனபததைநீ பாா எ - று.

நறுமலர்க்குழ லாயொரு நனனுத லோடுந
துறுமலர்ததட மாடுதன றேனறலை யொருததி
முறுவ லாலித ழதுககியே முனைவிழி சிவககக
கறுவி நோககிய நோககமு நோககுநீ காணாய்.

இ - ள். பரிமளங்கொண்ட பூவையணிநத கூநதலையுடைய பெணணே! ஒரு பெணணானவள நீராடிககொணடு நிறக, நெருஙகின மலாகளையுடைய அந்தக குளததிலேதானே நீராடுகினற தனது நாயகனைககொணட மறறொருததி தனது பறகளாலே இதழைக கடிததுக கூாமைகொணட கணகளை சிவகக மனததிலே கோபஙகொணடு அவள பாாககிற பாாவையையும, அவன கணபாாவையையும நீ பார் எ - று. 280

இன்ன தன்மைய யாவையுங கணடுகண் டேகி
மினனு மனனனுங கலவியும புலவியும விளைததுந
நனனெ டுமபணை கடநதருஞ் சுரததிடை நணணி
வனன மாமுலை வைரவி கோடடததில வநதாா.

இ - ள். இபபடிபபட்ட வேடிககைகளெல்லாம பாாததுககொணடுபோய்ச் சநதிரவதியும அரிச்சநதிரனும கூடலும ஊடலுஞ செயதுகொணடே அநத நலலதான நெடிய மருதநிலததைக கடநது சென்று அபபால அரிதான பாலைவனததுககுப போய, சுவாணநிறததையுடையதாய்ப் பெரிதான கொஙகைகளையுடைய காளி கோவிலுககுளளே இருவரும வநதாாகள எ - று. 281

யோகி னிககணஞ் சூழநதிடக கொடுஞ்சுரத துறையு
மோகி னிபபெரு மாடிருமுனறிலிற றெழுது
பாகி னிறசிறந திரதிதத மொழியொடு பணிமந
தாகி னிததுறை யணைநததிற படிநதய லகனறாா.

இ - ள். அநேகம யோகினிககூட்டஙகள் சூழ, அநதக கொடுமையான பாலைவனத்திலே வாசஞ்செய்கினற காளிகாதேவியினுடைய திருமுறறததிலே நின்று அவைகளை வணஙகிககொணடு, சர்ககரைப் பாகிலும் சிறபபுள்ள தாய்த திததிககினற வசனததையுடைய சந்திரவதியுடனே குளிாந்த கஙகாநதி தீரததுககுவந்து அதிலே நீராடிககொணடு அப்பாற போனார்கள எ - று.

வேர லோங்கிய மலைகளும வனங்களும விடுததுச
சூர லோஙகிய வருளியுந துருததியுங கடநது

சார லோங்கிய சக்கரப் பொருப்பையுந் தள்ளி
யார லோங்கிய வயோத்திமா நகரியை யணைந்தார்.

இ - ள். மூங்கில்கள் வளர்ந்துள்ள மலைகளையும் காடுகளையுங் கடந்து, பிரம்புக்காடுகள் வளர்ந்துள்ள அருவியாறுகளையும் அவ்வாற்றினது திட்டுகளையுங் கடந்து சென்று, பக்கங்களிலே உயர்ந்துள்ள சக்கரவாளகிரியையுங் கடந்து போய், மதில்களுயர்ந்துள்ள அயோத்தியாபுரியைப் போய்ச் சேர்ந்தார்கள் எ - று. 283

வார ணத்தொலி யெழுமணி வாயிலிற் புகுந்து
தோர ணத்தெருக் கடந்துசோ பனம்பலர் சொல்ல
ஆர ணத்தொலி யாதிகண் மழையென வார்க்கப்
பூர ணக்குடஞ் சுமந்தபொற் கோயிலுட் புகுந்தார்.

இ - ள். யானைகளினுடைய தொனி கிளறுவதான அழகிய கோட்டை வாயிலுக்குள்ளே நுழைந்துபோய்த், தோரணங்கள் கட்டியிருக்கிற வீதி கடந்து, மங்கல வாழ்த்துகள் அநேகம் பெண்கள் பாட, வேதவோசைகள் முதலாகிய ஓசைகள் மேகங்கள்போல முழங்க, நிறை நீர்க்குடம்போற் சிகரத்தைத் தாங்கியிருக்கிற சுவர்ணமயமான அரண்மனைக்குள்ளே போனார்கள் எ - று. 284

முளைத்த வெற்பன கோயிலின் முதிரமல ரணைமேல்
இளைத்த நுண்ணிடை யிரதியுங் காமனு மெனத்தாம
விளைத்த நலவின்ப வெள்ளத்து வேந்தனு மயிலுந்
திளைத்தி ளைத்தருள் பொழிந்திடக் கழிந்தன சிலநாள்.

இ - ள். தானே தோன்றின மலைபோலிருக்கிற அந்த அரண்மனையிலே அதிகமாய் புஷ்பங்களா லலங்கரித்துள்ள மெத்தைமேலே சுருக்கமாய்ச் சிறிதாயிருக்கிற இடையையுடைய இரதிதேவியும் மன்மதனும்போல அரிச்சந்திரனும் சந்திரவதியும் தாங்கள் செய்துகொண்ட நல்ல சுகக்கடலிலே கூடிக்கூடி ஒருவருக்கொருவர் தயவு பெருகி வளர இப்படிச் சிலநாள் கழிந்தன எ - று.

கலி விருத்தம்

தருவை யொத்த கரத்தரிச் சந்திரன்
அரிவை யைப்பிரி யாம லணைந்தநாள்
மருவை யுற்ற மலர்க்குழல் வல்லிதன்
திருவ யிற்றிற் கருப்பந் திகழ்ந்ததே.

இ - ள். கற்பக விருட்சத்தை யொப்பான கையையுடைய அரிச்சந்திர மகாராஜன் அந்தச் சந்திரவதியை ஒருபொழுதும் பிரியாமல் கூடிவருகிற காலத்திலே மணங்கொண்ட பூவையணிந்த கூந்தலையுடைய சந்திரவதியினுடைய திருவுதரத்திலே கர்ப்பமுண்டாயிற்று எ - று. 286

செயிர றப்புனை றேக்கிடக் காமத்தண்
பயிர்மு ளைத்தெழும் பான்மையி தாமென

உயிர்ந லக்கொடி யொண்ணுதல் வண்ணமெய்ம்
மயிர்பொ டிப்புற் றருமபி மலர்நதவே.

இ - ள். குறறந்திர நீரை நிரப்புதலினுலே காமமெனகிற குளிர்ந்த பயி ரானது முளைத்தெழுவதான முறைமை இப்படித்தா னிருககு மெனனும்படி, அரிச்சந்திரனுக் குயிர்போலும நலத்தையுடைய சந்திரவதியின் அழகான உடம்பெல்லாம் உரோமஞ் சிலிர்ததப் புளகாங்கிதங்களும அதிகமாயின எ - று.

கொடியொண்ணுதல் - கொடிபோலபவளாய அழகிய நெற்றியை யுடைய வள் என்க. 287

நிலைம யிரககண் குருககொண்டு நீளகருங
கொலைம தாககண் குழிநது குளிர்முகங
கலைநி லாவின் விளாததுக கதிரமணி
முலைமு கஙகள கறுபபு முதிரநதவே.

இ - ள். நிமிர்ந்து நிற்கின்ற மயிரினிடமெலலாம புளகித்தலாய, நீண்ட கொலை செய்வதாய் மருட்சியையுடைய கரிய கணகளும குழிந்து பளளமாய் குளிர்ந்த முகமும, சோடச கலைகளையுடைய சநதிரனைப்போல வெளளையாய், ஒளிபொருநதிய சீலரததினமபோனற முலைககாமபுகளும கறுபபுமிக்கன எ - று. 288

தொடைம லர்ககுழல சோரநது செழுநதுகி
லுடைநெ கிழ்நது பையபபைய வொலகியே
நடைபெ யாநது நரமபுப சுததவால
இடையுண் டெனறறி யபபட்ட தியாக்குமே.

இ - ள். தொடுதத மலரணிநத கூந்தலுஞ் சோாதலாய்ச் செழுமையான வஸதிரமுமுடுததுதல குலைந்து மெளளமெளளத துவண்டு நடை நடைந்து உடமபிலுளள நரமபுகள பச்சை நிறமாயின. அப்போது எல்லாாககும இடையு முளதா யிருக்கிறதெனறு தெரிதலாயிறறு எ - று. 289

பாஙகி மாரிரு பககமு நினறுகை
தாஙகி முனசெலத தானடந தொல்கியே
ஆங்கு திஙக ணிறைநதபின பாயிழை
தீஙகி லாமற சிறுவனைப பெறறனள.

இ - ள். தோழிமார்க ளிருபுறததிலும நினறு கைகளைத் தாங்கிக கொணடு முனனேபோகப் பினபு தானுநடந்து துவண்டு அப்படிப் பதது மாதமு நிரமபின பினபு சநதிரவதியானவள் யாதொரு தோஷமிலலாமல் புத் திரனைப பெறறுள எ - று. 290

பிள்ளை வநது பிறநதன னெனறலும
வள்ள லுள்ள மகிழ்நதிர வோாககெலாம்
அள்ளி நீரறை யைததிறந தேழுநாள்
கொள்ளை கொண்மினெ னக்கொடுத தானரோ.

இ - ள். அப்படிப் பிள்ளையானவன் உண்டாகிப் பிறந்தானென்றவுடனே பிரபுவாகிய அரிச்சந்திரன் மனமகிழ்ந்து, யாசகருக்கெல்லாம் நீங்கள் பொக்கிஷத்தைத் திறந்து அள்ளிக்கொள்ளுவதாய ஏழுநாளளவும் கொள்ளையடித்துக் கொள்ளுங்களென்று உத்தரவு கொடுத்தான் எ - று 291

மதலை வந்துபி றந்தம கிழ்ச்சியால்
திதலை யல்குன லார்தெரு வெங்கணும்
பதலை தோறும பனிநீர் புழுகுநெய்
குதலை மாதர் கொணர்ந்து சொரிந்தனர்

இ - ள். அப்படிப் பிள்ளையுண்டாகிப் பிறந்த சந்தோஷத்தினாலே தேமற் படர்ந்த அல்குலையுடைய பெண்களிருக்கிற தெருவெல்லாம், பானைகளிலே பனிநீரும் புனுகும் அத்தரும் மழலைச்சொற்களையுடைய அப்பெண்டுகள் கொண்டுவந்து கொட்டினார்கள் எ - று 292

தொட்டி தாழிக டோணிக டாரங்கள்
மட்டி லாத மறுகு தொறுநிரீஇ
விட்ட மஞ்சன மவீதியெ லாங்கடை
கட்டி வைத்தபின் கன்னியர் கூடினர்.

இ - ள். மாதத்தொட்டிகளிலும் பானைகளிலும் தோணிபோலிருக்கிற பாத்திரங்களிலும், கடாரங்களிலும் அளவில்லாத வீதிகளிலெல்லாம் வைத்து ஊற்றின திருமஞ்சன நீர் அந்த வீதிகளெல்லாம் நிரம்ப எந்த இடங்களும் அமைத்துக்கொண்ட பின்பு மஞ்சள் நீராடப் பெண்கள் கூடினார்கள் எ - று. 293

இளகி லாநிடை சேலையி றுக்கிமென்
புளகக் கொங்கையிற் கச்சுறப் பூட்டியே
அளகம பின்னி யணிக ளணிந்துமாப்
பிளவு தோன்றுகட் பேதையர் தோன்றினர்.

இ - ள். இடையிலே சீலைகளை நழுவாமல் இறுக்கக் கட்டிக்கொண்டு மிருதுவான புளகமரும்பின கொங்கைகளிலே இரவிக்கைகளும் நெருங்கப் பூட்டிக் கொண்டு கூந்தலைப் பின்னிக்கொண்டு ஆபரணங்களும் அணிந்துகொண்டு மாவினது பிளவுபோலுந் தோன்றுகிற கண்களையுடைய பெண்கள் எங்கும் நீராடப் புறப்பட்டார்கள் எ - று. 294

பொன்னின் வட்டிலும் பொன்னின் விசிறியும்
துன்னு தங்கக் குழலுந் துருத்தியும்
மின்னு நுண்ணிடை மெல்லிய லார்கொடு
நின்னி லென்றெதிர் நீர்விளை யாடினர்.

இ - ள். மின்னுகின்ற நுண்ணிதான இடையையுடைய பெண்கள், பொற்கிண்ணங்களும், பொற்றுருத்தியும், நெருங்கின தங்கக்குழலும், தோற்றுருத்தியுங் கைகளிலே கொண்டு, நில்லு நில்லுமென்றொருவர்க்கொருவரெதிர் நின்று மஞ்சள்நீர் விளையாடினார்கள் எ - று. 295

ஆழி சோர வணிவடஞ் சோரநிடத்
தாழி நீர்மொண்டு தாமெறிந் தாடினார்
ஏழு மேகமு மொத்திடத் துப்பொழி
ஊழி காலத்து மாரியை யொக்கவே.

இ - ள். மோதிரங்கள் கழன்றுபோகவும், அணிந்த முத்துமாலைகள் அற்று விழவும், ஏழு மேகங்களும் ஒருசேரக்கூடிப் பூமியினிடங்களெல்லாம் பொழிகின்ற ஊழிகாலத்து மழையை ஒப்பாக, பானைகளிலிருக்கிற மஞ்சணீரை மொண்டு தாங்களே ஒருவர்மேலொருவர் ஊற்றிக்கொண்டு விளையாடினார்கள் எ - று. 296

துடியி டக்கை வளைபணை துந்துபி
திடிமென் பேரிகை சின்னநற் காகளம்
இடியெ னக்கிளர்ந் தார்த்திட வேழையார்
படியின் மின்பரந் தென்னப் பரவினார்.

இ - ள். உடுக்கை-இடக்கை-சங்கு-நகாரா - துந்துபி - திடிமென்று (ஓசை) முழங்குகின்ற பேரிகை-சின்னம்-நல்ல எக்காளமுதலியன இடிபோல முழங்கி ஒலிக்க, அந்த வீதிகளெல்லாம் மின்னல் பரவினதைப்போற் பெண்கள் பரவினார்கள் எ - று. 297

முருக்கின வாய்ச்சி யொருத்தி முகத்திலோர்
திருக்கு முற்பெய செழும்புனல் சிந்துதல்
அருக்கற் கென்று மளித்திடு மாக்கியம்
சரற்ச சிக்குந் தருசெயல் போன்றதே.

இ - ள். முருக்கம்பூவைப்போலும் வாயையுடைய ஒருத்தி முகத்திலே, மற்றொருத்தி, அழகிதான பீச்சுக்குழலிலேக்கொண்ட செழுமையான நீரைச் சிந்துதலானது, சூரியனுக்கு எப்போதுங் கொடுக்கிற அர்க்கியசலம், சரற்கால சந்திரனுக்குங் கொடுக்கிற செய்கைபோலிருந்தது எ - று. 298

ஒருத்தி கொங்கையி ரண்டினி லொன்றன்மேல்
துருத்தி நீரிரு தோகையார் வீசினார்
பெருத்த மந்தர வெற்பைப் பிணித்ததோர்
பருத்த வாசுகித் தாம்பிழுப் பாரென.

இ - ள். பெரிதான மந்தரமலையைச் சூழ்ந்து ஒரு கனமான வாசுகியென்னுங் கயிற்றினாலே இழுப்பதுபோல, ஒரு பெண்ணினுடைய இரண்டு கொங்கைகளில் ஒரு கொங்கைமேலே துருத்தியிலுள்ள நீரை இரண்டு பெண்கள் பீச்சினார்கள் எ - று. 299

நவ்வி நோக்கி நளிர்முகத் தேயொரு
செவ்வி யாள்சிந் திடுஞ்சிவி றிப்புனல்
அவ்வி யத்துட னாழிவெண் டிங்களைக்
கவ்வி முன்னிமிர் கட்செவி யொத்ததே.

இ - ள். மான்போலுங் கண்ணியான ஒருத்தியினுடைய குளிர்ந்த முகத்தில், மற்றொரு பேரழகியானவள் வீசுகின்ற அருத்தி நீரானது, சுத்தோதகமான கடலிலே தோன்றுகின்ற வெண்மையான சந்திரனைப் பொறாமையினால் கவ்விக்கொண்டு யாவர் முன்னும் தோன்றுகிற கேது வென்னும் பாம்பை ஒத்திருந்தது எ - று. 300

காருருக் கொள்க ருங்குழல் கைக்குழ
னீரொருத் திநிதம்ப தத்திற் றுக்கலால
போருக் கென்றுபு றப்படும் புட்பகத்
தேருக் கிட்டதி ரள்வட மொத்ததே.

இ - ள். மேகநிறத்தைக் கொண்ட கறுத்த கூந்தலையுடைய ஒருத்தி கையிலே பிடித்திருக்கிற பீச்சுக்குழலின் நீரானது, மற்றொருத்தியின் நிதம்பத்தில் பீசப்படுகிறபோது, சண்டைக்கென்று வெளிப்படுகிற புட்பகத்தேருக் கணிந்த திரட்சியாகிய முத்துமாலையை ஒப்பாயிருந்தது எ - று. 301

புழுகு சந்தனம் பொன்னிறக் குங்குமம்
ஒழுகு செச்சை யுத்தகம் மசலம்
வழுவில் பொற்சுண்ண நல்லெண்ணெய் மஞ்சணீர்
முழுதும் வல்லியா மொண்டெறிந் தாடினார்.

இ - ள். புனுகு - சந்தனம் - பொன்னிறமான குங்குமம் - ஒழுகுவதாகிய சாந்தநீர் - பனிநீர் - குற்றமில்லாத பொன்னிறக் கந்தபொடி - நல்லெண்ணெய் - மஞ்சணீர் ஆகிய இவைகளெல்லாம் அந்தப் பெண்கள் முகந்து வீசி விளையாடினார்கள் எ - று. 302

வம்பு லாமுலை மாதர்க்கு மைந்தர்க்கும்
கம்ப மால்களிற் றேறுனுக்குங் கன்னிக்கும்
அம்பு ராசியி லாரமு துற்றநாள்
உம்பர் கோனுற்ற வோகைவந் துற்றதே.

இ - ள். இவ்வாறு அவ்வயோத்தியா புரியிலுள்ள இரவிக்கை யணிந்த தனங்களுடைய பெண்களுக்கும், புருஷர்களுக்கும், தூணிலே கட்டப்படுவதாகிய உயர்ந்த யானைமேலேறுகின்ற அரிச்சந்திரனுக்கும், சந்திரமதிக்கும், கடலிலே அரிதான அமுதமும் உண்டானபோது, தேவர்களுக்கும் அவர்களுக்கு அரசனான இந்திரனுக்கு முண்டான சந்தோஷம் (போல இவர்களுக்கு) வந்து கூடியது எ - று. 303

மேலி னோர்தம் விதரண முந்தனிக்
கோலி னோதங் குணமுங் குலமனு
நூலின் வந்த நுணங்கிய கேள்வியும்
பாலி னோடு கலந்து பருகினார்.

இ - ள். மேன்மக்களுக்குள்ள புத்தியும், நிகரில்லாத நீதியை யுடையவர்க்குள்ள குணமும, அக்குலத்திலுள்ள மனுவாலே சொல்லிய நீதிநூலின் படியே வருவதான அதிருட்சமமான கேள்வியும் தங்கள முறையுடனே கூட்டிக் குடித்தார்கள் எ - று.

புத்தி - குணம்; கேள்வியாகிய தேனைத தங்கள் புத்தியாகிய பாலுடனே கூட்டி யனுபவித்தாரக ளெனக. 304

ஆவலின னரிச சநதிரன் மைந்தனை
மூவ ரனனமு னிவர்கள் வாழ்த்தியே
யாவ ருநநிக ரில்லவற கேற்றிடத
தேவ தாசனெ னபபெயா செபபினா.

இ - ள். மும்மூர்த்திகளை யொப்பான தவமுனிவாகள் மிகுநத பிரீதி யுடனே வநது, அரிச்சநதிரனுடைய புத்திரனை ஆசீர்வதிதது, எவரு நிகரில லாத அவனுககுத தகுதியாகத தேவதாசனெனறு நாமகரண மிட்டார்கள எ று

பொலன்கொள் காபபுப புலியுகிர்த தண்டைமுத
தலங்கல கிண்கிணி யைமபடை யாழிகள்
இலஙகு பொனனரை ஞாணிவை சாததியே
துலஙகு மாமணித தொட்டிலி லேற்றினா.

இ - ள். பொன்னாலே செய்த காப்பு, புலிநகத்தாலே பதக்கமும, தண்டை-முத்துமாலை-கிண்கிணி-பஞசாயுதபபூண-மோதிரங்கள - விளஙகுகினற பொனனரைஞாண ஆகிய இவைகளெலலாமணிந்து, துலங்குகின்ற பெருமை யையுடைய இரததின தொட்டிலில படுக்கவைத்தார்கள எ - று.

ஐமபடையானது; சிறுவாகளைத துாததேவதைகளி னினறுங காததற பொருட்டுக் காவறகடவுளாகிய விஷ்ணுமூர்த்தியின சஙகு - சகர - கதா - கட்க- கோதணடமெனனும பஞசாயுதஙகளின வடிவமாகச்செய்து சிறுவர்களின மாரபிற கோததணியும ஒருவகை ஆபரணம. 306

சூழு மாமணித தொட்டிலி லேற்றியே
தாழு நீள்குழற றுதியா போறறயாண்
டேழு புக்கன னிவவகை காதலன்
வாழுநா ளினில வநதவை கூறுவாம.

இ - ள். பெரிய இரத்தினஙகள பதிததுச் சூழ்வதான தொட்டிலின மேலே படுககவைதது நீணடு தொஙகுவதான கூநதலையுடைய தாதிமாாகள் வளாகக தேவதாசன ஏழுவயது நிரமபிய பிள்ளையானான. இவர்கள இவவாறு பிள்ளையுடனே வாழுஙகாலததிலே அவாகளுககு வந்தசெய்கையை இனிச் சொலலுகிறோம் எ - று. 307

விவாக காண்டம முறறிற்று.

ஆக விருததம - 411.

உ

கடவுள் துணை

## இரண்டாவது

# இந்திர காண்டம்

---

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

இம்மை யம்மை மறுமை யென்ன விசைத்து மாமறை கூறிய
மும்மை யுந்தெளி வுற்று நெஞ்சினின் முக்கு றும்பு மறுத்திடுஞ்
செம்மை யன்பர் மனத்து வைகிய தெய்வ நாயகர் தேவிமற்
றெம்மை யாளுடை யம்மை தாள்க ளிரண்டு மேத்தி யிறைஞ்சுவாம்.

இ - ள இப்பிறப்பும் முன்பிறப்பும் வருபிறப்பும் என்பன வுண்டென்று சம்மதித்துப் பெரிதான வேதங்கள் சொன்ன மூவகையுந் தெளிந்து, மனத்திலுள்ள மூவகைத் தோஷங்களையும் போக்கிக்கொள்ளுகின்ற சிறந்த குணத்தையுடைய அடியார்கள் மனத்திலே தங்குகின்ற தெய்வ நாயகருடைய தேவியாகிய எங்களை யடிமை கொள்ளுதலையுடைய அம்மைபாதங்க ளிரண்டையும் துதித்து வணங்கக் கடவோம் எ - று 1

கொற்ற வாசவன் முன்வ சிட்ட னுரைத்தற் கெதிர் கோசிகன்
சொற்ற வாறு முடிக்க வன்மை தொடங்கி நாடு விலங்கினால்
செற்ற வாறு முருத்து வண்டிரி சங்கு மைந்த னெழுந்துகான்
உற்ற வாறு நிகழ்ந்த வாறு முணர்ந்த வாறும் விளம்புவாம்.

இ - ள. வெற்றிபொருந்தின இந்திரனுக்கு முன்னே வசிஷ்டர் சொன்னதற்கு நேரே விசுவாமித்திரர் சொன்னதும், தாம் சொன்னபடியே முடிவு செய்யப் பலாத்காரமாகத் தொடுத்துக் கோசலநாட்டை மிருகங்களாலே அழித்ததும், அதற்குக் கோபங்கொண்டு உதாரகுணங்கொண்ட திரிசங்கு புத்திரனை அரிச்சந்திரன் புறப்பட்டுக் காட்டுக்குப் போனதும், அங்கே நடந்ததும் எமக்குத் தெரிந்த அளவு சொல்லுகிறோம் எ - று. 2

முண்ட கத்தி லுதித்த நாலு முகத்த வன்றரு காசிபன்
கொண்ட காதலி பெற்றெ டுத்தகு லக்கு மாரன் வலத்தினால்
பண்ட மூன்று விலங்க லங்கைய ரிந்த வச்சிர பாணியோன்
அண்டர் கோனர சாளு நீடம ராவ திந்தி றமோதுவாம்.

இ - ள. திருவுந்திக் கமலத்திலே பிறந்த சதுர்முகப் பிரமதேவன் பெற்ற காசிபர் கொண்ட மனையாளான அதிதி என்பவள் பெற்றுவளர்த்த குலபுத்திரனாகித் தனது பலத்தினாலே முன்னாளில் கோபங்கொண்டு மலைகளினுடைய கைகளான இறகுகளை அறுத்த வச்சிராயுத பாணியாகிய தேவேந்திரனவன

அரசாட்சிசெய்கிற நெடிதான அமராவதிப் பட்டணத்தின பெருமையை இனிச் சொல்லுகிறோம் எ - று. 3

மாட மண்டப மேடை மாமதில் வாயின் ஞாயிலக பாடநீள்
கூட கோபுர நீடு மாளிகை கோல வேதிகை யாலயம்
நாட கம்பயில் சாலை சூளிகை நாவலங்கனி யூறலபாய்
ஆட கங்கொ டமைதது மாமணி யாணி றைததவ னந்தமே.

இ - ள். மாடங்கள் - மண்டபஙகள - மேடைகள் - பெரியமதில்கள் - வருவது போவதாகியவழி - மதிலுறுப்பு - கதவு - நீண்டகூடம் - கோபுரம் - உயர்ந்த உப்பரிகை - அழகானதிண்ணை - கோயில - ஆட்டங கறறுகககொள்ளுகிற நாடக சாலை - சிகரம் ஆகிய இவைகளெலலாம், வெணணாவற கனியினது இரசம பெருகிப் பாய்வதான சாம்பூநதப் பொனனாலே செய்து பெரிதான இரததினஙகள் பதித்திருக்கிறவைக ளாவவொனறும அனைகம எ - று. 4

வேத சாலையும் யாக சாலையும யோக சாலையு மினனனார்
கீத சாலையு நாத மேதரு கின்ன ரமபயில சாலையும
காத லானவா யாவ ருநதொடா காம சாலையு மாபலிப
பூத சாலையு மாறி லாவனு போக சாலையு மூெலாம.

இ - ள். வேதசாலையும் - யாகசாலையும - போகசாலையும - மின்னலுக் கொப்பான பெண்கள் பாடும் கீதசாலையும - சுதிகூட்டிப் பாடுவதான கினனரி வாசிக்கிற சாலையும - ஆசைகொணடவாக ளெலலோரும் போகததகக காம சாலையும் - பெரிதான பூசை பண்ணததகக பூதசாலையும - விரோத மிலலாத சுகங்களை யனுபவிககினற சாலையுமே அந்த அமராவதி பட்டணமெல்லாம் எ - று. 5

உயிரெ னததகு மன்பா தமமுட னுமபர் மங்கைய ரின்பமென
பயிர்வி ளைததிடு மனைதொ றுமபல பதும ராக மிலங்குவ
செயிர்வி ளைததிடு மவுண ருற்றுறை திரிபுர ததழ லொககுநீள
வயிர முதலதொளி விரிவ தபுற மணடு வெண்புகை யொககுமே.

இ - ள். தங்களுககு உயிரேயெனறு சொல்லததகுந்த நாயகருடனே அந்தத் தேவகன்னிகள் சுகமெனகிற பயிரை விளையச்செயகிற வீடுகளிலெல லாம் அநேக பதுமராகரததினங்கள் பிரகாசிககினறதானது, இருவர்களுககும பகையை உண்டாக்குகினற அசுரர்களிருந்து வாசஞ்செய்கினற திரிபுரததிலே பிடித்த நெருப்புச்சோதியை ஒப்பாயிருககின்றது. அந்த நீண்ட வீடுகளிலே பதித்திருக்கின்ற வயிரங்களும் முததுகளும ஒளிவிரிககினறதானது, அநதத திரிபுரத்திலேபற்றின நெருப்பிலுண்டாகிற புகைபோல்வனவாம எ - று 6

அரவு மிழ்ந்தசெ மணியு மாரமு மணிகொ ளிநதிர நீலமுமம
பரவு கின்றம திற்பு றததம ரப்ப ணைத்து மழுததின

நிரவி டும்பல திசைய டங்கலு நிமிர்கொ ழுஞ்சுடர்வி ரிதலால்
இரவு முண்டிள நிலவு முண்டெறி வெயிலு முண்டொரு பொழுதினே.

இ - ள். பரவுதலாயிருக்கின்ற மதிலிலுள்ள இடமாகிய விரிவுமுழுதும் பாம்புகள் கக்குகின்ற சிவந்த ரத்தினங்களும், முத்துகளும், அழகு கொண்ட இந்திரநீலமும் பதித்திருக்கின்றன. ஆதலாலே சிரப்புதலையுடைய பல திசுகளிலும் உயர்வாகுகின்ற செழுமையான சோதிவிரிகிற தினால், ஒருகாலத்திலே இராககாலமு முண்டு. இளநிலாககாலமு முண்டு. எரிகின்ற வெயிற்காலமு முண்டு எ - று. 7

உரக னுசசியின் மணிப திததவு யர்நத பததியி டத்துமா
மரக தததிரண் மணிகு யிற்றி வகுதத பததி யடஙகலும்
கரத லத்தினில் விரிதி ரைககடல கவரு மத்த கசங்களும
குரக தததிர ளுஞ்செ றிநதன கோடி கோடி யிரட்டியே.

இ - ள். ஆதிசேடனுடைய உச்சியிலிருக்கிற இரத்தினஙகள் பதிதத உயர்வாகிய பததியினிடங்களிலும், பெரிதான மரகதங்களான திரணட இரத்தினங்கள் பதித்திருககிறதாய்ச் செய்திருக்கிற பததிகள முழுதிலும், துதிக்கையினாலே விரிந்த அலைகளையுடைய கடலைககொள்ளவலவான மதயானைகளும, குதிரைககூட்டஙகளும நெருஙகி கிற்பவைகள இரணடு கோடானு கோடிகள் எ - று. 8

ஆட லுமபுன லாட லும பொழி லாட லும வெறி யாட லும
பாட லுநதுணை கூட லுமபல பாவை பைங்கிளி பூவையாழ்
தேட லுமபொழில சேரத லுஙகலை நோத லுங்குறை தீர்தலும
கூட லுநதமி ஆட லுநதொழில கோதை யர்க்குள நாளெலாம.

இ - ள் பநது முதலியன ஆடுதலும, நீராடுதலும, மலர்கொய்து சோலைகளிலே விளையாடுதலும, தேரோட்டுதலும, பாடுதலும, நாயகர்களைக் கூடுதலும், பலவிதமாகப் பொம்மைகள் - பச்சைககிளிகள - நாகணவாய்ப் புட்கள் - வீணை ஆகிய இவைகளைத் தேடிகககொள்ளுதலும, பூஞ்சோலைகளுககுப் போகுதலும, அங்கே மதனநூலாராய்தலும, மனககுறைவு தீர்தலும, கூடுதலும, தஙகளிலே பிணஙகுதலும ஆகிய இவவகைச் செய்கைகளே காலமுழுதும பெண்களுக்கு உளவாகும எ - று. 9

பூசன் மேவிய பாச நீள்விழி காதி னோடுறு போர்செயத
தூசி னோடணி மேக லாபரம வீசு சோதிகள் சூழவே
வாச ரேறும ரமபை மாதர் நிவநத மாமணி வசசிரத
தூச லாடுவ தநத ரததிலு லாவு மின்கொடி யொக்குமே.

இ - ள். நாயகருடனே பொருந்துதலையுடையதா யனபு மிகுகின்ற கண்கள், காதுகளுடனே மிகுந்த சண்டைசெய்யவும், இடையில் வஸ்திரத்துடனே அணிந்திருக்கிற மேகலாபரணங்கள் வீசுகினற ஒளிகள் சுற்றவும்,

வாசலிலெல்லாம் அரம்பாஸ்திரீகள் உயர்ந்த பெரிய வயிரமணிகள் பதித்த (பலகையி லிருந்து) ஊசலாடுவது, ஆகாயத்திலே உலாவுகின்ற மின்னற் கொடியை யொத்திருக்கும் எ - று. 10

நனிசி வப்புறு தளிரளி ளைப்பன நனைவிளைப்பன நனைதொறும
இனிய வுததம நறைவிளைப்பன விலையு குபபன விளமதுப
பணியு குப்பன மணியு குபபன பணியு குபபன படுசெழுங
கனியு குப்பன மலரு குபபன கற்ப கபபொழி லெந்துமே.

இ - ள். கறபக முதலிய ஐந்து விருட்சஙகளாகல்காணட சோலைகளெல லாம, மிகவும சிவந்திருககினற தளிரகளாத தளிரககினறவையும, அருமபுகள விடுகினறவையும, அவ வருமபுகளெலலாம இனிபபாலே சிறநத தேனூறு கினறவையும், இலைகள உதிர்ககினறவையும, இளமையான தேனறுளிகளைச சிந்துகினறவையும, இரததினஙகளை உதிரககினறவையும, ஆபரணஙகளைச் சிநது கினறவையும், உணடாகுகினற செழுமையான பழஙகளைச் சிநதுகினறவையும, பூவை உதிர்ககினறவையும் ஆகிய இசசெயகைகளையே யுடையன எ - று. 11

வாரி றுக்கிவி சித்து மாமணி மாட மேறி மலாககுழற
காரி றுககி மடநதை மாதா கழுஙகு கநதுக மமமனை
கூரு கிர்க்கை சிவபப வாடுவ கொதது மாமுடி யுறறபொன்
மேரு விறபல காலவி ழுநதெழு மீனி னததைநி காககுமே.

இ - ள். இரவிககை இறுககிக கட்டிககொணடு பெரிதான இரததின கசிதமான உப்பரிகை மேலேறிய பூவையணிநது கூநதலை முடிததுககொணடு பெணகள் கழறசிககாய - பந்து - அமமானையாகிய இவைகளைக் கூாமையான நகஙகளையுடைய கைகள சிவகக விளையாடுகிறபோது, அவைகள வரிசையாகப பெரிய சிகரஙகளையுடைய பொனனுன மகமேருவினமேலே பலகாலும படிந தெழுகினற நட்சததிரக கூடடஙகளை யொததிருககினறன எ - று.

கடலின மீனகள துளளிததுள்ளி மேருவினமேலே விழுவனவெனக கோடலுமாம. 12

துடிநு டஙகிடை மாதர் கைபுனை தொடிமு ழுஙகிடு மாடமேல
அடிநு டங்கிட நடுநுடங்கிட நுனிநு டஙகிட வடபொனின
கொடிநு டஙகுவ கடையு கததெழு குரைக டறறொனி யனறியவ்
விடிநு டஙகுவ தென்னின மற்றினி யாவ தேநிக ராவதே.

இ - ள். உடுக்கைபோனற துவளுதலையுடைய இடையையுடைய பெண் கள் கைகளிலே யணிந்த வளையலகள ஒலிககினற உபபரிகைமேல, அடி துவளவும, நடு துவளவும, நுனி துவளவும, அழகிய பொனமயமான கொடிகள் துவண்டாடுகினற ஒலியானது, கலியுகமுடிவிலே எழுமபி ஒலிககினற கட லோசையேயலலது, அசசாலததில இடிககிற இடிமுழககமும ஒபபாகியனறல் இனி எதுதான ஒபபாகும எ - று.

பெண்கள் "அடி அடங்கிட கடுநடைகெட நுனிநடங்கிட" என்பவற் றிறகு முறையே, காற்சிலம்பு - அணிந்துள்ள இடைமேகலை - மார்பணிகளைச் சொல்லவுமாம். 13

தலைவி யப்புறு மாடி யச்சிறு சாளரப் புழை யால்விழும்
புலவி யிற்பரி பந்தி யின்னிரு புடைவி ழுந்து நுடங்கிய
கலவி யிற்பரி தாள மாமணி கங்கு னங்கைகை பற்றியே
நிலவெ னக்கென வரியெ னக்கெனு நீதி யொப்பன வீதியே.

இ - ள். இடத்தால் அதிசயிக்கத்தக்க நிலாமணி முற்றத்திலே, (முன்னர்) ஊடலினால் (வருந்திப்) பறித்தெறிந்த முத்துகளும் மாணிக்கங்களும் இருபுறத்திலும் வரிசையாக விழுந்து கிடந்தவைகள் (பின்னர்த் தங் கணவரோடு) துவண்ட கிரீடையாகிய கூடலினாலே (அம் மணிகள்) மழைநீர் போகுதற்கு விட்டிருக்கிற சிறிய சாளரம்போலவுதான துவாரவழியே சிந்தி அப் பட்டணத்து வீதிகளில் வீழ்ந்துள்ள காக்ஷியானது, இரவென்னும் பெண்ணின் கையைப் பற்றிக் கொண்டு சந்திரன் நீ எனக்குரியவளென்றும், சூரியன் எனக்குரியவளென்றும் சொல்லும் தன்மையை யொத்திருந்தது எ - று.

புழையால்விழும் தாளமாமணி எனக்கூட்டுக. மாமணி - மாணிக்கம். அரி சூரியன். கலவித்தொழிலில் விளப்பாராதுளைகால முதலிய உறுப்புகளால் தாக்குண்டு மணிகள் சாளரவழியே சிந்தினவெனக். 14

நீடு மாசையி னீவ தெண்ணுறு நெஞ்சி னாபல ராயினும்
கூடு மாசையி னேடி முற்படு கொள்ளு வாரவ ளின்மையால்
பாடு மாதரி யாழி னேடுப யிற்று மாதர ரங்கினின்
றூடு மாதரி னம்பெ ருங்கொடை யண்ட வாணர்க ணெஞ்சமே.

இ - ள். நெடுந்தூர ஆசையுடனே கொடுக்கவேண்டுமென்னும் மனமுள்ள (ஆ-) [illegible] இருந்தாலும், தங்களுக்குக் கூடியதான ஆசையுடனே கடைத்தலை யாங்கெகாள்ளுகிறவர்கள் அந்த நல்லா திருந்தலினாலே, பண்ணோடு யாழ் வீணையுடனே கற்றுக்கொள்ளும் பெண்களும், நாடகசாலையிலாடும் பெண்களும் நாள்தோறும் பெறுவதாய கொடைப்பொருளானது, ஆகாயவாசிகளுடைய மனமேயாம் எ - று. 15

பாதி மாமதி யொத்த வாணுத லுற்ற பட்ட மிலங்கிடச்
சோதி வார்குழை வீச வெய்புறை தோண்மணித்தொடை மின்னவே
கோதி வாரிமுடித்த பாரிய கொண்டை நின்று குலுங்கிட
வீதி வாய்வரு மாதர் நேரில மின்னு மேகமு மென்பவே.

இ - ள். அர்த்தசந்திரனை யொப்பான பெருமை பொருந்திய ஒளியை யுடைய நெற்றியிலொட்டின பட்டமிலங்கவும், சோதி நிறைந்ததான கம்மல் அசையவும், மூங்கிலை யொத்த தோள்களுக்குமேலே இரத்தினமாலைகள் மின்னவும், சிக்கறுத்து வாரிமுடித்துப் பருத்திருக்கிற கொண்டைகள் நிலைகொண்டு

குலுங்கவும், அந்த வீதியிலே வருகிற பெண்களைக் கண்டே இந்த வுலகம் மின்ன லென்றும் மேகமென்றும் சொல்லுகின்றன எ - று. 16

நன்ன கர்ப்பெரு வண்மை யுந்திரு வுஞ்சி றப்புந வின்றிடின்
பொன்ன கர்க்குவ மிப்பர் பற்பல நூனெ றிப்புல வோரெலாம
அந நகர்க்குவ மிக்க வொப்பதி லண்ட ரண்டம னைததிலும
எந்த காப்பொலி வநத கர்ககுநி காககு மென்ன வியமபுவேன்.

இ - ள் அனேகமான சாஸ்திரமாக்கங்களை யறிந்தோர்களெல்லாம் உல கத்திலே நல்ல நகருக்குள்ள பெரிதான அழகையும் செல்வத்தையும் சிறப்பை யுஞ் சொல்வதனால, பொன்னகரத்தை ஒப்பாகச சொலலுவாரகள. அப்படிப பட்ட அப் பொன்னகர்க்கு ஒப்பாகச் சொலவதறகு ஒரு நகருமிலலை· அண்ட பகிரண்டங்களான எலலாவற்றிலுமுள்ள எந்த நகரினுடைய அழகை அந் நக ருக்கு ஒப்பாகுமென்று யான சொலலுவேன எ - று. 17

ஆன சிததிர மாந காககுள லாநது யர்நதெழு கறபகக
கான கத்திடை வேலை புககதொர காக நீளவரை யாமெனத
தான வாககுட ஞன வெற்பரி தாழ்சு டாக்குலி சக்கர
வான வாகிறை யோன மாநதுறை மண்ட பததை விளமபுவாம.

இ - ள் அப்படிப்பட்ட வேதிகைகளைகொண்ட பெரிதான அந்தப் பொன்னகரிலே, பூ மலர்ச்சியுடனே உயாநதெழுந்து நிற்கின்ற கறபகக் காட்டி னிடத்தில், அசுரர்களுக்கு உதவியான மலைகளினிறகை வெட்டின ஒளி வீசு கின்ற வச்சிராயுதத்தைக் கையிலேநதிய தேவேநதிரன, கடலிலே போய முழு கின இரத்தினங்களதிகமான மைநாகமலைபோல நிகரொளிரும்படி, சபா மண்ட பத்திலிருந்து அரசாளுகின்ற அழகை இனிச சொலலுகிறோம எ - று. 18

அததி வார மிருததிவெணபடி கதத மைதத ளததாய்ச
சிததி ரககன கதத கடடளை செய்து யாததரு றடடினில
பததி யாயிர வாயி ரததப ருதத தூணகணி றுததிமேல
வைதத போதிகை யுததி ரமபல வசசி ரததினவ குததகே.

இ - ள். அடிவாரமுழுதும், வெள்ளைப பளிங்கினாலே செயத தளவரிசையை யுடையதாய, வேதிகையாகச சுவானத தகடுகளாலே சந்து பதிவுசெய்து அதின்மேலுயரமாகக கட்டியிருக்கிற சிங்கணைக குறட்டினமேலே, ஒரு வரி சைக்கு ஆயிரம ஆயிரம பருதத தூணகளை நிறுத்தி, அவைகளினமேலே வைத திருக்கின்ற போதிகைகளும, உததிரங்களும அநேகமாக வயிரததினாலே செய திருக்கின்றன எ - று. 19

இட்ட பததியி னிநதர நீலமி சைததெ டுததசு வாககுமேல
மடட றசசுடர மரக ததகிலவ குததெ டுததநி லததது
விடட வாயிலி னடட தூணமணி மேற கதநத ரமணி
முடட வைததமு கடட தொணகதிர முதத ணிநதமு கபபதே.

இ - ள். அப்படிச் செய்திருக்கிற வரிசைகளிலே இந்திர நீலங்களைச் சேர்த்து உயர்த்தியிருக்கிற சுவருக்குமேலே அளவில்லாமல் விளங்குகின்ற மரகதத்தினாலே செய்துயர்த்தின நிலத்துக்குக் கீழே (அதற்குள்ளே போக) வழி விட்டிருக்கிற வாயிலுக்கு ஊன்றின கால்களானவை அழகிய கோமேதகச்சோதி வீசுவனவா யிருக்கும். மாணிக்கச்சோதியே மேலாவுவதாக வைத்திருக்கிற முகட்டையுடைய அந்த மண்டபம் அழகிதான ஒளியையுடைய முத்தாலங் கிருதமான முன்முகப்பை யுடையது எ - று. 20

ஆளி சிங்கமி பம்ப ரித்திர ளன்ன மஞ்சுக மெண்ணிலா
ஒளி தோறுநி றுத்தி நீள்வயி டூரி யத்திலி ழைத்ததால
கோளி ருந்தன வோம டங்கலெகா ழுந்துவிட்டன வோகுழூஉம
வாளி ருந்தன வோமு கட்டினில வைத்த பூரண கும்பமே.

இ - ள். யாளிக்கூட்டங்களும், சிங்கக்கூட்டங்களும், யானைக்கூட்டங்களும், குதிரைக் கூட்டங்களும், அன்னங்களும், கிளிகளுமாகக் கணக்கில்லாத ஒழுங்குகள் முழுதும் நிறச்செய்து, வயிடூரியங்களையும் பரப்பியிருக்கின்றது. அத்தகைய சபாமண்டபத்தின் மேன் முகட்டிலே வைத்திருக்கிற பூரணகலசம் விளங்குகிற காசுயினது ஆதிசேஷனுடைய தலைகளிலுள்ள இரத்தினங்களைக் கொண்டுதலாயினவோ! இடி கொழுந்துவிட் டெரிகின்றனவோ! ஒளிக்ளெல்லாங்கூடின சூரியர்க ளிருக்கின்றனரோ! (என்று சந்தேகிக்குமாறு இருந்தது) எ - று

மடங்கல் கொழுந்து - அக்கினிக் கொழுந்தெனவும், கோள் - கிரகணங்களெனவுமாம். 21

காத மாயிர நானம ருங்குக ணித்த கனறுநி லங்தொறும
பூத மாயிர கோடி கோடியு றுத்துநின் றுசுமந்திட
மீத டாங்துநி வந்து மேனிலம் விண்டெ மூந்துவ ளாந்துபோய்
ஆதி நான்முக ஞாப தத்தினு பபுறத்துமு யர்ந்ததே.

இ - ள். பூரண கலசத்தையுடைய அச் சபாமண்டபம், ஆயிரங்காத வளவு நாலுபக்கத்திலும் அளவுளதாய விசாலித்த விடங்களெல்லாம், ஆயிரங் கோடானுகோடி பூதங்கள் வெளியேயின்று தாங்க, மேலே நெருங்கி உயாந்து, அதற்கு மேலுலகங்களையுங் கடந்து எழுந்து வளர்ந்து சென்று, உலகத்துக்கு முதலான பிரமதேவனுடைய சத்தியலோகத்துக் கப்பாலு முயர்ந்திருக்கின்றது எ - று. 22

அயன திருந்துவி தித்த வண்டம னைத்து மிங்கி ரன்றென
மயன திருந்துப டைத்த சித்திர மண்டப த்தினி லங்கவன
வியன திருந்துகொ டுத்த வாதன மீது மாதொடும் வேத நூற
பயன திருந்துணா குரவா தமமொடு பாக சாதனன் மேவினான்.

இ - ள். பிரமதேவன் செய்திருந்து சிருஷ்டித்த அண்டங்களெல்லா மிதற்குச் சமானமல்ல வென்னுமபடி, மயனானவன் எண்ணிச் சமைத்திருக்கிற (வேடிக

கைகளையுடைய) அச் சித்திரமண்டபத்திலே, மயனானவன் இவனது பெருமையைத் தெரிந்து செய்துகொடுத்திருக்கிற சிங்காசனத்தின் மேலே தேவேந்திரன் இந்திராணியுடனேகூடி வேதசாஸ்திரங்களின் பிரயோஜனந் தெரிந்த பெரியோர்களுடனே கொலுவிருந்தான் எ - று. 23

நரகி னின்றிடு மிருளை யுந்திரு மணிமு டிச்சுடா நக்கிட
விரகி னின்றொரு கோடி ஞாயிறு மிக்கெ ழுந்தன வாமெனப்
பெருகி நின்றொளிர் மகர தோரண மிசைசி றந்துபி றங்கிட
அருகு நின்றணி கவரி கோடிய ரம்பை மாதரி ரட்டவே.

இ - ள். பாதாளலோகத்திலுள்ள இருளைக்கூட இவனது சிறந்த இரத்தின கிரீடத்தின்சோதி கவளீகரிக்கவும், ஒருகோடி சூரியர்கள் ஒரு காலத்திலேகூட மிக விளங்கினாற்போல் அதிகமாய் நிலைகொண்டு விளங்குகின்ற மகரதோரணமானது மேலே சிறந்து விளங்கவும், பக்கத்திலே நின்று அழகிய சாமரங்களைக் கோடி யரம்பாஸ்திரீகள் வீசவும் எ - று. 24

வெண்ணி ழற்றிகழ் முத்த நீள்குடை மேனி ழற்றுவ தாயிரங்
கண்ணி ழற்பட வேயி ருண்டுக றுத்து மீள்வெ ளுப்பதாய்த்
தண்ணி ழற்செய விந்தி ராணித டம்பெ ருங்குழ லாயகார்
ஒண்ணி ழற்றிரு மேனி தாவிட வும்பர் மன்னணி ருந்தனன்.

இ - ள். தேவேந்திரன் வெண்மையான காந்திவிளங்குகின்ற நீண்ட முத்துக்குடையானது மேலே நிழல் பரப்புவது, இவனுடைய ஆயிரங் கண்களுடைய ஒளிபடுதலினாலே இருண்டு கறுப்பாய், மறுபடி வெளுப்பதாகிக் குளிர்ந்த நிழலைக்கொடுக்க, இந்திராணியினுடைய மிகவும் நீண்ட கூந்தலாகிய மேகத்தினுடைய அழகிய நிழலானது இவனுடைய திருமேனியிலே வீசவும் கொலுவிருந்தான் எ - று. 25

கலி நிலைத்துறை

சுரர்தா னவர்கே சரர்தும்ப புருசித்தர் விச்சா
தரர்சா ரணர்பூ தர்பைசா சர்கடந் திரக்கின்
னரர்நா ரதனு ரகரியக்க ரரக்கர் போற்ற
வரரா சனிருந் தனனமா மணியாத னத்தே.

இ - ள் தேவர்களும், அசுரர்களும், கேசரர்களும், தும்புருக்களும், சித்தர்களும், விச்சாதரர்களும், சாரணர்களும், பூதர்களும், பைசாசர்களும், யாழினை மீட்டுகின்ற கின்னரர்களும், நாரதனும், நாகர்களும், இயக்கர்களும், அரக்கர்களும் துதிசெய்ய அச்சிரேஷ்டனான தேவராசன் பெரிய சிங்காதனத்திலேயிருந்தான் எ - று. 26

ஆதித்த னோடம் புலியாரல் புதன்வி யாழம்
சோதிப் பெருமா மதிசுக்கி ரன்சௌரி தூம
கேதுப் பவனன் வருணன்ச மன்கே டிலாத
நீதிக் குபேரன் முதலோர்க ணிறைந்து மொய்த்தார்.

இ - ள். சூரியனுடனே - சந்திரன - செவவாய் - புதன - வியாழம்-சோதி வீசுகின்ற மிகப்பெரிதான புத்தியையுடைய சுககிரன - சனி - அககினி - வாயு- வருணன்-யமன்-கெடுதலில்லாத நீதியைக்கொணட குபேரன முதலானவாகள் அச்சபையிலே நிறைந்து கூடினாாகள் எ - று. 27

சனகன் சமதக கினிமிக்க சனற்கு மாரன
அனகன் பிருகத திரிசததி யகததி யன்சீாக
கனகன் சுகன்கா சிபன்கௌ தமனுபத தமபன்
பனகன் னுபமன்னி யன்சங்க னுரோம பாதன.

இ - ள. சனகன-சமதக்கினி - மிகுந்த பெருமையையுடைய சனற்குமா ரன்-அநகன - பிருகு - அததிரி - சததி - அகததியன - சிறப்பைக்கொண்ட கன கன்-சுகன்-காசிபன-கௌதமன-ஆபததமபன - பனகன-உபமன்னியன-சஙகன் - உரோமபாதன் எ - று. 28

பாரதது வாசன் குமுதாக கனபரா சரனகாப
பூரதது வாச வடமீ னசைபூண் வசிட்டன
வீரதது வாசந திசைவீ சியகோ சிகன்னந
நேரத்து வாச வனைநண்ணி நிறைநத னைநதாா.

இ - ள். பாரத்துவாசன - குமுதாககன - பராசரன - கர்ப்பூர வாசங் கொண்ட அருந்ததி விரும்புகின்ற வசிஷ்டன-தனது வீரபரிமளமே எட்டுத் திககிலும் வீசுவதான விசுவாமிததிரன ஆகிய இந்த முனிவர்களெல்லாம் அப்போது தேவேந்திரனைககண்டு நிறைந்து கூடினாகள எ - று. 29

அருமா மணியா தனமனனவா யாாககு நல்கி
இருமா தவததீ ரெனயாரு மிருந்த பின்னா
திருமா முடிசாய்த தெழிறசெங்கை யமைததது விண்ணோர்
பெருமான் கனிவாய் மலாநதின்னன பேச லுற்றான்.

இ- ள். அப்போது அருமையான பெருமையையுடைய ஆசனங்களை அவர்களெல்லோர்ககுங் கொடுதது, பெரிய தவத்தை யுடையவர்களே! இருங் கள் எனறுசொல்ல, _ அவர்களெல்லாமிருந்த பினபு, தேவராசனுன இந்திரன தனது சிறந்த பெரிதான தலையை வணஙகி, அழகான சிவந்த கையை நீட்டிக, கொவவைக்கனிபோனற வாயைத்திறந்து இபபடிப்பட்டவை களைச் சொல்லத் தொடங்கினன எ - று. 30

பாய்மைக கலோலக கடல்சூழ் புவிபார்த்தி வாக்குள்
தீமைக் கும்வேகச சினுக்கு மிடங்கொ டாது
வாய்மைக் குரன் னூல் வளனுக்கு மனத்தி லுற்ற
தூய்மைக்குமிககார் தமையாய்ந துனிர்சொன்மி னென்றான்.

இ - ள். கரைமேலே மோதுவதான கறுத்த அலைகளைக்கொண்ட கடல் சூழ்ந்த உலகத்துள்ள அரசர்களில் தாம ஆளுகிற நாடுநகரங்களிலே பாவங்க ளுண்டாகுதற்கும் விரைந்து பற்றுகின்ற துனபத்திறகும் இடங்கொடுக்காமல் மெய்ம்மைக்கும், நல்ல சாஸ்திரவிசாரணைக்கும், அந்த விசாரணை மனத்திலே பொருந்தின தன்மைக்கும் மிகுந்த யோக்கியர்களை நீஙகள் தெரிந்து இன்னு ரென்று சொல்லுங்களென்று சொன்னான் எ - று. 31

நறையோ தியினு ளயிராணி நலநதி ளைக்கும்
இறையோ தியமாற் றமியாவரும் கேட்ட பின்னர்ச
சிறையோ திமமேல வருநான் முகன்செல் வன்றெய்வ
மறையோ தியநீதி வசிட்டனெ டுதது ரைபபான்.

இ - ள். பரிமளித்தலைக்கொண்ட கூந்தலையுடையவளான இந்திராணி யின் சுகத்தை யனுபவிக்கின்ற தேவேந்திரன சொன்ன வார்த்தையை எல்லோரும் கேட்டபின்பு, இறகையுடைய அன்னத்தின்மே லேறிவரு கிற சதுர்முகக்கடவுளுடைய புத்திரனாகித தெய்வத்தன்மைகொண்ட வேதங்க ளெல்லாந் தெரிந்த வசிஷ்டமகாமுனிவர் (அப்படிப்பட்ட அரசன இன்னு னென்று) சொல்லலானார் எ - று. 32

பாருக் கொருவனபர தாரச கோத ரன்வெம
போருக் கொருவன் புகழுககு மறையபபொ ருட்கும
நேருக்கும் வீடா மனு நூ னெறிக்கும பொறைக்கும்
ஆருககு மிககா னரிசசந்திர னுக்கு மென்றான்.

இ - ள். இந்த லோகத்திலே ஒருவரும நிகரில்லாதவன. பின்னும் அந்நியர் மனைவிமக்களுக்குச் சகோதரனானவன. வெவ்விதான சண்டை செய்கிறதிலும நிகரில்லாதவன. கீர்த்திக்கும வேதார்த்த உணர்வுக்கும், அந்த அர்த்தப்படியே நடக்கிற ஒப்புக்கும, மோக்ஷமார்க்கத்தை யளிக்க வல்ல மனுசாஸதிர மார்க்கத்துக்கும, பொறுமைக்கும எப்படிப்பட்ட யோக்கி யர்களுக்கும சிறந்தவன. (ஆகவே) அரிச்சந்திர மன்னனே தக்கவனுவ னென்று சொன்னார் எ - று. 33

அன்னு னதுகூறிட மைந்தரை யட்ட ஞானும
முன்னு ளமாவென வெருதண்டின முடித்த தானும
தனனு லுணராத சலத்தினன றன மூனறு
கொனனுர் தவததோங்கிய கௌசிகன கூற லுற்றான.

இ - ள். அந்த வசிஷ்டர் அப்படிச்சொல்ல, அப்போது தன் புத்திரரைக் கொன்றதனாலும, முன்னாளிலே தான போருமோரை ஒரு தண்டினாலே வென்று தன்னை முனிவனாகச் செய்ததனாலும, தன்னாலுந் தெரிந்து கொள்ளக் கூடாத கோபத்தையுடையவனாயக் கொதிப்புக்கொண்டு பெருமைபொருந்திய தவத்தினாலுயர்ந்த கௌசிகனான விசுவாமித்திரமுனிவர் சொல்லத்தொடங்கி னார் எ - று.

"மைந்தனை யட்டதாலும் - முன்னாமர் வென்றொரு கண்டின்முடித்த தாலும்" என்பது.

காசிராஜன் புத்திரனாகிய கோசிகன் வேட்டையாடும்படி வனஞ் சென்று பிரமரிஷியாகிய வசிட்டமுனிவர் தவச்சாலையை யடைந்து, அவர் காமதேனுவைக்கொண்டு செய்வித்த விருந்துண்டு, அப் பசுவைக் கேட்க, அவர் கொடாததால் கட்டிப்பிடித்தனன். அது உடலைச் சிலிர்க்க, பல மிலேச்சர் தோன்றி அரசன் சேனையை யழிக்க, கோசிகன் புத்திரர்களாகிய நூற்றுவர் இது முனிவன் வஞ்சகமென்று போர்க்கெழ, வசிஷ்ட முனிவர் விழித்துப் பார்க்கச் சாம்பராயினர். அதுகண்ட கோசிகன், முனிவருடன் போர்செய்து செயிக்கச் சக்தியற்று "அரசர் வல்லமையினும் முனிவர் தவ வல்லமை சிறந்துளதாதலின் யானுந் தவஞ் செய்வேன்" என்று அருந்தவஞ் செயயச்சென் றார் என்பதாம். 34

வெய்யன் பதகன் பரதார விருப்பன வீணன்
பொய்யன் னிறையும்பொறை யுஞ்சிறி துமமில் புல்லன்
கையன் கபடன் கயவன் றனைநல்ல னென்றிவ
வையன் றிருமுன் னுரைத்தாயிதென் னுக வென்றான.

இ - ள். பொல்லாதவனும் பாதகனும் பரதார இச்சையுள்ளவனும் பயன் படாதவனும் பொய்யனும் மனவொடுக்கமும் பொறுமையும் கொஞ்சமேனும் இல்லாத அற்பனும் வஞ்சகனும் கபடனும் ஆன ஒரு புத்தியீனனை மிக நல்லவ னென்று இந்த அரசன் சமுகத்தில் நின்று சொன்னீரே! இதனால் யாது பய னைக் கருதியென்றார் எ - று. 35

தீவெந் தொழிலின்றி யொப்பற்றமெய்ச் செவ்வி யோனைக்
காய்வெந் திறலாலிவை கூறிய கௌசி காநின்
வாய்வெந் திலைநின் மனமம்வெந் திலை வமபு சொன்ன
நீவெந் திலைதெய்வ முநின்வயிற் பொய்த்த தென்றான.

இ - ள். அதற்கு (வசிட்டமுனிவர்) தீயனவான வெவ்விய செய்கைகள் ஒன்றுமில்லாமல் நற்செய்கைகளாலே நிகரற்ற செவ்வைக் குணத்தையுடைய மெய்யனான அரிச்சந்திரனைக்குறித்து உம்முடைய கோபிக்கிற வெவ்விய பலத் தைக்கொண்டு இப்படிச்சொன்ன கௌசிகமுனிவரே! இவ்வாறு சொல்வதான உம்முடைய வாயும் வேகாதிருக்கிறீர்; உம்முடைய மனமும் வேகாதிருக்கி றீர்; இப்படி வீணான வார்த்தைகளைச் சொன்னநீரும் வேகாதிருக்கிறீர்; (வேகச் செய்யாதிருக்கிறதினாலே) தெய்வமும் உம்முடனே கூடிக்கொண்டு பொய்யா யிருக்கின்றது எ - று. 36

தெய்வந் தனைநொந்து வசிட்டனிச் செய்தி செப்பக்
கைவந்த கொடுந்தொழிற் கௌசிகன் கன்றி நோக்கிப
பொய்வந்த நின்வாய் புழுவாகுத லன்றிப் பொய்யா
மெய்வந்த வென்வாய் மனமவேவல வென்று சொன்னான்.

இ - ள். வசிட்டமுனிவர் தெய்வத்தை நோக்கிக்கொண்டு இவ்விதங்களைச் சொல்லவே, கொடுஞ்செய்கையே கைகூடுவதான விசுவாமித்திரர் கோபித்துப் பார்த்து, பொய்ச்சொற்கள் சொன்ன உன் வாய்ப் புழுத்துச் சிந்துமேயல்லது, பொய்ச் சொல்லாமல் மெய்யே வருவதான என் வாயும், மனமும் வேகா தென்று சொன்னார் எ - று. 37

புனங்கொண் டசெந்தீப் புயருவி யெழுந்த தேபோல்
மனங்கொண் டடங்காப் பெருவன்மை வசிட்டற் கெய்தக்
கனங்கொண் டகற்ப முடிவினக ணுருத்திரன் போல்
சினங்கொண் டெழுந்தான் விழித்தீத்திசை தோறுஞ் சிந்த.

இ - ள். காட்டிலே பிடித்த நெருப்பானது மேகமண்டலத்தளவு நிமிர்ந்து கிளாந்தாற்போல, வசிட்டமுனிவருக்குப் பெரிதான சாமர்த்தியம் மனத்திலே தோன்றி அடங்காதுண்டாகி, துகனமான பிரமகற்பமுடிவில் தோன்றுகிற காலருத்திரனைப்போல கண்களிலே யுண்டான நெருப்புப்பொறி எந்தத் திக்கிலுஞ் சிதறக் கோபங்கொண்டு எழுந்திருந்தார் எ - று 38

தாங்கிற் றிலன்கௌசிகன் றானுமவ் வாறு சீற்றம்
ஓங்கக் கதித்துற்றன னுற்றவப் போதி ரண்டு
பாங்கிற் படுசெந் தழலபம்பியுற் றங்கு மிங்கும்
நீங்கிற் றிலைநீள் கொழுந்தோடி நிமிர்ந்த தன்றே.

இ - ள் அதற்கு விசுவாமித்திரரும் பொறுத்தவராய் அப்படியே கோபமென்மேலாக அதட்டிக்கொண்டு நின்றார், நிற்கிற அப்போது அவ்விருவரிடத்திலு முண்டாகுகின்ற சிவந்த கோபாக்னியானது நெருங்கிக் கிளாந்து மேலுங் கீழும் விடாததாய நீண்ட கொழுந்துசென் றுயர்ந்தது எ - று. 39

கானந் திகழ்தா மரைக்கட் பிறந்துற்ற புத்தேள்
தானந் தனைநாடி யெழுந்தெரி தாக்க லோடும்
வானென் படுமவை யகமென் படுமென்று வானோர்
கோனென் றுநடுங் கியலைந்து குலைந்தெ ழுந்தான்.

இ - ள். நெருப்புச் சுவாலையானது, வண்டுகள் சிராகம் பாடுவதான தாமரை மலரிலே பிறந்திருக்கிற பிரமதேவனுடைய உலகமெல்லாம் பரவிக் கிளாந்து வீசும்போது, தேவர்களுக்கரசனான இந்திரன் ஆகாசந்தான் என்ன பாடுபடுமே! பூலோகந்தான் என்ன பாடுபடுமென்று பயந்து அலைந்து குலைந்து எழுந்திருந் தான் எ - று. 40

ஆற்று நெடுவஞ்சின மாற்றி யமாத்தி யுள்ளம்
தேற்று மகவானற் றிருச்செம்மலாக் கைய மைத்துக்
கூற்றுல் விளைவாவன கண்டிடிற் கூறு நீர்மை
தோற்று விழித்தக்கது செய்வதென் சொன்மி னென்றான்,

இ - ள். ஒருவராலும் தணிக்கக்கூடாத அவ்விருவருடைய கொடிதான வெப்பங்கொண்ட கோபத்தை இந்திரனானவன் தணியப்பண்ணி, அமரும்படி செய்து, மனதையுந்தேற்றி, தனது சிவந்த மலர்போலுங் கையால அடங்கச் செய்து, உங்கள் சொல்லின்படி அரிச்சந்திரனிடத்திலே உண்டானவற்றைப் பரிசோதித்தால், நீங்கள் சொல்லுகிற குணத்திலே ஒருவர் பட்சம் தோற்பா னால் தோற்றவர் தாழ்ந்து செய்யத்தக்கது யாது சொல்லுங்களென்று சொன னான் எ - று. 41

அன்பாற் கடலாய வசிட்ட னழன்று மன்னன்
றன்பாற் றவறுண் டெனக்கௌசிகன் சாய்க்கி னன்றே
என்பாற் றவமவிட் டிழிகட்டலை யோட்டி னேந்தித
தென்பாற் றனிசசெலகுவன் யானிது திண்ண மெனறான்.

இ - ள். அன்பினாலே கடலபோலபவராகிய வசிட்டர் கோபங்கொண்டு அரிச்சந்திரனிடத்தில் நான சொலலுவதற்குத் தவறுண்டாக இந்த விசுவா மித்திரன காட்டினால், அப்போதே என்னிடத்துள்ள தவமெல்லா மிழந்து, தாழ்ந்த புலைச்சேரிக்குப் போய்த் தலையோட்டிலே பிச்சை வாங்கி யுண்டலைந்து யமலோகத்துக்குத் தனித்துப் போகக்கடவேன; இது சத்தியமென்று சொனனார் எ - று. 42

மாறு நெறிகொண்ட வசிட்டனம மனன னுள்ளம
வேறு மெனினிச சபதததை விளமபு வாரோ
தேறு வினிநின சபதததையித தேவர் கோனமுன
கூறு மெனநாரதன கோசிக னுககு ரைததான.

இ - ள். நாரத மகாமுனிவர், விஸ்வாமித்திரரைப் பார்த்து, மாறுபடாத நீதியை யுடைய வசிஷ்டர், அந்த அரிச்சந்திரனுடைய மனமானது தாம சொல வதற்கு வேறாகுமானால் இப்படிப்பட்ட சபதத்தைச் சொலலுவாரோ? சொல லார். ஆகையால, இனிமே லுமமுடைய சபதததை இந்தத் தேவேந்திரனுக்கு முனனே தெளிந்து சொலலக்கடவீரென்று சொனனார் எ - று. 43

நன்று குகவென் றவனாரத னுக்கு ரைத்துப்
பின்று திவன்போற பெருமபாடை பிதற்ற மாட்டேன்
வென்று னெனின்யான் செய்த மெய்ததவந தன்னிற்பாதி
குன்றும லீவே னெனக் கௌசிகன் கூறி னான்.

இ - ள். அந்த விசுவாமித்திரர் நல்லது, அப்படியே ஆகட்டுமென்று நார தரைப் பார்த்துச் சொல்லிப், பின்பு அந்த வசிஷ்டரைப்போல் பெரிதான சப தத்தைச் சொல்லமாட்டேன; அவர் வெல்லுவாரேயானால் நான செய்திருக் கிற மெய்யான தவத்திலே பாதிக்குக் குறையாமல் கொடுக்கிறேனென்று சொன்னார் எ - று. 44

அமையும மமையுமமிக் 'தேயரிச் சநதி ரன்பால
சமையுஞ் சபையினறிறம் யாவதுஞ் சாற்று றுமல்
எமையுஞ் சுரர்காவலி லென்று மிருததி நீயிச
சமையந துறநதே கெனப்பின்னருளு சாற்ற லுற்றுன்.

இ - ள். நாரதர் இதுவே போதும, போதும். அரிச்சந்திரனிடததில உண டாகுவதான சபையினிடத்திலே நானபோய் இங்கே நடந்த காரியஙகளில் எவ்வளவும் விளங்கச் சொல்லாதபடி எனனையுந் தேவாகள் காவலுககுளளே நீர் தெரியச்செய்கிற வரைககும இருககப்பண்ணி, இந்தட்சணமே நீர் இவவிடம் விட்டுப் போமெனறு கூறிப பினனுஞ் சொலலுகிறுா எ - று. 45

ஆதிதத னருங்குலத தண்ணலை நண்ணி யான்ற
நீதித தொழிலுந நெறியுநதரு மததி னேருமு
சாதிதத வுன்றன் சமைப்பாற சமர்ததாறறு மாறுற
சோதித திடுபோ வெனச சொல்லியச சூழ லுற்றுன.

இ - ள். சூரியகுலததிற பிறநத அரிசசநதிரனிடததுககுப போய் அங கமைந்த நீதிககிரமமும, தருமததினது நேரமையும, இங்கே சொனன உம முடைய முயறசியினுலும, உமமுடைய சமாததைதை முடிக்கும வகையினுலும பரிசோதிததறிந்து கொளளும; போமெனறு (நாரதமுனிவா) சொலலி அநதத தேவர் காவலுககுள ளிருந்தாா எ - று. 46

அக்கா லையிலந தவருஞ்சபை யுஙகு லைநது
தொககாா முனிவோா பலருநதஞ சூழல சாாநதாா
மைககாா நிறவண்ணலை வாழ்ததியக கௌசி கன்போய்ப
புககான் முதல்வைகிய பொனமலைச சாரற் பொங்கர்.

இ - ள். அப்போது அந்த அருமையான சபைககூட்டங கலைந்து அங்கே கூடியிருந்தவாகளான முனிவாகளெலலோரும தஙகளிடம போனாாகள. அந்த விசுவாமிததிரா கறுதத மேகம்போலு நிறைததையுடைய இநதிரனை ஆசீர் வதித்து முனனே தாமிருந்த மகமேருவின சாரலிலேயுள்ள சோலைககுப போனுர் எ - று. 47

இநதிர காண்டம முறறிற்று.

ஆக விருததம-458.

---

உ

கடவுள் துணை

# மூன்றாவது

# வஞ்சனைக் காண்டம்

## கலி விருத்தம்

திருந்து செஞ்சொற் செழுமறைக் கௌசிகன
பொருந்து நீர்க்கடற் பூதலஞ் சாரந்துபண்
டருந்த வம்புரி சாலைய ணைந்துபுக்
கிருந்த னன்பின் னிகழ்ந்த தியம்புவாம.

இ - ள். திருத்தமான செவ்விய சொற்களைக்கொண்ட செழுமையான வேதமுணர்ந்த விசுவாமித்திரரானவர், ஜலமயமான கடல்சூழ்ந்த பூலோகத்துக்கு வந்து முன்னே தாம் அரிதான தவத்தைச் செய்திருந்த பன்னசாலைக்குள்ளே போயிருந்தார். பின்பு நடந்ததைச் சொல்லுவோம் எ - று. 1

செவ்வி யனறனைத தீயவ னென்றியாம
வெவ்வி யற்பட விண்ணவர் முனபுகல
அவ்வி யத்தைமெய் யாகரு மருந்திறம
எவ்வி யற்றெனை றிதயத்தி லெண்ணினை.

இ - ள். விசுவாமித்திரர், நல்லவனைக் கெட்டவனென்று நாம கொடுஞ் செய்கை தோன்றத் தேவர்களுக்கு முன்னே சொன்ன பொருமைச் சொல்லை மெய்யாகச் செய்கிற அரிதான வகை எவ்வகையாலாகுமென்று மனத்திலே ஆலோசிக்கலானர் எ - று. 2

விண்ணி ழிந்து விரிமலர்ச சோலையின்
கண்ணி ருந்த கவுசிகற காண்டுமென்
றெண்ணி கந்த முனிவரவந் தீண்டுபு
மண்ணில வீழ்ந்து வணங்கி யிருந்தனா.

இ - ள். அப்போது, ஆகாயத்தைவிட்டிறங்கி மலர்ந்த பூஞ்சோலைக்குள் ளிருக்கிற விசுவாமித்திரரைப் பார்ப்போமென்று கணக்கில்லாத முனிவர்கள் வந்து கூடிப் பூமிமேலே படியவிழுந்து வணங்கி யிருந்தார்கள் எ - று. 3

இருந்த பின்ன ரிருளறு நன்குணத
தருந்த வத்தா னைவரு மையநீ
பொருந்து பொன்னகர் புக்கபி னுற்றது
திருந்த வேயருள் செய்கென்று செப்பினர்.

இ - ள். இப்படி யிருக்தபின்பு, மயக்கந் தீர்ந்த நல்ல குணத்தையுடைய அருமையான தவமுனிவர்களெல்லாரும் விசுவாமித்திரரே! நீர் தேவர்களிருக்கிற பொன்னுலகத்திற்குப் போனபோது அங்கே நடந்ததைச் செவ்வையாகத் தெரிய அருளிச்செய்ய வேணுமென்று கூறினார்கள் எ - று. 4

கொற்ற வாசவன் கூறிய மாற்றமும்
மற்றோர் வாய்மை வசிட்ட னுரைத்ததும்
உற்ற வாறு முணர்த்துத லின்றியே
கற்றோர் வஞ்சனைக் கட்டுரை கூறுவான்.

இ - ள். வெற்றி பொருந்திய தேவேந்திரன் சொன்ன விசேஷமும், அதற்கு வேறொருவார்த்தை வசிட்டர் சொன்னதும், அதற்குத் தாம் பேசின வகையுஞ் சொல்லாமல், வேறொன்றைக் கற்பித்து வஞ்சகமான கட்டுவார்த்தை சொல்லுகிறார் எ - று. 5

தெரியு நீண்மறைத் தேவர வைக்கணே
பெரிய மாதவர் பேசிய வேள்வியில்
அரிய தொன்றுமு டிக்கும வாவினால்
கரிய வேலைக் கடற்புவி யெய்தினேன்.

இ - ள். நெடிய வேதங்களைத் தெரிந்திருக்கின்ற தேவர்கள் சபையிலே சிறந்த பெருமையைக்கொண்ட முனிவர்களாலே சொல்லுகின்ற யாகங்களிலே அருமையாகிய ஒரு யாகத்தை செய்து முடிக்கவேணுமென்கிற ஆசைகொண்டு கருநிறமாக ஒலித்தலையுடைய கடல்சூழ்ந்த உலகத்திற்கு வந்தேன் எ - று. 6

சொல்வ தொன்றுண்டு கேட்கத் துணிந்திரேல்
நல்ல தென்று கவுசிக னுட்டினன்
அல்ல தாயினு நின்சொன் மறுத்திடல்
வல்ல மோவென்று மாதவர் கூறினார்.

இ - ள். அதற்காக நான் சொல்லுவதொன்றிருக்கின்றது; அதை நீங்கள் கேட்கச் சம்மதிப்பீர்களானால் நல்ல காரியமென்று கௌசிகரான விசுவாமித்திரர் சொன்னார். அதற்கு அந்த மகா முனிவர்கள் தகாத காரியமாயிருந்தாலும் தேவரீருடைய சொல்லைத் தடுத்துச் சொல்ல மாட்டுவோமோவென்று கூறினார்கள் எ - று. 7

அருள யோத்தி யரிச்சந் திரனையுற்
றிருள றும்பெரு வேள்விக்கி யானசொலும்
பொருட ரும்படி யின்றுபொ ருத்திநீர்
வருக வென்று மறைமுனி கூறினன்.

இ - ள். கொடுக்குஞ் செய்கையையுடைய அயோத்தியாபுரியை ஆளுகின்ற அரிச்சந்திரனை நீங்கள்போய்க் கண்டு குற்றமற்ற பெரிதான யாகத்துக்காக நான் கேட்கிற திரவியங் கொடுக்கும்படி இப்போதே அவனைச் சம்மதப்

படுத்திக்கொண்டு நீங்கள் வாக்கடவீர்களென்று வேதமுனிவரான விசுவாமித்திரர் சொன்னார் எ - று. 8

கேட்ட போதி லெழுந்து கிரிபெருங்
காட்டை நீங்கிக் கடிபொழி னீங்கியே
கூட்ட மோடு குளிர்புனற் கோசல
நாட்டை நண்ணினர் நான்மறை யாளரே.

இ - ள். அந்தச் சொல்லைக் கேட்டவுடனே நானகு வேதங்களும் பாராயணஞ் செய்கிற முனிவர்கள் கூட்டத்துடனே எழுந்திருந்து மலைகளைச் சூழ்ந்த அந்தவனத்தைக் கடந்துசென்று வழியிலுள்ள பரிமளச் சோலைகளையுங் கடந்துபோய்க் குளிர்ந்த கங்காஜலம் பெருகுவதான கோசல நாட்டை அடைந்தார்கள் எ - று. 9

கன்ன லோங்கு கழனியிற பொன்னிறச்
சென்னல் கால்பொரச சேககையின மேவிய
அன்ன மெங்கணு மோடும ணிநகர்
மன்னர் மன்னவன் மண்டபத தெய்தினார்.

இ - ள். கரும்புகள் வளர்ந்திருக்கின்ற வயல்களெல்லாம், பொன்னிற நெற்கள் அசைந்து காற்றால சாமரம்ரிபால வீச, தாமரைமலராகிய படுக்கையிலே தூங்குகின்ற அன்னப்பட்சிகள் எவ்விடத்திலும் பறந்துசென்று சஞ்சரிப்பதான அழகு பொருந்திய அயோத்திபாபுரிக்குள்ளே சென்று, ராஜாதிராஜனான அரிச்சந்திரன் கொலுவிருக்கின்ற சபாமண்டபத்துக்குள்ளே போனார்கள் எ - று. 10

எய்தி னாரை யிறைஞ்சி யிருத்தியே
நொய்தின் மன்னவன் மாமுக நோக்குறீஇ
வைதி கததிரு மாதவத தீர்வந்த
செய்தி செப்புமென றுனுரை செய்குவார்.

இ- ள். அப்படிவந்த முனிவர்களை வணங்கி (அரிச்சந்திரன்) இருக்கச் சொல்லி, விரைவிலே அந்த முனிவர்களுடைய திருமுகங்களைப் பார்த்து வேதக்கிரமமாய் நடக்கின்ற மிகப்பெரிய தவமுனிவர்களே! நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்களென்று சொன்னான். அதற்கு அம்முனிவர்கள் சொல்லுகிறார்கள் எ - று. 11

மன்ன கேளொரு வாசகங் கௌசிகன
சொன்ன துண்டது நல்கத்து ணிந்திடின்
இன்ன தென றிங்கி யம்புது மென்றனர்
பின்னர் மன்னவன் பேசத தொடங்கினான்.

இ - ள். அரசனே! கேட்பாயாக: விசுவாமித்திரர் ஒரு வார்த்தை சொல்லியனுப்பினதுண்டு; அதை நீர் ஒப்புக்கொண்டு கொடுக்கச் சம்மதிப்பீரேயானால்,

அது இன்னதென்று சொல்லுகிறோமெனறார்கள். அப்படி அவர்கள் சொன்ன பினபு அரிச்சந்திரன் சொல்லத் தொடங்கினை எ - று. 12

இறுதி யெய்த லெனினுமி னிதுமற
றுறுதி யற்றுள தாயெற்க மைவதேல்
உறுதி நீருரை செய்தத றகொதகிடப
பெறுதும யாமென மாதவர் பேசுவார.

இ - ள். உங்களுக்குக கிட்டாததாய், எஙகளுககுக கிட்டுவதனால, கெடுதி வருகிறதானாலும் நல்லதே. அரசர்களான நாஙகள, நீவிர் உறுதியாகச் சொனனதறகுச் சம்மதமாகுவோம் எனறு (அரசன) சொல்ல, அதற்கந்த தவமுனிவர்கள் சொல்லுகிறார்கள் எ - று. 13

சந்தி ராதிதகர் தானவர் வானவர்
இநதி ராதிக ளியாவர்க்கு மெய்திட
வநதி ராவொரு வேள்விவ ளர்பபதை
நொந திராமுறற நுண்ணிதி னெண்ணினோம்.

இ - ள். சந்திரன - சூரியன - அசுரர்கள் - தேவர்கள் - இந்திரன் முதலான வர்களும் எல்லாருக்கும் செய்வதற்குக் கூடாத ஒரு யாகத்தைச் செய்வதற்கு வருத்தப்படாமல் முடிக்க அதி சூட்சமாக ஆலோசிததோம எ - று. 14

வேநத வப்பெரு வேள்விககி ருமபொருள
ஈநதி டறகுரி யாரெவ ரென்றறியாம
ஆய்நத னமமுனை யன்றிமற றில்லெனப
போநத னமமென மனனன் புகலுவான.

இ - ள். அரசனே! அந்தப் பெரிதான யாகத்துககு வேணடின அதிக திரவியமெல்லாம கொடுக்கத தககவாகள யாரெனறு நாஙகள் ஆராய்ந்து பார்த தோம்; கொடுககிறதற்கு உன்னையல்லாமல் வேறொருவரு மில்லையெனத் (தெளிந்து) வந்தோமெனறு கூற, அதறகு அரிச்சந்திரன சொலலுகிறான எ - று. 15

பரவு மிப்பொருள் பற்றவு மக்கது
தரலெ னக்கியல் பென்றரிச் சநதிரன்
திரவி யங்கொடு வமமெனச செபபலும
பிரம சாரிகண் மீளவும் பேசுவார்.

இ - ள். உங்களுக்கு அதிகமாக வேண்டிய இந்தத திரவியத்தை நீஙகள கொள்ளும்படி கேட்டபடியே அதைக கொடுக்கிறது எனககு நீதிதானென்று அரிச்சந்திரமகாராஜன் திரவியங்கொண்டு வாருங்களென்று சொல்லும் போது, பிரமசரியத்தையுடைய முனிவர்கள் மறுபடியும் சொல்லுகிறார்கள் எ - று. 16

இன்று வேண்டல மியாகமி யற்றிடும்
அன்று நல்க வமையுமெ மக்கென
நன்று நனறென மன்ன னவின்றபின்
நின்று வாழ்ததி நெடுநகர் நீங்கினர்.

இ - ள். இப்போது வேண்டாம்; நாங்கள் யாகஞ்செய்கிற அப்போது நீ எங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று சொல்ல, அதற்கு அப்படியே நல்லது நல்லதென்று அரிச்சந்திரன் சொன்னபின்பு முனிவர்களெழுந்திருந்து ஆசீர் வதித்து அந்த நெடிய நகரைவிட்டுப் போனார்கள் எ - று. 17

செநநெல் வெண்ணெல் விளையுஞ் செறுக்களும்
கன்னன் மன்னுங் கழனியுஞ் சோலையும்
அன்ன மாடுந் தடமும கன்றுபோய்ப்
பன்ன சாலைப் பழுவத்து ளெய்தினர்.

இ - ள். சிவந்த நெல்லும், வெள்ளை நெல்லும் விளைவதான வயல்களும், கரும்புகள் விளைகிற இடங்களும், சோலைகளும, அன்னங்கள் சஞ்சரிக்கிற குளங்களும் கடந்துபோய். விசுவாமித்திரரிருக்கிற பனசாலையையுடைய சோலைக்குள்ளே சென்றார்கள எ - று. 18

அன்ன காலை யருநதவக் கௌசிகன்
தன்ன டிததுணை த தாழ்நதரிச சநதிரன்
பொன் னளிக்கப் பொருந்தின னென்றவர்
சொன்ன பினனாதஞ் சூழலிற் போயினர்.

இ - ள். போன அப்போதே அந்த அரிதான தவமுனிவர்கள் விசுவா மித்திரருடைய பாதங்களிரண்டினிலும் விழுந்து வணங்கி, அரிச்சந்திர மகாராஜா நமக்கு வேண்டிய திரவியங் கொடுக்கச் சம்மதித்தானென்று அந்த முனிவர்கள் சொன்னபின்பு தங்களிடங்களுக்குப் போனார்கள் எ - று. 19

அடிவ ணங்கி யருநதவர் போனபின்
கடிது சிற்சில திங்கள கழித்துநீள்
வடிசு டர்ப்படை மன்னனைக் காணிய
கொடிய பாதகக் கோசிகன் றோன்றினன்.

இ - ள். அந்த அரிதான தவமுனிவர்கள் தம்முடைய பாதங்களை வணங்கிக்கொண்டு போனபின்பு, விரைவிலே சில சில மாதங்கள்போய், நீண்ட கூர்மையான ஒளியைக்கொண்ட வேலாயுததததையுடைய அரிச்சந்திர மகா ராஜனைக் காணுதற்குக் கொடுமையான பாவஞ்செய்ய எண்ணின விசுவா மித்திரர் வந்தார் எ - று. 20

கெடுக்க வந்தன னென்றுகி லேசியா
இடுக்க ணுற்றிளந் தென்றலி யம்பிட

மடுக்க ளும்மலர் வாவியுஞ் சோலையும்
நடுக்க மெய்திய லைந்தன நாடெலாம்.

இ - ள். இளங்தெனறற்காற்று கெடுதிசெய்ய வுத்தாவென்றுகிலேசப் பட்டு மிகவுந்துக்கித்துச் சொல்வதுபோல வீச, அதனாலே அந்தக்கோசலநாடு முழுதும் மடுக்களும, தாம ரக்குளங்களும, சோலைகளும் நடுக்கங்கொண்டு அலைதலாயின எ - று. 21

கள்ள நீதிக் கௌசிக னெண்ணிய
துள்ள மார வுணர்ந்திள மந்திகள்
துள்ளி நீங்கின சோலைக டோறுமென்
புள்ளி ரிந்தன பொய்கைக டோறுமே.

இ - ள். கள்ளமான ஒழுங்கைக்கொண்ட விசுவாமித்திரர் ஆலோசித்து வருகிறதைத் தங்கள் மனதாரத்தெறிந்து இளமையுள்ள குரங்குகள் சோலைகளெல்லாம குதித்துப போயினபோலாயின. குளங்களெல்லாம் மிருதத்தன்மையவாய நீர்ப்பறவைகள் அஞ்சியிருந்தனபோ லாயின எ - று. 22

அலைகள் சாய்த்தகல் வாவியின் மீனெலாம்
நிலைகள் சாய்த்தய னீங்கின வாழைகள்
குலைகள் சாய்த்தயல குபபுற்று நின்றன
தலைகள் சாய்த்தன சாலியி னீட்டமே.

இ - ள. அலைகளைமோதி அகன்றிருக்கிற குளங்களிலுள்ள மீன்களெல்லாம் தங்கள் நிலைகளை விட்டுத் தூரத்தே போகலாயின வாழைமரங்களெல்லாம குலைகளைச்சாயுமபடி விட்டுக்கொண்டு அருகே குனிந்துநின்றன நெற்பயிர்க் கூட்டமெல்லாம தலைகள் வளைந்துநின்றன எ - று. 23

எள்ளை யேயற் றிவறடுறடுத தார்கையில்
பிள்ளை யாதலிற பெய்மலாக காவெலாம்
கிள்ளை பாடின கேகய மாடின
களளை யுண்டலின் வண்டுக ளிதததவே.

இ - ள். கிளிகள், எடுத்தவர் கையிலுளதாகிய பிள்ளையாணபடியினாலே என்னையொதத அறிவும் இல்லாமல், மலர்களைச் சிந்துகிற சோலைகள் முழுதும பாடுதலாயின. மயில்களுமாடின. தேனைக் குடிக்கிறதினாலே வண்டுகள் மயக்கங்கொண்டிருந்தன எ - று.

தீமையுண்டானதாகச் சொல்கிறதுபோல் இந் நான்கு பாடல்களிலும் காட்டுவனமான நன்மையையே சொல்லியதாகக் கொள்க. 24

மாட மாளிகை மண்டப மாமதில்
ஆட ரங்க மகழிற் றுளங்குவ

கேட னெய்தக் கிடுகிடுக் கின்றபோல்
நாட நின்ற நகரிடை நண்ணினன்.

இ - ள். மாடங்கள் - உப்பரிகைகள் - மண்டபங்கள் - பெரிய மதில்கள் (பொதுமாதர்) ஆடுகிற சாலைகள் - அகழ்களிடங்குகள் முதலான இந்த இடங்களெல்லாம் கெடுதிசெய்கிறவனை வருகிறதினாலே கிடுகிடென்று பயப்படுகிறது போல, ஆலோசிப்பதாக இருக்கிற பட்டணத்துக்குள்ளே (விசுவாமித்திரர்) வந்தார் எ - று.

கிடுகிடென்று வாத்தியங்க ளொலித்தல். 25

தளரி ளைப்பிற் றமனிய வாயிலபுக
களவில செல்வத் தயோத்தியை நண்ணியே
கிளரொ ளிக்கதி கீழ்பட மேலுறீஇ
வளரொ ளிபெரு மண்டபத தெய்தினன்.

இ - ள். பொன்மயமான கோட்டைவாயிலுக்குள்ளே புகுந்து அளவில்லாத செல்வத்தைக்கொண்ட அயோத்தியாபுரிக்குள்ளேவந்து, விளங்குகிற ஒளியையுடைய சூரியனை றேற்றுப்போக அவனுக்கு மேற்பட்டு வளர்கின்ற ஒளியையுடைய பெரிதான சபாமண்டபத்துக்குத் தளர்வதான இளைப்புடனே வந்தார் எ - று. 26

மந்த ராசல மண்டபத் தெய்தலும
அந்த மாதவற கண்டரிச சந்திரன்
எந்த மாதவ மோவரு ளிங்குநீ
வந்த காரண மென்று வணங்கினன்.

இ - ள். பெருமைபொருந்திய அவ விசுவாமித்திரமுனிவர் மந்தர மலைபோ லுயர்ந்திருக்கின்ற அந்தமண்டபத்துக்குள்ளே வந்தவுடனே, அரிச்சந்திரனக்கண்டு தேவரீர இங்கெழுந்தருளிய காரணம் நானசெய்த எந்தப் பெரிதான தவத்தினாலோ! சொலலுவீராகவென்று வணங்கினன் எ - று. 27

காவன் மனன கடிமறை வேளவிககென்
னேவன மாககட கிசைநத பெருமபொருள்
தாவெ னசசொலக் கேட்டரிச சநதிரன
ஈவ லெதது ணை வேண்டுமென றேத்தினன.

இ - ள். (அதற்கு) உலகத்தை இரட்சிக்கின்ற அரசனே! தேவர்களாலே காக்கத்தக்க வேதமந்திரங்களைக் கொண்டுசெய்கின்ற யாகத்துக்கு எனது ஏவலாலே வந்த முனிவர்கள்முனனே கொடுக்கச் சம்மதித்த திகமான பொருள்முழுதும் இப்போது கொடுக்கவேணுமென்று விசுவாமித்திரர் சொல்லக்கேட்டு, அரிச்சந்திரமகாராஜன இப்போதே கொடுக்கிறேன் எவ்வளவு வேணுமென்று சொலலித் தோததிரஞ் செய்தான் எ - று. 28

மான வன்சொல மாமுனி நோக்கியே
யானை மேனின் றெறிந்தக வண்சிலே
போன தூரம பொருள்குவிப் பாயெனின்
மோன வேளவி முடித்திடலா மென்ருன்.

இ - ள். அநத மகானுபாவனுனை அரிச்சந்திரன் அவவாறு சொல்லுகை யில், பெருமைபொருந்திய விசுவாமிததிர முனிவா அரசனைப்பாாத்து யானை மேலே நினறு எறிந்த கவணகள்போகிற துாரஅளவுளள பொருள் கொணடு வந்து குவிப்பாயேயானல் நான மௌனமாயிருந்து செய்வதான யாகத்தை முடிதது நிறைவேறறக கூடுமெனறு சொனனுர் எ - று. 29

இறைவ னிவ்வகை யீகுவன் யானெனு
அறைதி றநதிவ னுனையைத தமமெனக
குறைவில வாதுவ ரோடிக கொணாநதிடப்
பிறைபெ யிற்றுப் பெருஙகளி றுறறதே.

இ - ள. அதறகு அரிச்சந்திரமகாராஜன அந்தப்படியே நான கொடுக கிறேனெனறு பொருளுளள பொககிஷவீடடைத திறநதுகொண்டு. இஙகே யானையைக கொணடுவாருஙகளெனறு உததரவுசெய்ய, அப்போதே குறைவு சொல்லாமல யானைப்பாகாகள் ஓடிபபோயக கொணடு வர, சந்திரதுண்டம் போலும் கொம்புகளையுடைய பெரியயானையும வநதது எ-று. குறைவு-தடை.

ஒதத தேயமை யுமமென தொண்பொருள்
வைதத னன்னினனி டததடை பனனயான
சுதத வேள்வி தொடஙகிடு நாளெனக
குய்ததி நீயென றுரைததவ னேகினுன.

இ - ள. அந்த விசுவாமிததிரா, அரசனே! நீ சமமதிததததேபோதும்; இனி நீ கொடுப்பதாகிய அழகிய பொருளெலலாம உனனிடததிலே தானே அடைக் கலமாக வைததேன. இனி நான டரிசுததமான யாகஞ செயயுமபோது எனக குக கொடுப்பாயாகவெனறு சொலலிச சென்றா எ - று. 31

அருவ னஙகடந தாசசிர மமபுகுந
தொருத ருததட நீழலு னநதுபாா
மிருகம புளளினம யாவும விரைநதிவண்
வருக வென்று மனநதனி லுனனினுன.

இ - ள். அரிதான காடுகளெலலாங கழிநதுச்சென்று தமமுடைய பாணக சாலேகளுள்ளேபோய் அஙகே ஒரு மாததினது பெரிதான நிழலின கீழே யிருந்துகொண்டு, உலகததிலுளள மிருகக கூடடஙகள பட்சிக கூட்டஙகளெல லாம சீககிரததிலே யிஙகேவநது சேரவேணுமெனறு தமமுடைய மனததிலே நினைந்தார் எ - று. 32

அலங்க லஞ்சடை மாமுனி யன்பிலான்
நலங் குலைந்து நினைத்த வந நாடனில
கலங்கி வாய்களிற் கௌவிய தீன்விட்டு
விலங்கெ லாமுன் விரைநதுவந துற்றவே.

இ-ள். அசைதலையுடைய அழகிதான சடையைக்கொண்ட பெரிய விசுவாமித்திரர் இரக்கமில்லாதவராய் நீதிநலததைவிட்டு நினைத்த அககாலத திலே மிருகங்களெல்லாம பயநது தஙகள வாயகளிலே கௌவித தினகிற இரைகளையும் விட்டுவிட்டு அவருககு முனனே அதிசீககிரததிலே வந்து கூடின எ-று. 33

வளையும வாலெடுத தோசசி வருகனல்
விளையுங கணகள விழுவன போலுற
உளைவி ரிதது விதிாததுத றிபபெருங
கிளையி னேடுற்ற கேசரி கோடியே.

இ-ள். ஒருகோடி சிஙகங்கள வளைவான வால்களைத தூககி நீட்டி யுக முடிவிலே வருகிற வடவாக்கினியானது, கோபஙகொள்ளுவதான கண்களி லிருந்து சிந்துகிறதுபோற சிவநத உரோமஙகளை விரிததுச சிலிர்ந்து உதறிக் கொணடு தமது பெரிதான கூட்டததுடனே வந்தன எ-று. 34

வானி மிர்நது வளைநதுடல கூனிநீள
கானி மிர்நதுவெங் கண்கள சிவநதுவிண்
மேனி மிர்நதுவந துற்றடா வெஙகடல
போனி மிாநதுவ ருமபுலி கோடியே.

இ-ள். ஒருகோடி புலிகள் வால்கள நிமிாதலாய் வளைவுகொண்டு உடல வளைந்து நீண்ட கால்கள நிமிாநது வெப்பமேறுடிய கணகளெலலாஞ சிவந்து ஆகாயததினமேலே உயாநது தாவிககொணடு வந்து சோதலாயக் கொலைத தொழிலைக்கொணட வெப்பமான கடலபோல உயாநது வருவதாயின எ-று.

குளிறு மாமுகில கூடிய வாமெனப
பிளிறு கன றுமம பிடிகளுமம பினவர
வெளிறு தநதக கருநிற வெண்புகாக்
களிறு கோடிக டிதுவந துற்றவே.

இ-ள். சப்திககினற கறுதத மேகங்கள கூடித திரணடன வெனனும்படி வீறிடுகினற கனறுகளுமம, பெண யானைகளுமம பினனேவர, வெளுப்பான கொமபுகளுமம, கறுதத நிறமுமம வெணணிறமுமான முகததிற் புள்ளிகளுங் கொண்ட கோடி யானைகள் விரைவிலே வந்து கூடின எ-று. 36

கணணெ லாஙகனன மண்டக கடுவிடம
மண்ணெ லாஙகுதி கொள்ளம ணிசசுடர்

விண்ணெ லாமவெயில் வீசிட வாய்பிளந
தெண்ணி லாவர வெங்குமவந் தீண்டின.

இ-ள். கண்கள் முழுதும் நெருப்பெரிய, கடுமையான விடமானது பூமி யெல்லாஞ் சிந்த, தலையிலுள்ள இரத்தினச் சோதியானது ஆகாய முழுதும ஒளிவீச வாயைத் திறந்துகொண்டு கணக்கில்லாத பாம்புகள் எவவிடததிலும் வந்து கூடின எ-று. 37

மான முங்குபுல் வாய்மறை வாஙகலை
ஏன நான மெலிபெருச சாளியெய்
கான மேதி கரடிசெந நாய்நரி
வான ரஙகட மாவிவை வநதவே.

இ-ள். மானகள் - ஆமைகள் - கடமைகள் கானக்குதிரைகள் தாவுகின்ற கலைமானகள - பன்றிகள் - புனுகு பூனைகள் - எலிகள - பெருச்சாளிகள - முள ளம் பனறிகள் - காட்டெருமைகள - கரடிகள - செநநாய்கள - நரிகள் - குரங்கு கள் - கடமாக்களாகிய இவைகளெலலாம வந்து கூடின எ-று.

அழுங்கு - ஆமை. எய் - முளளம்பனறி கடமா - காட்டுமிருகம். 38

தோகை பூவைசு கஙகுககில சககர
வாக நாரை மடவனங கோகிலம
காக மன்றில்சி வலகவு தாரிபூழ்
வேக மோடுப றநதுவி ரைநதவே.

இ-ள். மயிலகள - நாகணவாயப புட்கள - கிளிகள் - செமபோத்துகள்- சக்கரவாளப புட்கள - நாரைகள - இளமையான அனனஙகள - குயில்கள்- காகங்கள - அனறிலகள் - சிவறகாடைகள - கவுதாரிகள - காடைகள ஆகிய இவைகளெலலாம அதிவேகததுடனே பறந்து விரைவாய வந்தன எ-று. 39

முநதி வநத முதிர்சின மாககளும
வெநதி றறகொடு வேகதத நாகமும
பநதி பநதி பறவைத திரள்களும
வநது வநது முனியை வணஙகின.

இ-ள். முனனேவந்த முதிர்ந்த கோபததைககொணட மிருகங்களும் வெம்மையான சாமாததியததையும, கொடிதான வேகததையுஙகொணட யானை களும், கூட்டங்கூட்டமாக வந்த பட்சிக கூட்டஙகளும வந்து வந்து விசுவா மித்திரரை வணங்கின எ-று. 40

தழைததத புல்லுந தழையுங் கனிகளும
விழைத்த ருந்தி வெருண்டுவெ குண்டுகோள்
இழைதது நீள்வனம வாழ்கின்ற வெமமைநீ
அழைத்த தீதென் றருள்செயல் வேண்டுமே,

இ - ள். தழைத்திருக்கிற புற்களையும், இலைகளையும், கனிகளையும் விரும்பித் தின்றும்; பயந்தும், கோபித்தும் எங்கள் கொள்கைகளைச் செய்துகொண்டு நீண்ட காட்டிலே சஞ்சரிக்கின்ற எங்களை நீர் வரச்செய்தது இன்னதற்காக வென்று எங்களுக்குச் சொல்லவேண்டும் எ - று. 41

என்று கூற முனிவனி யம்புவான்
குன்றுமேவு விலங்கின் குளத்துளீர்
ஒன்று கூறுவ துண்டினி யானுமக
கின்று நீர்செய் பணியென றியமபுவான.

இ - ள். என்று அவைகள் சொல்ல, அதற்கு விசுவாமித்திரர் சொல்லுகிறார். மலைகளிலே சஞ்சரிப்பதான மிருகக் கூட்டமானவர்களே! நான் உங்களுக்குச் சொல்வதொன்றுண்டு' அதையே நீங்களிப்போது செய்யத்தக்க வேலையென்று சொல்லுகிறார் எ - று. 42

தாரின் மன்னு புயததரிச சநதிரன்
பாரின் மன்னுயிர பைமபொழி றண்பயிர
வேரி னோடுங் களைநதுவி ரைநதுநீர்
வாரு மெனறு மறைமுனி யேவினன.

இ - ள். பூமாலைகளாலே நிரமபுதலான தோளகளையுடைய அரிச்சந்திரனது நாட்டிலுள்ள பெரிதான ஜீவனகளையும், பசுமையான சோலைகளையும், குளிர்ந்திருக்கிற பயிர்களையும வேரோடழியப்பண்ணிச் சீக்கிரததிலே நீங்களிங்கே வாருங்களென்று வேதமுனிவரான விசுவாமிததிரர் சொனனார் எ - று.

அக்க ணததிலி றைஞ்சிய ருந்தவன
பக்க னின்ற விலங்குமப றவையும
திக்க னைததுஞ செறிநதுவி ரைநதுபோய்ப்
புக்க வததிரு நாடடின புறததெலாம.

இ - ள். சொனன அந்தட்சணகாலததிலே வணங்கிக்கொண்டு அரிய தவத்தையுடைய விசுவாமிததிரர் பககததிலே நினற மிருகங்களும், பட்சிகளும் எந்தத திககிலும நெருஙகி விரைவிலேபோய அந்த அழகிதான கோசல நாட்டின் பக்கமெல்லாமபோய் கூடின எ - று. 44

வெள்ளை யானிரை வெமபுலி கோளரி
கொள்ளை யாடின கொலலையுஞ சோலையும்
வள்ளை சூழும் வயலுமம புனங்களும்
கிள்ளை தோகை கிளையொடு மொய்ததவே.

இ - ள். முன்னே வெண்மையான பசுக் கூட்டங்களை வெவ்விய புலிகளும், சிங்கங்களும் கொள்ளைகொண்டு கொனறு தினறன. கொல்லைகளிலும்,

சோலைகளிலும், வள்ளைக்கொடிகள் படர்ந்திருக்கின்ற வயல்களிலும், தினைப் புனங்களிலும் கிளிகளும், மயில்களும் தங்கள் கூட்டத்தோடு போய் மொய்த்தன எ - று. 45

அடர்ந்து மந்தியும் வண்டும் கனகூடம்
தொடர்ந்து செல்வன சோலைகள் பாழ்பட
படர்ந்து யார்ந்த பழுமரங் காய்மரம்
இடந்தி ரிந்தன யானைக ளெங்குமே.

இ - ள். மந்திகளும், வண்டுகளும் மருங்கு, அகன்ற பாலைவன முதலான இடங்களெல்லாம் ஒன்றையொன்று பின்றொடர்ந்து செல்வதாயின. யானைகள் சோலைகளெல்லாம் பாழாகும்படி படர்ச்சியாய் உயர்ந்திருக்கிற ஆலமரங்கள், காய்த்த மரங்க ளிவைகளுள்ள இடமெல்லாம் திரிதலாயின எ - று. 46

முழங்கு நீர்த்தட முற்றுமு டைத்துநீர்
வழங்கு வண்டன மடைகளுந் தூர்த்துராய்த்த
தழங்கு சாலியுஞ் சாடித் தழைக்கொடிக
கிழங்கு மாய்த்தன கேழற் றிரள்களே.

இ - ள். பன்றிக்கூட்டங்கள், அலைகள் முழங்குகின்ற நீர்க்குளங்கள் முழுதும் உடைத்து, நீர்பாய்கிற சேறுடைய மடைகளையும் தூர்த்து, உராவி ஒலிக்கின்ற நெற்களையெல்லாம் அழித்து, தழைகளையும் கொடிகளையும் கிழங்குகளையும் அழிவுசெய்தன எ - று. 47

காட்டு வாழ்கலை மான்கட மாமரை
நாட்டு வாழ்புனஞ் சேரந் விந்திட
ஓட்டு வாரை யொதுக்கிநின் றேபருங்
கோட்டு வாரணங் குத்திப் பிளந்தவால்.

இ - ள். காட்டிலே சஞ்சரிக்கின்ற கலைமானும் - கடமாக்களும் - கானக் குதிரைகளும் கூடி, நாட்டிலேயுள்ள புனங்களையெல்லாம் அழிக்கும்போது ஓட்டவந்தவர்களை ஒதுக்கிடத்திலே நின்று பருத்த கொம்புகளை யுடைய யானைகள் குத்திப் பிளந்தன எ - று. 48

இரவு காவலி ருப்பவரி யாரையும்
அரவுந் தேளு மரணையுங் கொன்றவால்
கரவி னின்று புலியுங் கரடியும்
வரவ ரக்கொன்று மாக்களை மாய்த்தவே.

இ - ள். இராத்திரியிலே காவல் காத்துக்கொண் டிருக்கிறவர்களெல்லாரையும் பாம்பும்-தேளும்-அரணையும் கொன்றன புலிகளும் கரடிகளும் மறை விடங்களிலே யிருந்து மனிதர்களைக் கிட்டிவரக் கொன்றழித்தன எ - று. 49

மதந்த ருங்கரி மான்மரை வல்லுளி
ததைந்த தாமரைத் தண்வய லிற்புகப்
புதைந்து சேற்றினிற் புக்கவும் வேரறச்
சிதைந்த வுஞ்செழுஞ் செந்நெலும் வெண்ணெலும்.

இ - ள். மதத்தைச் சிந்துகின்ற யானைகளும்-மான்களும்-மரைகளும்-பன்றிகளும்-நெருங்கின தாமரை மலர்களுடைய குளிர்ந்த வயல்களிலே போய்ப் புகும்போது, சேற்றிலே யழுந்திப்போன சில செழுமையான செந்நெற் பயிர்களும் வெண்ணெற் பயிர்களும் வேரோ டற்றழிந்தன எ - று. 50

நெற்ப சும்பயிர் பற்றினி மிர்தன்மா
பொற்பின மன்னர் புயவலி யற்றநாள்
கற்பின மாதர் கருங்குழல் பற்றிநீள்
வெற்பின் மாக்கள் விசித்திடல் போன்றவே.

இ - ள். மிருகங்கள் நெல்லினது பசுமையான பயிர்களை வாயினாலே கௌவிக்கொண்டு போகிறதானது, பெரிதான அழகுடனே கூடின அரசர்கள் தங்களுக்குப் புஜபலங் குலைந்த காலத்திலே, கற்புள்ள பெண்களுடைய கரிதான கூந்தலைப்பற்றி நீண்ட மலைகளிலுள்ள குறவர்கள் இழுத்துக்கொண்டு போகிறதுபோ லிருந்தன எ - று. 51

பண்டு போர்பழ னச்செழுஞ் சாலியை
உண்டு போதவு ழக்கிய மாக்களைக்
கண்டு போய்க்கடி வோர்தமைக் கவ்வியே
கொண்டு போவன கோளரி யீட்டமே.

இ - ள். முன்போலவே வயல்களிலுள்ள செழுமையான நெற்பயிர்களைத் தின்று மிதித்தழிக்கிற மிருகங்களைக் கண்டுபோய் விலக்குகின்றவர்களை யெல்லாம் சிங்கக்கூட்டங்கள் வாயாலே கவ்விக்கொண்டு போவதாயின எ - று.

இந்த வாறு நிகழ்ந்திட வேங்கியே
அந்த நாட்டி லனைவருங் கூடினா
வந்த யோத்தியின் மன்னனைப் போற்றித்தஞ்
சிந்த னைப்படர் செப்பத்தொ டங்கினார்.

இ - ள். அந்த நாட்டிலுள்ள எல்லாரும் இந்தப்படி முழுதும் நடப்பதற்குத் துக்கங்கொண்டு கும்பலாகக்கூடிவந்து அயோத்தியாபுரியிலுள்ள அரிச்சந்திர மகாராஜனைக் கண்டு துதித்துத் தங்கள் மனத்திலுண்டான துன்பங்களைச் சொல்லத் தொடங்கினார்கள் எ - று. 53

என்ன பாவ மிதற்குமுன் கண்டிலேம்
மன்னர் மன்னவ னத்துவி லங்கினால்
செந்நெல் கன்னலி னைப்புனந் தேம்பொழில்
இன்ன வெண்ணில விற்றன வின்றென்றார்.

இ-ள். இது என்ன பாவத்தினாலே இப்படியாயிற்றோ தெரியவில்லை. இதற்கு முன்னான காலத்திலே இவ்வாறு நடக்க நாங்கள் பார்த்தறியோம். ஓ ராஜாதி ராஜனே! இப்போது காட்டிலுள்ள மிருகங்களாலே, செந்நெல்லும்-கரும்பும்-தினைப்புனமும்-தேனை பொருந்தின சோலைகளும் ஆகிய இவைகளெல்லாம் அளவற்றவைகளா யழிந்து போயினவென்று சொன்னார்கள் எ-று. 54

கலையு மானுங் கடமையு மேனமும்
மலியுந் தண்பயிர் யாவையு மாய்த்தன
புலியும் பல்லமுஞ் சிங்கமும் புக்குயிர்
நலியு மோட்ட நடந்தவர் தம்மையே.

இ-ள். கலைமான்களும் புள்ளிமான்களும் பன்றிகளுங் கூடி மிகுதியான குளிர்ந்த பயிர்களெல்லாவற்றையு மழித்தன. புலியும் கரடிகளும் சிங்கங்களும் வந்து அந்த மான் முதலியவைகளை ஓட்டப்போனவர்களை யெல்லாம் கொல்லுவதாயின எ-று. 55

நீரை மாய்த்தன வாரண நீள்பயிர்த்
தூரை மாய்த்தன மானமரை சூகரம்
வேரை மாய்த்தன மென்மயில் பைங்கிளி
சேர மாய்த்தன செந்நெற் கதிரையே.

இ-ள். யானைகள் நீர்க்குளங்களையெல்லாம் அழிக்கலாயின. மான்களும் மரைகளும் பன்றிகளும் நீண்ட பயிரின் வேரை யெல்லாம் அழித்தன. மிருதுவான மயில்களும் கிளிகளுங்கூடிச் சிவந்த நெற்கதிர்கள் முழுமையும் வேரோடழிந்தாற்போல அழித்தன எ-று. 56

தின்று தின்று திரண்டபைங் கூழெலாம்
ஒன்று மின்றி யுழக்கின வோட்டவே
சென்று சென்று செறிந்தவர் தங்களைக்
கொன்று கொன்று குவித்தன கோடியே.

இ-ள். இப்படித் திரண்டிருக்கிற பசிய பயிர்களையெல்லாம் தின்று தின்று ஒன்றுமில்லாமல் மிதித்தழித்த மிருகங்களை ஓட்டுகிறதற்குப்போய்க் கூடினவர்களையெல்லாங் கொன்று கொன்று குவித்திருப்பவைகள் கோடியுண்டு எ-று. 57

அரிய னந்த மரவும னந்தம்வெங்
கரிய னந்தங் கரடிய னந்தமா
நரிய னந்த நவியனந் தங்கொடு
வரிய னந்த மலிந்தன வந்தென்றார்.

இ-ள். சிங்கங்களும் அநேகம். பாம்புகளும் அநேகம். வெவ்விய யானைகளும் அநேகம். கரடிகளும் அநேகம். பெரிய நரிகளும் அநேகம். மான்களும் அநேகம். கொடிய புலிகளும் அநேகமாக வந்து எங்கு மிருக்கின்றன எ-று. 58

மயிலுங் கிள்ளையும் பூவையும் வாவலும்
குயிலுங் காகமுங் கூகையு மன்றிலும்
அயிலுங் காடையு மன்னமு மென்றுபேர்
பயிலுங் கூடப் பறவைய னந்தமே.

இ-ள், மயில்களும் கிளிகளும் நாகணவாயப் புட்களும் வௌவால்களும் குயில்களும் காக்கைகளும் கூகைகளும் அன்றில்களும் பழங்களைத் தின்பனவான காடைகளும் அன்னங்களும் என்று பேர்வழங்குகின்றதான அந்த மிருகங்களுடனே கூடப் பட்சிகளும் அநேகமாயின. 59

நாற்ற மேற்றுவந் தெம்மை நலிந்திடத்
தோற்று மாகுலச் சூழ்வினை தன்னைநீ
மாற்றி டாயெனின் மன்னவ வெங்களால்
ஆற்றொ ணாதென் றடிதொழு தேத்தினார்.

இ-ள். நாற்றம் பிடித்துக்கொண்டுவந்து எங்களை வருத்தஞ் செய்வதாகத் தோன்றின துன்பமான பாபங்களை நீ போக்காதிருந்தாயானால் அரசனே! எங்களாலே இந்தத் துன்பங்களைத் தாங்கமுடியாது என்று பாதம் வணங்கித் துதித்தார்கள் எ-று. 60

அங்கண் மாநிலத் தன்னநன் னாட்டவர்
தங்கள் வாய்மொழி கேட்டரிச் சந்திரன்
திங்கள் சூடி திருவிளை யாட்டினுக்
கெங்க ளாற்செய்வ தென்னென வெண்ணினன்.

இ-ள். அழகிய இடத்தையுடைய அந்த பெரிய உலகத்திலே நல்லதான கோசல நாட்டிலுள்ளவர்கள் மாத்திரம் வந்து சொன்ன வார்த்தைகளைக்கேட்டு அரிச்சந்திரமகாராஜன் சந்திரனைச்சூடின பரமசிவனுடைய திருவிளையாடல் இப்படியானால் எங்களாலே செய்யத்தக்க தென்ன விருக்கின்றதென்று ஆலோசிக்கலானான் எ-று. 61

அறைபு னற்றிரு நாட்டழி வுற்றதற்
கிறையு மக்கிரண் டாண்டினுக் கில்லெனக்
குறைவி லாநிதி கூறைய ளித்துநீர்
உறையு மூர்தொறுஞ் செல்லுமென் றோதினன்.

இ-ள். ஒலிக்கின்ற கங்காசலம் பாய்வதான இந்தத் திருநாடு இப்படி அழிந்ததற்காக அரசனுக்குக் கொடுக்கும் பகுதி உங்களுக்கு இரண்டு வருஷத்துக் கில்லையாகக் கடவதென்று சொல்லி, அவர்களுக்குக் குறைவு தோன்றாமல் பொருள்களும் வஸ்திரங்களுங் கொடுத்து நீங்களிருக்கு மூர்களுக்குப் போங்களென்று சொன்னான் எ-று. 62

வஞ்சனைக் காண்டம் முற்றிற்று.

ஆக விருத்தம்-520.

உ

கடவுள் துணை

## நான்காவது

# வேட்டஞ்செய் காண்டம்

---

### கலி விருத்தம்

நிலவு காலு நெடுங்குடை மன்னவன்
புலவு வாய புலிமுதல் யாவையும்
சுலவு தானை தொடர்தர வேட்டஞ்செய்
செலவு மேவிய செய்திவி ளம்புவாம்.

இ-ள். சந்திரிகையை வீசுகின்ற நெடிதான வெள்ளைக்குடையையுடைய அரிச்சந்திரமகாராஜனானவன், இறைச்சியை வாயிலேயுடைய புலிகள் முதலான எல்லாவற்றையும் வேட்டையாடுதற்குச் சூழத்தக்க சேனைகள் கூடத் தொடர்ந்துவரப் போகுதலான செய்கையை இனிச் சொல்லக்கடவோம் எ-று.

செலலு மென்னப் பணிந்தவர் சேறலும்
வெல்லும் வெம்படை வேந்தன மைச்சர்காள்
கொல்லு மிந்தக் கொடுவினைக் கென்செய்கோ
சொல்லு மென்னத் தொழுதவர் சொல்லுவார்.

இ-ள் குடிகளைப் போங்களென்று சொல்ல, அக்குடிகள் வணங்கிக் கொண்டு போனவுடனே, வெல்லத்தக்க வெவ்விய சேனைகளையுடைய அரிச்சந்திரமகாராஜன், மந்திரிகளே! குடிகள் முதலானவர்களையெல்லாம் கொல்லலான இந்தக்கொடியசெய்கைக்கு நான் என்னசெய்வேன்? நீங்கள் சொல்லுங்களென்று கேட்க, அம்மந்திரிகள் வணங்கிச் சொல்லுகிறார்கள் எ-று. 2

கூட்ட வேடருங் கோலுமவை வேலுநா
யீட்ட முங்கொடு கானகத் தெய்திநீ
வேட்டை யாடிவி லங்கின மாய்த்துயிர்
நாட்டை யோம்ப னலமெனக் கூறினார்.

இ-ள். நீர் கூட்டமான வேடர்களும், அம்புகளும், கூரியவேல்களும், நாய்க்கூட்டங்களுங் கொண்டு காட்டுக்குப்போய் வேட்டையாடி மிருகங்களையெல்லாங் கொன்று, இந்நாட்டை இரட்சிக்கிறதே நன்மையென்று சொன்னார்கள் எ-று. 3

என்ற மைச்சரி யம்பலு மன்னவன்
நன்று நன்றென நன்மன மக்கொள்ளாக்
குன்ற வாண்மைக் கூட்டிக்கொ ணர்கென
நின்ற தூதர் தொழுதய னீங்கினர்.

இ - ள். என்று மந்திரிகள் சொல்லுமளவில், அரசனானவன் நல்லது நல்லதென்று ஒப்பி மனத்திலே வேட்டையாடச் சம்மதித்து, மலைகளிலே வாழ்கின்ற குறவர் - வேடர் முதலானவர்களைக் கூட்டி வாருங்களென்று சொல்ல, அதுகேட்டு அங்கேநின்ற தூதர்கள் வணங்கிக்கொண்டு வெளியே போனார்கள் எ - று. 4

ஓடி னார்க ளியாவரைக் கானகம
நாடி னாகணம நாயக னுங்களைத
தேடி னானென று செப்ப லுஞ் சிறசிலா
கூடி னார்துடி கொட்டின ராஙகுமே.

இ - ள். விரைந்து சென்றவர்களாய் உயர்ந்த மலைககாடுகளெல்லாந் தேடிக் கண்டு நமதரசனானவன உங்களை எங்கேயென்று தேடுதலானானென்று சொல்லுமளவில், சிலசிலபேர்கள் எவவிடத்துங கூடிப் பம்பைகளை முழக்கினார்கள் எ - று. 5

அநத வேலை யருஞ்சுரம யாவினுங்
கநதன் மேவு குறிஞசித தடத்தினுங
குநதம வேல்சிலை கூன்குணில கொண்டவண்
வநத வேடர் வரவு விளம்புவாம.

இ - ள். அப்படிககொட்டின பமபைதொனி கேட்ட அப்போதே அருமையான பாலைநிலஙகளெல்லாவற்றிலும, முருகனிருக்கிற குறிஞசிநிலைக் காட்டிலும் நின்று கையீட்டி - வேல - வில - வளைதடி யாகியவைகளைக கொண்டு அஙகுவந்த வேட்டைக்காரர வருகையை சொல்லுகிறோம எ - று. 6

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பீலி கட்டியதன மீது மொய்தொளி பிறஙகு செட்டைக ளனைததுநீள், மாலை யிட்டுவளா குஞசி துஞசநெல் வரிநதி றுககுமலர் சூடியே, காலி னிற்றொடுசெ ருபப ணிநதுகழல கட்டி நீடுடிக றங்கவை, வேலபி டிததுடலம வோவ ருமபிடவி ரைநது வநதனர னநதரே.

இ - ள். மயிலிறகுகளாலேசெய்த சீராவை உடம்பிலேதரித்து, அதனமேலே நெருங்கி ஒளிவிளஙகுகின்ற இறகுகளை இருபுறத்திலுங்கொண்டு (மயிலென்று தோற்ற) நீண்ட மாலைகளுமணிந்து, வளாகிற தலையிலே தஙகுவதாக நெற்கதிரும மலாநதுவருவதான காக்கணம் பூவுஞ்சூடி, காலிலே போடத்தக்க செருப்பும போட்டுககொணடு, வீரககழல ளுங கட்டி, நெடிதான துடி முதலிய வாததியங்களு முழங்கக, கூர்மையான வேலகளுஙகொணடு உடம பெல்லாம வேர்வையுண்டாக அநேகர்கள் அதிசீககிரத்திலே வந்தார்கள் எ - று.

கொலையெ டுததசம னுறைவ தற்குரிய கூடெ னததகைய தூணியிற், கலையெ டுததபிறை யனைய முததலைய கணைநி றைதத துவ

ளர் மார்பினில், மலேய டுத்தனேய புயம ணைத்திறுக வார்வி சித்து வரு காரெனச், சிலேயெ டுத்துவிழி கனலெ ழுக்கடிது சென்ற வேடு வர னந்தரே.

இ - ள்- கொலைதடுதொழிலைக் கொண்ட யமனிருக்கிறதற்குத் தகுந்த கூடெனறு சொல்லததக்க அம்புககூட்டிலே, எட்டுக்கலைகளை கொண்ட சந்திரனேயொப்பான பாணங்களும், மூனறுதலைய யுடைய பாணங்களும் நிரப்பிகொண்டு, விசாலமான மார்பிலும மலைகளைச் சுமப்பதுபோலான தோள் களிலும் (பொருந்தச்) சேர்ததுத தோற்சட்டைகளை யிறுககிப் போட்டுக் கொண்டு, கையிலே வில்லுங்கொண்டு கண்களிலே நெருப்புததோனற நடந்து வருகிற மேகம்போல் விரைந்துவந்த வேடர்க ளநேகர்கள எ - று. 8

பணில மொததபல கணைநிரைததபல கவச மிட்டுவெகு துவ சரா, யணிம யிரககரடி மதக ரிததிரள்கள் புலிமு தற்கிரியி னளவ வாய்க், கணிலெ திரத்தவைக ள கரவி லுறறவைக டுணிப டககருவி யெறியுமக, குணிலெ டுததுலக நிறைய வநதனாகள் கோடிகோடி கொலே வேடரே.

இ - ள். கோடானகோடி கொலைதடுதொழிலைச் செய்கின்ற வேடாகள், சங்குகளுக்கொப்பான பலகணைகளை நிரப்பியிருக்கிற பலவிதமான சட் டைகளுமணிந்து அநேகங் கொடிகளை யுடையவராய் அழகிய மயிர்களை யுடைய காடிகள்-மதயானைககூட்டங்கள்-புலிகள்-பனறிமுதலான அளவிலவாகிக கண் ணிலே தோனறினவைகளும, மறைவிலே யிருக்கினற வைகளும துண்டங்களா குமபடிக கோபிததுு வீசுகினற குறுந்தடிகளுங் கொண்டு அந்தநாடெல்லாம் நிரமப வந்தாாகள் எ - று. 9

வெனறி மததகம தகக ளிறறினெடு வெண்ம ருபபிலவிளே முததமுங், குன்றி முததுநிரை யொகக வைததகன கோவை மார்பி னிடை தாழவே, பனறி யிறபரும ருபபிணை தடுதொழிலப யின்ற கண் டிகைய ணிநதுயிர், கொனறு தினபதுவி ருமபி வநதனாரு டார வேடரொரு கோடியே.

இ - ள். கோடரி கையிலேகொண்ட ஒருகோடி வேடர்கள் வெற்றியைக் கொண்ட மததகததோடுகூடின மதயானைகளினுடைய நீண்ட வெள்ளிய கொமபிலுள்ள முததுகளும குனறிமணிகளும் வரிசையாகச் சரிககுச சரியாகக் கோத்திருககிற கனமான கோவைகள மார்பிலே தொஙக, பனறியின கொமபு களை அத்துடனேசேர்தது அழகுபொருநதிய கணடிகையாக அணிந்து, உயிர் களைக்கொனறு தினகிறதையே விருமபிவந்தாாகள் எ - று.

குடாரம் - கோடரி. 10

பாச மிறறிட விசிதத சங்கிலிகள் பற்ற றததமில ழன்றிவெம், பூச விட்டனலெ னச்சி னநதுறு புணர்சசி யின்மிகுமு ணர்சசி

யாய்க், கேச ரிக்குருளை யென்ன வூளைபயில் கீத வோதைதிசை நாலினும், வீச முற்செலிநெ ருக்க முற்றுவரு வெண்சு ணங்குசத கோடியே.

இ - ள். கட்டினகயிறு அற்றுப்போகவும், பூண்டசங்கிலிகள் பொறுத்து விட்டுப்போகவும், தங்களுக்குள்ளே கோபங்கொண்டு வெவ்விதான கூச்ச லிட்டு நெருப்புபோற கோபித்துக கூடுகின்ற புணர்ச்சியிலே மிகுந்த கீனை வுள்ளவைகளாய்ச் சிஙககருட்டிகள்போல ஊளையிடுகிறபாட்டோசையானது நானகுதிக்கிலுங் கேட்க நெருககங்கொணடு முனனே வருகிற வெளளை நாய்கள் நூறுகோடி எ - று. 11

அநத ரத்திடியெ னக்கு ரைததுமுதி ராழி போலுறுமி வார்த டங், கநத ரததிறுக நினறு ரபபியிரு கான்ம டக்கியெதி ராவியே, தந்த மிற்கறுவு கொண்டு பல்பலத யஙக வெங்கனற டஙகணுற, சிந திடச சருவி மூனக திததுவரு செஞுசு ணஙகுசத கோடியே.

இ - ள். ஆகாயததிலுணடாகும இடிபோறகுலைதது முதிர்ந்த கடலைப் போலுறுமி தோல் வாரானது பெரிய சமுததிலே இறுகுமபடிநினறு அதட்டி, இரண்டு கால்களையு மடககிககொணடு முனனே பாய்நது தங்களுக்குள்ளே வயிரங்கொண்டு அநேகங்கள விளஙகவும, வெபபாக நெருபபு பெரிய கண களிலே சிந்தும்படி சாடைகணடு முனனே வேகங்கொணடு வருகிற சிவப்பு நாய்கள் நூறுகோடி எ - று. 12

வெண்டை யஙகவடி கண்டை வாரெழிலவி ளங்கு வெஙகன களங்களுந, தண்டை கிண்கிணிசி லமபு நினறொலி தழஙகி டுஙகடிய தாள்களுந, துண்ட வெணபிறையி ரணடு நினறெதிது ளங்கவெட டெயிறு மாகவே, மணட லஙகுழிய வநத ஞாளிபல வண்ண முளள சத கோடியே.

இ - ள். வெணடையஙகளுமம, பலகறைகளுமம, மணிகளுமம, தோலவாரிலே அழகுதோனற அணிந்த வெவவிதான கனமபொருநதிய கழுததுகளுமம தண்டை-கிணகிணி-சிலமபு ஆகிய இவைகளை கிலைகொணடு ஓசை முழஙகுமபடி யான கடினமாகிய காலகளுமம, துணடமாகிய வெளளைச்சநதிர ரிரண்டுபோ லிருந்து முனனே விளஙகுகிற சிஙகபபறகளுந்தோனற பூமி பள்ளமாக வந்த பலநிறங்களையுடைய நாயகள நூறுகோடி எ - று. 13

வாலசு ருண்டுநுனி வாய்வ ளர்நதுதட மார்ப கன்றிடைசி றுத்துவெந; மேலு யாநதணிசி ரமப ருததுநெடு வீர வாளெயிறி லங்கிட, நாலு கின்றமணி யார மென்றுநெடு நாநி மிர்ந்துதுளி தாழவே, காலு யாந்துகிரவி ளாதது மொய்ததுவரு கரிய நாய்கள் சத கோடியே.

இ-ள். வாலானது சுருண்டும், நுனியானது நீண்டும், பெரிய மார்பானது அகன்றும், இடுப்பு சிறுத்தும், முதுகுயர்ந்தும், அழகான தலைபருத்தும், நீண்ட வீரவாளைபோற் சிறகப்பறகள் விளங்க, தொங்குகின்ற மணி மாலைகளைக் கடித்து மென்றுகொண்டு நெடியநாசுகு நீண்டும இளைப்புததோன்ற கால்கள் உயர்ந்து நகங்கள் வெளுத்து நெருங்கிவருகிற கருநாய்கள் நூறுகோடி எ - று.

நுனிவாய் என்பதற்கு, முனைவந்த முகமென்க கோடலுமாம். 14

நிலைபெ யாநதுலவு நீல மால்வரைக ணிகரெ னப்பிடரி னுகதி
றீஇத், தலையி றகதியகல் வாயில வெண்ணுரைத யஙக நாமுழமி றங
கவே, யலைமெ முழுசலதி யொலியெ னககதறி யணிக ருமபகடி
முக்கரீள், வலைக ளுநதிரையும வாருமவன் கயிறும வநத வன்சகட
னநதமே.

இ - ள். தங்கள் நிலைகளைவிட்டுச் சஞ்சரிப்பனவான நீலமால்வரைகளை ஒப்பென்னும்படி, பிடரியிலே நுகத்தடியை நிறுத்தித் தலையைத் தாங்கிக் கொடுத்து அகன்றவாயிலே வெள்ளை நுரைகள் விளங்க நாக்கு முழுநீளத்தொங்க அலைகள் கிளருகின்ற கடலோசைபோல் முழங்கி அழகிய கறுத்த எருமைக் கடாக்க ளிழுத்துக்கொண்டுவர, நீண்ட வலைகளும், திரைகளும், தோல வார்களும், வலிதான கயிறுகளும் கொண்டுவந்த வலிய வண்டிகள் அநேகங்கள் எ - று. 15

இமையமந் தரமு தற்ற டங்கிரியு மிதனி டைப்படு சுரஙகளு,
மமையும் வேடுவர னநத கோடியர ணைநது மேருவரை யனனதோர்,
சமைய மண்டபதி றைநதி ருநததிரி சஙகு மைநதனைவ ணஙகியே,
யெமைய ழைததபணி விடையு ரைத்தருள்க வென்று மண்மிசையி
றைஞசினர்.

இ - ள். இமையகிரி மந்தரகிரி முதலான பெரிய மலைகளிலும, இநத மலைகளுக்கு நடுவிலுள்ள பாலை வனங்களிலும் சஞ்சரிக்கின்ற அநேக கோடி வேடர்கள் வந்து, மேருமலைபோலவதான ஒருவகைச் சபாமண்டப நிரமபக் கொலுவிருந்த திரிச்சங்கு புத்திரனை அரிச்சந்திர மகாராஜனைக் கண்டு வணங்கி, எங்களை வரவழைதத பணிவிடைக்கு உத்தரவு கொடுத்தருள வேண்டுமென்று பூமியிலே படிய வணங்கினார்கள் எ - று. 16

சிங்க மானைபுலி பன்றி மான்மரைதி ரண்ட ணைநதுதிரு நாடெலா
மெங்க ணும்பரவி வநது தண்பயிரி யாவை யுங்கெட வழித்தலா
லங்க வற்றைவதை செய்வதற்குமைய ழைத்த னன்கடிது சென்மெனு
வுங்க ளுக்குதவி யாக யாம்வருத லுண்டெ னபபல வுணர்த்தினான்.

இ - ள். நமது திருநாடு முழுதுஞ் சிங்கங்கள் - யானைகள் - புலிகள் - பன்றிகள் - மான்கள் - கானகுதிரைகளாகிய இவைகளெல்லாம் திரண்டு கூடிப் பரவி வந்து குளிர்ந்த பயிர்களெல்லாம் நாசமாகும்படி அழிததத்தாலே அவை

களையெல்லாம் சொல்லுதற்காக உங்களை வரவழைத்தேன். நீங்கள் சீக்கிரம் போங்களென்று சொல்லிப் பின்னும் உங்களுக்குத் துதவியாக நானுஞ் சேனைக ளுடனே வருகிறேனென்று பலவகை வார்த்தைகளுஞ் சொன்னான் எ - று.

முன்ன டக்கவென வானை யாபரண முற்றும வேடுவர்க மகக ளித், தன்ன பார்க்குவிடை நல்கி மன்ன பாலகனறு போனபின மைச்ச ரைச, சொன்னமேன தியபட விரைந்து நீராடிறு சேனை யோடிவரிது சென்வினுக், தனை பத்தினியுடைப் புகுந்து புடை யாரணத்தையல் வைகு மிட மெய்தினான்.

இ - ள். ஆபரணங்களை முழுதும் அந்த வேடர்களுக்குக் கொடுத்து முன்னே போங்களென்று உத்தரவு செய்து, அவர்கள் அந்தச் சமையம் மண்டபத்தைவிட்டுப் போனபின்பு, மந்திரிகளைப் பார்த்து நீங்கள் நம்முடைய சேனைகளுடனே போகும் வழியே சுகமே விரைந்து போங்களென்று கூறி, தன் பதிவிரதா சிரோமணியான சந்திரவதி யிருக்குமிடமாகிய அரண்மனைக் குள்ளே போனான் எ - று. 18

கரிய காழகம விரித்து டுத்துவரி கவச மிட்டுமணி முடிதரித், தரிய வெற்றியுடை வாள யிறசுரிகை யரைய முத்திவயி ரவிதரும, பெரிய பொற்சிலையெ டுத்து வாளிபல பெய்த தூணி*புற மெய்தவே, தெரிவை யாககரசி யுடன்வ ரக்கடிது சென்று தேரின்மிசை யேறி னான்.

இ - ள். நீலச் சல்லடமும், நீல வஸ்திரமும் விரித்து உடுத்திக்கொண்டு இரத்தினங்கள் கட்டின கவசமும் போட்டு, இரத்தினகிரீடமுஞ் சூட்டி, அருமை யான ஜயத்தைக்கொண்ட உடைவாளும் - வேலும் - பாகுங்கும் - இடையிலே கட்டிக் கொண்டு, பெரிதான பொன்மயமாயிருக்கிற வில்லுங்கொண்டு, அம்புகளை அடக்கக்கொண்டிருக்கிற கூடும் முதுகிலே பொருந்தக் கட்டி, பெண்களுக்கரசியான சந்திரவதி கூடவர, விரைவிலே போயத் தேரின்மே லேறினான் எ - று. 19

சோலை முந்தவென வந்தெ முந்தனகு டைத்தி ரட்கடை யுகத்திலந் நாளை முந்தகடல் போல வெங்கணுந டந்த மன்னவர் பெரும்படை வாளை முந்தசுட ரெண்டி சாமுகம றைத்த மாமுகி னெருக்கியே தூளை முந்தன கயங்கள் சென்றன துரங்க முந்துற நடந்தவே.

இ - ள். கிரகங்களெல்லாம் ஒருசேரக் கூடினாற்போலக் குடைக் கூட்டங் கள் வந்து கூடின. யுகமுடிவிலே பொங்குகின்ற கடல்போல அரசர்களுடைய பெரிய சேனைகள் எங்கும் நெருங்கி நடந்தன. கறுத்த மேகங்கள் நெருங்கிக் கொண்டு சூரியன் எட்டுத் திக்கிலுந் தோன்றாமல் மறைந்தன அந்தச் சேனை தூளிகள் கிளம்பின; யானைகளுஞ் சென்றன; குதிரைகளு முன்னே நடந்தன எ - று. 20

* முதுகெய்தவே எனவும் பாடம்.

கோடகந் தருவி லாழி யுங்கரட குஞ்ச ரந்தருவி லாழியு
மாடகக் கவரி யுஞ்செ றிந்துபகி ரண்ட கோளமு மறைந்திட
மாடவீ திகள் கடந்து செம்பொன்மதில் வாயில் விட்டகல நண்ணரிபே
வேடர் சேனையொடு கூடினன்முந்த வேலை மைக்கடலில் வீழ்ந்தல்போல்.

இ-ள் குதிரை வாயிலே வருகிற நுரையும், மதத்தைச் சிந்துகின்ற யானை வாயிலே வருகிற நுரையும், பொற்காம்புள்ள சாமரங்களும் நெருங்கி வெளியிலுண்டான அண்டகோளமும் மறைந்துபோம்படி உயர்ந்திருக்கிற மாட வீதிகளைக் கடந்துபோய், செம்பொன்மயமான மதிலையுடைய கோட்டை வாயிலையும் விட்டுத் தூரப்போய பாற்கடலானது கருங்கடலிலேபோய்க் கலப்பதுபோல் முன்சென்ற வேடர்கள் சேனைகளுடனே (அரசன்) போய்க் கூடினன் எ-று. 21

சிலையெ டுத்தபுய மன்னனைத் தொழுது சென்று வேடுவர் பரந்துநீ
ளலையெ டுத்தமலர் வாவி யும்வயலு மகழி யும்பொழி லடங்கலும [க்
வலையெ டுத்தருகு திரைவ ளைத்துமணி வாரொ ழுக்கியிடை கூவென
கலையு ழைத்திரள்கள் கடமை பன்றிபுலி கரடி கோளரிக ளெந்தவே.

இ-ள். வில்லைக்கொண்ட தோளையுடைய அரிச்சந்திர மகாராஜனை வணங்கிக்கொண்டுபோய வேடர்கள் எங்கும் பரவுதலாய நீண்ட அலைகளைக்கொண்ட தாமரைக் குளங்களிலும் வயல்களிலும் - அகழ்களிலும் - அழகிய சோலைகள் முதலான எல்லா விடங்களிலும் வலை கட்டிப் பக்கத்திலே திரையும் வளைத்து மணிவார்களையும் ஒழுங்காகச் சேர்த்து அவ்விடங்களிலே நின்று கூவென்று மிருகங்களைப் போனசைகாட்ட, உடனே கலைமான் - புள்ளிமான் கூட்டங்களிலும், கடமைகளும் - பன்றிகளும் - புலிகளும் - கரடிகளும் - சிங்கங்களும் வந்துகூடின எ-று 22

ஏன மெண்குபுலி யாளி சிங்கமத யானை சம்புழைபுல் வாய்மரை
நான மோரிகட மாவ ழுங்கிரலை நாவி பூசைமலி யாக்கணில
கான மேதிவரை யாடு டும்புமுயல் காலவி சைத்திட கலந்தன
வான கத்திடை பறந்தெ ழுந்தபல வன்சிறைப் பறவை யாகவே.

இ-ள் பன்றிகள் - கரடிகள் - புலிகள் - யாளிகள் - சிங்கங்கள் - மதயானைகள் - நரிகள் - மான்கள் - புல்வாய்கள் - மரைகள் - நவாது பூனைகள் - ஓரிகள் - கடமைகள் - ஆமைகள் - கலைமான்கள் - புழுகு பூனைகள் - குரங்குகள் - எலிகள் - காட்டுப்பசுக்கள் - அணில்கள் - காட்டெருமைகள் - வரையாடுகள் - உடும்புகள் - முயல்கள் - காலவேகங்கொண்டு அவ்விடத்தே வந்துகூடின. எ-று. 23

வட்ட மாகவரி விற்கு னித்துவய மன்னர் விட்டபல வன்சரம்,
பட்ட மாவினமவி ழுந்து ழன்றுடல் பதைத்தி றந்தன வனந்தமாற்,
றொட்ட வேல்குணி லெறிந்து வேடுவர் துணித்த மாவின மனந்த
மால், விட்ட ஞாளிகள் கடித்தி ழுத்திட விழுந்த மாவின மனந்த
மால்.

இ - ள். வெற்றிகொண்ட அரசர்களை வளைவாக நீண்ட வில்லைவளைத்து எய்த வலிதான அம்புகள்பட்ட மிருககூட்டங்கள் விழுந்துழன்று உடம்புகள் பதைபதைத்துச் செத்தவைகளநேகம். வேடர்கள் கையிலேகொண்ட வேல்களையும் - வளைதடிகளையும் வீசி துண்டுசெய்த மிருகங்களநேகம். இவ்வேடர்கள்விடுகின்ற நாய்கள் கடித்திழுக்கவிழுந்த மிருகங்களநேகம் எ - று. 24

தண்டலைப்படுவி லங்கி னிறப்படுச ரங்க ளுந்துணிசி ரங்களுந், திண்டி றற்குமரா மண்ட லத்தலைவா செங்கை யிற்செறிவி லுண்டையும், விண்ட லத்திலுயா வனசி றைப்பறவை மீது பட்டுயிரி ழந்துபோய், மண்ட லத்திலிட மின்றி யெத்திசையும் வந்து வீழ்வன வனந்தமே

இ - ள். காட்டிலேயுள்ள மிருகங்கள் மேலே பட்ட அம்புகளும், அறுபட்ட தலைகளும், மிக்க வலிமையையுடைய வீரர்களும், மண்டலிகர்களும், சிவந்த கையிலேகொண்ட வில்லினுண்டைகளும், ஆகாயத்திலுயர்ந்து பறக்கின்ற வலிய சிறகுகளையுடைய பட்சிகள்மேலேபட்டு உயிர்நீங்கினவாகிப் பூமியிலே எந்தத்திக்கிலு மிடமில்லாமல் வந்து விழுவன அநேகம் எ - று. 25

வேல்கள் பட்டவொரு கோடி கோடிவிறல் வில்லு மிழ்ந்தசுடு பலகொடுங், கோல்கள் பட்டவொரு கோடி கோடியெறி குணில்கள் பட்டவொரு கோடிதேர்க், கால்கள் பட்டவொரு கோடி கோடியெறி கவணு மிழ்ந்தபல கற்கள்பட், டோல மிட்டவொரு கோடி கோடிசிலை யுண்டை பட்டவொரு கோடியே.

இ - ள். வேல்கள் பட்டுவிழுவன ஒரு கோடானுகோடிகள், பலங்கொண்ட வில்லினின்றும் விடுகின்ற சுடுவதான வெவ்விய அம்புகள்பட்டு விழுவன ஒரு கோடான கோடிகள், வீசுகின்ற வளைதடிகள்பட்டு விழுவன ஒரு கோடிகள், தேருருளைகள்பட்டு நசுங்குவன ஒரு கோடான கோடிகள், வீசுகின்ற கவணினின்றுஞ் செல்லுகிற பல கற்கள்பட்டுச் சபித்துக்கொண்டு விழுவன ஒரு கோடிகள் எ - று. 26

துடைக ளற்றன சிரங்கள் பற்பல துணிந்து வீழ்ந்தகை துமிழ்ந்தன, விடைக ளற்றகுட ரோடி யற்றனவெ ழுந்து தாவுமடி யற்றன, நடைக ளற்றன நிணந்தெறித்தன நரம்பு மூளைகள் கழன்றன, கடையு கத்திலெழு கடலெ னக்குருதி கனமீ துறவெ ழுந்ததே.

இ - ள். அநேக மிருகங்கள் துடைகளறுபடலாயின, தலைகளநேகங்களாகத் துணிபட்டு விழலாயின, கைகளறுபடலாயின, குரங்குகள் இடுப்புகளறுபடலாயின, ஓடியோடிக் குடல்களறுபடலாயின, எழுந்து தாண்டுகிற கால்களறுபடலாயின, நடைகளோய்ந்தன, கொழுப்புகள் சிந்தின, நரம்பு மூளைகளும் சிந்தின, இப்படியாகுமபோது யுகமுடிவிலே பொங்குகிற கடல்போலிரத்த சலம் ஆகாயத்தை யளாவும்படிப் பொங்கியது எ - று. 27

அலினு டற்களிறு நனிம டிநதுபிடி யகலவ தற்கும்வழி யற்றன
புலியு டன்கரடி யுழைம டிந்துகலை போவ தறகுமவகை யற்றன
யெலியெ ழுங்கணிலி றநதி றநதுமுய லேகு தற்குமிட மற்றன
வலிய சிங்கமுட ஞளி யிற்றுமரை வருவ தறகுநெறி யற்றவே.

இ - ள். இருள்போல்வதான சரீரததையுடைய யானைகள் மிகவுஞ் செததுப் பெண்ணானைகளோடுலவுதறகும வழிகளில்லையாயின, புலிகளுடனே கரடிகளும் - மானகளுமிறந்து கலைமானோடுதறகு இடமில்லையாயின, எலிகளும் - அணில்களும செததுச் செதது முயல்போகுதறகு இடமில்லையாயின, வலிமை கொண்ட சிஙகஙகளுடனே ஆளிகளுமிறநது மரைகள செலலுதறகு வழியுமில்லையாயின எ - று. 28

பட்ட பட்டவை யெடுதது வேடுவர் பருதத கட்டைக ளடுக்கியே
சுட்ட சுட்டதசை தின்று தினறுறு சுணஙகி னமபல பிணஙகவே
மட்ட றபபருகி யிட்ட ளிததிலாம டுகக ளிறபுனல ருநதியே
யிட்ட மாலை புனை மன்னா மனனவனி ருநத சூழலிடை யெய்தினர்.

இ - ள். அப்படிச் செததுககிடககிற மிருகஙகளை வேடாகள் எடுததுக கொண்டுபோய், பருதத விறகுககட்டைகளடுக்கி அவற்றைச்சுட்டு மாமிசஙகளைததின்று (மீணடும மீணடும நாட்டுக்குப்போவதாகக) கள்ளையு மிகக குடிதது, (அந்தவெறியினாலே) தம்முடனகூட உறுமிக்கொண்டு நிற்கிற நாய் கூட்டஙகளுககும் (மாமிசம) கொடாமல், குளஙகளிலேபோய் விடாய்கொண்டு, நீரைககுடிததுககொண்டு, சந்தோஷமாக மாலைபுனைந்த இராஜாதிராஜனை அரிச்சந்திரனிருககுமிடததிற்கு வந்தார்கள எ - று. 29

இவ்வி டததுளவி லஙகி றநதவெறி வேலபி ழைததுமவலை பீறி
யும, வெவவி டககணைக டபபி யுஞசிலவி லஙகு போனவுள வாயினு,
மவ்வி டததினின டபப தோவடவி புகுவ தோநகரி யணைவதோ,
வெவவி டததினிது சோது மெனறவாவி ளமப மனனவனி யமபு
வான்.

இ - ள். (ஐயனே!) இந்தககாட்டிலுள்ள மிருகஙகளெல்லா மிறந்து போயின, இனி நாஙகளெறிந்த வேலுககுத்தபபியும வலைகளைக கிழிததுக கொணடும் வெப்பமான விஷசலமூட்டின அம்புகளுக்குத தபபியும் சில மிருகங்க ளோடிபபோனவைகளுளளன, ஆனாலும நாஙகள அவைகளோடிப் போன இடங்களுககுப் போகிறதா? அல்லது நாங்களிருககிற காட்டுக்குப் போகிறதா? அயோததியாபுரிககுக கூடவருகிறதா? மறறெந்த இடததுக்குச் செலவவனேபோகிறதென்று அந்த வேடர்கள் கேட்க அதறகு அரிச்சந்திர மகாராஜன சொலலுகிறான எ - று. 30

சென்ற சென்றதிசை தோறும யாமினிது சென்று திண்டிறல
விலங்கெலாம், கொனறு கொனறவைமு டிநத பினவருக லாகுமுன

னியகு றிப்பெனக, கென்று தேரின்மிசை யேறி யேயிறைவ னேக லுங்கழலி றைஞ்சியே, நின்ற வேடுவர்பெ ரும்ப டைத்திரணெ ருங்கு காணிடை பரந்தவே.

இ - ள். மிக்க பலத்தையுடைய அந்த மிருகங்களெல்லாம் போகின்ற திசைதோறும் நாமும் ஜயங்கொண்டு சென்று, அவற்றைக்கொன்று யாவும் இறந்தபின்பு வரத்தகும். இதுவே நானசொன்ன கருத்தென்று அரசன தேரின்மேலேறிச் செல்லும்போது, கூடநின்ற வேடர்களுடைய பெரிதான சேனைக்கூட்டம் அந்த நெருக்கமான காட்டிலே எங்கும் பரவின எ - று. 31

அரிபி ளந்தகரி பிளிறு மோசையிவை யறிது மென்றணுகியடை குவார், கரிக வாந்ததிரள் விளவி னன்கனிக ளுன்ற வென்றவணெ ருங்குவார், வரிநெ டும்புலிபி டித்தி டக்கதறு மானெ னச்சிலைவ ணக்குவார், பரும ணற்கிழிய வுழுத வோதையிவை பன்றி யென்ற விடை துன்றுவார்.

இ - ள். சிங்கங்கள் கொல்லலான யானைகள கதறுகிற ஓசையாகிய இவ விதக் குறிப்புகளை தெரிந்துகொண்டு போவோமென்று கிட்டிநெருங்குவார்கள்; யானைகளுண்ட திரட்சியான விளவினுடைய நல்லபழங்கள் பெய்து கிடக்கின்றனவென்று அவ்விடங்களிலே நெருங்கிச் செல்வார்கள். வரிகளையுடைய நீண்ட வேங்கைகள் பற்ற அவற்றினவாயில் அகப்பட்டு மான்கள் கதறுகின்றன வென்று வில்லவளைப்பார்கள். பருத்த மணற்றரைகள பள்ளமாகக் கிண்டுகின்ற பன்றிச்சப்தங்களிவையென்று அவ்விடங்களிலே நெருங்குவார்கள் எ - று. 32

குருக லம்புமொலி யிதுத டாகமிது குஞ்ச ரங்கள்கர மொண்டுநீர், பருகு கின்றவொலி யிதுவெ னக்கடிது பற்று வார்நெடிது சுற்றுவார், சருக லம்புமொலி செவியு ணாந்திரலை தானெ னக்கடிது தாவுவார், முருக லாந்தபொழி லுலவு தாகமென முந்து வார்பகழி சிந்துவார்.

இ - ள். வெள்ளைக்குருகுகள் சப்திக்கின்ற சப்தமிது. குளமிது. யானைகள் துதிக்கையினாலே நீரைமொண்டு குடிக்கிற சப்தமிதுவென்று விரைவிலே போய்த் தொடருவார்கள். அதிகமாகச் சூழ்வார்கள். மரச்சருகுகள் காய்ந்தொலிக்கிற ஒலியைக் காதிலேகொண்டு இரலை மானோசையிதுவென்று விரைவிலே தாண்டிச்செல்வார்கள். மணம்விரிகின்ற சோலையிலே ஆவிகம் சஞ்சரிக்கின்றதென்று முன்னே செல்லுபவராய் அம்புகளை விடுவார்கள்.

மறை - ஆவிகம் - கானக்குதிரை இவை ஒருபொருள். ஆவிகம், ஆகமென நின்றது இடைக்குறை. 33

மயினமு ழக்கமிது கிளிமு ழக்கமிது வாரு மென்றுசில ரோடுவார், குயின்மு ழக்கமிது சிவன்மு ழக்கமிது கூட வாருமென நாடுவார், வெயிலெ றிந்ததுவி ளங்கு மாமணியின் வேக நாகமென நீடு

வார், துயிலு ணர்ந்தெநெடு மரைக லித்ததிது தொடர்வ மென்றுப
லர் கூடுவார்.

இ - ள். இது மயிலோசை, இது கிளிச்சத்தம் வாருங்களென்று சிலபேரோடுவார்கள். இது குயிலோசை, இது சிவல் காடையோசை, பின்றொடர்ந்து வாருங்களென்று சிலரோடித் தேடுவார்கள் இதோ வெயிலொளி வீசுகின்றது, விளங்குவதான பெரிட் இரத்தினத்தையுடைய வேகங்கொண்ட பாம்பு இதுவென்று நெடுந்தூரஞ் செல்லுவார்கள். இது தாங்கித் தெளிந்துவருகிற நீண்ட மரை முழங்குகின்ற தியவோசை, அதன்பின்னே தொடர்ந்து செல்லுவோமென்று பலருங் கும்புகூடுவார்கள். 34

குன்று குன்றுதொறு நீல மேவியகு ளந்தொறுங் குளிர்வ னந்
தொறும், சென்று சென்றடிதொ டர்ந்த டர்ந்துபல திக்கி னுஞ்செ
றிவி லங்கெலாம், கொன்று கொன்று குவை செய்தெ ரித்திடுகொ
டுங்க னற்படுகொ ழுந்தசை, தின்று தின்றுபுன லுண்டு வென்றி
புனை திண்பெ ரும்படை நடந்ததே.

இ - ள். மலைகளுள்ள இடங்கள் முழுதும் நீலமலர்கள் பூத்த குளங்கள் முழுதும் குளிர்ந்த காடுகள்முழுதும் போய்ப்போய், மிருகங்களின் காலடி பிடித்துத் தொடர்ந்து, பல திசைகளிலு நெருங்கின. மிருகங்களை யெல்லாம் கொன்று கொன்று குவியல்செய்து எரிக்கத்தக்க கொடுமையான நெருப்பிலே சுட்ட கொழுப்பு மாமிசங்களைத் தின்று தின்று (தாகங்கொண்டு) நீரைக் குடித்துச் செயங்கொண்ட பலமான பெரிய சேனைகள் அக்காட்டுக்குள்ளே சென்றன எ - று. 35

இரவி னிற்பெரிதி ருண்டு சூன்மழைபி ருண்டு துன்றியுல கெங்கணும்
பரவி யெய்தகணை யெதிர்வ ரும்படிப டர்ந்த முண்டகவி ரும்பினுற்
றரவி னங்கரடி புலிகள் பன்றிகள் ழுங்கு டும்பெலிம டங்கல்மான்
கரவி லுற்றிதனு ளுறையு மென்றெறியினர் காடெ லாமெரி பரப்பினர்.

இ - ள். அந்தக் காட்டிடமெல்லாம் இராத்திரி காலத்திலும் அதிகமாக இருண்டு கர்ப்பங்கொண்ட மேகங்களைப்போலவு மிருண்டு நெருங்குதலாய்ப் பரவி, எய்த அம்பு எதிரிட்டு மேலவரும்படியாகப் பரவின முள்ளுக்காட்டுப் பக்கத்திலேபோய் அங்குள்ள பாம்புக் கூட்டங்கள் - கரடிகள் - புலிகள் - பன்றிகள் - ஆமைகள் - உடும்புகள் - எலிகள் - சிங்கங்கள் முதலான மிருகங்கள் ஒளித்து மறைவாய் இக்காட்டிலே சஞ்சரிக்குமென்று வேடர்களந்தக் காடெல்லாம் நெருப்பை மூட்டினார்கள் எ - று. 36

சண்ட வெந்தழல்ப சித்தழன்றுலகு தன்னை யுண்ணவெழு தன்
மைபோல், கண்ட மொன்பதுமெ ரிந்திடத் தெறுக டுங்கொழும்
பொறிகள் சிந்தின, கொண்ட லிற்புகைப ரந்து சுற்றினகொ ழுஞ்சு
டர்ப படுகொ ழுந்துபோய், அண்ட முற்றனப ரந்த தந்தாம தற்கு
மப்புறமெ ழுந்ததே.

இ - ள். அப்போது வேகத்தையுடைய வெப்பமான நெருப்புத் தனக்குப் பசியுண்டாகிக் கொடுத்த உலகமெல்லாம் புசிக்க எழுந்தாற்போல நவகண்டங்களு மெரியச்சுடுகின்ற கடுமையான செழுமையுள்ள பொறிகள் சிதறலாயின, மேகங்களைப்போற புகைகள கமயிப் பரவி எவவிடததுஞ் சூழ்தலாயின நெருப்பிலுண்டாகிய கொழுந்து சென்று ஆகாயமெல்லாம் பரவின, (அதனாலுண்டான) புகையானது ஆகாயத்துக்கு அப்பாலுங் கிளர்ந்து சென்றன எ - று. 37

சுட்ட செந்தழலில வெந்து வெந்துடல்சு ருண்ட பற்பலவி லங்கினம, கட்டுபாசமது விட்ட ஞாளிகள்க டித்திடச் சிலக ழிந்தன, கெட் டழிந்துநிலை யற்று மீமிசைகி ளர்ந்தெ ழுந்துகுதி கொண்டு போய், விட்ட மாமுனியி ருந்த சூழலில்வெ ருண்டு சிற்சிலவி ழுந் தவே.

இ - ள். அநேககோடி மிருகக்கூட்டங்கள் அப்படிச் சுடுகின்ற சிவந்த நெருப்பினாலே வெந்து வெந்து உடலெல்லாம் சுருண்டன, கட்டின கயிற்றை அவிழ்த்துவிடலான நாய்கள்போய்க் கடிக்க மிருகங்கள் இறந்தன, சிலசில மிருகங்கள் தமது நிலைகுலைந்து இருக்க இடமில்லாமல் மேலேகிளம்பி உயர்ந்து தாவிக்கொண்டுபோய்த் தங்களை அனுப்பின பெரிய விசுவாமித்திர முனிவரிருக்கிற இடத்திறகுப் போய்ப் பயந்து விழுந்தன எ - று. 38

மட்டி லாதனவி டுதத னம்மவன்வ தைததனன் கொவிவ னத்திலே, படடி லாதனவெ ருண்டு வநதனவெ னசசி னம்பதை பதைததிட, விடடி லாவினைவி ளைப்பல யானெனவெ குண்டு விட்டவெகு வெவ்விலங, கெட்டி லொன்று வரல் கண்டி லேமெனவி ருநதமாமுனியி ரங்கினன்.

இ - ள். அங்கிருந்த பெரிய விசுவாமித்திர முனிவர் அம்மிருகங்களைக் கண்டு அளவில்லாத மிருகங்களை விட்டோமே அவைகளை யெல்லாம் அரிச்சந்திரன இந்தக் காட்டுக்குள்ளே கொனறுவிட்டானோ? சாவாத மிருகங்களல்லவோ பயந்து இங்கே வாலாயினவென்று கோபததினால் துடிதுடிதது, அக்கோபத்தை ஒருவகையேயு நீங்கி யில்லாத செய்கையை யான உண்டாககுகிறேனென்று சொல்லிக் கோபிதது நானனுப்பின அனேகமான கொடிய மிருகங்களில் எட்டிலொருபங்குகூட இங்கே வருவதாகக் காணேமேயென்று மிகவும் கிலேசித்தார் எ - று. 39

**கலிநிலைத்துறை**

கலஙக லென்றுநீ கரததினாற் கௌசிக னமைததது
விலங்கி னங்களை நோககிநீர் வினைவிளைத தததுவும
அலங்கன் மனனவன் வதைததகது மாருயிர் வருநத
நலங்கி வநதது நவிலுமென றுரைததிட நவிலும்.

இ - ள். விசுவாமித்திரர் மிருகங்களையெல்லாம் பார்த்து நீங்கள் கலங்க வேண்டாமென்று கையாலமையச் செய்து, நீங்களுபோய் நாட்டை அழித்ததும் அதற்கு வெற்றிமாலைகொண்ட அரிச்சந்திரன் கொன்றதும், உங்களுடைய அருமையான உயிர் வருந்துதலால் நொந்து இங்கே வந்தது முழுதும் சொல்லுகவென்று கேட்க மிருகங்கள் சொல்லத் தொடங்கின எ - று. 40

கான டுங்கிடக் கண்புனல் சொரிந்திடக் கழுத்தின்
மேன டுங்கிட மெய்யெலா நடுங்கிட வீசும்
வான டுங்கிட மறலியைக் கண்டமன் னுயிரே
போன டுங்கிமா முனிவனைப் போற்றியே புகலும்.

இ - ள். கால்கள் நடுங்கவும், கண்களிலே நீர் சிந்தவும், கழுத்துக்கு மேலான தலைநடுங்கவும், உடம்பெல்லாம் நடுங்கவும், வீசுகின்ற வால்கள் நடுங்கவும், யமனைக் கண்ட மிகுதியான உயிர்கள் நடுங்குவனபோல நடுங்கி, விசுவாமித்திர முனிவரைப் பார்த்துத் துதித்துச் சொல்லலாயின எ - று. 41

சென்ற னஞ்செழும் பயிர்களு முயிர்களுஞ் சிதைத்து
நின்ற னம்மெமை நெடுமுடி மன்னவ னொந்து
கொன்ற னன்பிழைத் தெய்தினஞ் சிலசில குறையும்
என்ற வாவிரிந் தெய்திய விலங்குக ளெலலாம்.

இ - ள். ஓடிவந்த மிருகங்களெல்லாம், நாங்கள் போனோம்! போனவுடனே அங்குள்ள செழுமையான பயிர்களையும், அவைகளைக் காக்கின்ற உயிர்களையும் அழித்துக் கொண்டு திரிந்தோம்; பின்பு, எங்களை அந்த நீண்ட கிரீடாதிபதியான அரிச்சந்திரன் வந்து கொன்றான்; அதற்குப் பயந்த நாங்கள் தப்பித்து வந்தோம்; வாராமலங்குள்ள சிலதும் இந்நோதுகளுள்ளே குறைந்தாய்ப் போகுமென்று சொல்லின எ - று. 42

என்று கூறிடக் கௌசிக னெரியெழ விழித்து
நன்று நன்றென நகைத்துக்கை நாசியிற் சேர்த்து
வென்றி வேந்தனை வெல்வது கருதியோர் வீரப்
பன்றி தன்றவப் பெருமையா லிமைப்பினிற் படைத்தான்.

இ - ள். என்று அம்மிருகங்கள் சொன்னவுடனே விசுவாமித்திரர் நெருப்புத்தோன்றக் கண்களைத் திறந்து பார்த்து, நல்லது நல்லதென்று சிரித்துக் கையை மூக்கின்மேலே வைத்து, செயங்கொண்ட அரிச்சந்திரனை வெல்வதாக எண்ணி ஒரு வீரத்தையுடைய பன்றியைத் தனது தவப் பெருமையினாலே ஒரு க்ஷணநேரத்துக்குள்ளே சிருஷ்டித்தார் எ - று. 43

பொன் னிறத்ததுமெய் வெண்ணிறத் துகிர்புட்ப ராகம்
நன்னி றக்கண்ட நாலுகா லுஞ்செழும் பவளம்
சென்னி றத்தகண் செம்மணி செழுமுகம் பச்சை
அன்னி றக்குர நீலம்வச் சிரத்தெயி றதற்கே

இ - ள். பொன்னிறமான உடம்பும், வெண்ணிறமான நகங்களும், புட்ப ராகம்போல் நல்ல நிறமான கழுத்தும், செம்பவளம்போல் நான்கு கால்களும், மேகநிறமான கண்களோ சிவந்த இரத்தினம் போலவும், செழுமையான மூக்கோ பச்சை நிறமாகவும், இருணிறமான உரோமமோ நீலமாகவும், வயிரம் போல் பற்களும் அதற்குண்டாயின எ - று. 44

வயிற்றி னாற்பெரு மண்புவி மறைபட மறைக்கும்
எயிற்றி னாலுயர் விண்புவி யேழையு மெடுக்கும்
கயிற்றி னாலுயிர் கவர்ந்திடு காலனைக் கலக்கும்
பயிற்றி னாற்பினை யென்செயா தப்பெரும் பன்றி.

இ - ள். அது தன வயிற்றிலே பெரிதான மண்ணுலகமெல்லா மறையும் படி மறைக்கவல்லது; கொம்பினாலே உயர்ந்த ஆகாயத்தையும், உலக மேழையு மெடுக்கவல்லது; பாசத்தினாலே உயிரைப் பிடிக்க வருகின்ற யமனையும் கலங்கச் செய்யவல்லது; இப்படி யமனையும் கலங்கச் செய்ய வல்லதானால் இனி என்னதான செய்யமாட்டாது அந்தப் பெரிதான பன்றி எ - று. 45

அப்பெ ருங்கொடும் பன்றியை யருந்தவ னோக்கி
எப்பெ ருமபடைத் தலைவரு மெயினரு மிறக்கத்
தப்ப றக்கொலை செய்தரிச் சந்திரன் றன்னை
இப்பெ ரும்பொழில் கொணர்ந்துநீ போவென விசைத்தான்.

இ - ள். அப்படிப்பட்ட பெரிய கொடுமையுள்ள பன்றியை அரிதான தவத்தையுடைய விசுவாமித்திரா பார்த்து, எங்குமுள்ள பெரிய சேனாதிபதி களும், வேடர்களும் சாவும்படி தப்பாமற் கொன்று, அரிச்சந்திரனை இந்தப் பெரிதான காட்டுக்குள்ளே தொடர்ந்துவரும்படி கொண்டுவந்து விட்டு நீ அப்பாற போவென்று சொன்னான் எ - று. 46

என்று கூறிட விருடியை வணங்கிநெட டெயிற்றால்
குன்று நீறெழ வெற்றிநீள் குவடெலாங் குறைத்து
நின்று நின்றுசெங் கண்களா னெருப்புக விழித்துச்
சென்று சாடிற்று மன்னவன் சேனையைச் சிதற.

இ - ள். என்று சொன்னவுடனே அந்த முனிவரை வணங்கிக்கொண்டு நீண்ட கொம்பினாலே மலைகளெல்லாந் தூளாகக் குத்தி, உயர்ந்த மலைச்சிகரங் களையெல்லாம் பொடிப்பொடி யாக்கி, அங்கங்கே நிலைகொண்டு சிவந்த கண் களிலே நெருப்புச் சிந்த திறந்து பார்த்துப்போய் அரசன சேனைகளெல்லாஞ் சிதறி யோடும்படி அடித்தது எ - று. 47

தலைக ளற்றிடத் தடங்கர மற்றிட வீரர்
குலைக ளற்றிடக் குஞ்சர மற்றிடக் கொலைஞர்
சிலைக ளற்றிடச் செஞ்சர மற்றிடத் திரைகள்
வலைக ளற்றிட வெற்றிற்று மாயவ ராகம்.

இ - ள். அந்த மாயாரூபமான பன்றி, தலைகளறுபடவும், நீண்ட கைக ளறு படவும், வீரர்களுடைய ஈரற்குலைக ளறுபடவும், யானைகள் சாவவும், கொலை வேடர்களுடைய விற்கள் முறியவும், செவ்வையான அம்புகள் முறியவும், திரைச் சீலைகளும், வலைகளும் கிழிபடவும் சாடியது எ - று. 48

பீறு மீரலும் பித்துநீள் குடர்களும பிளக்கத
தாளு நெஞ்சமு மற்றிட முனிவலைச் சாடி
ஆளு மற்றிரு தோளுமற றங்கையிற் பிடித்த
வாளு மறறிட வெற்றிறறு மாயவ ராகம.

இ - ள். அந்த மாயப்பனறி, வயிறும், ஈரலும், பிததும், நீண்ட குடல் களும் சரிய, காலும, மார்பும ஒடிந்து பிளகக, நாய்களைக்கொனறு வாள் வீரரும சாவ, அவவீரர்களுடைய இரண்டு தோளகளு மொடிய, அவர்களுடைய அழகிய கைகளிலே கொண்ட வாளகளு மொடிய மோதியது எ - று. 49

கரிப டப்படச் சேனைகள படப்படக் கலினப
பரிப டப்படப் பரிக லமபடப படபப சுங்கண்
ணெரிப டப்பட விரதங்கள் படப்பட விடைதான்
அரிப டப்படச சுணங்குகள் பட்டன வனநதம்.

இ - ள். யானைகளெல்லா மிறந்தன; அவைகளிறககவே சேனைகளெல்லா மிறந்தன; அச்சேனைக ளிறந்தனபோலவே கடிவாளம்பூண்ட குதிரைக ளெல்லா மிறந்தன; அவைகளிறந்தாறபோலவே அந்தக் குதிரைவீரர் கள்கொண்ட ஆபரணங்கள் சிந்தவும், அபபடியாக இந்தப் பனறியின் பசு மையான கண்களிலிருந்து நெருபபுப் பொறிகள்போய்ப் படுகதோறும் இரதங்க ளெரிந்தன. இப்படி இறந்தவைக ளநேகம எ - று. 50

கைத வம்மிது வென்றறக் கடற்படை கலங்கி
மைத வழ்நததிண் குனறினு மாததினு மறைநது
பெய்த வேல்களுங குணிலகளும பிறைமுக மழுவும
எய்த வாளியும பொடிபட விதிர்ததத்வ னேம.

இ - ள். அதுகண்டு, இந்தப் பனறி மாயாரூபமெனறு மிகவும் கடல்போன்ற சேனைகள கலங்கி, மேகஙகள் சஞ்சரிக்கினற மலைகளிலும், மரஙகளிலும் போய் மறைந்துகொணடு, எரிந்த வேல்களும, வளைதடிகளும், அர்ததசந்திரன்போன்ற முகததைபுடைய மழுககளும், எய்த அம்புகளுங தூள்தூளாகப் பண்ணிற்று அந்தப் பனறி எ - று. 51

குடர்பி ளநதன குறஙகுகள் பிளந்தன கொடுங்கை
மடல்பி ளந்தன வாய்பிளந் தனவிரு வகிராய்
உடல்பி ளந்தன வுரம்பிளந் தனசிர முருண்ட
கடலகி டாஙகெனக குருதிநீா வனமெலாங கலநத.

இ-ள். இந்தச் சேனை வீரருடைய குடல்களுஞ் சரிந்தன. தொடைகளு முறிந்தன. கொடிய கைப்புறங்களும் பிளந்தன. வாய்களுங் கிழிந்தன. இரண்டு பிளவாக உடல்களும் பிளந்தன. மார்பும் பிளந்தன. தலைகளு முருண்டன. கடல் பொங்குகின்றதுபோல இரத்தஜலம் அந்த வனமெல்லாம் பரவின.

சிரமிதந்தன திரள்பிணை மிதந்தன தெறித்த
கரமிதந்தன கழன்றன காலகளுங் கண்ணும்
குரமிதந்தன குதிரைகண் மிதந்தன குனிவேல்
சரமிதந்தன குருதியந் தடங்கட றனிலே.

இ-ள். இவ்வுதிரப் பிரவாகத்திலே, தலைகள் மிதந்தன. பிணக் கூட்டங்கள் மிதந்தன. ஒடிந்த கைகள் மிதந்தன. கால்களும் கண்களும் வெவ்வேறாய்ப் போயின. குதிரைக் குளம்புகளும் மிதந்தன. குதிரைகளு மிதந்தன. வளைதடிகளும், வேல்களும், அம்புகளு மிதந்தன எ-று. 53

தோளை வீழ்த்தது தொடைகளை வீழ்த்தது தோள்சேர்
தாளை வீழ்த்தது தடக்கையை வீழ்த்தது தயிர்போல்
மூளை வீழ்த்தது தாரையின் மாருத மோதப்
பூளை வீழ்ந்தென வீழ்ந்தன வேடர்தம் பற்கள்.

இ-ள். தோள்களையும் விழப்பண்ணிற்று. தொடைகளையு மொடிந்து விழப் பண்ணிற்று. தோள்களைத் தொங்குவதான கால்களையும் விழப்பண்ணிற்று. நீண்ட கைகளையும் விழப்பண்ணிற்று. தயிர்க் கட்டிகள்போல் மூளைகளுஞ் சிந்தப் பண்ணிற்று. தென்னைமரத்திலே காற்றுவீசப் பாளைகள் சிந்தினாற்போல் வேடருடைய பற்கள் சிந்தின எ-று. 54

கொலையெடுத்த வேலையினர் தங் குருதிநீர் பெருகி
மலையெடுத்து நீண் மரங்களை முறித்தெடுத்தோடிச்
இலையெடுத்துவீழ் திரைகளும் வலைகளும் வாரி
அலையெடுத்து நீர் வாரியை யணைந்ததை யன்றே.

இ-ள். கொலை செய்யத்தக்க வேல்களைக்கொண்ட வேடர்களுடைய இரத்தஜலம் பெருகி, மலைகளை யுருட்டிக்கொண்டுமே, மரங்களை முறித்துக் கொண்டுமேபோய், விறகுகளையுங் கொண்டு, கட்டிவிழுந்திருக்கிற திரைச்சீலைகளையும் வலைக்கயிறுகளையும் வாரிக்கொண்டு, அலைகளைக்கொண்ட நீர்க்கடலிற் போய்க் கூடிற்று எ-று. 55

சென்ற சென்றவத் திசையெலாம் பிணக்குவை செறியக்
கொன்று வீழ்த்திடக் குலைந்தத் கொடும்படைக் கூட்டம்
நின்ற திக்கினை நாடியே நிருபன்முன் னொருவன்
பன்றி யோடிய விசையினைப் பலமுறை பகர்ந்தான்.

இ - ள். தான்போன திக்குகளிலெல்லாம் பிணங்களின் குப்பல்கள் நெருங்கும்படிக் கொன்று விழும்படி செய்யவே, அந்தக் கொடிதான சேனைக் கூட்டங் குலைதலாயிற்று. ஒருவீரன், அரசன் நிற்கிற இடத்தைத் தேடிக் கொண்டுபோய் பன்றி யோடித்திரிகிற வேகத்தைப் பலவகையாகச் சொன்னான் எ - று. 56

அந்த வாசகங் கேட்டரிச் சந்திரன் முனிந்தே
எந்த வாறுவந் தெதிரிய வர்களை வதைத்தது
தந்த வாறெது கூறென வரசனை வணங்கி
எந்தை கேளென வேடுவன் வகைவகை யிசைத்தான்.

இ - ள். அந்த வார்த்தையை அரிச்சந்திரன் கேட்டுக் கோபங்கொண்டு அப்பன்றி எந்தவழியாக வந்து கூடிற்று? இவர்களையெல்லாம் எந்தவகையாகக் கொன்றது? அதனைச் சொல்லென்று கேட்க, அவ்வேடுவன் அரசனை வணங்கிக்கொண்டு, என் சுவாமியே! கேட்டருளுமென்று வகைவகையாகத் தெரியச் சொன்னான் எ - று. 57

வான மேழுமண் ணேழுமுன் மருப்பினி லெடுத்த
ஏன மோபுர மெரித்தவ னுலகெலா மெரிக்கும்
தான மோவுயி ருரிசெறச் சமனெடும் பன்றி
யான தோவது சிறிதுமியா முணர்ந்தில மையா.

இ - ள். ஐயனே! மேலேழுலகமும், இந்த உலகங்களேழும் முன்னே ஒரு கொம்பிலே தாங்கின (பெரிய) வராகந்தானோ! திரிபுரதகனஞ் செய்த பரமசிவனுடைய உலகங்களை யெரிக்கத்தக்க சக்தியுள்ளதுதானோ! உலகத்துள்ள உயிர்களின் வேரறுக்க யமனுடைய நீண்ட வராக வடிவு கொண்டது தானோ! அந்தப் பன்றியை இத்தன்மையதென்று கொஞ்சமேனும் யாங்கள் தெரிந்துசொல்ல வல்லோமல்லோம் எ - று. 58

தலைநி றம்பசுமை தன்னிறம் பொன்னிறந் தறுகண்
ணிலைநி றஞ்செழு மாமணி குரநிறந் நீலம்
மலையி னும்பெரி தானதோர் வராகமவந் தெய்திக்
கொலைபு ரிந்தது கனபெருங் கோட்டினா லென்றான்.

இ - ள். தலையினிறமோ பச்சை நிறம், அதனுடலின் நிறமோ பொன் னிறம்; அதன் கொம்புகளின் நிலையான நிறமோ செழுமையான பெரிய இரத்தின நிறம்; அதன் குளம்போ இந்திர நீலநிறம், இவ்வாறு மலையினும் பெரிதான ஒரு வராகமானது வந்து நமது சேனையிலே கூடித் தனது வலிவான பெரிய கொம்பினாலே கொலை செய்ததென்று சொன்னான் எ - று. 59

சேனை யும்பெருந் தேர்களுந் திண்பரித் திரளும்
யானை யுங்கொடு முடுவலு மிருந்திட வெற்றிக

காடென லாம்பிணக் காடுசெய் தெய்திற்று கண்டாய்
தேனலங்கலாய் தேரினைத் திரித்தருளென்றான்.

இ-ள். நம்முடைய சேனைகளையும், பெரிய தேர்களையும், பலமான குதிரைக் கூட்டங்களையும, யானைகளையும், கொடிய நாய்களையும் சாவும்படிக் குத்திக் கொன்று காடெல்லாம் பிணககாடாகப் பண்ணிககொண் டிருக்கின்றது. தேனொழுகின்ற மாலையணிந்த அரசனே! உமது தேரை அங்கே திருப்பியருள வேணுமெனறு கூறினான் எ-று

கண்டாய் - முனனிலையசை. 60

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

என்று பகர்ந்திட மன்னவா மன்ன னெழுந்த கதத்துடனே
நன்றிது நனறென வங்கையொ டங்கைய றைந்துந கைத்துடனே
இன்றும டிந்தவ ரின்னுயிர் தம்மிலு மெம்முயி ரோவலிதென்
றன்றுச வுந்தரி தந்தநெ டுஞ்சிலை யங்கைபி டித்தனனே.

இ-ள. என்று சொல்லவே இராஜாதி ராஜனானவன் அப்போது தனக் குண்டான கோபத்துடனே நல்லது இது நல்லதே! என்று ஒரு கையுடனே ஒருகையை மோதிச் சிரித்து, இன்றையத்தின மிறந்தவாகளுயிரினும் எங்களுயிர்தானோ சிறந்ததென்று அப்பொழுதே முன்னே சவுந்தரிதேவி கொடுத்த வில்லை அழகிய கையிலே கொண்டான எ-று. 61

பாகரின் மிக்கவ னுனமறை முற்றெறி பார்குரு திததவனும
சாகர முற்றெழு பானுகு லத்திறை தாளிணை யைத்தொழுதே
நாகரி கசசுட ராடர வபபணி நாயகி பொற்சடிலச
சேகரி பத்திர காளிகொ டுத்தரு டேரைந டத்தினனே.

இ-ள். தேர்ப்பாகரில மிகுந்த சாமர்த்தியனும், நான்கு வேதங்கள முழுதுந் தெரிந்து செலுத்தத்தக்க சாரதித தொழிலிலும வல்லவனானவன கடலிலே தோனறி வருகிற சூரியகுலத தரசனுடைய பாதங்க ளிரண்டையும் வணஙகிககொண்டு, யோககியதையான காந்தியைககொண்ட ஆடுகின்ற சர்ப்பாபரணம பூண்ட தேவியாகிய செமபொன னிறமான சடைத தலையையுடைய பத்திரகாளி கொடுத்தருளின தேரைச் செலுத்தினான எ-று. 62

படியு மிடிந்தது பொடியுமெ ழுந்தது பலபல பைமபொழிலும்
மடிய விழுந்தன ககனம டர்ந்துயா வரையுநெ ரிந்தனவான
முடியு மதிர்ந்தது கதிருமறைந்தது முகிலுமு ழன்றதுநீ
ரிடியு முதிர்ந்தது கொடிமலை யுஞ்சுட ரிரதந டந்திடவே.

இ-ள். கொடி கட்டின ஒளியையுடைய தேர் செல்லும்போது, பூமியும் பள்ளமாயிற்று; (அதனால) தூளிகளுங் கிளாநதது, பறபல வகையான காடுகளும் சாய்ந்து விழுந்தன; ஆகாயத்தையு முட்டி உயாந்திருககிற மலைகளெல்

லாம் கெரிந்தன; அண்டமுகடும் அதிர்தலாயிற்று; சூரியனு மறைதலாயிற்று; மேகங்களும் அலைவனவாயின; நீரும், இடியும் சிந்துதலாயின எ - று. 63

மாறுப டச்சில தேரென வுற்றெழு மால்வரை யத்தனையும்
நீறுப டப்பட நாடிம ணிச்சுடர் நேமிநெ ரித்தனவால்
ஆறுப டப்பட வூறுபு னற்றிரை யாழியை யொத்திடவே
வீறுப டதுயர் கானம னைத்தையும் வேரொடெ டுத்தனவே.

இ - ள். இந்தத் தேருக்கு மாறாக சில வீரர்களுடைய தேரென்னும்படி பேர்கொண்டு வருவனவான உயர்ந்த மலைகளெல்லாம் தூளிகளாகி மேன்மேலுங்கிளர அந்தப் பனறியைத் தேடிக்கொண்டு செல்லும்போது, இரத்தின கசிதமான தேருருளைகளின் கீழகப்பட்டவைகளெல்லாம் நெரியும்படிச் செல்ல, அதனால் ஆறுபோல பெருகி ஊரும அந்த இரத்தப்பிரவாகமானது ஊருகின்ற நீரையும அலைகளையுமுடைய கடலை யொப்பாகப் பெருகும்படியாய் உயர்ந்து வளர்ந்துள்ள காடுகளை யெல்லாம் வேரோடே பிடுங்கிக்கொண்டு சென்றன எ - று. 64

தங்கமு டித்தனி வெண்கவி கைத்திரி சங்கும கற்கெதிரே
திங்களெ னத்தவ ளாதிகழ் முதலொளி சிந்துமருப்பதனால்
வெங்கண்ம தக்களி றுமபல விறசெரு வெனறப ரித்திரளும்
பங்கமு றப்பல பஞ்சுப டுத்திய பன்றியெ திர்த்ததுவே.

இ - ள். தங்கக் கிரீடத்தையும், ஒப்பிலலாத வெள்ளைக் குடையையுமுடைய திரிச்சங்கு புத்திரனை அரிச்சந்திரனுக்கு முன்னே சந்திரனைப் போல வெண்மையாக விளங்குகின்ற ஒளி வீசுதலையுடைய கொம்பினாலே, வெவ்விய கண்களையுடைய மதயானைகளையும், அநேகம் விலலாளிகளைப் போர் செய்து வெல்லத்தக்க குதிரைக் கூட்டங்களையும், பங்கப்படப் பலவிதமான பஞ்சுபோற் பறக்கச்செய்கிற பன்றி வந்து முனைந்தது எ - று. 65

வேயின்மி குதலெழு மால்வரை யெட்டிலு மீதுவி சைப்புறவே
பாயுமு கிற்குல மேழையு மபபொடு பாரிலவி ழசசிதறும
வாயினு ரைத்திசை நாலுமி றைத்துயர் வானுமி றைக்குமவிழித்
தீயின்ம ணித்திரை நீரவட வைக்கனல சேரவெ ரித்திடுமே.

இ - ள். மூங்கிற காடுகள் மிகுதியாக வளர்வனவான உயர்ந்த எட்டு மலைகளினமேலும வேகங்கொண்டு பாயும்; பினனும் மேகக் கூட்டங்களேழையும உடனே பூமியிலே விழும்படிச் சிதறவிக்கும்; தன் வாயிலுள்ள நுரையை நாலுதிக்கிலுஞ் சிந்தி உயர்ந்த ஆகாயத்திலும் சிந்தும; கண்களிற் றோன்றுகிற நெருப்பினாலே, முத்துக்களைவீசுகிற அலைகளுடனே கூடின கடலையும், வடவாக்கினியையும் ஒருசேர எரிக்கும் எ - று. 66

ஆடன்ம தத்திரு நாலுதி சைக்களி றனைவை யத்தனையும
கோடத னிற்கர மீதுற வைத்துடல் கூசிவெ ருக்கொளவே

சேடன்மு தற்படு வாளர வத்தலை சேரந டுக்குறவே
ஓடும்வி சைத்தெழு நீளபுவி யையப்புன லூறநெ ரித்துழுமே.

இ - ள். வெற்றியினையுடைய மதங்கொண்ட எட்டுத்திக்கு யானைகளெல்லாவற்றையும், தன கொம்பினாலே, அவைகளின அதிக்கைகளிலே குத்தி (ரோகச் செய்ய, அதனால் அவைகள்) உடம்பு கூசி நடுநடுங்கிப் பயப்படவும், ஆதிசேடன் முதலாகவுண்டான ஒளியையுடைய பாமபினதலைகள் முழுதும் நடுங்கவும் ஓடும்; வேகங்கொண்டு கிளம்பும்; நீண்ட மண்ணுலகத்தை நீர் பெருகும்படிக்கு கிழித்து மூகததினாலே கிண்டும் எ - று. 67

ஊறுப டுத்திடு பாகர்செ லுத்திய வோடைம தக்கரியை
நீறுப டுத்திடும் வீரர்ந டத்திய நீளிர தத்தினையே
கூறுப டுத்திடும வாதுவ ரேறிய கோலவ யப்பரியைச்
சேறுப டுத்திடு மாமக ரத்திரள் சேருமு ளக்கரையே.

இ - ள். கொலை செயயததக்க பாகர்கள செலுத்தி வருகின்ற முகபடாத்தையணிந்த மதயானைகளை மண்தூளிலே புரளக் குத்தித் தள்ளும்; வீரர்கள் செலுத்திவருகிற உயர்ந்ததேர்களைச் சக்கைசக்கையாகப் பேர்க்கும்; குதிரை வீரர்கள் அதட்டிச் செலுத்துகின்ற அழகான வெற்றிகொண்ட குதிரைகளைப் பெரிய மீன்கள் கூடின கடலினசேற்றிலே புதைபச்செய்யும் எ - று. 68

அனர்த்தம்வி ளைக்கவி டுத்தத வத்தன ளித்தவு ரைப்படியே
சினத்துவெ றித்தும தக்கரி கற்கிதி டுகெட வுற்றணுகி
இனத்துர கத்தரு ணக்கன கத்திர தத்தினை யெற்றுமெனா
மனத்தினி னைத்துவ லத்துபு றத்தின்ம ருப்பையொ டுக்கியதே.

இ - ள். இப்படிக கேடுசெய்ய அனுப்பின தவமுனிவர் கொடுத்த வுத்திரவினபடியே, (அப்பனறியானது) கோபங்கொணடு, வெறிகொண்டதாய் மதயானைகளும, குதிரைகளும பயபபடடேபடிப்போய, நெருங்கிக் கூட்டமான குதிரைபூண்ட சிவந்தபொனமயமான அரசன தேரை உடைககவேணுமென்று தனமனத்திலே யெணணி, வலது புறததிலுள்ள கொம்பைச் சாய்த்துக் கொணடு சென்றது எ - று. 69

உதித்தது ணைப்பிறை யெரததம ருப்பையொ டுக்கவு ணர்ச்சி
பெருக், கதித்தகெ ருததசி லைக்குள டுததொர்க ணற்கணை தொட்
டுவிட, எதிரததகி ருடடியி னெறறியின் முற்றியெ டுத்தகலக் கொடு
போய், விதிரத்துட லுட்கிவெ ருக்கொள மற்றொரு வெற்பிடை
யுய்த்ததுவே.

இ - ள். இரணடு சந்திரப்பிறைபோனற கொம்பை ஒடுக்கிக்கொண்டு வந்த அப்பன்றி செல்லும்போது, அரசன், அச்சமயந்தெரிந்து நினைவு கொண்டு கெட்டியாகப் பருததிருக்கிற தனது வில்லுக்குள்ளாக நெருங்கிச் சென்று ஒரு அக்கினி சாஜ்வல்லியமான அம்பைத் தொடுத்துப் பூட்டிவிட்ட

போது, அந்தக்கனற்கணை எதிர்த்துவந்த பணறியின் நெற்றியிலேபட்டு நெருங்கித் தூரகொண்டுபோய் அந்தப்பனறியின் உடம்பு நடுங்கிக்கூசிப் பயங்கொள்ளும்படி வேறேயொரு மலையிலேபோய் விழப்பண்ணியது எ - று. 70

உய்த்தது நீளிடை பத்துள யோசனை யுற்றெழு மால்வரைமேல்
வைத்ததும் வாய்வழி கக்கிய சோரியில் வட்டணை யாவுழலா [லாம்
மெய்த்தவன் வாழ்பொழி லுட்புக வோடலும் விட்டபதாதியெ
மொய்த்தன காவல னைப்புடை சூழ்தர முற்றிளா வாரிதிபோல்.

இ - ள். நீளமும் அகலமும் பத்துயோசனை அளவுள்ளதாகக் கொண்டு மிகவுமுயர்ந்த மலைமேலே விழப்பண்ணித் தள்ளுமளவில், அப்பனறியானது வாய்வழியே கக்கின இரத்தத்துடனே சக்கிராகிருதியாகச் சுழன்று அந்த மெய்யான தவமுனிவர் வாசம்பண்ணுகிற சோலைக்குள்ளே செல்லுவதாக ஓடும்போது, முன்னதாகப் பொங்கி ஆரவாரித்தெழுகின்ற கடலைப்போல முன்னே அஞ்சி அகன்ற சேனைகளெல்லாம் அரிச்சந்திரமன்னன் பக்கமெல்லாம் சூழ்வதாய் நெருங்கின எ - று. 71

கடற்படை சுற்றியி ரைத்திறை பத்மந் ழற்றுணை யைத்தொழலுந
தடக்கைய மைத்தும னத்தில லைந்தற விர்த்திர நத்தினைமுன்
னடத்திய திரத்தநி ருடியை கைக்கந டுந்தனு வைத்துணைக
குடற்கெட றித்துவி றற்படை பட்டகொ லைக்கள முற்றனனே.

இ - ள். அந்தக்கடல்போன்ற சேனைகள் சூழ்ந்து முழங்கி அரசனுடைய தாமரை மலர்போன்ற பாதங்களிரண்டையும் வணங்கும்போது, தன் நீண்ட கையாலமையச்செய்து, அவர்கள் மனத்திலுள்ள அலைவை நீக்கி எதிர்த்து வந்த பனறியைக் கொல்ல எண்ணி, இரத்தத்தை முன்னே செலுத்தி, வில்லினடுவைக் கையிலே கொண்டு கொழுப்பும் குடல்களும் அறுதலாய வெற்றி கொண்ட தனது சேனைகள் வீழ்ந்துகிடக்கிற கொலைக்களத்துக்கு வந்தான்.

புரவல னப்படை கரிபரி பட்டதொர் புதுமைக ளைத்தெரிசித்
தரகர விப்படி விளைவதெ னக்குன தருளினெ றிச்செயலென் [ரே
றிருகரம் வைத்திரு செவியைம றைத்தெழின் முடியைய சைத்தெதி
துரகந டத்திட விரைவினி ழுத்தன சுடரிர தத்தினையே.

இ - ள். அரசனானவன், அந்தச் சேனைகளிலே யானைகளும், குதிரைகளும் ஒப்பில்லாமல் செத்துகிடக்கிற ஆச்சரியத்தைக் கண்டு, அரகரா! இப்படி ஆகிறதற்குச் சிவனே! உன்னுடைய கிருபையின் வழியாகிய செய்கையே யென்று தனதிரண்டு கைகளாலும் இரண்டு காதுகளையு மூடி, அழகான தலையையும் அசைத்து, முன்னே செல்வதாகக் குதிரைகளை முடுக்க, அக்குதிரைகள் மிகுந்த வேகத்துடனே விளங்குவதான தேரை யிழுத்துக் கொண்டு சென்றன எ - று. 73

ஏனம்வி ழுந்தயர் மால்வரை கண்டதி னேறியி ழிந்தகலப்
போனது ணர்ந்தடி மீதுதொ டர்ந்துபு காதவ னங்கள்புகுந்

தானன மூந்திரு மேனியு நுண்பொடி யாடம டந்தையுடன்
மானவன் வந்தொரு வாசநெ டும்புனல் வாவிய ணைந்தனனே.

இ - ள். அந்தப்பனறி விழுந்து, சோர்வதான உயர்ந்த மலையைக் கண்டு, அதன்மேலேறி யிறங்கி, பனறி அதைவிட் டப்பாற் போனது தெரிந்து போகாத காடுகளெல்லாம் போய் முகமுந் திருமேனியும நுண்ணிதான தூளிகள் படியச் சந்திரமதியுடனே மகானுபாவனான அரிச்சந்திரன வந்து நறுமணங் கொண்ட நீண்ட நீரகுளததைக கணடான எ - று. 74

கானின்மி சைந்தெழு தாமரை யிறபடா காவிக ளிறபடரும
தேனின்மு ழக்கொலி நாலுதி சாதிசை சேரவி யபபுறுமால்
மீனின்மு ழக்கொலி யூழியி னிற்கடை வேலையை யொப்பதுநீள்
வானின்மு ழக்கொலி போலவன சககர வாகமி ரைபபதுவே.

இ - ள். காடுபோல மேறசெ ாணடுவெருகினற தாமரைமலர்களிலும் பரவின நீலமலர்களிலும் மொய்ப்பனவான வண்டுகளின பாட்டொலியானவை நானகு திக்குத திசைகளிலுங் கேட்க, அதிசயததைத தருவதா யிருககினறது. அந்தக குளத்திலுள்ள மீனகள் அலம்புகிற சப்தமானது, ஊழிக்காலததிலே கிளருகிற யுகாந்தக்கட லோசையை யொததிருககினறது. சககரவாகப் பட்சியினுசை யானது ஆகாயத்து மேகததி னிடிமுழககமபோன றிருக்கினறது எ - று

கானின் மிசைந்து-காட்டிலே தேனையுண் டெனினுமாம். 75

தமரநெ டுந்திரை யெரிகுரை யுமபல சகுனமு ழுஙகிரையும
அமரம டநதையர் குடையொலி யுமபல வருவிவி ழுஙகலியும்
திமிரம தக்கய நிறைவுற மொண்டறல சிதறதி வுங்குரவம
கமழ்தரு மவவன முனிவாக மண்டலு களகளெ னுநதொனியும.

இ - ள். முழககததையுடைய அலைகளை வீசுகிறசபதமும, பல பட்சி சாதிகள் முழஙகுகினற சபதமும, தெய்வகனனிகள வந்து நீராடுகிற சப்தமும, பல அருவிகளோடி வருகிற சபதமும, இருளாகிறமான மதயானைகள வந்து நிறைவாகத துதிககையாலே நீரைமுகந்து சிந்துகிற நீரோசையும, குரவ மலர்கள் பரிமளிககினற அந்த வனததிலுளள முனிவாகள நீர முககினற கமணடலத்தின் நீர் களகளவெனகிற வோசையும எ - று.

இதுமுதல் இரண்டு பாடல்கள குளகம. 76

முருகுகு டைநதளி முரலமி குநதொனி முதலைக டநதமின்வந
தருகுசெ றுநதொனி குடநிகா வெள்வளை யகடுளை யுநதொனிவெண்
குருகிரி யுநதொனி சிரலகளவி ழுநதொனி கொடுவரி வநதுபுனல்
பருகுமி குநதொனி பறவைக ளினமெழு னி பகலிர வுநதணியா.

இ - ள். தேனைக கிண்டியுண்டு வண்டுகள் பாட மிகுகின்ற சப்தமும், முதலைகள் தங்களுக்குள்ளே கூடிவந்து பக்கங்களிலே சீறிச் சணடை பண்ணு

கிற சப்தமும், குடத்துக்கொப்பான வெள்ளைச்சங்குகள் கருப்பவேதனைப் படுகிற சப்தமும், அந்த சப்தத்துக்கஞ்சி வெள்ளைக் குருவிகளோடுகிற சப்த மும், மீன்குத்திக் குருவிகள் மீனமேல் விழுகிற சப்தமும், புலிகள் வந்து நீர் குடிப்பதான மிகுந்த சப்தமும், பட்சிகள் செய்கின்ற அதிக சப்தமும பகலும் இராத்திரியும் நீங்காதிருக்கின்றன எ - று. 77

அறத்தவா வற்கலை யிறறுவா நித்த மலர்ப்பொழில பொற்பிரசம
மறததக ளிற்றினம ததிதினு முககும டககவ ரிபபொழிபால
நிறததிடு பசசைம ணிநதுகிா வசசிா நிததில முடகளுலக
கறுததவெ ளுததசி வததப சுததக ணிபபதெ வாகவெளிதே.

இ - ள். துறவறததார்களுடைய (வறகலையான) காவி வேஷ்டிகளின சிவப்பு, தினந்தோறும அலாதலையுடைய பூஞ்சோலைகளிலுள்ள பொனனிற மான தேன கோபததைக்கொண்ட யானைகளின மததின்து பெருக்கு, இள மையான காட்டெருமை பொழிகின்ற பால, சோதியையுடைய பச்சை இரத தினம-பவளம்-வயிரம்-முத்து ஆகிய இவைகள உள்ளே விளங்குகிறதினாலே, அந்தக குளதது நீா கறுததசெனறும வெளுததசெனறும சிவநதசெனறும நிசசயிதது யாராலே எளியதாயச சொலலலாகும? (முடியாசெனறபடி) எ-று.

மேற்படி வேறு

முளரிசெங குமுத நீல முணடகங குவளை வெள்ளை
கிளர்ந்து மலாக ளெலலாங கிளையொடு மலியப பூதத
அளவிலா மதியு மீனு மருககரு மலிய வணடம
வளாபுவி தனிலும வேதா வகுததன போனற வனறே.

இ - ள். தாமரை-செவவலலி-நீலம-செநதாமரை-கருஙகுவளை இனனமும் வெள்ளைநிறமாக விளஙகுகின்ற பரிமள மலாகளெல்லாம் தமதமினததோடுகூடி, மிகுதியாக மலாநதிருககின்றதானது, அளவிலலாத சநதிரரும-நட்சததிரங்க ளும-சூரியாகளும நிறைந்திருககின்ற ஆகாயததை, மனிதா சஞசரிககினற வுல கத்திலே பிரமன சிருஷ்டிததனபோ லிருநதன எ - று. 79

மண்கொளா ததனு ணீரும வளைகளு மலரு மீனும
விண்கொளா ததனுள வைகும வெணகுரு கனனநாரை
பண்கொளவாய் வண்டு வைகும பதுமததின் புரப்பு நோககின்
கண்கொளா மனமுங கொளளா காவியு மனன தேயால.

இ - ள. குளததினிடமே போதாது, அதனுள்ளே நிறைந்திருக்கின்ற ஜலத்துககும-சஙகுகளுககும - மலாகளுககும - மீனகளுககும - ஆகாயமே இடம் போதாது. அதிலே சஞசரிககினற வெள்ளைக குருவிகளுககும-அனனஙகளுக கும்-நாரைகளுககும், இராகததைககொணட வாயையுடைய வணடுகள் மொய்ப் பதான தாமரைமலாகளின விரிவைப பாாததால, கணகளும் போதா; மனமும போதா; நீலோற்பலங்களும அததனமையனவே யாகும் எ - று. 80

மீதெலாந் தரங்க மஃதின் மேலெலாங் கமலப் போது
போதெலாஞ் சங்கஞ் சங்கின் புடையெலாம பொருந்து தாது
தாதெலாம் லண்டு வண்டின முளெலாஞ் செழுந்தேன் மறறும்
ஈதலா வில்லை யந்த விருமபுனற் றடத்தி லம்மா.

இ - ள். அந்த நீாமேலெல்லாம அலைகள் புரள்தலா யிருக்கும்; அவ் வலைகள்மேலெல்லாம் தாமரைமலர்க ளசைதலாயிருக்கும்; அந்த மலர் களிலெல் லாம் சங்குகள் ஊர்வனவாயிருக்கும்; அந்தச் சஙகுகளினிடமெல்லாம் மகரந்தங் கள் பொருந்தலாயிருக்கும்; அமமகரந்தங்களெல்லாம் வண்டுகள் மொய்த்திருக கும்; அந்த வணடுகளின காலகளெல்லாம செழுமையான தேன்சிந்துவனவா யிருக்கும; இத்தன்மையனவேயல்லது வேறுவகைகளில்லை அந்தப்பெரிதான குளததில் எ - று. 81

பங்கய முகமுங் கணைணும ராதமும பணைதத பாரக்
கொஙகையுஞ் சைவ லபபூங கூநதலுங் குமுத வாயும
செங்கயற கண்ணும வள்ளைத் திருநெடுங குழையுங காடடி
மஙகைபுட கரணி யெனபாள வள்ளலை யுளளங் கொணடாள.

இ - ள- பெணணாகிய புடகரணியெனனும பெயாகொணடவள் தாமரை மலர்களாகிய முகமும கணைகளும அலைகளும பருத்த கனமான கொஙகைகளும, பசியதாகிய அழகிய கூநதலும, குமுதமலராகிய வாயும, சிவந்த கயலகளாகிய கண்களும், வள்ளியிலையுங கொடியுமாகிய அழகிய நீணட காதுகளுங் காணச செய்து பிரபுவான அரிச்சநதிரனைத தன மனததிலே எணணி மோகிததாள் போலும எ - று.

புட்கரணி - நீாககுளம. 82

வரையடுத தரிய சோதி மணிகொழித தருவி பாயநத
விரைமலாப பொழிலி னிழல வெணடிரை மேன்மேன மோதி
நிரைநிரைத தரள முநதி நெடுநிலா விரிநத வண்டற
கரையினை மனனன சாநதான கடலினை யருககன் சாநதான.

இ - ள் மலையிலிருநது அருமையான ஒளியையகொணட மணிகளை ஒதுக கிககொணடுவருகிற அருவிபாறு பாயவுதான பரிமள மலாகளுளள சோலையி னிழலிலே, வெணமையான அலைகள மேலுமேலு மோதி வரிசையாக முத துககளை வீசி, நெடிதான சநதிரிகை விரிவதானசேறறைக கொணட அந்தக குளககரையை அரிசசந்திரமகாராஜன சோந்திருந்தான. அப்போது சூரியனு மேலைக்கடலைபபோயச சோநதான எ - று 83

யானையுந தேரு மாவு மிழிநதொருங கியாரு மீண்டித
தேனையொத தினிய வாவிச செழுமபுனல குடைநதுண டாறிக
கானயுற றிலஙகு தணபூங கடிபொழி லிடஙக டோறுஞ
சேனையு மனனர் தாமுஞ் செலவனு மினிதி ருநதாா.

இ - ள். யானைகளும் இரதங்களும் குதிரைகளும் விட்டிறங்கி எல்லாரும் ஒன்றுகூடித் தேனையொப்பாய் இனிக்கின்ற குளத்திலுள்ள செழுமையான நீரிலே முழுகியும் குடித்தும் இளைப்பாறி, காட்டைச் சார்ந்து விளங்குகின்ற குளிர்ந்த பூமணத்தைக்கொண்ட சோலையினிடங்களெல்லாஞ் சேனைகளும் அரசர்களும் அரிச்சந்திரனும் சுகமே தங்கினார்கள் எ - று. 84

தாபமும் புனலுங் கொள்வார் தாபதர் வந்து மாதர்
தீபமு மயோத்தி வேந்துஞ் சேனையு மிருக்கக் கண்டு
கோபமுற் றழன்று மனனு கோசிகன் கண்டா லுன்னைச்
சாபமிட் டெரிப்ப னீண்டு சார்ந்தது தகாதே யென்றார்.

இ - ள். தாபத்தையுங் கொண்டு, அந்தநீரை யுட்கொள்ளவந்த சில முனிவர்கள் அங்குவந்து, பெண்களுக்கு விளக்கான சந்திரவதியும், அயோத்திக் கரசனான அரிச்சந்திரனும், அவன் சேனைகளும் இறங்கியிருக்கிறதைப் பார்த்துக் கோபங்கொண்டு மனங்கொதித்து அரசனே! விசுவாமித்திரமுனிவர் கண்டால், உனக்குச் சாபங்கொடுத்து எரித்து விடுவார். ஆதலால், நீ இங்கே வந்திறங்கினது தகாதகாரியமென்று சொன்னார்கள் எ - று. 85

யாமவற் கடிமை யன்றோ வெம்மயிற் சீற்ற மென்னே
யாமவற் கிழைத்த தீங்குண் டெனினுந் திருத்திப் பின்னைப்
போமதே கரும மென்னப் புரவலன் புகலக் கேட்டீண்
டாமதே காண்டி யென்னு வருந்தவ ரகன்று போனார்.

இ - ள். அதற்கு அரசன், நாங்களெல்லாம் அம்முனிவருக்கு அடிமையல்லவோ, எங்களிடத்தில் கோபங்கொள்கிறதற்கு நிமித்தம் என்ன? நாங்கள் அவருக்குக் குற்றங்கள் செய்திருந்தாலும் அவரைச் சமாதானஞ் செய்துகொண்டு எங்களுருக்குப் போகிறதே காரியமென்று சொல்லக் கேட்டு, அம்முனிவர்கள் ஆனால் இங்கே நடக்கப்போகிறதைத் தெரிந்துகொள்ளக் கடவையென்று சொல்லி தூரமாக விலகிப் போனார்கள் எ - று. 86

மாதவ ரகன்ற பின்னர் மாலையாம் பட்டாத் தொங்கிப்
பூந்தல மென்னு மங்கைப் புறையிருட் பட்டாத் துடுத்துப் புக்காள்
மேதகு தவத்தி னீசன் விளைபாட்டாம புகுந்தா முன்னந்
தீதறு குணத்தின் மிக்கோன் சித்திரப் பட்டாத் துட் புக்கான்.

இ - ள் அந்த மகாதவமுடையவர்கள் போனபின்பு, மாலைக்காலமாகிய அழகிய பெண் நீக்கிய பூமிதேவியானவள் மூடுகின்ற இருளாகிய போர்வைக்குள்ளானாள். அப்போது மேலான தவத்திலேமேலிருந்த விசுவாமித்திரருடைய தீவினைப் போர்வை வருமுன்னே, குற்றமற்ற குணங்களால் மிகுந்த அரிச்சந்திரன் சித்திரப் போர்வையான கூடாரத்துக்குள்ளே போயிருந்தான் எ - று. 87

கடாத்தடங் களிறு மாவுஞ் சேனையுங் கண்டுஞ்ச
விடாப்படை வேந்தர் தாமு மமைச்சரும விழிக டுஞ்சக

கெடாப்பெருங் குணத்து வள்ளல் கிளிமொழி மயிலோ டம்பொற்
படாத்திடைப் பரியங் கத்துப் பஞ்சணைப் பள்ளி கொண்டான்.

இ-ள். மதத்தையுடைய உயர்ந்த யானைகளும், குதிரைகளும், சேனைகளும் நித்திரை செய்துகொண்டிருக்கவும், விடாமல் கூடவந்த அரசர்களும், மந்திரிகளும் நித்திரைகொள்ளவும், கெடுதலில்லாத பெரிதான குணத்தையுடைய பிரபுவான அரிச்சந்திரன் கிளிபோலும் வசனத்தையுடைய மயிற்சாயலான சந்திரவதியுடனே அழகிய பொன்மயமான கூடாரத்திலே பஞ்சு மெத்தை யமைத்த கட்டிலின்மேல் நித்திரை செய்யலானான் எ-று. 88

பூவல யத்தை மூடும் புதையிரு ளறச்செஞ் சூட்டுச
சேவலார்ப் பெடுப்பக் கீழ்பால் செங்கதிர் வந்து தோன்ற
யாவரு முணர்ந்தெ ழுந்தா ரிளங்கொடி யுடன் றுயின்ற
காவலன் றானு மற்றோர் கனவுகண் டுணர்ந்தெ ழுந்தான்.

இ-ள். பூமண்டலத்தை மறைப்பதாய்க் கவிந்த இருள் நீங்க, சிவந்த உச்சிக் கொண்டையையுடைய சேவல்கள் கூப்பிட, கிழக்குத்திக்கிலே சூரியன் வந்து உதயமாகவே, எல்லாருந் தெளிந்து விழித்தெழுந்தார்கள். அக்காலத்திலே இளங்கொடிபோன்ற சந்திரவதியுடனே நித்திரை செய்த அரிச்சந்திர மகாராஜன் தானும் வேறுபாடான ஒரு சொப்பனங் கண்டு விழித்தெழுந்திருந்தான் எ-று. 89

மன்னவன் றுணுக்கங் கண்டு வல்லியும் பலகா னோக்கி
என்னைநின் மனத்தி லெண்ண மியம்புகென் றிறைஞ்ச லோடும்
கன்னன்மென் மொழியா யானோ கனவுகண் டுணர்ந்தே னென்னப்
பின்னரக் கனவி னீரமை பேசெனப் பேச லுற்றான்.

இ-ள். கொடிபோலவளான சந்திரவதி அரசனுடைய (சொப்பனத்தினாலுண்டாகிய) திகிலைப் பலதரமும் பார்த்துத் தேவரீருடைய மனத்திலே ஆலோசனையென்ன சொல்லுமென்று வணங்குமளவில், கருப்புபோலு மிருதுவான சொல்லையுடையவளே! நான் ஒரு சொப்பனங்கண்டு விழித்தேன் என்ன, பின்பு அந்தக் கனவினது குணத்தைச் சொல்லுமென்று (சந்திரவதி) கேட்கப் பின்பு சொல்லலானான் எ-று. 90

அமைச்சரைத் தூதரோடி யழைக்கவென் றரசன் கூற
இமைப்பினிற் சென்ற தைத்தா ரியாவரும் விரைவின் வந்தார்
சமைத்தத்தி வினையை யென்றுன் றுமரைச் சரணம் போற்றி
எமைக்கடி தழைத்த வாறென் னிறைவனீ யருள்க வென்றார்.

இ-ள். அரசன், தூதுவர்களே! விரைந்து சென்று மந்திரிகளைக் கூட்டி வாருங்களென்று சொல்ல, அத்தூதர்கள் க்ஷணநேரத்திற்போய்க் கூப்பிட்டார்கள். அந்த மந்திரிகளுடனே வரத்தக்கவர்களெல்லாரும் வந்து, விசுவாமித்திர ருண்டாக்கின மிருகவாதை முதலான புனறி வேட்டையாகிய

செய்கைளே வென்றிருக்கின்ற அரசனுடைய தாமரைமலர்போலும் பாதங்களை வணங்கித் துதித்து, அரசே! நீர் எங்களை விரைவிலே அழைத்த காரியம் யாது? அருளிச்செய்யவேண்டு மென்றார்கள் எ - று. 91

மற்றவர் கூறக் கேட்டு வையக மெல்லாங் காக்குங்
கொற்றவ னின்றி யானோர் கொடியதீக் கனவு கண்டேன்
உற்றது கேட்டு மேல்வந் துறுதிற முரைமி னென்னுக்
கற்றடந் தோளி னார்கருக் கனுநிலை கூற லுற்றான.

இ - ள். அப்படி மந்திரி முதலாயினோர் சொல்லியதைக்கேட்டு உலக மெல்லாம் ஆளுகின்ற அரசனான அரிச்சந்திரன் இன்றையத்தினம் நானொரு கொடிதான கெடுதலுள்ள சொப்பனங் கண்டேன்; அப்படி நான் கண்டதை நீங்கள் கேட்டு இனிமேல் வந்து கூடுவதான காரியத்தைச் சொல்லுங்க ளென்று மலைபோலுயர்ந்த தோள்களையுடைய மந்திரி முதலானவர்களுக்குச் சொப்பனச் செய்கையைச் சொல்லலானான் எ - று. 92

என்னையீன் றெடுத்த தாதை யாக்கையோ டெய்தி யும்பர்
தன்னையுற் றிமையோர் நீங்கத் தாரகைத் தலத்த மர்ந்த
பின்னையான் பிரசக் கூந்தற் பேதைய ரைவர் தம்மை
முன்னையூழ் விதியி னாலே முயக்கமுற் றினிதி ருந்தேன்.

இ - ள். என்னைப் பெற்று வளர்த்த தகப்பனானவர் தேகத்துடனே சுவர்க்கலோகத்துக்குப் போய்த் தேவர்களால் தள்ளுண்டு நட்சத்திர மண்டலத்தில் நிலைகொண்டிருந்த பின்பு, நான் தேன் பொருந்திய மலர்களை முடித்த கூந்தலையுடைய பெண்களைந்துபேரைப் பூர்வ புண்ணியத் தொடர்ச்சியினாலே அவர்களுடனே கூடிச் சுகித்திருக்கக் கண்டேன் எ - று. 93

அருந்தவிற் புணர்ந்த மாத ரைவரி லருந்த வத்தோர்க்
கொருத்தியை யானே யீந்தே னொருத்திபோ யவனோ டுற்றாள்
ஒருத்தியூ ணறற கன்று ளொருத்திபோய்க் கண்ணி ழந்தாள்
ஒருத்திவிட் டென்னை நீங்கா திருமைக்கு முறுதி தந்தாள்.

இ - ள். அப்படி நான் ஆசைகொண்டு கூடியிருந்த பெண்களைந்துபேரில் ஒருத்தியை அருமையான தவத்தையுடைய ஒரு முனிவனுக்கு நானே சமமதித்துக் கொடுத்தேன்; இன்னொருத்தி தானேபோய் அம்முனிவனோடு கூடினாள்; மற்றொருத்தி உணவு முதலியனவு மில்லாமற் போனாள்; வேறொருத்தி தானே விலகிப்போய்க் கண் குருடானாள்; போகாத ஒருத்திமாத்திரம் அப்படிப் பிரிந்த என்னைவிடாமல் இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய நன்மையை எனக்குத் தருவதாயிருந்தாள் எ - று. 94

இப்படி யின்று கண்டே னிக்கொடுங் கனவி னாலே
எப்படி விளைவ தோவஃ துணர்ந்திலே னியம்பு மென்று

அப்படி யரசன் கூற வடியிணை தொழுது நன்னூல்
தப்பற வுணர்ந்த கேள்விச் சத்திய கீர்த்தி சொல்வான்.

இ - ள். இப்படி (என்னோடு ஒருத்திமாத்திரங் கூடியிருக்க) இன்று கண்டேன். ஆதலால், இப்படிப்பட்ட கொடுமையான சொப்பனத்தினாலே இனி எவ்வாறு நடக்குமோ? அதை நான் தெரியேன்; சொல்லுங்களென்று அரசன் சொல்ல, நல்ல சாஸ்திரங்களெல்லாம் வழுவாமலறிந்த கேள்வியை யுடைய சத்தியகீர்த்தியென்கிற மந்திரி அப்படிச்சொன்ன அரசனுடைய பாதங்களிரண்டையும் வணங்கிச் சொல்லலானான் எ - று. 95

அருவினை விளைத்த தெல்லாங் கௌசிக னவனே யின்னம்
வருவினை மிகவு முண்டு வளநகர் நாடிழந்து
திருவினை யிழந்து சேயுஞ் செல்வியும் வேறு வேறாப்
பெருவினை முடிப்பான் றனைப் பின்னையாம் வெல்வோ மென்றான்.

இ - ள். இங்ஙனம் அரிய கொடுஞ்செய்கைகளுண்டாகச் செய்தது முழுதும் கௌசிகனென்கிற விசுவாமித்திரரே யாவர்; அவராலே இன்னம் வருவனவான கொடுஞ்செய்கைகள் மிகவுமுண்டாகும், (நீ கனவிலே கண்ட, அருந்தவன்-விசுவாமித்திரர்; நீர் அருந்தியிற் புணர்ந்தமாதவர் ஐவர்-பஞ்ச சத்திகள்; அவருக்குக்கொடுத்த ஒருத்தி-பஞ்சபூதமாக நிற்கின்ற கிரியாசத்தி யாகிய பொருள்; ஒருத்திபோய் அவனோடுற்றது, வினைத்துணையாக நிற்கின்ற கிரியாசத்தியாகிய அரசாட்சியே; ஒருத்தி யூணுற்றகன்றது (பிராணன் முதலிய வாயுக்களாக நிற்கிற பராசத்தியே;) அதாவது, வளமையான நகர்நாடு முதலியவைகளைவிட்டுத் தேகமெலிவாகுதல்; ஒருத்திபோய்க் கண்ணிழந்தது-ஐம்பொறி நுகர்ச்சியாக நிற்கிற ஞானசத்தியே, அதாவது செல்வத்தையு மிழந்து பிள்ளையும் மனைவியும் வெவ்வேறாகுதல். இப்படி வெவ்வேறாகப் பெரிதான தீயசெய்கையை முடிக்கிற விசுவாமித்திரரைப் பின்பு நாமே வெல்லக் கடவோம்; ஒருத்தி நீங்காமலிருமைக்கு முறுதிதருகிறதாவது, விவேகம். இதை உயிர்க்கொளியாக நிற்கிற சிற்சத்தியென்று கொள்ளவேண்டும். "பரையாதி வினைப்பரிவு தொழிலாகி யுலகனைத்தும் படைத்துக் காத்து வரையாது தொடைத்து மறைத்தருளி" என்பதனா லுணர்க என்று சத்தியகீர்த்தி யென்னும் முதன்மந்திரி கூறினான் எ - று. 96

அனையவை யமைச்சன் கூற வரசனை யரிவை போற்றி
எனையிழந் தாலு மன்றே வென்வயிற் றுதித்த மைந்தன்
றனையிழந் தாலு மிந்தத் தலமிழந் தாலும் வெம்போர்
முனையிழந் தாலு நீதி முறையொன்று மிழவே லென்றாள்.

இ - ள். அத்தகைய கனவின் பொருளை மந்திரி சொல்லவே, அப்போது அரசனைச் சந்திரமதியானவள் வணங்கித் துதித்து, அரசே! நீர் என்னை யிழந்துபோனாலும், என் வயிற்றிலே பிறந்த புத்திரனை யிழந்துபோனாலும், இந்த வுலகமெல்லா மிழந்துபோனாலும், வெவ்விதமான சண்டை முனையை

யிழந்துபோனாலும் தேவரீருடைய நீதிமுறை ஒன்றை மாத்திரம் இழவாதிருக்கக் கடவீரென்றாள் எ-று.

போர்முனையிழத்தல்-சண்டைபண்ணமாட்டாது போதல். 97

என்றலு மமைச்ச ரெல்லா மிருகணீ ரருவிபாய
நின்றுநின் றழுது வாடி நெட்டுயிர்ப் புற்ற காலை
மன்றலந் தெரியன் மார்பன் வருந்தனீ ரென்று தேற்றி
அன்றவ ணுறைந்தா னப்பா லடுத்தவா றெடுத்து ரைப்பாம.

இ-ள். என்று சொல்லுமளவில், மந்திரிகளெல்லாம் இரண்டு கண்களிலும் நீரானது அருவி ஆறுபோலொழுகநின்று அழுதும் வாடியும் பெருமூச்சுவிட்டும் மயங்குகிறபோது வாசனை பரிமளிக்கின்ற அழகான மாலையணிந்த மார்பனை அரிச்சந்திரமன்னன நீங்கள் வருந்தப்படாதிருங்களென்று அவர்களைத் தேற்றி அன்றையதினம் அங்கேதானே வாசமாயிருந்தான்; அப்பால் நடந்த விஷயத்தை யெடுத்துச் சொல்லுகிறோம எ-று. 98

வேட்டஞ்செய் காண்ட முற்றிற்று.

ஆக விருத்தம்-618

---

ஐந்தாவது

# சூழ்வினைக் காண்டம்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வென்றிவேன் மன்னன் விட்ட வெங்கணை தைத்து வாயால்
துன்றிய குருதி சோரச் சுழன்றுட லுடித்து டித்துக்
குன்றினைக் கடந்து சென்று கோசிகன் றனபாற் போந்து
பன்றியாய் வந்த மாயம் பட்டபா டனைத்துஞ் சொல்லும.

இ-ள். வெற்றிபொருந்தின வேலாயுதத்தையுடைய அரிச்சந்திரமகாராஜன் எய்த வெவ்விதமான அம்புபட்டு வாய்வழியே நெருங்கின இரத்தமொழுகச் சுழலுவதாகி உடலெல்லாம் பதறித் துடிகதுத் தானவிழுந்த மலையைக் கடந்தப்பால் விசுவாமித்திர ரிருக்குமிடத்திற்குப் பன்றிரூபமாக வந்த மாயைபோய் விழுந்து அங்கு தான்பட்டபாடெல்லாம் சொல்லலாயிற்று எ-று.

அந்தப் பன்றியாகிய தவம் எனபது பொருள். 1

என்னையா ளுடையா யுன்ற னேவலின் படியா னேகி
மன்னருங் கரியு மாவுஞ் சேனையு மாளக் கொன்றேன்
பின்னவன் விட்ட வம்பாற் சுழன்றியான் பிழைத்துப் போந்தேன்
உன்னரு ளுடையாற் கல்லா லுய்வுண்டோ வென்ற தன்றே.

இ - ள். என்னை அடிமையாகக் கொண்டவரே! உம்முடைய உத்தரவின் படியே நான்போய் அரசர்களையும் யானைகளையும் குதிரைகளையும் சேனைகளையும் சாவக்கொன்றேன். பின்பு அந்த அரிச்சந்திரனெய்த அம்பினாலே சுழலுவதாகத் தப்பி யிங்குவந்தேன; இனி உம்முடைய கிருபைபெற்றவனுக்கும் பிழைப்புண்டாகுமே யலலாமல், மற்றொருக்குப் பிழைப்புண்டாகுமோவென்று சொல்லிற்று எ-று. 2

கோலத்தி னுரையைக் கேளாக கோசிகன் வடவைச் செந்தீச
சீலத்திற் சிவந்த கண்ணன் சிந்தையு மனைய னூழிக்
காலத்திற் கடுங்கா லன்ன மூச்சினன் கடலிற் றோன்றும
ஆலத்தின் கிளர்ச்சி யனன கோபத தனழுன் றெழுந்தான்.

இ - ள். அவவாறுசொன்ன பன்றியின்சொல்லைக்கேட்டு விசுவாமித்திரர் வடவாக்கினியிருந்ததைப போன்ற சிவந்த கண்களையுடையவராகி மனமும அத்தன்மையரேயாகி ஊழிக்காலத்திலே வீசுகின்ற மேகமான காற்றுப்போல மூச்சுடையவராய்க் கடலிலேதோன்றின விஷம் பொங்கினற போன்ற கோபத்தையுடையவருமாகிக் கொதித் தெழுந்திருந்தார் எ - று. 3

பேச்சினிற் கிளிபோற் செங்காற பெயர்ச்சியிற் பெடைபோற் செய்
கைச்சினின் மின்போற சீற்ற மிகுதியான முனிவன் விட்ட [கை
மூச்சினிற் பிறந்தி ரண்டு மோகினி மாத ராழி
நீசசினி னிலைதது நிறகு நீலமென கொடிபோ னினறார்.

இ - ள. பேச்சினாலே கிளிபோலவும, சிவந்த காலநடையினாலே பெட்டையன்னம் போலவும, சிவந்த கைவீசுதலினாலே மின்னலைப்போலவும், கோப மிகுதியினாலே விசுவாமித்திரர் விடுகின்ற மூச்சிலே இரண்டு மோகினிப் பெண்கள் பிறந்து, நீந்துதலையுடைய கடலினிடத்தே நிலைகொண்டு நிறபதான மிருதுவபொருந்தின நீலக்கொடிபோல எதிரே நின்றார்கள எ - று. 4

செந்திரு வமுதிற் றோன்றத திரைகடற பிறநத நஞ்சில
வந்திரு கருநதி ருககள வயங்குவ தென்ன நீலச
சந்திரா திதத ரென்னத தலையினமின் கறுதத தென்ன
இந்திர நீலக கொமப ரிரண்டுவந தெழுநத தென்ன.

இ - ள். செவவியலான லட்சுமிதேவி அமுதிலேபிறக்க அலைகளையுடைய கடலிலே பிறந்த நஞ்சைபபோல் பிறந்து இரண்டு கறுத்த லட்சுமிகள விளங்குவதுபோலவும் நீலநிறமுடைய சநதிரசூரியர்போலவும ஆகாயத்திலுள்ள மினனல் கறுத்தாற்போலவும இந்திரநீலககொம்புக ளிரண்டு வந்து தோன்றினாற் போலவும எ - று.

இதுமுதல் ஐந்துபாடல்கள் குளகம். 5

நீலவா ரிதியி னீலத துகிர்க்கொடி நின்ற தென்னக்
கூலவா ரிதியி னீலக் கொம்பிரண் டெழுந்த தென்னப்

பாலவா ரிதிக டைந்த பஃறலை யரவங் கான்ற
ஆலவா ரிதியின் மூழ்கிக் கிளர்நதெழு மன்ன மென்ன.

இ - ள். கறுத்தகடலிலே நீலநிறமாய்ப் பவளக்கொடி நின்றாற்போலவும், கரைகளையுடைய கடலிலே முழுநீலக்கொம்புகளிரண்டு வந்து தோன்றினாற் போலவும், பாற்கடலைக் கடைந்த பல தலைகளையுடைய பாம்பு கக்கின விஷக் கடலிலேமுழுகி அந்த விஷநிறமாக எழுகின்ற அன்னங்கள் போலவும் எ - று.

ஆலத்திற் பயின்ற கண்ட னழற்றிருக் கண்ணான் மாண்ட
காலத்திற் புறங்கொ டாது காமனோ டொத்த லைந்து
நீலத்திற் கருகி வெம்பி நினைவிலவந் துதவி யனபாய்ச்
சீலத்தி லுயர்ந்த காமன் சேனையி லிருவ ரென்ன.

இ - ள். விஷத்தினாலே விளங்குகின்ற கண்டத்தையுடைய சிவபெருமானது திருநெற்றியிலுள்ள சிவந்த அக்கினிக்கண்ணினாலே (அநங்கன) இறந்த காலத்தில் முதுகுகாட்டி ஓடாமல அம்மன்மதனோடுகூட அலைவதாகி நீலத்தைப்போல் அந்த நெருப்பில வெந்து கருகி வெதும்புதலாய் நினைவிலே தோன்றி அந்த மன்மதனிடத்தில விசுவாசமாய் கலவியாசாரத்தினாலே உயர்ந் திருக்கிற மன்மதனுக்குதவியாகி அந்த மன்மதன சேனையிலுள்ள இரண்டு பெணகள இவவிருவருமென்று சொல்லவும எ - று. 7

சுழிகொளும பெருந்தண் கங்கை சூடினோன் றுளங்கு நெற்றி
விழிகொளுந் தழலான மேனி வெந்தழிந் திறந்த காமன
பழிகொளக் கருதிக கால பாசமே விழியாக கொண்டு
வழிவிலா வரங்கள கொணட ரதியுமா றவளு மெனன.

இ - ள். சுழிகளைககொணடுள்ள பெரிதான குளிர்ந்த கஙகையை முடித்த சிவபெருமானுடைய விளங்குகின்ற நெற்றிக்கணணின கொழுமையாகிய நெருப் பினாலே மேனி வெந்து சாமபலாயிறந்த மன்மதன பழியை வாஙக எண்ணிக் காலபாசத்தையே கணகளாககொணடு தவறுதலிலலாத வரஙகளைககொண்டு தோனறின ரதிதேவியும அவளுக்கொரு சக்களத்தியும போலவும எ - று. 8

நாவியங் கமலத் துற்ற பிரமனை நகைபபான் வேண்டி
வாவியங் கமலவாசக் கோசிகன வாதிற் றீட்டும
ஓவிய மென்ன நீல் வோதிம மென்ன நீண்ட
காவியங் கண்ணா காநதட கைதொழு திறைஞ்சி நின்றார்.

இ - ள். திருவுந்திக் கமலத்திலே தோன்றின பிரமதேவனைச் சிரித்துப் பழித்தற்காக அந்தத் தாமரைக்குளத்தின சாரியிலே வாசஞ்செய்கிற விசுவா மித்திரர் வாதுகொணடெழுதின சித்திரங்களபோலவும் நீலநிற அன்னங்கள் போலவும நீண்ட நீலோற்பலமபோலும் அழகிதான கணகளையுடைய அந்த இரண்டுபெணகளும காந்தள மலர்போலுங் கைகளால் வணங்கித் துதித்து நின்றார்கள எ - று.

நாபி என்பது எதுகைநோக்கி நாவியென வந்தது. 9

தீதிலா மறைக ணான்குந் தெளிவுற வுணர்ந்த நீர்மைக்
கோதிலாக் குணத்தோர்க் கெல்லாங் கோபஞ் சண்டாள மென்பார்
ஆதலான் முனிவன் மூக்கி னாழற் சிற்றத னாடே
போதலா லந்த மாதா புலைச்சிய ராயினாரே.

இ - ள். குற்றமில்லாத நான்குவேதங்களையுந் தெளிவாகத் தெரிந்த தன்மையையுடைய பரிசுத்தமான குணத்தையுடைய பெரியோர்கள் யார்க்கும் கோபமுண்டானால் அதுவே சண்டாளமென்று சொல்வார்கள்; ஆதலாலே அந்த விசுவாமித்திரனுடைய மூக்கிலே பொருந்திய கொதிக்கின்ற கோபத்தின் வழியாகப் பிறந்ததினாலே அந்த இரண்டுபெண்களும் சண்டாளிகளானார்கள் எ - று. 10

மாதரை முனிவன் பார்த்து வரவழைத் திருத்தி நானு
பேதமு மெழுத்துஞ் சொல்லும் பெருங்கலை யிருநா லெட்டும்
கீதமு நாத யாழுங் கின்னர முதல வாய
போதமும் வாரி மீறக் கரைத்துடன் புகட்டி னானே.

இ - ள். அப்பெண்களை விசுவாமித்திரர் பார்த்து அருகில் வரும்படி அழைத்து இருக்கச்செய்து, நாலுவகையான எழுத்துப் பேதமும், சொற்பேதமும், அறுபத்துநாலு கலைஞானமும், கீதமும், நாதமாகிய வீணையும், கின்னரமுதலாகிய ஞானமும் அவ்விருவருக்கும் அள்ளியள்ளிக் கிரமப்படியே சொல்லித் தெரியப்படுத்தினார் எ - று. 11

ஈடிலா தருமின்சொற் கின்னரா யாரு மேங்கப்
பாடினாற் றீய்ந்து லாந்த பயிரெலாம் விளைவு மல்கும்
வாடினா ளனேகம் பட்ட மரங்களுந் தழைக்கு முன்னாள்
வீடினா ருயிர்வந் துற்று வெள்ளென்பும் விதிர்வி திர்க்கும்.

இ - ள். ஒப்பில்லாத காரதரும், இனிய சொல்லையுடைய கின்னரர்களும், மற்றையாவர்களும் தோற்று விசனப்படப் பாடினார்கள். அப்படிப் பாடுதலினாலே தீய்ந்து காய்ந்துபோன பயிர்களெல்லாம் விளைவுகொண்டு மிகுவதாயின. காய்ந்து வெகுகாலஞ் சென்றுள்ள மரங்களும் தழைகொண்டு தளிர்ப்பதாயின. முன்னாளிலே இறந்தவர்களுடம்பிலே யுயிர்வந்து மூடுதலாகிய வெண்மையான வெலும்பும் உரோமங்களும் புளகித்தலாயின எ - று. 12

அந்தவே ளையில யோத்தி யரசனைக் கண்டு மீண்டு
கந்தவார் சடில மௌலிக் கௌசிகன் றன்னைப் போற்றி
இந்துவா வியிலே மன்ன னெண்ணருஞ் சேனை யோடும்
வந்தன னென்ன வேத மாதவ ரெடுத்து ரைத்தார்.

இ - ள். அச்சமயத்தில் வைதிகரான மகா தவமுனிவர்கள் அயோத்தியாபுரிக்கு அரசனான அரிச்சந்திரனைக் கண்டு வந்து வாசனை பொருந்திய நீண்ட சடாமுடியையுடைய விசுவாமித்திரரைத் துதித்து அந்தக் குளத்தினருகே

அரிச்சந்திரமகாராஜன் எண்ணுதற்கரிதான சேனைகளுடனே வந்திறங்கியிருக்கிறனென்று தெரியச் சொன்னார்கள் எ - று. 13

புண்ணியந் திரண்ட யாக்கைப் புரவலன் வந்தா னென்ன
எண்ணிய வெண்ண மெல்லா முடியுமென் றேம்ப லெய்தாப
பண்ணியன் மதுரச செஞ்சொற் பவளவாய்க் கரிய செவ்வேற்
கண்ணியா தம்மை நோக்கிக் கௌசிகன் விளம்ப லுற்றான்.

இ - ள. புண்ணியந்தானே திரண்டு வடிவங் கொண்டாற்போலும் தேகத்தையுடைய அரசன் வந்திருக்கிறனென்று சொல்லவே, நாம நினைத்த வினை யெல்லாம் இனி முடிவு பெறுமென்று சந்தோஷங்கொண்டு இராகம் பொருந்தின மதுரமான செம்மையையுடைய சொல்லைக் கொண்ட பவளம்போலும் வாயும் கருமையுள்ள செவ்வையான வேல்போலுங் கண்களுமுடைய அவ விரண்டு பெண்களையும் பார்த்து விசுவாமித்திரர் சொல்லலானார் எ - று. 14

பெடைநடை மடவீர் வாவிப் பெருங்கரை தனனில் வந்த
படையுடை வேந்தன் பாற்போய்ப் பாடலா லுருக்கி வெற்றிக்
குடையினைக் கொணமி னல்லாற் கலவியைக் கொண்மி னென்று
விடைகொடுத் திடலு மாதா விரைவினிற் றெழுது போனார்.

இ - ள். பெட்டையன்னம்போலு நடையையுடைய பெண்களே! நமது பெரிய குளக்கரையிலே வந்திருக்கின்ற சேனைகளையுடைய அரசனிடத்திற்குப் போய் நீங்கள் பாடுகிற பாட்டுகளாலே அவனை உருகும்படிச் செய்து அவனுடைய வெற்றிக்குடையை வாங்கி வாருங்கள்; அது கூடாதாயின அவனோடு கூடி இரமித்தலைக் கொள்ளுங்களென்று உத்தரவு கொடுத்தனுப்புமளவில் அப் பெண்கள் விரைவிலே வணங்கிக்கொண்டு போனார்கள் எ - று. 15

எடுத்தநன் மகர யாழு மேந்திய குழலுந் தோன்ற
உடுத்தமே கலையுஞ் செம்பொற் சிலம்புநின் றோசை காட்டத்
தொடுத்தபூங் கோதை சோரத் துணைமுலைத் தும்பி விம்ம
அடுத்தபூஞ் சோலை நீங்கி யகன்புனற் பொய்கை புக்கார்.

இ - ள். அவவிருவருங் கைகளிலே கொண்ட நல்ல மகரவீணையும், புல்லாங்குழலுந் தெரியவும், உடுத்தின மேகலாபரணமும், செம்பொனனுற செய்த சிலம்புகளும அவவவவிடத்திலே நிலைகொண்டு தொனிகளைக் காட்டவும், தொடுத்தணிந்த பூமாலைகள் அவிழ்ந்து விழவும், இரண்டு கொங்கைகளும இளகியிறுகவும் தாமிருந்த பூஞ்சோலையைவிட்டு அந்த அகலமான நீர்க்குளத் தருகே போய்ச் சேர்ந்தார்கள் எ - று. 16

கனைகழற் கடுங்காற் சேனைக் கடலினிற் சென்று புக்க
வினைநெடு வேற்க ணுமை யருள்பொழி விழியா னோக்கி
இனையரென் றவரைத் தேறு தையுற வெய்து மெல்லை
புனையிழை மாதா வந்து புரவலா போற்றி நின்றார்.

இ - ள். சப்தியாகின்ற வீரகண்டாமணிகள் கட்டின வேகங்கொண்ட கால்களையுடைய சேனை கடலுகளுளே போய்க்கூடின, கொலைதொழில செய்வதான வேல்போலுங் கண்களையுடைய பெணகளை, கிருபை யொழுகுகின்ற கண்களாற் பார்த்து அவவிருவரையும் இனனாரென்று தெரியாமல் சந்தேகங் கொள்ளுகிற சமயததிலே, ஆபரணங்களை யணிந்த அந்தப் பெண்கள் வந்து அரிச்சந்திரமகாராஜனைத் துதிதது கின்றாாகள் எ - று. 17

தோளுமத் தோளிற் சாததுஞ சுடாமணி வலய முஞசெந
தாளுமத் தாளில வீரக் கழலுநோ தாழநத கையும
வாளுநீண் மாலை மார்பும வதனமு நோககி மார
வேளுநே ரில்லான றன்னைப புகழ்நதனா வியநது ரைபபாா.

இ - ள். தோளகளும, அந்தத தோள்களிலே யணிந்த காந்திகொண்ட இரததின கேயூரங்களும, சிவந்த காலகளும, அந்தக காலகளிலே பூணட வீர கண்டாமணிகளும, நேரே தொஙகுவனவான கைகளும, (இடையிலே கட்டின) மந்திரவாளும, நீணட மாலையணிந்த மார்பும், முகமும் பாாதது மன்மதவேளு மொப்பாகாத அரிச்சந்திரமகாராஜனைத தோததிரஙகள் செய்து அதிசயிததுச் சொல்லலானாாகள எ - று 18

யாணர்க்குள் யாண நினனை யெய்துதற கிழைதத வேதா
வீணர்க்குள் வீண னெனமை விதிததவன் றிநதி ரற்கும
வாணாக்கு மனநத னாககும் வாய்ததவா றேபோ னினனைக
காணறகுத தொழறகு வாழததக கண்கைநாப படைததி லானே.

இ - ள். உலகததிலுளள அழகாகளிலே சிறநத அழகனே! உனனைச் சேர்வதற்குச சிருஷடிதத பிரமனனவன வீணனவாகளிலே அதிகமும் வீணனவன. யாதினாலெனறால், எஙக ளிருவரையும சிருஷடிதத அபபோது தானே இந்திரனுககும, வாணசுரனுககும, ஆதிசேடனுககும் அமைததமை போல உனனைப் பாாகிறதறகும, வணஙகுதறகும, துதிபபதறகும, கணகளும்-கைகளும்-நாககுகளும ஆயிரம ஆயிரமாகச சிருஷடியாமற போனான; ஆதலால எ - று. 19

வையநின னகரி செமபொன வடகிரி நினது பீடம
வெய்யவ னினது தீபம வேலைமஞ சனநீாச சாலை
செய்யவ ளினது பாரி திங்களின் கவிகை செவவே
லையநின் பெருமை யெமமா லளவிடற கரிதே யென்றாா.

இ - ள். உலகமுழுதும உமககுப் பட்டணம்; செம்பொனனான வட மேரு கிரி உமககுச் சிங்காதனம்; சூரியன உமககு விளககு; கடல உமககு திருமஞ்சன மாடுகிற இடம்; இலட்சுமியே உமககு மனையாள; சந்திரன உமககுக குடை; ஆதலால், செவவையான வேலையுடைய ஐயனே! உமமுடைய பெருமையை எஙகளால் அளவுசெயது சொல்லுதறகு முடியாது எனறு சொனனாாகள் எ - று. 20

சொல்லிய மாற்றங் கேளாத தோன்றலும் வியந்து நோக்கி
வல்லிநீர் யாரே தூர்தான் வந்தவா றேதீண் டென்றான்
அல்லியந் தொடையன் மார்ப விவ்வனத் தகத்து வாழ்வோம்
புல்லிய சாதி யீனப் புலைச்சியர் யாங்களையா.

இ-ள். அப்படி அவளிருவரும புகழ்ந்து கொண்டாடினதைக் கேட்டு அரசனானவன் அதிசயித்துப் பார்த்து ஓ பெண்களே! நீங்கள் யார்? உங்களூர் எது? என்னிடம் வந்த காரியம என்ன? என்று கேட்டான். அதற்கு அப் பெண்கள் அகவிதழ்களையுடைய அழகிய பூமாலையணிந்த மார்பனே! நாங்கள் இந்த வனத்தினிடத்திலே யிருக்கின்றவர்கள். இழிவுள்ள சாதியரான ஈனப் புலைச்சிகள் ஐயனே! எ-று. 21

வேதமா முனிவன் வைகு மேதகு சார னின்றான்
பாதமே பணிந்து நோக்கு மருத்தியிற் பதறி வந்தோம்
போதமு நெறியு மில்லாப புலலியே நல்லி யாழுங்
கீதமுஞ் சிறிது வல்லேங் கேளெனக் கிளத்திப் பின்னர்.

இ-ள். வேதங் கைவந்த மகரிஷியான விசுவாமித்திர ரிருக்கிற மேம் பாடான சார்பிலே கூடி நின்றும் உமமுடைய பாதங்களையே வணங்கி உம் மைப் பார்க்கவேண்டின ஆசையினாலே பதற்றத்துடன வந்தோம்: ஞானமும் அதற்கேற்ற அனுஷ்டானமுமில்லாத இழிவான சாதியே யாஙகள் ஆனாலும், நல்ல வீணை பாடுதலும், சங்கீதமும் கொஞசங் தெரிந்திருக்கிறோம கேளு மென்று சொல்லிப் பினபு எ-று. 22

மகரயாழ் வாங்கி நீஙகு மாடக முறுக்கிச செம்பொற
சிகரமா முலையிற் சேர்த்திச செவியுற விசைபெ பூரித்தந
நிகரிலா வமுதப் பாடற் பாணியி னிறுவிப பின்னா
பகர்தரு மிசைக ளேழுமவகைவகை பாடி னாரே.

இ-ள். மகர வீணையைக் கையிலேகொண்டு, தளர்ந்துள்ள முறுக்காணி களாலே தந்திகளை முறுக்கிப் பிரிவு செயது, செம்பொன மலைச் சிகரமபோ லுள்ள பெரிய ஸதனஙகளிலே அவவீணையைச் சாத்திககொணடு, காதுடனே கூடச் சுருதிகூட்டித தமது ஒப்பில்லாத அமிர்த ரசங்கொணட பாடலைக் கைவழியிலே தோன்ற நிறுததிப் பினபு சொலலலான ஏழிசைகளையுங் கிரமக் கிரமமாகப் பாடினாகள் எ-று.

ஏழிசைகளாவன:—குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் என்பன. இவற்றை ஏழுசுரமெனவுங் கூறுவா. இவற்றிஞைசை யுவமை முறையே மயில் - இடபம் - ஆடு - கொககு - குயில - குதிரை - யானை எனவும்; சுவையுவமை முறையே - பால - தேன - கிழான - நெய் - ஏலம் - வாழை - மாதுளங்கனி எனவும்; வாசனை யுவமை முறையே மௌவல் - முல்லை - கடம்பு - வஞ்சி - நெய்தல் - பொனனுவிரை - புன்னை எனவும்; அட்சரம் முறையே ஆஅ - ஈஇ - ஊஉ - ஏஎ - ஐஇ - ஓஒ - ஔஉ எனவும்; மாத்திரை

முறையே நான்கு - நான்கு - இரண்டு - மூன்று - நான்கு - மூன்று - இரண்டு எனவும்; இவற்றுக் கிறைவர் முறையே விசுவாமித்திரன் - ஜமதக்கினி - சந்திரன் - சூரியன் - கௌதமன் - காசிபன் - ஈசனெனவுங் கூறுவர். இன்னும் இதைப்பற்றிய ஏனைய வகுப்பும் விரிவும் மிடற்றோசையாய்ப் பாடுகையில் இவற்றின் பிறப்பிட முதலியனவும் இசைநூலிற் பார்க்க காண்க. 23

காவியங் கண்ணு மூடா கவரிதழ் தானுங் கோடா
வாவியங் கமல மன்ன வதனமு நுதலு மேறா
தூவியந் தோகை நல்லார் சுவரினமே லெழுதி வைத்த
ஓவியம் பாடிற் றென்னப் பாடினா ருருக யாரும்.

இ - ள். நீலோற்பலம்போ லழகான கண்கள் மூடுகிறதில்லை, இருபிளவாகத் தோன்றுகின்ற இதழ்களுந் தோணுகிறதில்லை குளத்திலே அலருவதான அழகையுடைய தாமரை மலர்போலு முகமும் நெற்றியும் ஏறுகிறதில்லையாக, இறகையுடைய அழகைக்கொண்ட மயில்போலும் அப்பெண்கள் சுவரிலே எழுதி யிருப்பதான சித்திரம் பாடுகிறதுபோ லசையாதிருந்து எல்லோருடைய மனமு முருகும்படிப் பாடினார்கள் எ - று. 24

கரும்பினைக் கடிந்த தீஞ்சொற் காரினைக் கடிந்த கூந்தற்
பரும்பணைக் கொங்கை மாதர் பவளவாய்ப் பிறக்குங் கானம்
வரும்பனி மதியை நோக்கிக் கிண்கிணி வாய்கொண் டார்ப்பின்
அரும்பவி ழாம்பற் போதுள் வண்டிருந் தார்ப்ப தென்ன.

இ - ள். கரும்பின் இரசத்தையும் வெல்லுவதான மதுரச் சொற்களும், மேகத்தை வெல்லுவதான கூந்தலும், மிகவும் பருத்துள்ள கொங்கைகளும் கொண்ட பெண்களுடைய பவளம்போன்ற வாயிலே பிறக்கின்ற இசைப் பாட்டானது உதயமாகி வருகின்ற குளிர்ந்த சந்திரனைக் கண்டு கிண்கிணி போல முகவிலாசமாய்ப் பின்பு அவ்வரும்புதல் முழுதும் விரிகிற செவ்வல்லிப் பூவிலிருந்து வண்டுகள் பாடுவதுபோற் பாடினார்கள் எ - று.

ஆர்ப்பின்-வண்டோசையினுமேல் அரும்பவிழெனக. 25

இல்லையோ விமைத்த லென்பா ரெடாதுகை தொடாது வைத்த
வில்லையோ புருவ மாக விதித்தனன் வேதா வென்பார்
முல்லையோ முருந்தோ முத்தோ முறுவலை யறியோ மென்பார்
நல்லையே நல்லை யென்று நராதிபர் வியந்து ரைத்தார்.

இ - ள். அப்போது கண்ட அரசர்களெல்லாம் இப்பெண்களுக்குக் கண்கள் இமைக்கிறதில்லையோ வென்பார்கள். ஒருவ ரெடாமலும் தொடாமலும் இருப்பதான வில்லைத்தானோ பிரமதேவன் புருவமாகச் செய்திருக்கிறான் என்பார்கள், இவ்விருவருடைய பல் வரிசைகள் முல்லை யரும்புகளோ! முருந்துகளோ! முத்துகளோ யாதொன்றும் சொல்லத் தெரியிலோ மென்பார்கள். அடி பெண்களே! நீங்கள் நன்றாய்ப் பாடுகிறீர்கள்! நீங்கள் நன்றாய்ப் பாடுகிறீர்கள்!! என்று அரசர்களெல்லாம் அதிசயித்துச் சொன்னார்கள் எ - று. 26

அட்டமா வணைத்தும் புள்ளு மாவிபெற் றேகு மென்பார்
சுட்டநீள் வனங்க ளெல்லாஞ் சோலையாத் தழைக்கு மெனபார்
பட்டவாள் வீர ரெல்லா முய்வகை பலிப்ப தென்பார்
வட்டமா மதிய மன்ன வதனத்தார் பாடல கேட்டே.

இ - ள். வட்டமான பெரிய பூரணச்சந்திரனைபோலு முகத்தையுடைய அப்பெண்கள் பாடுகிற பாட்டைக் கேட்டு, இனி நமமாலே கொல்லப்பட்ட எல்லா மிருகங்களும், எல்லாப் பட்சிகளும் உயிருண்டாயப் போகுமென்பார்கள். நமமாலே சுடபபட்ட நீணட காடுகளெல்லாம சோலையாகத் தழைக்குமென்பார்கள். நமது கூட்டத்திலே இறந்துபோன வாள்வீரர்களெல்லாரும பிழைக்குமபடி பலிதமாயிற றெனபார்கள எ - று. 27

நாடெலா மழிக்கக் கேட்டு நரபதி வெகுண்டு வேட்டை
யாடலால் வெருண்டு போய்த்தம மாருயி ரோமபித் துன்றுங்
காடெலாங கரநத மாககள் கனனியா மதுர கீதப்
பாடலால் வெளிப்பட் டுற்ற பறவையும பறநத வமமா.

இ - ள். அப்போது நாடுமுழுதும அழிக்கிறது தெரிந்து அரிச்சந்திர மகாராஜன கோபித்து வேட்டையாடுதலினாலே பயந்தோடிப்போய்த் தங்கள் அருமையான உயிர்களைக் காததுக்கொணடு, நெருங்கின காடுகள முழுதும்போய் மறைந்த மிருகங்களெல்லாம இந்தப் பெண்கள் பாடுகிற மதுர கீதங்களாலே வெளிப்படுதலாகிச் சஞ்சரிககலாயின. மறறப் பட்சிசாதிகளும் வெளிபபட்டுப் பறந்து திரிதலாயின எ - று. 28

மஞசலம் பிடியே றென்ன மாமுர சதிரு மோதைக்
கஞசலா லனநதங கோடி யசுணமா வணைநது மாவி
துஞசலா தீண்டி மொய்ககத் துமபுரு முதலோ ரெலலாம
இனசொலி ருைசை யெய்த யாழிசை யாதெனன் றோவார.

இ - ள். மேகஙகள் முழஙகுவதான இடிபோறபோல பெரிய முரசங்களொலிககின்ற ஓசைககு அஞசுதலாலே அனந்தஙகோடி அசுணப்பட்சிகளெல்லாம உயிரமாய்கிற திலலாமல் கூடி நெருஙக, தமபுரு முதலானவர்களெலலாம் இனிய சொல்லினையுடைய இவவிருவர் பாட்டோசை கேட்டு இந்த வீணாகானம் ஏதெனறு ஆலோசிககலானாகள எ - று. 29

நல்லியன் மகர யாழி னுதமு மிடறு மொன்றப
புல்லிய கீத வோதை செவிவழி புகுத லோடும
வல்லியர் தமமை நோககி மலாததிருக கரமமைதது
மெல்லிய ருனும வெற்றி வேநதனு மிகம கிழ்நதார்.

இ - ள். நல்ல இசைநூலிலககணததிற சிறந்த மகாவீணையின் நாதமும் கண்டதொனியும ஒன்றாகக கூடின பாட்டோசை காதுககுள்ளே நுழைந்த

வுடனே, சந்திரவதியும் வெற்றிகொண்டிருக்கிற அரிச்சந்திர மகாராஜனும் அந்தப் பெண்களைப் பார்த்துத் தாமரை மலர்போலுந் திருக்கைகளாலே யமையச் செய்து அதிகமாகச் சந்தோஷித்தார்கள் எ - று. 30

மணியொடு கடகஞ் செம்பொன் வளையெரி மணிப்பொன் னாரம்
அணிதுகில் பிறவு நீட்டிக் கொண்மென வளித்த லோடும
பணிகளுந துகிலும பொன்னும் பெறறகியாம படர்நதே மல்லேம்
திணிசுடர் முடியா யாஙக டேடிய பரிசில கேளாய்.

இ - ள். இரத்தினங்கள் பதித்தலுடனே கூடின கங்கணங்களும், செம்பொனாற் செய்த வளையல்களும், நெருப்புப்போனற இரததினமாலைகளும, பொன் மாலைகளும், மற்றுமுள்ள ஆபரணங்களும, உடுத்துகிற வஸ்திரங்களும் மற்றுங் கொடுக்கத்தக்கவைகளெல்லாங் கொடுத்துப் பெறறுககொள்ளுங்களென்று சொல்லுமளவில், ஆபரணஙகளும வஸ்திரங்களும திரவியங்களும் பெறுதறகு நாஙகள் வநதோமல்லோம; நெருங்கின ஒளியைககொணட கிரீடாதிபதியே! நாங்கள வேண்டிவந்த வெகுமானத்தை நீர கேட்கவேணும அதாவது எ - று. 31

ஏத்திய பரிசி லாளர்க் கெண்ணிய வணைதது நல்கும
பார்த்திவ விவைபெ லாநின் றிருவுளப் படியா லுள்ளேம
மூர்த்திகண் மூவர்க் காகு முடிபுனை யநநா ளேநீ
சாத்திய தவளக் கொற்றக் கவிகையைத தருதி யென்றார்.

இ - ள். தேவரீரைத் துதிதத அரசர்களுக்கு அவர்கள் நினைத்தனவெல்லாந் தரத்தக்க அரசனே! இப்போது, கொடுக்கிற இவைகளெல்லாம உம்முடைய திருவுளத்தின சமமதியாலே தருவதாதலால, அவைகள் வேண்டோம; மும்மூர்த்திகளுக்குஞ் சந்தோஷமாகுமபடி நீர வெற்றிமுடி சூடிக்கொள்ளுகினற அப்போதே பிடிததுககொளவதான வெணகொறறக குடையைக் கொடுக்கவேணடு மெனறார்கள் எ - று. 32

பழிவழி யொழுகா நீதிப் பானுவின் குலதது வேநதா
வழிவழி வந்த கொற்றக் கவிகையை வழஙக மாட்டேன்
விழிவழி கண்டவேறு கவிகையை விளமபி லுஙகள
மொழிவழி தருவே னெனறு மொழிநதனன மன்னா கோமான்.

இ - ள. பழிப்பான மார்க்கததிலே செல்லாத நீதியையுடைய சூரிய குலததரசர்கள் தலைமுறை தலைமுறையாகப் பிடிததுவருகிற வெறறிககுடையை நானை கொடுககமாட்டேன. உங்கள் கண்ணுககு நேராக இஙகே தோறறுகினற ஏதேனு மொனறைக் கேட்டால், உஙகள் சொல்லினபடியே தாமாட்டுவேனென்று அவவரசர்ககரசன கூறினன எ - று. 33

கனத்தவெங் காத லார்க்குக் கனிததவ ரால லாதவ்
வினத்தவ ரொருவ ராலே யினபமுண் டாக வற்றோ

மனத்துளே குறித்து வநத மணிக்குடை வழஙகா யேலெந்
தனத தினைத தழுவி யின்பாந தருதியென் றவாகள் சொன்னார்.

இ - ள். மிகுதியான வெப்பததைச் செய்கினற ஆசைகொண்டவர் களுககு அவாகள் நினைதத புருஷர்களாலல்லது அவர்களை யொப்பான மறறொரு வராலே சுகமுண்டாகவல்லதோ? நாங்கள் மனததிலே எண்ணிவந்த முததுக குடையை நீா கொடாவிட்டால், எஙகளுடைய கொங்கைகளை யணைதது எங களுககுச் சுகததைக கொடுமெனறு அவவிருவருஞ சொனனாாகள எ - று. 34

வாடபொரு கண்ணா கூற மநதிரத தலைவன் சொலவான்
வேட்பன வில்லை யெனனு மெய்ந்நெறி வேநதன் றனபாற
கேட்பன வறிநது மககுக கிடைப்பன வுணர்நது கேளீா
சேடபட நில்லு மென்னத தெரிவையா செப்ப லுற்றா.

இ - ள. அப்படி வாளையொதத கண்களையுடைய பெண்கள சொல்ல ஆலோசனையிற் சிறந்தவனன சததியகீா்த்தி சொலலுகிறான: ஆசைப்பட்ட பொருளை இல்லையெனனுமற் சொடுககததகக மெய்யான நீதிமாாககததை யுடைய அரசனிடததிலே, கேட்கததககவைகளைத் தெரிந்து கேட்டால, உஙகளுககுக கிடைக்கததககவைகளைத தெரிந்து கேளுங்கள் (நீங்கள் சண்டாளி களாகையாலே) தூரமாக நிலலுஙகளென்று சொல்ல, அதறகு அப்பெண்கள சொலலுகிறாாகள எ - று 35

முனபியாங கருதி வநத முழுமணிக குடையு நல்காய்
பின்பியாங குறிதத வினபப பெருமபயன றானுந தாராய்
அனபியா முனமேல வைதத தவததிலே போன தநதோ
வனபியா முனபாற கணடோம வளளனமை கண்டி லேமால்.

இ - ள முனனே நாங்க ளெண்ணிவநத முழுதும் முததுகளாலாகிய குடையையும நீா கொடுககிறதிலலை; பினபு நாஙகள் வேணடின இனபமாகிய பெரியபயனையும நீா கொடுககிறதிலலை; ஆதலால, நாஙக ளுமமிடததிலே கொணட அனபானது வீணாகிப்போயிறறு; ஐயோ! உம்மிடததிலே கடின சித்ததததைக கணடோமே யல்லது, கொடுககுந தனமையை நாஙக ளெவ வளவுங் காணகிலோம; இதறகென செயவோம் எனறாாகள எ - று. 36

கொடுப்பன கொடுப்ப தல்லாற கொடாதன கொடுக்க மாட்டார்
விடுப்பன விடுபப ரென்றும விடாதன விடவு மாடடாா
தொடுபபன தொடுதது நுமமாற் சொல்வன சொல்லி நுங்கட்
கடுப்பன கொண்மி னலலா லகன்மினென் றமைச்சன் சொனனான்.

இ - ள். சூரியகுலததரசர்கள் கொடுககததககவைகளைக் கொடுககிறதே யல்லது, கொடுககததகாதவைகளைக் கொடுக்கமாட்டார்கள். எககாலததும விடத தககவைகளை விடுவர், விடததகாதவைகளை விடமாட்டார்கள். ஆதலால், நீங்கள் ஆலோசிகக வேணடியபடி ஆலோசிதது உஙகளாலே கேட்கததககவைகளைக

கேட்டு உங்களுக்குத் தக்கபடியே பெற்றுக்கொள்ளுங்கள். அல்லாவிட்டால் போங்களென்று மந்திரி அதற குத்தரஞ் சொன்னன எ - று. 37

வள்ளலென் றடைந்தோ முன்பால வநதிரந தோாகமொன் றீயாக்
கள்ளனென் றறிநதா விஙகு வருகலங கண்டா யென்றுா
உள்ளமுங் கண்ணுஞ் செநதீ யுருதவெழச சினதது வேநதன்
தள்ளுமென் றருளிர செய்தான விளைவது தன்னை யோரான்.

இ - ள நீர கொடுக்கும் பிரபுவெனறெண்ணி வந்தோம; உமயிடத்திலே வந்து யாசகஞ் செய்வோாகளுககு ஏதும கொடாத வஞ்சகனென்று நாங்கள் முன்னே தானே தெரிந்திருப்போமானால இங்கே வரமாட்டோம் என்று சொன்னார்கள். அதறகு மனமும கணகளும சிவநத நெருப்புக கொதிததுத தோனறக கோபங்கொணட அரசனானவன, இவவிருவரையுந் தளளிவிடுஙக ளென றுத்தரவுபணணினன. இனி நடககபபோகிறது தெரியாதவனாகி எ - று.

பார்ததிவ னுரைபபக கேடடுப பபபரா நெருஙகிச சீறித
தீததிரள செஙகட சிநத நாககுவான செலல வேஙகிக
காததிர நடுஙகக கையுங காலகளுந நடுஙக மாாபிற
சேர்ததிய யாழும போகட டிரிநதனா திசைம யஙகி.

இ - ள். அபபடி அரசன உததரவுபணணவே, பபபரனெனகிற ஒா வனவீரர்கள கேட்டு நெருஙகிவநது கோபிதது, நெருபபுபபொறிகள சிவந்த கண்களினின்று சிநத, அவவிருவரையும தள்ளிவிடுவதறகு வருகிறதைக கணடு, பயங்கொணடுழுது உடமபெல்லாம நடுங்கவும, கைகளுங கால்களு நடுஙகவும், மார்பிலே அணைந்திருந்த வீணையையும அஙகேதானே கிடககவிட்டுத திககுத தெரியாம லோடிபபோனாாகள எ - று. 39

ஆறுகொண் டோடா செலலா வடவியிற சென்று மேனி
மாறுகொண டுதிரஞ் சிநத மஞசிளைப பழிதத கூநதல
தூறுகொண டீாககச சோாநத துகிலகிழிந தகலச சாப
வீறுகொண் டேவி விடட முனிவனமுன வீழ்நதாா வநது.

இ - ள் வழிநோககிச செலலாதவர்களாய், ஒருவரும போகாத காட்டுவழியிலே போய், உடமபெலலாம முட்கள கிழிதது இரததஙக ளொழுகவும், மேகத தைப் பழிபபதான கூநதலை மரததூறுகள-செடிததூறுகள பறறியிழுககவும், உடுததின வஸதிரமுங கிழிநதுபோகவும, சாபானுககிரக பெருமையைக கொண்டு தஙகளை யனுப்பிவிட்ட விசுவாமிததிர முனிவருககு முனனே வநது வீழ்ந்தார்கள் எ - று. 40

மேற்படி வேறு

மண்டலந தனிலிழுப புண்டசெந துகிலகளு மாற டிதத
புண்டனிற பொழிபசுங குருதியுந துவரிதழப பொரும லுநதான்

கண்டனன் கௌசிகன் கடையுகக் கனலெனக் கடிய கோபம்
கொண்டனன் வந்தவா றேதெனக் கோதைமார் கூற லுற்றார்.

இ - ள். விசுவாமித்திரர் பூமியிலே இழுபடுகின்ற சிவந்த வஸ்திரங்களையும், மார்பிலே காயமான புண்ணினின்று சிந்துகின்ற பசிய இரத்தங்களையும், சிவந்த இதழ்கள் பொருமுதலையும் தாமே தமமுடைய கண்களாலே கண்டார்; அப்படிக் கண்டவுடனே, யுகமுடிவிலே தோன்றுகின்ற நெருப்பைப் போல கடுமையான கோபங்கொண்டார்; நீங்களிப்படி வந்ததற்குக் காரணமென்னவென்று கேட்க, சொல்லத் தொடங்கினார்கள் எ - று. 41

ஐயகே ளுன்னருட் படியினு லரசன்மாட் டணுகி நின்றே
பையவே யிசைகளும் பாடிநீ சொன்னவப் பரிசு ரைத்தோம்
கையனெங் களையடித் துமரெனச் செய்தவக் கண்ட னத்தால்
உய்யவும் போகுமோ வுரையுமுண் டோவெமக் குயிரு முண்டோ.

இ - ள். ஐயனே! கேளும்; உமமுடைய உத்திரவின்படியே, அரசனிடத்திற் போய்க் கிட்டிநின்று மெள்ள ஏழுவித இசைகளையும் பாடி, நீர் கேட்கச் சொன்ன அப்படியே கேட்டோம், அதற்கு அந்த வஞ்சகன் எங்களை உமதடியாரென்று அடித்து, அவன் பண்ணின தண்டனைக்குத் தப்பிப் பிழைக்கவுங் கூடுமோ? சொல்லத்தான் சொல்லுண்டா, எங்களுக்கு உயிர்தானுண்டா எ - று. 42

எனவுரைத் திடவெயர்த் திடியிடித் தெனநகைத் திருக ணும்
கனலெறித் திருபுடைக் கடமனைத் தும்புகை கடிது மூடச்
சினமிகுத் திறைவனுக் கிடாவினைத் திடுவதே செயலெ னத்தன்
மனநினைத் தருமறைத் தவமுனித் திரளுடன் வரந டந்தான்.

இ - ள். என்று சொல்லவே, உடம்பெல்லாம் வேர்வைகொண்டு, இடி முழங்குகிறாற்போற் சிரித்து, இரண்டு கண்களிலும் நெருப்புச் சிதறுதலாய், இருபுறத்திலுமுள்ள காடெல்லாம் புகை நெருங்கி மண்டக் கோபமதிகமாக இனி அரசனுக்குத் துன்பத்தைச் செய்கிறதே செய்யத்தக்க காரியமென்று தன் மனதிலே ஆலோசித்துக்கொண்டு, அருமையான வைதிகர்களான தவமுனிக் கூட்டங்களைக் கூட வர நடந்தார் எ - று. 43

கரதலத் திடுமெழிற் குசைவிதிர்ப் புறவிணைக் கழலவ ருந்தப்
பரவுபொற் றடமலர்ச் சடைவிரித் தகலபெரும் படியி னுலைச்
சுரர்மிகப் பரதவித் தபயமிட் டலறிடச் சுவண வெற்பாற்
புரமெரித் திடவரும் புனிதனெனத் தனிமலர்ப் பொய்கை புக்கான்.

இ - ள். கையிலேகொண்ட அழகிதான தருப்பைப் புல்லும் படபடவென்று நடுங்கவும், இரண்டு கால்கள் வருந்தவும், பரவுதலாய்ப் பொன்னிறமான நீண்டமலரணிந்த சடைகளை விரித்துக்கொண்டு போகிற பெரிதான உருவத்தைக் கண்டதனாலே, அந்தத் தேவர்கள் மிகவும் பரிதபித்து அபயஞ் சொல்லிக்

கூக்குரலிடவும், பொன் மலையினாலே திரிபுரத்தை எரிக்க வருகிற பரமசிவனை ஒப்பாகி அவ்வழகிதான பூம்பொய்கைக் கரைக்கு வந்தார் எ - று. 44

பிணிமுகத் திரள்களுங் குருகினப் பகுதியும் பிரிவுற்றுத்
அணிமலர்க் குளிர்தடத் தருகினைத் தொடர்ந்து தனுக்கலோடும்
பணிமுடிச் சுமைதவிர்த் திருபுயத் திணின்மிசைப் படித்தரித்த
மணிமுடிக் குரிசிலக் கொடுவினைக் கௌசிகன் வரவு கண்டான்.

இ - ள். மயிற்கூட்டங்களும், பட்சிசாதிகளின் கூட்டங்களும் நீங்காதிருக்கின்ற அழகிய மலர்கள் பூத்திருக்கின்ற குளிர்ந்த தடாகத்தினருகே (முனிவர்) அதிக கோபத்தோடு நடந்துவந்தவுடனே, அந்நீசனுடைய தலைச்சுமையை நீக்கித் தன்னுடைய இரண்டு தோள்களின்மேலும் பூமிபாரத்தைக் கொண்டுள்ள ரத்தினகிரீடத்தையுடைய அரிச்சந்திர மன்னனானவன், அந்தக்கொடிய செய்கையையுடைய விசுவாமித்திரர் வருவதைக் கண்டான் எ - று. 45

கடல்களென் படுநெடுந் திசைகளென் படுமகன் ககன மென்னும்
உடலகளென் படுமவற் றுயிர்களென் படுமிடந் துலக மென்னும்
விடலருந் தவமுடைப் பெருவலிக் கௌசிகன் வெகுளி யாலென்
றடநெடுஞ் சிலையவன் கடிதெழுந் தெதிர்நடந் தடிப ணிந்தான்.

இ - ள். விடுதலில்லாத தவத்தையுடைய பெரிதான சாமர்த்தியத்தைக் கொண்ட விசுவாமித்திரர் கோபத்தினால் கடல்கள் என்ன பாடுபடுமோ? நீண்ட திக்குகளென்ன பாடுபடுமோ? அகன்ற ஆகாயம் என்ன பாடுபடுமோ? இவைகளுக்குள்ளான சரீரங்களெல்லாமென்ன பாடுபடுமோ? அந்தச் சரீரங்களுக்குள்ளான உயிர்களென்ன பாடுபடுமோ? இடிவந்தாலுலகந்தானென்ன பாடுபடுமோ? என்று வெற்றிகொண்ட நீண்ட வில்லையுடைய அரிச்சந்திரமகாராஜன் விரைவிலே எழுந்துபோய், எதிர்கொண்டு நடந்து அவர் பாதங்களை வணங்கினான் எ - று.

உருமிடித் தனவெனச் சினமிகுத் திகல்செயற் குறுவ தற்குக்
கருமிடற் றவனலேன் கடணிறத் தவனலேன் கமல னலேன்
கிருமியிற் கடையனு மெளியனேன் வலனெனக் கெழுமை யன்புற்
றிருமலர்க் கழல்களைக் கரமுறத் தழீஇநிலத் திடைகி டந்தான்.

இ - ள். தேவரீர் இடியிடித்தாற்போல கோபமிகுதியாய (என்னுடன்) சண்டை செய்வதற்காக வருவதற்கு நீலகண்டனான சிவனு நானல்லேன்; கருங்கடல் மேகவண்ணனான விஷ்ணுவு நானல்லேன், பிரமதேவனு நானல்லேன்; ஒரு புழுவிலுங் கடைப்பட்டவனான எளியனாகிய நானோ உம்மோடெதிர்க்கச் சமர்த்தனென்று சொல்லிக்கொண்டு சமீபத்திலே போய் அவருடைய இரண்டு மலர்போலும் பாதங்களைத் தனதிரண்டு கைகளிலும் பொருந்தப் பற்றி பூமியிலே வணங்கிக்கொண்டு கிடந்தான் எ - று. 47

காமுறத் தழுவலுங் கௌசிகப் பெயரினன் கால்ப றித்தே
சிரமிசைத் திருமுடிச் சுடாமணித் தொகைகளாபம் றிசைதெ றிக்க

உரமிசைப் பணிதெறித திடவுதைதத தனதுதைத் திடலு முன்றன்
மருமலர்க் கழல்சிவப புறுமெனக கைகளால் வருட லுற்றான்.

இ - ள். தனது கைகளிரண்டும் பொருந்தப் பற்றிககொண்டு கிடக்குமளவில், விசுவாமித்திரரானவர் தமமுடைய கால்களை உதறிப் பிடுங்கிக் கொண்டு, அவரது தலைமேலணிந்த திருமுடியான கிரீடத்தில் விளங்குகின்ற இரததினக கூட்டஙகள பல திகருகளிலுந் தெறிததுவிழவும், மார்பினமேலணிந்திருககிற ஆபரணங்கள தெறிததுவிழவும உதைததார். அவரப் படியுதைததபோது, அரிச்சந்திரமகாராஜன நீரிப்படி உதைககிறதினாலே உம்முடைய மணங்கொணட மலாபோலும பாதஙகள் சிவந்துபோமே யென்று கூறித தன கைகளாலே தடவிப் பிடிததான எ - று. 48

குடியினிற் பிழையிழைத திலமுனக கடிமையிற் குறையு மில்லேம்
இடியிடித் தனவெனச சினமிகுந் திடைவிடா தெனையு தைததத
அடிவடுப் படுமெனக கவலுகிற பதையொழிந தைய வென்றன்
முடிவடுப் படுமெனக கவலகிலேன் வெகுளியெனமொழி தியென்றான்.

இ - ள். உமககுககுடியாய் கிறதலிலே யாங்கள் யாதொரு தவறுஞ் செய்திலோம; உமககடிமையா பிருததலிலும யாதொரு குறைவுமில்லா திருககிறோம்; இடியிடிததாறபோற் கோபமிகுதியாய் இவவிடததி லககோபத்தை விடாமல், என்னை யுதைததருளிய உம்முடைய திருவடிகளுக்குக் காயமுணடாகுமென்று துனபப்படுகிறதேயல்லாமல், சுவாமி! எனனுடைய தலையிலே காயமுண்டாகுமென்று துனபப்படுகின்றிலேன. ஆதலால, தேவரீர் இப்படிக கோபங்கொளளுகிறதினாலே யாது பயனுணடாம் சொலலுமென்று சொனனான எ - று. 49

மாவினைத துணிசெய்தாய் கேழலுக கிடாசெய்தாய் வான ளாவுங்
காவினைப பொடிசெய்தாய நீதியா லினறவென காதன மககள
பாவினைப பழிசெயதாய் தீவினைக குரியதோா பாவி நீதான
ஆவினற றேலபொதிந தடபுலித தொழிலசெய்தா யழகி தென்றான்.

இ - ள். அதறகு விசுவாமித்திரர் நான அனுப்பின மிருகஙகளையெல்லாங் கொனறாய்; பனறிககுத துனபமுணடாககினாய, ஆகாயததை அளாவுவதான இந்தச் சோலையையும தூளிசெயதாய, முறையுடனே நான பெறற பிரியமான எனது பெணகள் பாடிய பாட்டுகளையு மிகழநதாய்; ஆகையால், பாவச்செயகைககே தகுதியான நீ பசுவினது நலல தோலை மேலே மூடிக கொணடு கொலலுகினற புலியினது செய்கையைச செயதாய், உன செயகைகள் நனறாயிருநதனவெனறு கூறினா எ - று 50

நாடழித திடு னுநன னகரழித திடு னுமென னறும லர்பபூங
காடழித திடினுநீள காலறக கிளையினைக களையி னுஙகொன
றீடழித திடினுநீ தானவிடுத தனையெனு யான றிநதால்
பாடிழைத திடுவனோ வெனறரிச சநதிரன பலமொ ழிநதான்,

இ - ள். அதற்கு அரிச்சந்திரமகாராஜன், சுவாமி! என்னுடைய நாட்டை யெல்லாம் அழித்தாலும், நல்ல நகரை அழித்தாலும், என்னுடைய நல்ல பரிமளமுள்ள பூஞ்சோலைகளை யெல்லா மழித்தாலும், என்னுடைய கொடிதான வமிசமற்றுப்போக உறவினரை யெல்லாங் களைதலசெய்தாலும், இன்னமுங் கொன்று என் பெருமைகளை யெல்லாம் அழித்தாலும் நீர் அனுப்பினீரென்று நான் தெரிந்திருப்பேனேயானால் இப்படியாகச் செய்வேனோவென்று பல வகையுஞ் சொன்னான் எ - று. 51

சிறியரா னவர்தமக் குரியவே யலலவோ தீமை நன்னூ
லறிஞரா னவர்தமக் கல்லவோ பொறைபிறாக் காகு மோதான்
நெறியிலா வினையினே னொருவனைப பொருளதா நீமு னிநதால் [ன்.
பொறையுநின் னருளுமென் னளவிலோவில வெனபபோன தென்று

இ - ள். பின்னும தீமையான காரியங்களைச் செய்வது சிறியரானோர்க் குத் தகுதியானவை யல்லவோ; நலல சாஸ்திரஙக ளறிந்தவர்களுககல்லவோ அவ்வகைத தீமைகளைப் பொறுததுககொள்வ தியல்பாகும்; இவவிருவகையும், அவவிருவகையாரைத்தவிர வேறே யாரிடததி லுண்டாகும்? இப்படிகிருக்க, நீதிநெறியறியாத பாவியான ஒரு புல்லியனாகிய எனனை ஒருபொருளாகக் கொண்டு நீர் கோபிப்பீரானால், பொறுமையும உமமிடததுள்ள இரக்கமும் எனவிஷயததிலேயோ இல்லனவாகப் போகலாயினவென்று அரிச்சந்திரன் சொன்னான் எ - று. 52

மடித்தவா யினன்மிகக் கொதிததநெஞ சினனெதிர் மறுதது நீதான்
படிததவா சகமெலா மெனக்குநீ பிதற்றிடற் பால வோதான்
வடித்தவே ழிசைநினக கிசைக்கவே வநதவென மகக டமமை
அடித்தகா ரணமெலா மெனக்குநீ தக்கவா றறைதி யென்றான்.

இ - ள். அதறகு, மடிதத வாயையும, மிகவுங் கொதிக்கினற நெஞ் சையுமுடையவராகிய விசுவாமிததிரா, எனககு முனனே என சொல்லைத் தடுத்து நீ முனனே கற்றவாாதனதைச சமாததுகளெலலாம எனககுத தெரிவ தாகப் பலவகையாய்ச் சொலலததககனவோ? அவைகளிருகக, தெளிந்துணர்ந்த ஏழிசைகளும் உனககு முனனே பாடுவதற்காகவந்த என பெணமககளிரு வரையும அடிததுத துரததுதறகுண்டான காரணஙகளையெல்லாம எனக்குத் தெரிவதாக நீ தகுந்தபடி உளளதைச் சொல்லெனறு கேட்டார எ - று. 53

### கலி விருத்தம்

மீண்டு மன்னவன் வேதியன் றாள்கரம
பூண்டு வாயிற புனல்வறந தறறிட
ஆண்ட நாயக விமமுனி வாறறிடல
வேண்டும யானது விண்ணபபஞ் செய்வனல்.

இ - ள். மறுபடியும், அரிச்சந்திரமகாராஜன் அந்த விசுவாமித்திருடைய பாதங்களைக் கைகளாற பிடித்துககொணடு வாயிலே நீர்வற்றிக் காய்ந்துபோக

என்னை யடிமையாகக்கொண்ட சுவாமி! இந்தக் கோபத்தைத் தணிவுசெய்ய வேண்டும்; நான் அந்தச் செய்கைகளை உள்ளபடி தேவரீர் சந்நிதியிலே தெரிவித்துக்கொள்ளுகிறேன் எ - று. 54

இகக ருங்குழ லேழையர் தம்மைநின்
மக்க ளெனபது ணாநதில மாதவ
தக்க வாறுரை யாமையிற் றள்ளினேம
புகக தீது பொறுததரு ணீயென்றான்.

இ - ள். இந்தக் கறுதத கூந்தலையுடைய பெணகளை உம்முடைய பெண்களெனறு நாஙகளெவவளவுந் தெரிந்திலோம. ஓ மகாமுனிவரே! அந்தப் பெண்களுந் தகுந்த வார்ததைகள சொலலாமையினாலே தள்ளிவிட்டோம. இதுவே நடந்தசெய்கை. இந்தக் குற்றததைத தேவரீர் பொறுததருள வேணுமென்று அரசன சொன்னான எ - று. 55

கழுதத ரிநதிது கைபிழை வநதெதன்
றழுதத மாக வுரைததனை யாதலால
பழுதத நலலறி வுறறுனைப் பற்றிய
ஒழுக்க மெனறுள முட்கிடக் கூறினாய்.

இ - ள். கழுத்தை அறுத்துவிட்டு (ஏனெனறுகேட்டால்) நான கை தவறுதலாகச் செய்தேனெனபதுபோல, திடமாகவே அஞ்சாமற சொல்லுகிறாய். ஆகையால், முதிர்ந்த நலல ஞானத்தையுடையராய் உன்னை ஆதாவாக அவவிருவருங்கொணட சீலததை யிகழ்ந்து அவவிருவர் மனமும அஞ்சுமபடிப் பேசினாய் எ - று. 56

இரபப வர்கனொன் றிலையெனில யாரையும்
கரபப வாககுறு கட்டுரை கூறுவா
புரபப வாக்குப பொறுததலல லாலடித
துரபப லுநதகு மோவென றுருததனன.

இ - ள. இதஞ்சொலலி யாசகஞ் செய்பவர்களுககு ஒனறுங் கொடுப்பதில்லையெனறு சொனனால, யாவருககும் இயலவது காததலாகிய செய்கையுள்ளபேருககுத தகுந்த சொறகளை யாருஞ்சொல்வாரகளேயல்லாமல் சொல்லாதுவிடார்கள். அப்படி யுணடாகுமானால, உலகததை ஆணடு இரட்சிக்க வலலவரான அரசாகள பொறுததுககொளள வேணடுமேயலலாமல் அடித்து அதட்டித துரததுகிறது தகுவதாகுமோ எனறு பினனுங கோபஙகொணடார். எ - ற. 57

கட்ட கில்லென நினறவக் களவாபாற
கெட்ட வான்பொருள காட்டக்கி லேசியா
விட்ட மூசசுடன் விமமலி னாலலை
பட்டு ளாரிற் பையபபை யககூறினான்,

இ - ள். எங்களந்தப் பொருளை மண்ணைத்தோண்டி யெடுத்துக்கொண்டு போனதில்லையென்று சாதிக்கிற அந்தத் திருடரிடத்திலேதானே அவர்கள் மடியிலே யுள்ளதாக முன்னே அவர்கள் திருடிப்போனதினாலே குறைந்து செலவழிந்து மிஞ்சினபொருளை அரசன முன்னே தலையாரி காட்ட, அதற்கு மிகவும் திகைத்து விடுகிற பெருமூச்சுடனே விமமுதலோடுகூடி அலைச்சற் பட்டுப் பேசுகிறவர்களைப்போல. அரிச்சந்திரன மிகவும் மெள்ள அவா கோபந தணிவாகச் சொல்லுகிறான எ - று.

இச்செய்யுள் கவிகூற்று. 58

மைகு லாவுகண் மாதரை மோதிய
கைகு றக்கினுங் கண்ணிணைச ஞுலினும
மெய்கு றக்கினும் வேண்டிய வாறுநீ
செய்க வென்ன மறைமுனி செப்புவான்.

இ - ள். அஞ்சனம விளங்குகின்ற கண்களையுடைய அந்தப் பெண்களை அடித்த கைகளை அறுத்தாலுஞ் சம்மதமே, கண்ணைத தோண்டினாலுஞ் சம்மதமே, உடமபெல்லாஞ் சேதிததாலுஞ் சமமதமே, உம்முடைய மனத துககு வேணடியபடி செய்துகொண டருள்கவென்று சொல்ல, அதற்கு வைதிகமுனிவரான விசுவாமிததிரர் சொல்லுகிறார் எ - று. 59

கொய்து மாக்களைக் கொன்றதும பன்றியை
எய்த துமமிசை கேட்டடித தீனமாய்
வைததும் மென்றன் மக்களை நீமணம
செய்தி டிற்பொறுப் பேனென்று செபபினான்.

இ - ள். மிருகஙகளையெல்லாம அறுததுககொனறதும, பனறியை அம்பா லெய்து தூரததினதும, இசைப் பாட்டுகளைக கேட்டு (அவாகளுககுப் பரிசு கொடாமல் அடிதது) இழிவாக அவாகளை உதாசினஞ் செய்ததும பொறுததுக் கொள்ளுகிறேன, எனபெணகளான அவவிருவரையும நீ விவாகஞ் செய்து கொணடாலெனறு கூறினா எ - று. 60

நிலததில் யாரு நெறியல செய்திடின்
விளககு நீயிவை யெனகண் விளமபலென்
புலைக்கு லததொடு மனனா பொருநதுதல
நலதத தோவெனறு நாயகன் கூறினன.

இ - ள். உலகததிலே யாரானாலும நீதிககு விரோதமானவைகளைச் செய் தால், அவைகளை விலககத்தகக தேவரீர் இநத அநீத வாாததைகளை எனனிடத் திலே சொல்லுகிறதறகு யாதுகாரணம்? நீசசாதியாருடனே அரசர்கள் கூடு கிறது நலல நீதியாகுமோ வெனறு அரிச்சந்திரமகாராஜன சொனனான் எ-று.

மலையின வைகும வசிட்டன் சபிததலாற
புலைய னானவன மைநதவிப பூவையர்

முலையில் வைகன் முறைமையன் றேவெனுக்
கலையு ணர்ந்த கௌசிகன் கூறினான்.

இ-ள். மலைகளிலே சஞ்சரித்தலுக்குரிய வசிஷ்டமுனி சபித்ததினாலே நீசனான திரிச்சங்குமகனே! இந்தப் பெண்கள் தனங்களிலே நீ கூடுகிறது உனக்கு நீதியல்லவோ என்று கலைஞானங்களெல்லாந் தெரிந்த விசுவாமித்திரர் சொன்னார் எ-று. 62

அற்றை ஞானநெறம தையன் வசிட்டனால்
பெற்ற சாபப பெரும்புலை தீர்த்தனை
இற்றை ஞானறிங் கெனைப்புலை யாக்கநீ
கற்ற தேதெனக் கால்கரம பூண்டனன்.

இ-ள். முன்னாளிலே, எங்களாசாரியராகிய வசிஷ்டராலே யுண்டாகிய சாபத்தாலான பெரிய நீச்சத்துவத்தை நீரே தீர்த்தருளினீர். இந்நாளிலே தேவரீரே என்னை நீசனாக்க யாது காரணத்தினாலே கற்கலானீர் சுவாமி! என்று அவர் பாதங்களைத் தன கைகளாலே பிடித்துக்கொண்டு அரிச்சந்திரன சொன்னான எ-று.

"அற்றை ஞானநெறம தையன வசிட்டனாற் பெற்ற சாபப் பெரும்புலை தீர்த்தனை" என்பது,

முன்னொருகால காசிராஜன புத்திரனாகிய விசுவாமித்திரர அருந்தவஞ் செய்திருக்கையில, பிரமன, அரசனது தவத்துக்கிரங்கி "நீ அரசமுனிவன" என்றோதினன. மீண்டுந் தவஞ்செய்திருக்கையில், அயோத்தி மன்னனாகிய திரிசங்கு தனதாசாரியராகிய வசிட்டரையடுத்து "யான உடலோடு சுவர்க்கம் புகவேண்டும" என, வசிட்டர "நீ என்னைவிட்டு வேறே ஆசாரியனை விரும்பிய தால நீசனாகுக" என, திரிசங்கு அவ்வாறே நீசனாகிப பலராலும் வெறுக்கப் பட்டு, தவஞ்செய்யும அரச முனிவனபாலணுகித் தன கருத்தை யியமப, காதிசேய "அவ்வாறே யாகுக" என்று தன தபோபலத்தால "மேலேறுக" எனலும, திரிசங்கு உயர்ந்துசெல்லத் தேவர்கள கண்டு "சீசீ புலையா! இங்கு வாராதே; இறங்கு" என, வீழ்வதுபோலவரும திரிசங்கு அபயங்கூற, கோசிகன "இந்திரன முதலிய தேவர்களும் உலகமும யான வேறே சிருட்டிப்பேன" என்று சில பொருள்களைப படைக்க, தேவர்கள பயந்து கோசிகனபால நண்ணி "நீ படைத்த பொருள்களும் அவ்வரசனும நட்சத்திர மண்டலத்தி லிருக்க" என்றோதிப்போயினர.

இதனைக் கூர்மபுராணம்

"சென்னிகீ ழாக வீழுந் திரிசங்கு வென்னும் வேந்தை
நின்னிலென றுரைத்து வானி னிறுவிவா சவனற னோடும்
இன்னுமோ ருலகஞ் செய்வே னெனவுடக் கணங்கள் விண்ணோ
பன்னருஞ் சராச ரங்கள சிறசில படைத்தா னன்றே.

படைத்தலும் விண்ணோ ரஞ்சக் கோசிகன் பால்வந் தெய்தி
அடைக்கரும் புலத்தோய் நீயிண் டமைத்தவை யமையு முனனக்
திடப்படப் படைதத யாவுந் தாரதிரி சங்கு வோடும்
உடதெரி யுலகின பாங்கா வதிகவென றுரைததுப் போனார்.''—

என்பதனால் விசுவாமித்திரமுனிவர் தமது தவவல்லமையால் திரிசங்கு புலைமைத்தனமை நீககி அவாகடுகன ஒரு உலகமும் பிறபொருள்களும் சிருட்டித்து இரட்சித்தவா, இனறு அத திரிசஙகு புதலவனாகிய தனனைப் புலைச்சியர்களைக் கூடுமேபடி வறபுறுததல் ஞாயமன றெனபார் "அறறைஞானறு * * * பூண்டனன்' எனறார். [விசுவாமித்திரர் தவஞ் செய்தற் கேற்பட்ட காரணததை (126-ம பககம) எழுதியுளளோம. ஆங்குக கண்டுணர்க. 63

முனன முநதை முழுப்புலை நீக்கினம்
இன்ன நீகக வெமககரி தன்றியாம்
சொனன வாசகங் கேட்டுச சுடாமுடி
மன்னர் மன்னவென் மக்களைச சேர்கென்றான்.

இ - ள. முனனே உன தகபபன முழுதும் புலையனானதைப் போககின எமககு இனனமும் அபபடி வருகிற புலைமையைப் போககுதல் அரிதல்ல. ஆகையால், நாம சொனன வாாததைப்படி கேட்டு விளஙகாநின்ற கிரீடாதிபதிகளான அரசர்களுக் கரசனே! என பெணகளை நீ கூடக்கடவை யென்று விசுவாமித்திரர் சொனனார் எ - று. 64

அடினு நின்விழி யாரழ லாலெனைச
சுடினு மெனனுட றன்னைத துறநதுயிா
விடினு மேனியை வெட்டி யரிநதுகூ
றிடினு மிசசொற் கிசைகிலன் யானென்றான.

இ - ள். அதறகு அரிசசந்திரன, நீா எனனைத தாழ்ச்சிசெய்தாலும், உம்முடைய கோபககணகளி லுணடான நெருப்பால எனனைச்சுட்டாலும், எனனுடைய உடமபைவிட்டு உயிாபோகிறதாகச் செய்தாலும, எனனுடமபை வெட்டி வெட்டிப் பறபல கூறுகள செய்தாலும இப்போது நீா சொசலலுகிற சொல்லுககு எவவளவும நான சமமதியேனெனறு சொனனான எ - று. 65

யூப வேளவிக கௌசிக னெய்விலாக
கோப மெய்திக கொடியிடை மஙகையா
தீப மன்னவாச சோகிலை யாயினென
சாப நீபெறு கெனறுரை சாறறினான.

இ - ள். தூணகள் நிறுததி யாகஙகள் செய்வதிலே வல்லவரான விசுவாமித்திரர் அந்தச சொல்லுககு மாறாத கோபஙகொண்டு என்னுடைய கொடிபோலும் இடையையுடைய பெணகளாகிய விளக்குப்போன்ற அவவிருவரையும் நீ சோாது போவையானால், எனனுடைய சாபததை நீ பெறககடவையென்று மறுமொழி சொனனார் எ - று. 66

கூற்ற முண்ணக் கொடுத்தெம தாருயிர்
தோற்ற னன்றுநன றென்று துணிநதுநின்
சீற்ற மாறிடச செபபிடுஞ சாபம்யான்
ஏற்ற னன்னிடு கென்ன வியமபினான்.

இ-ள். எமனுணபதாக எஙகளுடைய அரிய உயிரைக கொடுததுத தோல்வி யடைகிறது மிகவு நலலதுதானெனறு துணிவுகொணடு, ஐயா! உமது கோபந் தீர்வதாக நீா கொடுககிற சாபததை நானே ஏறறுக்கொள்ளுகிறேன; நீர் சாபமிடுமெனறு அரசன சொனனான எ-று. 67

அபபெருநதகை யனன துரைததிட
இபபெ ருநதகைக குமபொறைக குமமியாம
ஒபபெ டுததுரைக கததகு மோவெனச
செபப ருநதவன சிநதையி லெண்ணுவான்.

இ-ள். அந்த அரசன் அப்படிச சொலலுமளவில், இந்தப் பெரிதான குணங்களுககும பொறுமைககும் நான சமானஞகூட்டிச சொல்லததககது முணடோவெனறு சொலலுதற்கரிதான தவததையுடைய விசுவாமிததிரா மனதிலே ஆலோசிககலானா எ-று. 68

இரைதமெ ழுநதக ததைதயி றுததிடின
வரைதத டமபுய வாசவன முனனாயாம
உரைதத வாசகந தோறகுமென றுனனுபு
நிறைதத வேணி நெடுநதவன் கூறுவான.

இ-ள். சப்திதது நமககுணடான கோபத்தை அந்தச சமையததிலே நாம் அடககிவிடுவோமானால, மலைபோலும பெரிய தோளகளையுடைய இந்திரனுககு முனனே நாம சொனன வாாததை தோலவியடையுமெனறு நினைதது, வரிசை வரிசையாய நீணட சடைகளையுடைய நெடிதான தவமுனிவா சொலலுகிறாா எ-று. 69

துடிம ருஙகுலத தோகையா தஙகளைக
கடிம ணஞசெய றிநதென ற களவனே
குடிமை செய்யுங கொடுமபுலை யறகுநீ
அடிமை யாவை யறிதியென றோதினான்.

இ-ள. உடுக்கைபோனற இடையையுடைய அநதப பெண்களை விவாகஞ் செய்து கொள்ளுதல் குறறமெனறு சொலலுகிற திருடனே! இனி குடிததன மான இழிதொழிலைச் செய்கினற கொடியனான புலையனுககு நீ யடிமையாகக கடவை; இதனபினனே தெரிந்துகொள்ளக கடவாயெனறாா எ-று. 70

கொஞ்சிப் பேசுங குழலிசொற குறறததால்
வஞசித தன்னை யனமுலைப பாவினில

நஞ்சிட் டாலதை நாடிவி லக்குநன்
னெஞ்சத் தாருள ரோவிந்நி லத்திலே.

இ - ள். கொஞ்சிக்கொஞ்சிப் பேசுகின்ற மழலைப் பிள்ளையினுடைய சொற்குற்றத்தினாலே தாயானவள் வஞ்சனைசெய்து தனதழகான முலைப் பாலிலே நஞ்சு கலந்து கொடுத்தால், அதைத் தெரிந்து விலக்குகின்ற நல்ல நெஞ்சுள்ளவர்கள் அந்தத் தாயையல்லது வேறே சிலரும் உளராவரோ இந்த வுலகத்திலேயென்று பின்னும் எ - று. 71

வாரி காய்ந்து கொதித்திடின் மாற்றத்தண்
ணீரி யாவர் தருவர்நீ தியிற்
சீரி யாயெனை நீமிகச் சீறிடின்
யாரி யாரஞ்ச லென்பவ ரென்றனன்.

இ - ள். கடல் வெப்பங்கொண்டு கொதிப்புடையதானால், அந்த வெப்பத்தை யடக்கக் குளிர்ந்த நீர் எங்கிருந்து யார் கொண்டுவருவார்கள்? அந்த நீதித் தன்மைபோல, சிறந்த மகாமுனீந்திரரே! என்னை நீர் மிகவும் கோபித்துச் சாபங் கொடுக்கத் துணிந்தால், பயப்படாதேயென்று எனக்கு வேறு யாவர் சொல்ல வருவார் என்று பின்னும் எ - று. 72

தாயுந் தந்தையுந் தஞ்சமுந் தெய்வமும்
நீயுண் டென்று நினைந்திருந் தோமென்றுச்
சேயும் வேந்துந் திருவு மமைச்சனும்
போயுன் பாதம் புகலென்று பூண்டனர்.

இ - ள். தாயும், தகப்பனும், ஆதாரமும், தெய்வமும் ஆக (எல்லாம்) நீரே எங்களுக்குண்டாயிருக்கிறீரென்று நாங்க ளெண்ணி யிருந்தோமென்று பிள்ளையாகிய தேவதாசனும், அரசனும், சந்திரவதியும், மந்திரியும் அவருக்கே போய் உம்முடைய பாதமே எங்களுக்குக் கதியென்று முனிவர் பாதங்களைக் கைகளாலே பிடித்துக்கொண்டார்கள் எ - று. 73

அன்னை யென்னை யருந்துணை யென்னையுன்
முன்னை வாழ்வு முதல்வனு மென்னைமற்
றென்னை யிப்படி வெல்லவ னிச்சமத்
துன்னை யல்லது கண்டில முண்மையே.

இ - ள். அதற்கு விசுவாமித்திரர், என்னைத் தாயென்பாய்; அருமையான சகோதரனு மென்பாய், முன்னுள்ள ஐசுவரியமும், அந்த ஐசுவரியத்தைக்கொடுத்த தெய்வமும் என்பாய், இனி என்னை இப்படி உயர்த்திச் சொல்லி வெல்லத்தக்கவன் நீயே, இப்படி வெல்லுதலாகிய சாமர்த்தியம் உன்னிடத்திலே கண்டேனேயல்லாமல் வேறே யாரிடத்திலும் நான் மெய்யாகப் பார்த்திலேன் எ - று. 74

கண்ணை வேண்டினு மிருவன் காக்கின்ற
மண்ணை வேண்டினும் வாழ்வுட னீருவன்
பண்ணை வேண்டிய செஞ்சொற் பறைக்குலப்
பெண்ணை வேண்டிலன் யானென்று பேசினான்.

இ - ள். (என்று முனிவர் சொன்னதற்கு) அரிச்சந்திரன் (ஐயா!) என் கண்ணைக் கேட்டாலுங் கொடுக்கிறேன்; நானாளுகின்ற உலகத்தை வேண்டினும் என் செல்வத்துடனே கூட்டிக்கொடுக்கிறேன், (இவைகளிருக்க) இராகங்களை வேண்டத்தக்க செவ்விதமான சொற்களையுடைய பறைச்சாதிப் பெண்களை நான் வேண்டேன் என்று சொன்னான் எ - று. 75

மன்னர் மன்னனு ரைத்திட மாதவன்
அன்ன தேநமக் காமென்ற வாவொழீஇச
சொன்ன தேயமை யுங்கடல் சூழ்புவி
என்ன தேயென் றெழுநதெழுந தாடினன.

இ - ள். அரசர்களுக்கரசனான அரிச்சந்திரன் அப்படிச் சொல்லக் கேட்டு மகாதவமுனிவரான விசுவாமித்திரர் நீ அப்படிச் சொல்வாயானல் நமக்குச் சம்மதமே யாமென்று கொண்டு (அரசனே) நீ ஆசையில்லாமல் உலக முழுதும் வேண்டினாலுங் கொடுக்கிறேனென்று சொன்னதே போதும்; இனிக் கடல்சூழ்ந்த வுலகமெல்லாம் எனனுடையதே யாயிற்றென்று எழுந்தெழுந்து கூத்தாடினர் எ - று. 76

மருவு நாடும வளநக ரும்பெருந
திருவு மீருவ னெனறனை செவவியோய்
தருவ னெனற மொழிதவ றுமனுன்
அரச ளிக்கின மையுமெ னசசொனனை.

இ - ள். நல்ல செவவைககுணததைகயுடைய அரசனே! உன்வசமாக விருக்கின்ற கோசலநாட்டையும, வளமைகொணடநகரையும், பெரிதான செல்வததையும தருகிறேனெனறு சொனனய, இபபடித தருகிறேனென்று சொனனவாககுத தப்பாமல் உனனுடைய அரசாட்சியை எனககுக் கொடுத்தாற்போதும என்று சொனனர் எ - று. 77

அநத ணாளனை நோக்கியவ் வண்ணலும
உநத மககளு றுநலன வேண்டிலேன
எநத நாடு மிருநிதிக குபபையும
தநத னனமொழி தபபுவ திலலென்றான்.

இ - ள். அப்படிச் சொனன விசுவாமிததிரரைப் பார்தது அந்த அரிச்சந்திரமகாராஜன (ஐயா) உம்முடைய பெணகளைக் கூடுவதான சுகத்தை நான் வேண்டேன. எஙகளுடைய நாட்டையும பெரிதான எங்கள் செல்வத் திரட்சியையும் இப்போதே கொடுததேன நான சொன்னசொல் தப்புவதில்லை யென்று சொனனன எ - று. 78

பாரை வார்த்தையி னுற்றரற் பாலதோ
தாரை வாரெனக் கௌசிகன் சாற்றிட
நாரை வாய்கயல் பாயுந றுநதட
நீரை வார்த்தன னீபுவி யாள்கெனு.

இ - ள். அதற்கு விசுவாமித்திரர் உலகத்தை வாய்ச் சொல்லாலே கொடுக்கத்தக்கதோ! நீ தாரைவார்த்துக் கொடுக்கவேணுமென்று கூற நாரைகள் மேலே கயற்கெண்டைகள் துள்ளிவிழுவனவான வாசனை பொருந்திய அந்தக் குளத்துநீரைக் கொண்டுவந்து இனி நீரே உலகத்தையெல்லாம் ஆளுதல் செய்யக்கடவீரென்று தாரைவார்த்துக் கொடுத்தான் எ - று. 79

வைய நின்னது மாநகர் நின்னது
வெய்ய வாசியும் வேழமு நின்னபொற்
செய்ய தேர்களுஞ் செல்வமுஞ் சேவிக்குந்
தைய லார்களுந தானையு நின்னவே.

இ - ள். இனி இந்த வுலகமு மும்மதே, பெரிதான அயோத்தியா புரியு மும்மதே, கடின வேகத்தையுடைய குதிரைகளு மும்மதே, யானைகளு முமமதே, பொன்னுற் செய்துள்ள செவவையான தேர்களும் செல்வமும் உம்மதே, என்னிடததிலே பணிவிடைசெய்கிற பெணகளும சேனைகளும உமக்குச் சொந்தமானவைகளே எ - று. 80

என்று மன்ன னியம்பியி றைத்தநீர்
அன்று கௌசிக னஙகையி னேற்றபின்
நின்ற மாதவர் தங்களை நேர்குறித
தின்று நீரெழுந தாரத்திடு மென்றனன்.

இ - ள். என்று அரசன் சொல்லி தாரைவார்தத நீரை அபபோது விசுவாமிததிரர் உள்ளங்கையினுலே வாங்கிகொண்டபினபு தம்முடனே கூட நிறகிற மகாதவமுனிவர்களை நேரே வரச்சொல்லி இப்போது நீங்களெலலோரும் எழுந்தெழுந்து கர்ச்சனை பண்ணுங்களென று சொன்னுர் எ - று. 81

சந்தக் கலிநிலைத்துறை

கோசிக னின்னே கூறிய பின்கூ கூவென்றே
ஆசிகள் சொன்னு ராடின ரார்ததா ரணியாடை
வீசினர் நீயே மேன்மக னென்று மேன்மேலும்
பேசினர் பேசி மாசனர் நேசம் பெரிதுற்ருர்.

இ - ள். அப்படி விசுவாமிததிரரிவவகை சொனனபின்பு கூகூவென்று அரிச்சந்திரனுககு ஆசீர்வாதஙகள் சொனனுர்கள்; ஆடினுர்கள்; கர்ச்சனை பண்ணினுர்கள்; தாங்க ளுடுத்தியிருக்கிற வஸ்திரங்களைக கொண்டு வீசினுர்கள்; நீயே மேன்மகனுனவனெனறு மேன்மேலுங் கொண்டாடினுர்கள் அப்

படிக் கொண்டாடிய அந்த மகாஜனங்களெல்லாம் அரிச்சந்திர னிடத்திலே மிகவும் பிரியங்கொண்டார்கள் எ - று. 82

வாரண முந்திண் டேர்பரி தேசம் வளனெல்லாம்
ஆரண மோதுங் கௌசிக னுக்கா யினமென்றே
பூரண கும்பம் வீதிக டோறும் பொலிவித்துத்
தோரண மிட்டார் தாரணி யெங்குந் துறவோரே.

இ - ள். யானைகளும் பலமான தேர்களும் குதிரைகளும் தேசமும் அதி லுள்ள சம்பத்துகளும் வேதபாராயணஞ்செய்கிற விசுவாமித்திரர் வசமாயின வென்று நிறைந்த நீர்க்குடங்களை வீதிகளெல்லாம் நிறைய வைக்கச்சொல்லி அந்தத் துறவற முனிவர்கள் உலகமுழுதும் தோரணங்களும் கட்டினார்கள் எ-று.

மென்னடை யன்ன நன்னடை யாளை விறலானை
முன்னடை யாநின் றின்னவை பின்னு முனிகூறும்
என்னகர் நின்றே யிவ்வுல கெல்லா மியானாள
நின்னடை யாளந் தந்திடு மாறு நெறியென்றான்.

இ - ள். மிருதுவான நடையினாலே அன்னம்போன்ற நல்ல இல்லறத் துக்கேற்ற செய்கையையுடைய சந்திரமதிகளும், வெற்றிகொண்ட அரிச்சந் திரனுக்கு முன்னேவந்து நின்றுகொண்டு இவ்வித வார்த்தைகளைப் பின்னும் விசுவாமித்திரர் சொல்லுகிறார் அதாவது, எனக்குச் சொந்தமான அயோத்தி யிலிருந்து இந்த வுலகத்தையெல்லாம் நான் ஆளுவதாகத் தப்பாதமாகத் திடனே உன்னுடைய அடையாளத்தைக் கொடுவென்று சொன்னார் எ-று. 84

வாழிய நாடூர் செல்வ மமைச்சன் மாசேனை
சூழிநெ டுங்கைப் போர்மத வேழந் துரகந்தேர்
ஊழியின் மட்டு மாளுதி தந்தே னுனதென்றோ
ஆழி யளித்தான் பாருள மட்டு மழியாதான்.

இ - ள். வாழ்வையுடையதான கோசலநாடும் ஊரும் செல்வமும் மந்திரி யும் பெரிதான சேனைகளும் முகபடாமணிந்த நீண்ட துதிக்கையைக் கொண்ட போரில்வல்ல மதயானைகளும் குதிரைகளும் இரதங்களும் ஊழி காலத்தளவும் நீரே ஆளக்கடவீர், இதோ கொடுத்துவிட்டேன் உம்மதாக வென்று சொல்லித் தனகையிலுள்ள மோதிரத்தையுங் கொடுத்தான், உலகமுள்ளளவும் அழியா திருக்கிற மெய்யனென்னுங் கீர்த்தியைக் கொண்ட அரிச்சந்திர மகாராஜன் எ - று. 85

குடைதந் தேனீள் கொடிதந் தேனென் குழுவாய
படைதந் தேனற் கனகத் திண்டோர் பரிதந்தேன்
தடைதந் தேனின் றடியே னேகத் தவனேநீ
விடைதந் தேகென் றடிமேற் பாவி வீழ்வானே.

இ - ள். என குடையுங் கொடுத்தேன, நீண்ட கொடியையுங் கொடுத் தேன, என கூட்டமாகிய சேனைகளையுங் கொடுத்தேன, நலல சுவர்ன மயமான பலங்கொண்ட தோ - குதிரைகளையுங் கொடுத்தேன, இதறகியாதொரு தடை யுஞ் சொலவதிலலை. இனி அடியோ போக விடைகொடுத்துவிட்டு நீர் போமெனறு அவர் பாதஙகளினமேல துதிசெயது விழுகினற அரிசசந் திரனை எ - று. 86

துணியுங தணிநெஞ சுடையா னினது தோண்மாலை
மணியும வளையும வலயங களுநின வடிவாளும
அணியும முடியுஞ் சேயுந தாயு மணியும்பொற
பணியுங கழலுங தநதே கென்று பலசொனனான்.

இ - ள். கணடு துணிவுகொணட ஒப்பிலாத கடின சித்தரான விசுவா மித்திரா, அரசனே! உனனுடைய தோளிலுளள மணிமாலைகளும கஙகணங களும கேயூரஙகளும உனனுடைய கூரிய வாளாயுதமும ஆபரணஙகளும கிரீட மும உன பிளளையும அந்தப் பிளளையைபபெறற தாயும அணிவனவான பொனனுபரணஙகளும வீரககழலும் கொடுத்துவிட்டுப போவெனறு பலவாகச் சொனனார எ - று 87

எதது்க் கிவையென றணிமா முடியும வடிவாளும
புதகிப் புதலவன பூணும பணியும புனைமாதின
பததிக் கிரணப பணியுங கனகப பணியும்வெண
முததிற பணியுங கழியா முனிவன முனமுயததான.

இ - ள. எனனததிறகு இவைகளெலலாமெனறு வெறுததுத தானணிந் திருககிற பெரிய கிரீடமும, கூரிய வாளாயுதமும, புததிசாலியான தனது புததிர னணிந்திருககிற ஆபரணஙகளும, அலஙகரிததலையுடைய மனைவியி னுடைய வரிசையாக ஒளிவீசுகினற ஆபரணஙகளும, பொனனுபரணங்களும, வெணமையான முததாபரணஙகளும கழறறி விசுவாமிததிரா முனனேவைத தான எ - று. 88

உனையும மடமா தினையும மரபோ யுனமைநதன
றனையும விடுதற கரியும பணிநீ தநதாயகாண்
வனையுங கழலாய மகனும நீயும மடவாளும
புனையுங கிரணக கலைதந தகலப போமெனறான.

இ - ள. அதறகு விசுவாமிததிரா உனனையும உனக கினமையான மனைவி யையும அரசனே! உன புததிரனையும நான விடுமபடியாக அணிநதிருககிற ஆபரணஙகளையெலலாங கொடுததாய சரியே. கட்டின வீரககழலையுடைய வனே! இனி உனமகனும நீயும உனமனைவியும் கட்டியிருககிற ஒளியையுடைய வஸதிரஙகளைக கொடுததுவிட்டுத் தூரப்போ வெனறு சொனனார எ - று. 89

ஆரை யிரபபோ மாடை யளிததா லரனேயென்
றாரை யளிதத காவல னினறே யுயிா சோருங

தாரைநி னைந்தே கௌசிக னுங்குதான் மூடும்
சீரைகிழித்தே மூவகை யிட்டுச் செலவுய்த்தான.

இ - ள். அதற்கு நாங்கள் கட்டியிருக்கிற வஸ்திரங்களையுங் கொடுத்துவிட்டால் இனி யாரிடத்திலே போய் உடுத்திக்கொள்ள வஸ்திரங் கொடுவென்று கேட்போம்? சிவனே! சிவனே! என்று ஊரெல்லாம் ஆண்ட அரசன் அங்கே நின்றுகொண்டு உயிர் சோர்ந்துபோவது போலாயக் கண்ணீர் தாரை தாரையாக ஒழுகவிட்டழுகிறதை விசுவாமித்திரர் கண்டு ஆலோசித்து அப்போது தாம் தம்முடைய உடம்பை மூடிக்கொண்டிருக்கிற காவி வஸ்திரத்தைக் கிழித்து மூன்று பங்கு செய்துகொடுத்து அவர்க ளுடுத்திக்கொண்டு போகும்படி அனுப்பினார் எ - று. 90

நாற்றப் பாழ்ந்து னிசிலைப் பேனொரு நாணமாறுப
பீற்றற் சிலையி தாருக் கென்றுரை பேசாமே
மாற்றுக் காலமி தாகிற செய்வதென மறவேனாக
கூற்றுக் காமிசைப் பூணக் கோனந்து கொண்டானே.

இ - ள். நாற்றம்பிடித்த பழந் துணியாயச் சீலைப்பேன் ஒருநாளும் போகாமல் மொய்த்துக்கொண்டிருக்கிற கிழிந்த வஸ்திரம் இது யாருக்குத் தகுமென்று ஒருபேச்சும் பேசாமல் நமக்கெல்லா மாறிப்போகிற காலம் இப்போது வந்ததினால் நம்மாலே செய்யத்தக்கது யாதிருக்கிறதென்று எல்லாருஞ் சொல்லுதற்குத் தகுந்த கீர்த்தியைப் பூணுகின்ற அரசன் அந்த வஸ்திரத்தை உடுத்திக்கொண்டான் எ - று. 91

காவிச் சீரை யுடுத்துக் கூறைப் கழித்துச்சென்
றாவிக் காதல் மாகச் சேனை யழுங்கப்போயப்
பாவிக் கௌசிக னாமுன னுமெல்லாரு பாலமைத்துத்
தாவித் தாமரை பூசித் தேவிடை தாவென்றான.

இ - ள். அப்படி அவர் கொடுத்த காவிவஸ்திரத்தை யுடுத்திக்கொண்டு தாமுடுத்தியிருந்த வஸ்திரத்தை அவிழ்த்துக்கொண்டு தம் முயிர்க்கு வியாகுலந் தோன்றச் சேனைகள் வருந்துகிறதைப் பார்த்துக்கொண்டு, பாவியான விசுவாமித்திரருகிலே போய், ஒரு பக்கத்திலே வஸ்திரங்களை யெல்லாம் வைத்து விரைவிலே அவருடைய பாதங்களையும் பூசைபண்ணிக் கும்பிட்டு உத்தரவு கொடுமென்று அரிச்சந்திரமகாராஜன் கேட்டான் எ - று 92

தாவென் றுனவிடை தந்தே னீயொரு சார்பூடு
போவென் றுனது வேந்தனெனனுப் போவானை
வாவென் றுனது கேளா மீளவும் வந்தெய்தி
யாவென் றுனினி யீகுவ வெந்தா யாவென்றான்.

இ - ள். அப்படி உத்தரவு கொடுமென்று கேட்டபோது, விசுவாமித்திரர் இதோ உத்தரவு கொடுத்தேன். நீ ஒரு புறத்திலே போவென்றார் அப்போது

இதுதான் நல்லகாலமென்று போகிற அரசனை, அரிச்சந்திரா! இங்கே வா வென்றார். அந்தச் சொல்லைக் கேட்டுத் திரும்பவும் அருகிலே வந்து சுவாமி! இனி நான் கொடுப்பன என்னவென்று கேட்டான் அரிச்சந்திரன் எ - று.

எந்தாயானினி யீகுவதுயாவென்று கூட்டுக. 93

செந்தே னோடுந தண்பணை சூழுந திருநாடா
வந்தே நானும மாமுனி வோருமவளர்வேள்விக
குந்தே நண்ணியி ரந்தப சும்பொ னுளவெல்லாம
தந்தே போவா யென்றிறை யோனைத தடைசெய்தான்.

இ - ள். சிவந்த தேனை பாயவதாகிய குளிர்ந்த வயல்கள் சூழ்வதான திருநாட்டையுடைய அரசனே! நான உனனிடத்திறகு வந்து அந்தப பெரிய முனிவர்களும் செயவதறகாகத்த யாகததுககாக உமமுடைய ஊருககு வந்து யாசகங கேட்ட பசும்பொனனுக வுள்ளவைகளெலலாம இப்போது கொடுத்துவிட்டுப் போவென்று அரசனைப போகவொட்டாமற றடைபண்ணினார் எ - று. 94

முன்ன முனககுச சொனனதி றததின மொழிமாறி
அன்னது கைககொண டிநநிதி தநதே னலலனயான
நனனக ரோடு பொன்னுள முறறு நனிதநதேன்
இனன முனககுப பொனறர வெனபா லிடமுண்டோ.

இ - ள். முனனே உமககுச சொன்னவகையிலே சொல்மாறி அந்தப் பொருள்களை என வசமாககிககொண்டு இப்போது வேறே பொருள்கள் நான தரவில்லை. (அநதப பொருளுடனே) எனது நலல ஊரையுமவுள்ள பொருளகள் முழுதும் உமககே அதிகமாகக கொடுததேன. இனனமும உமககுப் பொருள கொடுகக எனனிடததிலே வேறே உளளதோ எ - று 95

தாருட னேசெந தாமரை யாளசோ தடமார்பா
யாருட னேயிம மோசமு ரைபபா யறிவிலலாய
ஊருட னேமுன கூறிய பொனனு முடனெனறே
நீருட னேநீ பேசிய விதத நெறியுணடோ.

இ - ள். மாலையுடனே கூடச செந்தாமரைத திருவுஞ் சேர்வதான விசாலமான மார்பையுடைய அரிச்சநதிரா! யாருடனே இநத மோச வார்ததை பேசுகிறாய், ஓ புததியிலலாதவனே! உனனுடைய ஊருடனே முனனே நீ சொனன பொருளுங கூடச்சேரததலலவோ தாரைநீருடனே சொலலி எனககுக் கொடுததது, அதுவுணடோ இலலேயோ! எ - று.

அந்தப் பொருளையு முன சொநதமாகக கொணடேரோடே சேர்ததுத தாரை வார்த்துவிட்டால் அதுவேறே கொடுககவேணுமெனறு வழககு. 96

சொனனது மாறா பானுகு லததிற றோல்வேநதா
அனனது காணே நின்னிடை யெனறு னதுகேளா

மன்னவ னுள்ள நொந்தற நாணி மதிவல்லோம்
இன்னமு மொன்றுண் டென்னவி ரந்தே யிவைகூறும.

இ - ள். சூரிய குலத்துப் பழைய அரசர்கள் சொன்ன சொல தப்பமாட்டார்கள்; அந்த நிலைமை உன்னிடத்திலே நான் கண்டதில்லையென்று விசுவாமித்திரர் சொன்னார் அதைக்கேட்டு அரசன மனமானது மிகவு நொந்து வெட்கமுண்டாகி, ஓ புத்தி வல்லவரே! இன்னமொரு வார்த்தை யுண்டென்று அவருக்கு நல்ல உபசாரங்கள் சொல்லி இவ்வார்த்தைகள் சொல்லுகிறானரசன எ - று. 97

மேற்படி வேறு

நினைத்த வைப்பிர மனையனை யாய்நினை வழிந்த
பித்த னைப்பொருள் வினவினை யெங்கியான பெறுகோ
இத்த னைத்தினத் தீவதென றியம்புவை யெனினயான
அத்த னைக்குநின பொருடர வவதியீ தெனறான.

இ - ள். நித்தியனான சிவனையும, பிரமாவையும ஒப்பான மகாமுனிவரே! உமமுடைய கோபத்தால நினைவு தடுமாறின; பயித்தியக்காரனான என்னைப பொருள கேட்கிறீர, நான எங்கேபோய்ச சமபாதித்துக் கொடுப்பேன? ஆனாலும, இவ்வளவு நாளுக்குள்ளே பொருள கொடுவென்று ஒரு கெடுக் கொடுப்பீரானால் நான அவ்வளவு நாளுக்குள்ளே உமமுடைய பொருள கொடுக்கத் தகுந்த அளவு இதுவென்று கொடுமென்று சொன்னான எ - று.

அவதி - கெடு 98

ஊரு நாடுநீண மலைகளுங கானமு முழன்றே
யாரு ளேழ்பூப புணபவ ரவதியா ரிடுவார
சோர முள்ளநீ கூறுமப பொருடனைச சேர்ந்து
போ டாவுனைத் தடுத்தனன போகலே யென்றான.

இ - ள். ஊரும - நாடும - நீண்டிய மலைகளும - காடுகளும உன்னோடுகூட அலைந்து யார வழக்குப பேசுகிறவர்கள்? அளவு கொடுக்கிறவர்கள யார? ஒருவருங் கிடையாது திருட்டுத்தனமுள்ள நீ முன்னே கொடுப்பதாகச் சமமதித்துச சொன்ன பொருள்கள முழுதும இங்கே கொண்டுவந்து குவித்துவிட்டு அப்பால போகக் கடவையடா! இதோ உன்னைப பொருள கொடாமல் அப்புறம் போகக்கூடாதென்று தடுத்திருக்கிறேன, போகாதே யென்று சொன்னான எ - று. 99

பக்க நோக்கிலன பாரமிசை விழுந்தடி பூண்டு
கக்கல் வந்திட மிடறறினை யொடுக்குமக் கதைபோல
விக்கலும பொருமலும மிசைமிசை யெழ விரிநீர
உக்க கண்ணனவா யூறுமீர வறறிட வுமைப்பான.

இ - ள். (அதற்குச் சம்மதியாய்த் தடைகளுள்ளே நின்று புறத்தே) பாரா மல் பூமியிலே விழுந்து வணங்கி அவர் பாதங்களைத் தன் சிரசின்மேற்கொண்டு, ஒருவனுக்குக் கக்குதல் வந்தபோது மற்றொருவன் வந்து அவன் கழுத்தை நெருக்கிப் பிடித்த கதைபோல, விக்குதலும் பொருமலும் மேலுந்தோன்ற விரிவான ஜலம் சிந்துகிற கண்களையுடையவனாய் வாயிலே ஊறுகிற ஜலமும் வற்றிப்போக அரிச்சந்திரன் சொல்லுகிறான் எ - று. 100

இழைத்த தீவினை பொறுத்தனன் னரசுநா னென்னுந்
தழைத்த வன்பொடு தந்தியா னகன்றிடுங் காலை
அழைத்த நீயெனக் களித்திட் டாள்விடி லைய
பிழைத்தி லன்னிதோ பெரும்புகழ் பெறுதியென் றிரந்தான்.

இ - ள். நீ செய்த குற்றத்தைப் பொறுத்தருளுகிறேன்; உன்னுடைய அரசாட்சியைக் கொடுத்துவிட்டேன் று சொல்ல, நான் சந்தோஷமான பிரீதி யுடனே கொடுத்துவிட்டுப் போகும்போது கூப்பிட்ட நீர் எனக்கொரு கெடு கொடுத்து ஒரு ஆளைக் கூட அனுப்பினால், சுவாமி! நான் தவறாமற் பொருள் செலுத்துவேன். ஆதலால், இது ஒரு பெரிய புகழாகப் பெறுவீரென்று மிகவும் உபசாரங்கள் சொன்னான் எ - று 101

சுற்றுண் டாகிய மலைகளில் வனங்களிற் றெருட்டுன்
பற்றுண் டாகிய பதிகளிற் படுபொரு ளல்லால்
உற்றுண் டாகிய நிதியமுன் றிருவுள முணர
மற்றுண் டாமெனின் விளம்பிடு வழங்கிட வென்றான்.

இ - ள். (பின்னும் அரிச்சந்திரன் சொல்லுகிறான் சுவாமி!) சுற்றிலு முண்டாகிய மலைகளிலும், வனங்களிலும் தொடாதலா யுமது சம்பந்த முண்டா கிய ஊர்களிலுண்டான பொருள்களை யல்லாமல் எனக்கு வேறொன்றுமில்லை. ஆகையா லுமக்குச் சேரவேண்டியதாயுள்ள திரவியங்கள் உமமுடைய திரு வுள்ளந் தெரிவதாய வேறே யெங்கேனு முண்டாயிருந்தாற் சொல்லும், நான் கொடுக்கிறதற்கென்று சொன்னான் எ - று 102

ஆமதே யெனி னரசகே ளவதியா னுரைப்பன்
ஏமகூட முங் காசியு மன்றியி லிப்பால்
தாம மார்பநீ தந்தநன் னாடுதற் கப்பாற்
போமதுண் டெனிற் பொருளுமப் பொருளலா தனியேல்.

இ - ள். இப்படிச் சம்மதியாகுமென்று நீ சொன்னால், அரசனே! கேள் ஓரளவு சொல்லுகிறேன், ஏமகூட பருவதமும், காசியுமல்லாமல் இதற்கு இப்பாலுள்ள நாடுகளே மாலையணிந்த மார்பையுடையவனே! நீ எனக்குத் தந்த நல்ல நாடுகள். இவற்றுக் கப்பால் நீ போவதுண்டானால் நீ கொடுக்க வேண்டிய பொருளும் அங்குள்ள பொருள்களை யல்லாது இங்குள்ள பொருள் களை நீ கொடாதே எ - று. 103

இந்த வெல்லையி லிப்பொரு ளீதலி லாமல்
அந்த வெல்லையிற் பொருடர வல்லையே யானால்
முந்துநீ சொன்ன முறைமையா லவதியா னீவேன்
தந்தி டாயெனிற சத்திய மேதெனச சாற்றும.

இ - ள். இந்த எல்லைக குள்ளான இப் பாக்கியான பொருள்களைக் கொடுக்கிறதில்லாமல்; அந்த எல்லைக்குள்ளான பொருளை நீ கொடுக்க வல்லவனானால், முன்னே நீ சொன்ன நியாயப்படி உனக்குக் கெடு கொடுக்கிறேன், அந்தக் கெடுவுக்குள்ளே நீ கொடாமற்போனால் அதற்குப் பிரமாணமென்ன சொல்லுகிறாயென்று விசுவாமித்திரர் கேட்க (அரிச்சந்திரன் சொல்லுகிறான்) எ - று 104

நிறபி ழைத்திடி னினக்கியா னருநிதி யளிக்குஞ
சொற பிழைத்திடு றகுற்றா மேதெனிற சொல்வல
வறபி ழைத்தநற சொற்பர தாரத்தைக் கருதி
இறபி ழைத்தவ னாவனின னிருநிதிகொ டேனேல.

இ - ள். உம்முடைய விஷயத்தில் அபராதமுடையவனானாலும், உமக்கு யான அருமையான பொருளைக் கொடுப்பேனென்று சொற்றவறினாலும், உறுதியான சபதவார்த்தை யாதென்றால் சொல்லுகிறேன், பதிவிரதா தாமத்தையே நடத்திக்கொண்டுவந்து கணவனுக்கு நல்ல புகழ்வரச் செய்கிற அந்நியருடைய மனைவியை எண்ணி இல்லறம்வழுவ நடந்தவனாவேன். உம்முடைய பெரிதான பொருளைக் கொடாமற் போவேனேயானால் எ - று. 105

காசி நாட்டினிற் சென்றவந் நாளினுங் கனகம்
ஆசின் மாதவ வளிப்பனவ் வவதியி லதுநீ
பேசி டாயென விருபது நாளையிற் பின்பு
மூசி வண்டுறை தாரினாய் தருகென மொழிந்தான்.

இ - ள். குற்றமில்லாத பெரிய தவத்தையுடையவரே! காசிதேசத்துக்குப்போகிற அப்போ துமது பொருள்களைக் கொடுப்பேன், நீர் சொல்லும் அந்தக் கெடுவிலே ஆதலால், அந்தக் கெடுவை நீர் சொல்லவேணுமென்று சொல்ல, அதற்கு நெருங்கி வண்டுகள் மொய்க்கின்ற மாலையையணிந்தவனே! இருபதுநாளைக்குப் பின்பு கொடுக்கக்கடவையென்று சொன்னார் விசுவாமித்திரர் எ - று 106

அங்குற றெய்தநா ளம்முறைக கிருமடங கடங்கா
எங்குற நீட்டுவ திப்பொரு ளையவென் றியம்ப
நங்குற றமமிலை நாற்பதிற றெட்டென நவின்றான்
உங்குற றமமிதற குடகொடா தொழிந்திடி னென்றான்.

இ - ள். அந்தக் காசிக்குப்போயச் சேருதற்கே அந்த இருபதுநாளைக்கு இரண்டுபங்கான நாற்பதுநாளானாலும் போதாது. அப்படிக்கிருக்க நானெப்படி

எங்கேபோய்ச் சம்பாதிக்கிற திக்தப்பொருள்களையெல்லாம் சுவாமி யென்று சொல்ல, அதற்கு நம்மாலே ஒரு குறைமுமில்லாமல் நாற்பதெட்டுநாள் கெடுக் கொடுததேனென்று விசுவாமித்திரர் சொன்னார், அப்படிச் சொல்லிப்பினனும் இந்தக் கெடுவுகருள் நீ கொடாதுபோனால உனகுற்றமாகவே முடியும் என்று சொன்னார் எ - று. 107

இப்புத திக்கினி தொத்தன ஞளவிடு கென்று
குபபுற றேகலுங கௌசிகன் மீளவுங கூவித
தப்புத தீர்தரத தநதவப பொருளெலாம பதிவந
தொப்புத தநதுபின போவென மன்னனுக் குரைததான்.

இ - ள். இப்படிச்சொன்னை இந்த அளவுககு நனருய்ச் சம்மதியானவனுகி இனி ஆள்விடுமென்று அவரைவிட்டுப் போகுமளவில், மறுபடியும் விசுவா மித்திரர் கூப்பிட்டு ஒருகாசளவாவது குறைவில்லாமல் நீ கொடுதத அந்தப் பொருள் முழுதும நானிருககு மிடததுககுவந்து எனககுச் சமமதிப்படுததிப் பினபு அப்புறம போககடவையென்று அரிச்சந்திரனுக்குச் சொன்னார் எ - று.

பார ளிததனை புரககநின பதியிடைச சென்ருல்
ஆர ளிததன ரென்பாநின னடியவ ரெலலாம்
ஊர ளிததிட வுடன்வரத துணிதியீ தொழியின
நீர ளிததனே யெனக்குமண் ணினக்கென மொழிநதான்.

இ - ள். நான ஆளும்படி உனனுடைய உலகததை எனககுக கொடுததாய் என்று உன பட்டணததுக்குள்ளே நானபோனால உனககுயார் இந்தப் பட்டண முழுதும ஆளககொடுததவரென்று உனனுடைய ஊழியககாரரகளெல்லாரும் கேட்பார்கள. ஆதலால், நீ உன ஊரை எனககுககொடுகக எனகூட வருவதற் குச் சமமதிப்படு, இதறகு நீ சமமதியாமற போனால நீ தாரைவாரததது மாத்திரமே எனககுலாபம உனககுததான ஊர முழுது முடிவுபெறுமென்று சொன்னார் எ - று. 109

நன்று நன்றுநீ நகரியி லெழுநதரு ளுயேன
இன்று நினபிற கெய்துவ லெனறினி தியமபச
சென்று கௌசிகன றோமிசை யேறினன் றிரண்டு
நின்ற மாதவர கரியினும பரியினு நிறைநதார.

இ - ள். நலலது நலலது நீர பட்டணததுக கெழுநதருளும் நாயடியேன் இப்போதே உமது பினபற்றி வருகிறேனென்று சநதோஷமாகச்சொல்ல, அங்கிருந்தும போய் விசுவாமித்திரர தேர்மேலேறினார. அவர்கூடவே கூடி நின்ற மகாமுனிவர்களும யானைகளமேலுங குதிரைகள் மேலும ஏறிச் செல்லு வாரானார்கள எ - று. 110

தேரி லேறிமா முனிசெலச சேனைபின் செல்லப
போரில் வீரனுந தேவியும புதலவனு நடுவே

பாரின் மேனடந் தடிபொரு துடல்பதை பதைக்க
வேரி வாவிவிட் டயோத்தியை நோக்கியே விரைந்தார்.

இ - ள். அப்படித் தேர்மேலேறிக்கொண்டு மகாமுனிவரான விசுவாமித்திரர் போகச் சேனைகளும் பின்னே செல்ல, யுத்தத்தில் சாமர்த்தியத்தையுடைய வீரனான அரிச்சந்திரனும் அவன் தேவியும் மகனும் அந்தச் சேனைகளுக்கு நடுவே மணமேல் நடந்து கால்கள் பொறுக்கமாட்டாமல் உடம்பு அடிதுடிக்க மணம்பொருந்திய அந்தக் குளக்கரையைவிட்டு அயோத்தியாபுரியை நோக்கி விரைவாகப் போனார்கள் எ - று. 111

கன்ன லம்பெருங் கழனியுஞ் சோலையுங் கடந்து
வன்ன மாமணிப் புரிசையின் புறத்துவந் தணைந்தார்
நன்ன கர்ப்பெருஞ் சனமெலா மெதிர்கொடு நண்ணி
மன்ன னைச்செழுந் தேர்மிசைக் கண்டிலா மருண்டார்.

இ - ள். கரும்புகள் விளைகிற அழகிதான பெரிய வயல்களும் சோலைகளும் கடந்து சென்று, ஒளிபொருந்திய பெரிதான அழகையுடைய அயோத்திமாநகர மதிலுக்குப் பக்கமாக வந்து கூடினார்கள். அப்போது அந்த நல்ல நகரத்திலுள்ள மகாசனங்களெல்லாம் எதிர்கொண்டு வந்து பார்த்துத் தங்களரசனைத் தேர்மேற் காணாதவராய் மயங்கினார்கள் எ - று. 112

இரத மேன்முனி யேறிய தகிதமோ விதமோ
சரத மோவெனு மையமுற் றாரவந் தவனைச் சார்ந்தார்
விரத மிவ்வகை விளைந்தவா றேதெனு மெலிந்து
கரத லங்களான் முகத்தறைந் தழுதனர் கதறி.

இ - ள். இரதத்தின்மேலே இந்த முனிவரேறி வருகிறது தக்கதோ? அல்லது தகாததோ? அல்லது மெய்யோ பொய்யோ வென்பதான சந்தேகத்தை யுடையவர்களாய் அருகே வந்து கூடினார்கள். தம்முடைய அரசனுக்கு இவ்வகை விரதவேஷம் எப்படி உண்டாயிற்றென்று மெலிவுகொண்டு கைகளாலே மோதிக்கொண்டு கதறி அழுதார்கள் எ - று. 113

ஏங்குவா ரிளங் கொடியையுஞ் சேயையு மேந்தித்
தாங்கு வாரசெழுந் தாளிலே வீழ்ந்துவீழ்ந் தயர்வார்
ஓங்கி யோங்கி யேயறைந் தறைந் தொளிமுகங் கனறி
வீங்கு வாரழு வாரவிழு வாருள மெலிவார்.

இ - ள். அப்படி அழுகிறவர்கள் சந்திரமதியையும், அவன் பிள்ளையையும் தாங்கி எடுத்துக்கொள்வார்கள். பின்னும் அவர்களுடைய செழுமையான பாதங்களிலே விழுந்து விழுந்து சோர்வார்கள். கைகளை லோங்கி யோங்கி அடித்தடித்து ஒளியையுடைய முகங்கள் கனறுதலாய் வீங்கப்படுவார்கள். அழுவார்கள்; விழுவார்கள்; மனந்தளர்வார்கள் எ - று. 114

மன்ன வற்குநம் மன்னைக்கு மைந்தற்கு மந்தோ
என்ன பாவம்வந் தெய்திய வென்றிருந் தேஙகப
பொன்ன கர்ப்பெரும் புரிசையின் புறததுவாந தணுகி
இன்னல் செய்தவக கௌசிக னிரதம்விட் டிழிநதான்.

இ - ள். அரசனுககும, நமது தாயான சந்திரவதிககும, பிள்ளைககும ஐயோ! எனன பாவானுபவம வநது கூடிறறெனறு இருந்தழ, அநத அழகான நகரினுடைய பெரிதான மதில வாயிலுககுப் பககமேவந்து சேர்ந்து இப்படித் துன்பதகை யுணடாககின அந்த விசுவாமிததிரர் தேரைவிட் டிறங்கினர் எ - று. 115

கோசி கனறனை யுடன்கொடு கோநகர் புகுநது
வாசி யுள்ளவு மதகரி யுள்ளவும் வழங்கிக்
காசி னல்லறை பூசனை யறையெலாங் காட்டித்
தூசி னல்லறை துயிலறை பாரெனச் சொன்னான்.

இ - ள். அந்த விசுவாமித்திரரைக் கூடக் கூட்டிக்கொண்டு பெரிய பட்டணத்துக்குள்ளே சென்று தனக்குள்ள குதிரைகளையும், பின்னுமுள்ள மத யானைகளையும் கொடுத்து, நல்ல பொககிஷ வீட்டையும், பூசை வீட்டையு முதலான எல்லாங் காட்டிக்கொடுதது வஸ்திரஙகளுள்ள வீட்டையும், நித்திரை செய்கிற வீட்டையும் பாருமெனறு அரிச்சந்திரன சொனனன எ - று. 116

என்னின் முன்னவ ரிருபதோ டொருவ ருண்டந்த
மன்னர் வைததசெம் பொன்னறை யீதென வழங்கி
அன்ன சத்திர மிவையிவை யடியனேன் வைதத
பொன்ன றைதொகை கொளெனக்கொடுததனன் புகழோன்

இ - ள். எனககு முனனுள்ள அரசாகள இருபதொரு பேர்களுண்டு. அந்த அரசர்கள் வைதத செம்பொனனுள்ள வீடு இதெனறு சொல்லிக கொடுத்து, இவைகள அனனச் சததிரஙகள; இவைகள் அடியேன வைததிருந்த பொனனிருக்கிற வீடுகள; எலலாம ஒப்புககொள்ளுமெனறு கீரததிமானன அரிச்சந்திரன கொடுததான எ - று. 117

ஆட ரங்குக ளமபல மடமன்ன சாலை
மாட மாளிகை மண்டப மஞசனச சாலை
கூட கோபுர மடைப்பள்ளி கோயில்செய் குன்றம
பீட மாதன மிவையென்க கொடுததனன பினனை.

இ - ள். ஆடுகிற நாடக சாலைகள் - பொதுச் சாவடி - மடம் - அனன சத்திரம் - மாட மாளிகை - மண்டபம் - திருமஞ்சனச் சாலை - கூடகோபுரம் - திருமடைப்பள்ளி - கோயில் - செய்குன்றம் - பீடம - ஆசனம் இவைகளெனறு பினனுங்காட்டிக் கொடுத்தான் எ - று. 118

இருந்த வாதனத் திருந்தரு ளெனமுனி யிருந்தான்
அந்த வெல்லையி லரசனு மவனடி பணிந்தான்
வந்த மன்னரு மமைச்சரு மங்கையர் குழாமும
சூந்த ரக்கழற் சேனையு மவனடி தொழுதார்.

இ-ள். இந்த ஆசனத்தின்மேலே எழுந்தருளுமென்று சொல்ல, அப்படியே விசுவாமித்திரர் அதிலிருந்தார். அப்போது அரிச்சந்திரனும அந்த முனிவருடைய பாதங்களை வணங்கினன். கூடவந்த அரசர்களும, மந்திரிகளும, பெண்கள் கூட்டங்களும, அழகிதான வீரககழல்கள கட்டின சேனைகளும் அரிச்சந்திரனுடைய பாதங்களை வணங்கினர்கள எ-று. 119

தொழுதெ ழுந்துதஞ் சுடாமுடி மன்னனை நோக்கி
அழுதுமின றவத்தலை வரையவன் கையா லமைத்துப்
பழுதி லாதுநீ ரெமக்குமுன செய்தவப பரிசே
முழுது மிந்தமா முனிவறகு முறைசெயு மெனறான்.

இ-ள. அப்படி வணங்கி யெழுந்திருந்த தமது ஒளிபொருந்தின கிரீடாதிபதியான அரசனைப் பார்த்து அழுதுகொண்டு நிற்கின்ற அந்த அரசர்கள் பிரதானிகள் ளெல்லாரையும அரிச்சந்திரன தனகையா லமர்த்தல்செய்து, குற்றமில்லாமல நீஙகள் எஙகளுககு முனனே நடத்துவந்த அந்தப் பிரகாரமாகவே உஙகள காலமுழுதும இந்த மகாமுனிவருககு நீதி செய்யுங்க ளென்று சொன்னன எ-று. 120

எவறகு நலலவா திரிபுர மெரியெழச் சிரித்த
சிவறகு நலலவா செஙகண்மா லுக்குநான முகத்தண்
அவறகு நலலவ ரமராககு நலலவ ராவா
இவறகு நலலவ ரெனககுநல லவரென விசைத்தான்.

இ-ள. இந்த முனிவரோ எல்லாருக்கும் நலலவராய்ச் சிறந்தவா; இன்னும் திரிபுரதகனமாக நெருபபுததோனற சிரித்த பரமசிவனிலுஞ் சிறந்தவா; செஙகணமாலான விஷ்ணுவிலும, சதுரமுகனான பிரமாவிலுஞ் சிறந்தவா; தேவாகளிலுஞ் சிறந்தவா ஆன இந்த முனிவருககு நலலவரானவாகளே எனக்கு நலலவராவரென்று சொனனன எ-று. 121

வைய மேழுடை மன்னவ னவ்வுரை வழங்கச
செய்ய வாய்மலா செஙகையாற புதைத்தடி வணங்கி
ஐய நினமொழி மறுப்பவ ராரென முகத்திற
கைய றைநதழுக கண்டவக கௌசிகன் கருதும்.

இ-ள். ஏழுலகத்தையுடைய அரிச்சந்திரமகாராஜன அந்த வார்த்தைை சொல்லவே, எல்லாரும தங்கள் சிவந்தமலாபோலும் வாயைக கையால மூடிக் கொணடு பாதம வணங்கி, ஐயனே! உமது வார்த்தையைத தடுப்பவர்க ளிஙகே

யாரிருக்கிறார்களென்று தங்கள் முகத்திலே கையாலே மோதியடித்துக்கொண்டு அழ அதைக்கண்டு விசுவாமித்திரர் ஆலோசிக்கிறார் எ - று. 122

அறந்தி ரண்டுரு வாகிய வரசனை யவமே
புறம்ப றைந்தனம் புன்மையேம புத்தியில் லாமல்
திறந்தெ ரிந்தவா செயலிதோ வெனக் கௌசிகன்மெய்
மறந்தி ருந்துபின் மற்றுமோர் வாசக முரைப்பான்.

இ - ள். தருமமே திரண்டு வடிவாயிருக்கிற அரசனை அற்பகுணத்தை யுடைய நாம புத்தியில்லாமல் வீணாக இந்திரன் முன்னே நிந்தித்துளறினோம். இதுவிறக, நீதி தெரிந்தவர்கள செய்கை இப்படியோவென்று விசுவாமித்திரர் தம்முடம்பு மறந்திருந்து பின்னுமொரு சொற் சொல்லுகிறார் எ - று. 123

இந்த வையமு மிருநிதிக் குழுவுமிப் பொருளும
முந்து நீதா மொழிந்தவப் பொருளுமியா னிழப்பேன
எந்தன் மக்களை மணம்புணர்ந் திந்நக ரிருவென்
றந்த ணனமகிழ்ந் தரசனைக் கைபிடித் தமைத்தான்.

இ - ள். இந்த உலகமும் பெரியதான பொருட்குவியலும் இந்த வஸ்துக்க ளும் முன்னே நீ தருவதாகச் சொன்ன அந்தப் பொருளும் நான் விட்டுவிடுகி றேன்; என்னுடைய குமரிகளைக் கலியாணம் பண்ணிக்கொண்டு இந்தப் பட்ட ணத்திலேதானே இருவென்று விசுவாமித்திரர் சந்தோஷங்கொண்டு அரிச் சந்திரன் கையைப் பிடித்து அவனைச் சமாதானஞ் செய்தார் எ - று. 124

கைபி டித்தலு முனிவனைக் கால்பிடித் திறைவன்
மெய்பி டித்தலு மிக்கவை செய்தலு மல்லால்
மைபி டித்தகட் பாதையாப் புணர்தலும வழங்காப்
பொய்பி டித்தலு மறனல செய்தலும் புகழோ.

இ - ள். அப்படி அவர் கையைப் பிடிக்கவே, அரசனானவன் அந்த விசுவா மித்திருடைய கால்களைப் பிடித்துக்கொண்டு சத்தியத்தையே உறுதியாகப் பற்றி அதற்கு மேலான காரியங்களை நடத்துகிறதேயல்லாமல் மையிட்ட கண் களையுடைய பாதையர்களைக் கூடுகிறதும், கொடுப்பதற்காகப் பொய் சொல் லுதலும், தருமமல்லாதவைகளைச் செய்தலும் கீர்த்திக்குக் காரணமாகுமோ எ - று. 125

உமக்கி யானசொல்ல வேண்டுமோ மனுவினபி னுதித்தே
எமக்கு முன்னர சாண்டபார் வேந்தரு மெழுவர்
தமக்கு முன்னொருத் தருக்குந் தாங்கரும பெரும்பாரம்
சுமக்க வல்லரோ தவிர்கவிச் சொலலெனத் தொழுதான்.

இ - ள். சுவாமி! இன்னமும் உமக்குநான் சொல்லத்தக்கது முண்டோ! மனுவுக்குப் பின்னே பிறந்து எங்களுக்கு முன்னே பூமியை அரசாண்ட அரசா

கள் இருபதடுதாருபேர்கள தஙகளுக்கு முன்னே ஒருவராலுந் தாஙகுதற்கரிதான நீதியான பெரியபாரததை நான தாங்க வல்லவனுவேனே? நீரிந்த பாவச் செய்கையான சொற்சொல்லுதலை இனி விட்டுவிட வேணுமென்று அவர் பாததகிலே விழுநது வணங்கினன எ - று. 126

சூளைக் கூட்டமயான் பொருநதிலேன் சொன்னவிப பொருளுக்
காளைக கூட்டென வரசனை நோககியே முனிவன்
நாளைக கூடடுவ னின்றுநீ நடபுறத தெனனத
தாளைக கூட்டர வாககிய தலையினன சாற்றும.

இ - ள. வேசைககூட்டததுககு நான சமமதிககமாட்டேன; நான கொடுப்பதாகச் சொன்ன இநதப பொருளுககாக ஒரு ஆளைககூட்டி என பினனே வரவிடுமெனறு சொலல, அதறகு அரசனைப்பாரதது விசுவாமித்திரா நாளைககுக் கூட்டியனுபபுகிறேன; இனறையதினமே நீ வெளியே போய்வனறு சொல்லவே, அரசன அவாபாதஙகளைச் சேரவனவாகத தன றலைமேற கொண்டவனுகிச் சொலலுகிருன எ - று. 127

சிறுதத நாயினேன செயதவிப புனமைக ளெலலாம
பொறுததல வேணடுமென றடியிணை யிருகரம பூண்டான்
கறுதத சிநதையன கௌசிகன பொறுததன னெனறுன்
மறுதது மினனுமொன றுரைததிடக கேளென வளளல.

இ - ள். சிறிதான நாய்போனற அடியேன செயத இந்தப் புலலியவைகளை யெலலாம பொறுததுககொள்ளுதல வேணடுமெனறு அவரிரணடு கால்களையும தனகைகளாலே பறறினன. அதறகுச சினமுளள மனததையுடையவரான விசுவாமித்திரா பொறுததேனெனறு சொனனர். மறுபடியும் சுவாமி! இனனமொனறு சொலலிககொளளுவதுணடு, அதைக கேளுமெனறு பிரபுவான அரிசசநதிரன எ - று. 128

கையி னுறபிடித தமைசசரைக காட்டிமற றிவாகள
வையி னுநதினை மறுககினும மறறுமோர குறறம
செய்யி னும்பொறுத தருளசெயவாய் செலகதி யளிதத
ஐய னேயுன தடைககல மிவரென வளிததான.

இ - ள. தனகையினலே மநதிரிகளைப பிடிததுககாட்டி, ஐயா! இவர்கள உம்மை வைதாலும உமமை வேணடாமெனறு சொனனுலும உமது சொலலை மறுததாலும வேறேயொரு குறறஞ்செயதாலும நீர பொறுதது அருளசெயய வேணடும். எனககுப் போகுமபடி விடைகொடுதத சுவாமி! இவாகளெலலாம உமககே அடைககலபபொருளகளெனறு அவரிடததிலே சேரககொடுததான எ - று. 129

குடைநி றறபொலி கௌசிக னடியினமேற கொடிநேர்
இடையி னுளையு மகனையு மிறைஞசுவித தேததிப

படையை நோக்கிநீர் நின்மினென் றங்கையாற் பணித்து
விடையி தேயெனுப் பணிந்தனன் வேந்தர்க்கு வேந்தன்.

இ - ள். குடைநிழலின்கீழே விளங்குகின்ற விசுவாமித்திரருடைய பாதங்களிலே கொடிபோலு மிடையையுடைய சந்திரமதியையும் மகனையும் வணங்கச்செய்துகொண்டு, தானுந் துதித்துச் சேனைகளையெல்லாம் பார்த்து நீங்கள் நில்லுங்களென்று தனதழகான கையாலே அமையநிறுத்தி, விடை இதுதானென்று விசுவாமித்திரை வணங்கினன் அரசர்க்கரசனானவன் எ - று. 130

பாரமு னகருல கென்றிறை யகன்றனன பரிந்து
புரமெ ரித்தவ னனையமா முனிபுவி புரந்தான
சிரம நீங்குவீ ராகளசெறி மன்றமுந தெருவும
பிரம சாரிகண் மலிந்தனா பெருகுமுட் களிப்பால.

இ - ள இனிப பூமிபாரம உமக்கேயென்று சொலலிவிட்டு அரிச்சந்திரன அப்பாறபோனன பரிவுகொணடு திரிபுரதகனம பணணின சிவனையொப்பான விசுவாமித்திரர் உலகையாண்டார ஆயாசந தீரந்திருக்கின்ற வீரர்கள் கூடின சபைகளிலும தெருக்களிலும எங்கும பிரமசரியப் பிராமணர்கள் கூடினர்கள். பெருகுவதான உள்ளக்களிப்புடனே எ - று. 131

காமத தோகையா கருங்குழல விரிததனா பரப்பிச
சேமத தூமங்கள காட்டுமச சிறப்பெலாந தேய்ந்து
தாமத தூமலாத தருப்பைகள சமிதைகள விரித்த
ஓமத தூமமே யோங்கின வ்யாமனை யெலலாம.

இ - ள். அரசனுக்குள்ள காமப்பெணகளெலலாம தங்கள் கரியகூந்தலை விரித்துப பரவவிட்டு அவைகளுலாவததற்காக அகிறபுகைக ளூட்டுகின்ற அவவகைச்சிறப்புகளெலலாம இப்போது குறைவாய, ஒளிபொருந்தின நலலமலர்களும் தர்ப்பைகளும் விரித்திருபபதான ஓமங்களசெயகிற புகையே உயர்ந்த வீடுகளினமேலெலலாம கிளாவதாயின எ - று. 132

தோலி னோர்களுந துரகதத தோர்களுஞ சோதி
வேலி னோர்களு மாதரு மிடைந்தமை மாறி
நூலி னோர்களு நுண்ணிடைக கவுந்தியா களுமுக்
கோலி னோர்களு மலிந்தனா கொடிததெரு வெலலாம.

இ - ள். யானைவீரர்களும், குதிரைவீரர்களும, ஒளிகொண்ட வேல்வீரர்களும் இவர்கள பெண்களும நெருங்கியிருப்பவைபோய, சாஸதிரம் படிக்கிற பிரமசரியர்களும் இடையிலே அரைநாணும, கௌபீனமுமுள்ள முனிவர்களும், திரிதண்ட சந்நியாசிகளும், மிகுதியாயக் கூடினர்கள். அந்தக் கொடிகளாடுகிற தெருக்கள் எல்லாம எ - று. 133

புனித மாதவர் சூழ்ந்திடப புரவலர் போறறக
கனிதி ருந்திய செய்யவாய்க கன்னியா காண

நனிதி ருந்திய நவமணி யாதனத் தேறி
இனிதி ருநதுல காண்டனன் கௌசிக னிப்பால.

இ - ள். இப்படிப் பரிசுத்தரான மகாமுனிவர்கள் சூழவும், அரசர்கள் சேவிக்கவும், கொவவைக் கனிபோற் றிருந்தியதான சிவந்தவாயை யுடைய பெண்கள் பார்ககவும், விசுவாமித்திரமுனிவர் திருத்தமான நவரத்தின சிங்காசனத்தின்மேலேறிச் சந்தோஷமாயிருந்து உலகமெல்லாம் ஆண்டார இனி மேல் எ - று. 134

சூழ்வினைக காண்டம முற்றிற்று.

ஆக விருத்தம் - 752

---

## ஆறுவது

# நகர்நீங்கிய காண்டம்

---

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

தலமுழுதுந தவமுனிவன் றனக்களித்தே மினியுறைத றகுதி யன்றென், றிலகுமணி மண்டபமு மெழின்மணிசசிங் காதனமு மிழிந்து போநது, பலவரச ருடனமைச்ச ரழுதுடன்போய்ப் பரதவிக் கப் பதாதி மொய்ககக, குலமகனு மடமயிலு முன்னடக்கப் பின்ன டந்தான் கொற்ற வேநதன்.

இ - ள். உலகமெல்லாம தவமுனிவரான விசுவாமித்திரருககுக் கொடுத்து விட்டோம், இனி இஙகே யிருககிறது தகாதெனறு கொண்டு, விளங்குகினற இரத்தினமண்டபங்களையும அழகான இரததின சிஙகாசனஙகளையும விட்டிறங்கிவந்து அநேகம அரசாகளுடனே மநதிரிகள அழுதுகொண்டு உடனவந்து துக்கிக்க சேனைகளுஞ் சூழ, தனது குலபுததிரனும சநதிரவதியும முன்னே செல்ல, வெற்றிபொருந்திய அரிச்சந்திரமகாராஜன பினனே சென்றான் எ - று. 1

தொடைதுறநது முடிதுறநது பணிதுறநது துடிமுரசந துறந்து தாமக், குடைதுறநது வெண்கவரிக குழாநதுறநது கரிபரிதேர்க்குலந துறநது, கடைதுறநது மறுகணைநத காவலன்றன் றிருமுகத்தைக் கண்டோ ரெலலாம, அடையமன மழிநதுருகி யவரவரே முகத்திலறைந தழுவாராரனார.

இ - ள. மாலையுமில்லாமல் கிரீடமுமிலலாமல் ஆபரணங்களுமில்லாமல் உடுக்கை - பம்பை - பேரிகை முதலான வாததியங்களுமில்லாமல் வெண்மையான சாமரககூட்டங்களு மில்லாமல் யானை - குதிரை - தேர்க்கூட்டங்களு

மில்லாமல் அரண்மனை வாயிலைவிட்டு வீதியிலேவந்த அரசனுடைய திருமுகத்தைப் பார்த்தவர்களெல்லாரும அவனைநெருங்கி மனதகே துன்பமுற்றிருந்தலாய் அவரவர்களும் முகத்திலே அடித்துக்கொண்டே அழத்தொடங்கினார்கள் எ - று. 2

மயிரோடுஞ் சிறையிழந்த போகில்போல வேலியொடு வரம்பிழந்த, பயிரேபோற் கரமிழந்த கரியேபோற் பொறியிழந்த பாவையேபோல், உயிரேபோய்ப் பரதவிக்கு முடலேபோன மதத்தாலுள்ளுடைந்தலமபுந் தயிரேபோற் றளர்ந்தலைந்து தத்தமக்கு நிகழ்ந்தவெல்லாஞ் சாற்றலுற்றார்.

இ - ள். உரோமங்களுடனே இறகுபோன பட்சியைப்போலவும், வேலியுடனே சிறுவரம்புகளுமில்லாதழிந்துகிடக்கிற பயிர்கள்போலவும், துதிக்கையறுப்பட்ட யானையைப்போலவும், சூஸ்திரமற்ற பிரதிமையைப்போலவும், உயிர்போய்த் துடிக்கிற உடலைப்போலவும், மத்தினாலே உள்ளெல்லாமுடைபட்டுச் சிதறுகிற தயிரைப்போலவும், தளர்ந்து அலைச்சல்கொண்டு தங்கள் தங்களுக்குத் தோற்றியவைகளையெல்லாஞ் சொல்லத்தொடங்கினார்கள் எ-று. 3

கொடிமீது செறிதேருங் குஞ்சரமும் பொற்சிவிகைக் குழாமுமின்றிப், படிமீது நடந்திடவும் படித்தனவோ பார்வேந்தன் பாதமென்பார், அடிமீது தொழுமரசர் முடிமீது மடிமீது மன்றிச் சுட்ட, பொடிமீது நடந்திடவும் பொறுத்தனவோ குலகுமரன் பொற்றாளென்பார்.

இ - ள். மேலே கொடிகட்டியிருக்கிற தேரும், யானையும், பொன்பல்லக்கு முதலான வாகனக்கூட்டங்களிலே யேறிவருவதில்லாமல் மண்மேலே நடந்து செல்லவும் கற்றிருக்கின்றனவோ, இந்த வுலகத்தையாளுகின்ற அரசனுடைய பாதங்களென்று சிலர் சொல்லுவார்கள், கால்களிலே வந்து வணங்குகின்ற அரசர்களுடைய தலைமேலும் மடிமேலுஞ் செல்லுகிறதில்லாமல் வெயிலாற் கொதிப்புள்ள தூளிகளின்மேலே நடக்கவும் பொறுப்பனவாயினவோ குலபுத்திரனுடைய பொன்மயமான கால்களென்று சிலர் சொல்லுவார்கள் எ - று. 4

அஞ்சாயன் மடவன்னத் தணிதூவி யதனுனு மனிச்சத்தாலும், பஞ்சாலும் பதைபதைக்கும் பதத்தாட்குக் கானடையோ பலித்ததென்பார், செஞ்சாலிக் கோசலமு மிராஜகுல வளநாடுந் தேவர் நாடும், அஞ்சாமற் காத்தருளும் பெருமானுக் கிதுவோவந் தடுத்ததென்பார்.

இ - ள். அழகிய சாயலையுடைய இளமையான அன்னத்தினது அழகான இறகுகளினாலும், அனிச்சமலர்களினாலும், பஞ்சினாலும், பட்டபோது அடி துடிப்பதான கால்களையுடைய சந்திரமதிக்குக் காலால் நடந்து செல்லவோ பலித்தமாயிற்றென்று சிலர் சொல்லுவார்கள், சிவந்த நெல் விளைவதான

கோசலநாட்டையும், மற்ற அரசர்களுடைய சிரேஷ்டமான நாடுகளையும், தேவருடைய நாடுகளையும், பயப்படாமல் காத்தருளுகின்ற எங்களரசனுக்கு இப்படியோவந்து கூடுதலாயிற்றென்று சிலர் சொல்லுவார்கள் எ - று. 5

கச்சைக்குத் திளமுலைச்சந் திரமதிதன் கணவனொடு கமழுமி யேகக்
கொச்சைக் குவலயமயில் கொற்றவனை விட்டுமுனிக் கூட்டம் வேட்
இச்சைக் கிதம்பேசி யீந்தாரைப் பாராட்டி யீவார் தம்பாற் [டாள்
பிச்சைக்கு வந்தவரோ பெண்ணுக்கு மணவாளப் பிள்ளை யென்பார்.

இ - ள். இரவிக்கையைப் பீறவனவான இளமையைக்கொண்ட தனங்களையுடைய சந்திரவதி தனது நாயகனுடனே சேர்ந்து இந்த வீதிவழியே செல்லுவதாக, அறிவில்லாத இந்தப் பட்டணமாகிய பெண், அரசனை விட்டு முனிவர் கூட்டத்தை விரும்பிச் சென்றாள். ஒருவருடைய மனது சந்தோஷமாக அவருக்கு வேண்டிய நன்மைகளைச் சொல்லிக் கொண்டாடி இன்னமும் கொடுப்பவர்களிடத்திலே பிச்சைக்கு வருகிறவர்களோ அந்தக் கொடுப்போருடைய பெண்ணுக்கு மணவாளனாகிறதென்று சிலர் சொல்லுவார்கள் எ - று. 6

முல்லைமுகை நகையாளு முடிவேந்த னுமமகனு முழுதும்
போன, எல்லையெலா மணவறையு மலரணையு முண்டோவென் றிரங்கி
வீழ்வார், தொல்லைவிதிப் பயனாலே வந்திரந்த மாமுனிவன் சொன்ன
வெல்லாம், இல்லையென நீந்தோருக் கித்தனையோ பெரும்பேறென்
றேங்கி வீழ்வார்.

இ - ள். முல்லை யரும்பு போன்ற பல் வரிசைகளுடைய சந்திரவதியும், கிரீடாதிபதியான அரசனும், புத்திரனும் முழுதுஞ் செலவனவான இடங்களெல்லாம் மணவறை வீடும், புஷ்ப மெத்தையும் உண்டாயிருக்குமோவென்று துக்கித்துச் சிலர் கீழே விழுவார்கள்; முன்னை விதிப்பயனாலே வந்து யாசகஞ் செய்த பெரிய ஒரு முனிவன் கேட்டனவெல்லாம் முழுதும் இல்லையென்னுமற் கொடுத்தவர்களுக்கு இப்படித்தானோ அவர்களடைவதான பலனென்று சிலர் அழுதுகொண்டே கீழே விழுவார்கள் எ - று. 7

வல்லார்க்கு மாட்டார்க்கு மறமேநன் றென்றுரைப்பார் மறநன்
றாமோ, அல்லார்க்குங் குழன்மடவீ ரறமேநன் றெனவுரைப்பா ரது
நன் றாகில, நல்லார்க்குந் தீயார்க்கு மெல்லார்க்கு மொருமையினு
னடவா தென்னே, எல்லார்க்கு முளதாகி லெங்கோனுக் கிலையான
தென்னோ வென்பார்.

இ - ள். சிலர், செய்யவல்லவர்க்கும், செய்யமாட்டாதவர்க்கும் வீரமே நல்லது; அவ்வீரமே வேண்டுமென்பார்கள். இருள் போல்வதாய் வண்டுகளொலித்து மொய்ப்பதான கூந்தலையுடைய பெண்களே! வீரம் வேண்டுவதில்லை, தருமமே நல்லது, அது வேண்டுமென்பார்கள் சிலர். அந்தத் தருமம்

நல்லதானால் நல்லவர்களுக்குங் கெட்டவர்களுக்கும் எல்லாருக்கும் (சமமாய்) ஒருவிதமாகவே அந்தத் தருமம் நடவாதிருப்பதற்கு என்ன காரணம். தருமம் செய்வோரெல்லார்க்கும் (அது நன்மை பயக்கக்கொண்டு) இருக்குமென்று சொன்னால், எங்களரசனுக்கு மாத்திரம் அந்தத் தருமம் துணை செய்யாமல் இப்படி போகவிட்டது யாது காரண மென்பார்கள் சிலர்.

என்றால் அரசருக்கு அறமும் மறமும் வேண்டு மென்பதும், பொதுவில் எல்லார்க்கும் அறமொன்றுமே போதுமென்பதும் கருத்து. 8

கொண்டிருந்த வளநாடுங் குறையாத பெருந்திருவுங் கொடித் திண் டேரும், பண்டிருந்த மாளிகையும் பரிசனமுந் தமக்களித்துப் பால னோடும், வண்டிருந்த தாராறும் வாணுதலும் வறியோர்போல் வனத்தே போகக், கண்டிருந்தும் விலக்காத கௌசிகனார் தம்மன மூங் கல்லோ வென்பார்.

இ - ள். தாங்கள் நிலைகொண்டிருந்த வளமையுள்ள நாடும், குறையாத பெரிதான செல்வமும், கொடிகட்டின பலமான தேரும், முன்னே தாங்களிருந்த வீடும், ஊழியக்காரரும், தமக்கேயென்று கொடுத்துவிட்டு, மகனுடனே வண்டுகள் மொய்க்கின்ற மாலையணிந்த அரசனும், தேவியும் தரித்திரரைப் போலக் காட்டுக்குச் செல்ல இதைப் பார்த்துக்கொண்டிருந்தும் எவ்வளவும் விலக்காதிருக்கின்ற விசுவாமித்திரருடைய மனதும் கல்லோடே சேர்ந்ததோ வென்று சிலர் சொல்லுவார்கள் எ - று. 9

செம்மையினு லுலகமெலாந் தனக்களித்துச் செறிவனத்தே தேம்பிச் செல்வோர், தம்மைவர வழைத்திருத்தி யொருமனைக்குத் தலமீயாத் தறுகட் பாவி, நம்மையெலாங் காத்தளிக்க வல்லவனோ வென்கரங்க ணடுக்கி மாறு, வெம்மையினால் வெய்துயிர்ப்பார் மின்னுமை லிடிவந்து வீழ்ந்த தென்பார்.

இ - ள். செவ்வைக் குணத்தினாலே உலகமுழுதும் தமக்குக் கொடுத்து விட்டு நெருங்கின காட்டுக்குள்ளே தளர்ந்துபோகிறவர்களைக் கூப்பிட்டு அவர்களிருக்கும்படி ஒரு வீட்டுக்குள்ளே இடமும் கொடாதிருக்கிற அஞ்சுதலில்லாத பாவியான விசுவாமித்திரன் நம்மை முழுதுங் காத்து ரட்சிக்க வல்லவனோ வென்று கைகள் நடுங்குதலாய்த் தீராத துக்க வெப்பத்தினாலே வெப்பமாகப் பெருமூச்சு விடுவார்கள் சிலர். மின்னலில்லாமல் இத்தலூரிலே இடி விழுந்தது யென்பார்கள் சிலர் எ - று. 10

என்றலமர் தனைவோரும் வயிறலைத்து விழுந்தேங்கி யிரங்குங் காலை, கன்றினொடும் பிடியினொடுங் கிளையினொடும் வனம்புகுதுங் களிறே போல, இன்றளித்த தருண்முனிவர்க் கேற்றனவோ வேற்றி லவோ வென்னு வேங்கிக், குன்றனைய மதில்கடந்தே தனிநடந்து சரையுவினைக் குறுகி னனே.

இ - ள். என்று சொல்லித் துக்கித்து எல்லாரும் வயிற்றிலே யடித்துக் கொண்டு கீழே விழுந்து அழுது துக்கிக்கிறபோது, களிறுடனும் பெண் யானை கூடிவரத் தம்மினத்துடனே காட்டில் செல்கிற ஆண் யானையைப்போல் தான் இப்போது கொடுத்ததைக் குறித்துக் கிருபையுடைய விசுவாமித்திருக்குச் சம்மதியாயிற்றோ சம்மதியாகவில்லையோ வென்று துக்கித்துக்கொண்டு மலையையொத்த மதிலைக் கடந்து தனியே நடந்துபோய்ச் சரயுநதியைக் கிட்டினன் எ - று. 11

உரைபெறுசீ ரிரவிகுலத் தரசர்க்கு வழிவழியே யுரிமை யாய, சரையுவெனுந் தாதியரிச் சந்திரற்கு வந்தவினை தானே தென்று, விரைமலர்த்தாள் பூண்டுகிடந் தரற்றிரவு மிழிந்தேகி விரைந்து போய்மேல், கரையணுகி வரிமணலில் விரிமலர்கள் சொரியுநறுங் காவிற் புக்கான்.

இ - ள். கீர்த்தி பெற்ற சிறப்பையுடைய சூரிகுலத் தரசர்களுக்கு, வமிச பாரம்பரியமாகச் சொந்தமா யிருக்கின்ற சரயுநதி யென்கிற தாதியானவள் இந்த அரிச்சந்திரமகாராஜனுக்கு இவ்விதி எவ்விதத்தினாலே வந்ததென்று அவருடைய மணங்கொண்ட தாமரைபோலும் பாதங்களைப் பிடித்துக்கொண்டு கிடந்து அழும்படி அந்த நதியிலே இறங்கிப்போய் விரைவிலே சென்று பின்பு கரையேறி விரிவாய்க்கிடக்கிற மணலெல்லாம் மலர்ந்த மலர்களை யுதிர்த்துக்கொண்டு பரிமளிக்கின்ற ஒரு சோலைக்குள்ளே போனான் எ - று. 12

வரைக்கனகப் புயத்தினனம் மலர்க்காவில் விரிமணன்மேல் வந்திருந்தான், விரைக்கரும்பூங் குழலாளுந் திருமகனு மிருபாலும் வீற்றிருந்தார், திரைக்கடலுட் பொருக்கெனப்போய்ச் செங்கதிரோன் சென்றனனச் சென்ற காலை, உரைப்பனவும் விளைப்பனவு மறிதுமென முனிவனுமவண் டொளித்திருந்தான்.

இ - ள். பொன்மலைபோலுந் தோள்களையுடைய அரிச்சந்திரமகாராஜன் அந்தப் பூஞ்சோலைக்குள்ளே பரவிக்கிடக்கிற மணலின்மேற் போயிருந்தான். பரிமளிக்கின்ற பூவையணிந்த கூந்தலையுடைய சந்திரமதியும் திருக்குமாரனும் வந்து அரசனுக்கு இருபுறத்திலு மிருந்தார்கள். அப்போது சூரியன் அலைகளையுடைய கடலுக்குள்ளே அவர்கள் துக்கத்தைப் பார்த்துப் பொறுக்கவொண்ணாமல் போய் மறைந்தான். அப்படிச் சூரியன் மறைந்தவுடனே இவர்கள் பேசிக்கொள்ளுகிறவைகளும், செய்கிறவைகளும் நாம் அறிவோமென்று விசுவாமித்திரரும் அங்குவந்து புறத்திலே ஒளித்திருந்தார் எ - று. 13

அக்காலத் தமைச்சரெலா மடல்வேந்த னடிபோற்றி யரசே நீமீண், டக்கால மெழுந்தருள்வ தென்றுரைக்க வாங்கவரை யிருக்க நோக்கி, முக்காலங் கருமுணரு முனிவனுக்கின் றியான்கொடுத்த

மூதூர் தன்னில், எக்கால மும்வருவ தில்லையென்று னமைச்சரெலா மேங்கி வீழ்ந்தார்.

இ - ள். அப்போது மந்திரிகளெல்லாரும் அந்த ஐயங்கொண்ட அரசனுடைய பாதங்களை வணங்கி, அரசனே! நீர் எப்போது திரும்பிவந்து எழுந்தருள்வதென்று கேட்க, அதற்கு அரசன் அவர்களைத் தன்னிரண்டு கண்களாலும் பார்த்துத் திரிகாலமுந் தெரிந்த விசுவாமித்திரருக்கு இன்று நான் கொடுத்ததான இந்தப்பழமையான ஊருக்குள்ளே இனி எந்தக்காலமும் நான் வருவதில்லையென்று சொன்னான். அதற்கு மந்திரிகளெல்லாம் கீழேவிழுந்து துக்கித்தார்கள் எ - று. 14

முன்செய்த தீவினையோ முனிசெய்த வுபகார முன்னுண் டாகப, பின்செய்த கைம்மாறோ பேரரசு கொடுத்தகன்று பெருங்காடெய்த, மின்செய்த நெடுவேலாய் மெய்த்தவனை யாந்துரந்து விட்டே மாகில, என்செய்வா னென்னவுரைப்பார் யாம்போது மவன் போருக் கெதிர்க்க வென்பார்

இ - ள். சிலர், (இது) முன்னேசெய்த பாவந்தானோ! அல்லது விசுவாமித்திரமுனி நமதரசனுக்கு முன்னே செய்திருந்த வுபகாரத்துக்காக இப்போது அதற்குப் பிரதியுபகாரமாகக் கொடுக்கலாயிற்றோ! இந்தப் பெரிதான அரசாட்சியை முனிவனுக்குக் கொடுத்துவிட்டுப் போய் பெரியகாட்டில் வாசம் பண்ணுகிறதற்கு யாது காரணம்? ஒளிவீசுகின்ற நீண்ட வேலையுடைய அரசனே! அந்த மெய்யான தவமுனிவனை நாங்கள் வேண்டாமென்று தள்ளி விடுவோமேயானால் அவன் எங்களை என்னசெய்வானென்று சொல்லுவார்கள். அவரிற் சிலர் அவனுடனே வலிதான சண்டை செய்வதற்கு நாங்கள் போகிறோம் என்பார்கள் எ - று. 15

தோலேந்து மார்பினமலர்த் தொடையேந்தத் தருப்பைமுடிச் சுருக்கத் தோட, கோலேந்துங் குழங்கைக்கதிர் வேலேந்தக் கனகமுடிக் கோடீரத்தின, மேலேந்தி யிருடியிருந் துலகாள வவன்குடைக்கீழ் வீணே யனனன, காலேந்தி வாழ்வதிலயாங் கனன்மூழ்க லமையு மெனக் கட்டு ரைப்பார்.

இ - ள். (இந்த விசுவாமித்திரன்) மான்றோல பூணுவதான மார்பிலே பூமாலை பூணவும், தர்ப்பைகளை நுனியிலே முடிந்து சுருக்கமாயிருக்கிறதைப் பற்றுகிற கையிலே செங்கோல் பற்றவும், அந்தக் குறுதலான கையிலே ஒளி கொண்ட வேலாயுதங் கொள்ளவும், சுவர்ண கிரீடத்தைச் சடைமுடியின்மேற் கொள்ளவும், அந்த முனிவனிருந்து உலகத்தை ஆள அவன் குடைநிழலிலே வியர்த்தமாக அவனுடைய கால்களைச் சுமந்து நாங்கள் வாழ்கிறதைப்பார்க்கிலும் நெருப்பிலே முழுகுதலே தகுமென்று உறுதியாகச் சொல்வார்கள் எ - று. 16

சடைபிடித்துங் கரம்பிடித்துந் தாள்பிடித்து மரவுரியாற் றகைந் துடுத்த, உடைபிடித்து மீத்தவனை யுயாவனத்தி லிப்பொழுதே

யோட்டுகின்றோம், மடைபிடித்த வயல்சூழும் வளநாடு நீபுரக்க வருவா யென்று, படைபிடித்த மலர்க்கரத்தார் பதம்பிடித்து விறல் வேந்தர் பணிந்து வீழ்ந்தார்.

இ - ள். சடையைப் பிடித்திழுத்தும், அவன் கையைப்பற்றியிழுத்தும், அவன் கால்களைப்பற்றி யிழுத்தும், மரவுரியை மறைத்து உடுத்திருக்கிற உடையைப்பற்றி யிழுத்தும், அந்த விசுவாமித்திரனை இந்தக்கணத்துக்குள்ளே காட்டுக்குள்போகத் துரத்திவிடுகிறோம். நீர் பாய்கிற வழிகளையுடைய வயல் சூழ்ந்த வளமைபொருந்தின நாட்டை நீர் ஆளவரக் கடவீரென்று ஆயுதங்களைப்பிடித்து ஜயங்கொண்ட அரசர்கள் மலர்போலுங் கைகளால் அரிசசந்திர மன்னனுடைய கால்களைப்பிடித்து வணங்கி விழுந்தார்கள் எ - று. 17

படிபுரக்கு மன்னவன்கேட் டிருகரத்தாற் செவிபுதைத்துப் பாவ மந்தோ, குடிகெடினும் முயிர்கெடினுங் கொடுத்ததுவாங் கேனென்று கூறு மெல்லை, கடிபொழிலிற் காத்திருந்த கௌசிகனும் வந்தெதிர்த்தான் கண்ட போதே, அடியிணைதன் முடிசாத்தி யிருகரத்தா லுறப்பூண்டா னரசர் கோமான்.

இ - ள். அந்த வார்த்தைகளை உலகத்தையாளுகின்ற அரசன்கேட்டு, இரண்டுகைகளாலுங் காதுகளை மூடிக்கொண்டு, ஐயோ! இதென்ன பாவம்! என் குடி கெட்டாலும், என்னுயிர் போனாலும், நான் கொடுத்த ஊரை யினிக் கொள்ளேனென்று சொல்லும்போது, அந்த மணங்கொண்ட சோலையிலே மறைந்திருந்த விசுவாமித்திரர் வந்து அரசன் முன்னே நின்றார் அவர் நிற்கக் கண்டவுடனே அவரிரண்டு பாதங்களையுஞ் சிரசின்மேற் சூடிக்கொண்டு, பின்னால் தன்னிரண்டு கைகளாலும் அந்தப் பாதங்களை யிறுகத்தழுவித் தன் தலைக்கு முடியாகப் பூண்டுகொண்டான் அரசர்களுக் கரசனான அரிசசந்திர மகாராஜன்.

வெய்தாநீ வேடுவரால் விலங்கினத்துங் கொலவித்தாய் வெகுண்டே னத்தை, எய்தாயென் மக்களையு மிசைகேட்டுத் துரத்தடித்தா யின்று மென்னை, வைதாய்நீ யெனக்களித்த மண்டலத்தை யான்றரநீ வாங்காயாகில், செய்நாயின ரிவருரைத்த தீமையெல்லா மென்னமுனி செப்பினனே.

இ - ள். (அப்போது) கோபமாக நீ வேடர்களாலே மிருகங்களை யெல்லாங் கொல்லும்படி செய்தாய், பின்னுங் கோபங்கொண்டு பன்றியையும் பாணத்தால் எய்துவிட்டாய்; என் பெண்பிள்ளைகளையும் அவர்களிடத்திலே பாட்டுக் கேட்டு ஒன்றுங் கொடாமற் றுரத்தியடித்தாய், இப்போதும் என்னைத் திட்டுகிறாய், இனி நீ எனக்குக் கொடுத்த உலகத்தை யானே கொடுக்க நீ வாங்கிக் கொள்ளாமற்போனால், இப்போது இவர்கள் செய்த தீமைகளெல்லாம் நீயே பண்ணினவனாவாயென்று விசுவாமித்திரர் சொன்னார் எ - று. 19

சிறுத்தவர்க ளறியாமற் செய்பிழை யத்தனையுஞ் செவ்வி யோயநீ, பொறுத்தருளா யாமாகிற் பொறையென்னும் முறையென

னும் புலமை யென்னும, ஒறுத்திடினும் வெறுத்திடினு முனக்களித்த வரசுரிமை யொருகாலத்தும, மறுத்தினியான் வாங்கேனென் றெடுத் துரைத்தான் மனனனமுனி வாடட முறறான்.

இ - ள். செவவைக குணத்தையுடைய முனிவரே! சிறியோர்கள் தெரி யாமற் செய்த குற்றஙகள் முழுதும் நீர் பொறுததருளுதலே வேண்டும். அப் படிப் பொறுத்தருள செய்யாவிட்டால உமமுடைய பொறுமைதான என்ன பயனைத தரும்? உமமுடைய நீதிதான என்ன பயனைத தரும்? உமமுடைய அறிவுதா னென்ன பயனைத தரும்? இனி நீர எனனைக கொலலுகிறதா யிருந் தாலும, எனனை முழுதும வெறுததுவிடுகிறதா யிருந்தாலும், உமககுக் கொடுதத என னரசாட்சியை நானொரு காலததிலும் திரும்ப வாஙகமாட்டே னென்று அரிச்சநதிரன உறுததிச சொனனான. அதறகு விசுவாமிததிரா மிகவும வாடுதலானா எ - று. 20

பொனகேடகப பொனனளிந்தநான புவிகேடகப புவியளித தான போதா தெனறு, எனகேடகி னுந்தருவ திலலையெனும புன் மையிவ னிடத்தி லிலலை, முனகேடட பொருளாலே மொழிவழுவந தெய்துமது முடககமானால, பினகேடடா ரிகழுவாரகள யாம் பொறுததுமெனநினைநது பேச லுறறான.

இ - ள். பொருள் கேட்க நாம கேட்டபடியே பொருளுங கொடுததான; உலகைக கேட்க கேட்டபடியே உலகததையுங கொடுததான, இவைகள் போதா மல் இனி எனனுவாலே நான எதைக கேட்டாலும் கொடுப்பதிலலை யெனகிற அறபகுணம் இந்த அரிச்சந்திரனிடததிலே கிடையாது; முனனே நாம கேட் டுக கொடுககிறேனென்று ஒப்புக்கொணட பொருளினாலே இனி யிவனகொடுகக மாட்டாமல் சொறறவறுணடாகும. அபபடி அவன கொடுககமாட்டாமல கெடுத் தப்புமானால பினபு கேட்டவாகளெலலாம இவனை யிகழசசி பணணுவார்கள். ஆகையால், இபபோது நாம பொறுததுக கொளவோமெனறு ஆலோசிததுக கொணடு சொலலலுறறான எ - று. 21

ஒனறுரைகக நீகேளா யுணமைககும வணமைககு முரியோ யென்னை, இனறுரைதத பிழைபொறுததே னழலவேள்வி முடிததி டுதற கீவே னெனறாங, கனறுரைதத பொருளதனை யளிபபாயோ வளியாயோ வரச வெனறான, மனறுரைதத கௌசிகனை யடிதொ ழுது வாய்புதைததங கிது ரைபபான.

இ - ள். மெயமமைககும, கொடைககும, தககவனானவனே! நான சொலலுகினற மொழியைக கேடபாயாக எனனை நீ இபபோது சொனன குற்றததைப பொறுததுக கொணடேன. அககினி மூட்டிச் செய்கிற யாகததுககாகக கொடுககிறேனெனறு அபபோது அங்கே நீ சொனன பொருளகளைக கொடுப்பாயோ கொடுககமாட்டாயோ, அரசனே யென்று சொனன விசுவாமிததிருடைய பாதஙகளை அரசன வணங்கி வாயை மூடிக் கொணடு அவவிடததே இதைச சொலலுகிறான எ - று. 22

உன்னுடனே யுரைத்தபொரு ளுனககடியே னுகந்தளித்த வுரிமைச் செல்வந, தன்னுடனே போனதெனு வுணர்நதேனு யினுமுனி வாற் றருவ லென்றே, நின்னுடனே யானுரைதத சபதமினி மாறுவனோ நீயாள் விட்டால, பொன்னுடனே தருவனென்றான் புகரோனை யவனழைததுப பொருததினனே.

இ-ள். உம்முடனே நான் கொடுக்கிறேனென்று சொனன பொருள் உமக்கு அடியேன சந்தோஷிததுக கொடுதத எனக்குச் சொந்தமான செல்வத்துடனே போயினவென றெண்ணினேனானலும், உம்முடைய கோபத்துக் கஞ்சிக் கொடுககறேனென்று உமமுடனே நான சொனன சபதத்தை இனித் தப்புவேனோ? தப்பமாட்டேன. இனி நீர் எனனுடனே கூட வரும் படி ஒரு ஆளை அனுப்பினீரானல் பொருள்கள் முழுதும் உடனே கொடுக்கிறேனெனறு அரசன சொனனான. அதறகு விசுவாமிததிரா சுககிரபகவானைக் கூப்பிட்டுப் பொருள் வாங்கி வரும்படி சம்மதப்படுததினா எ-று. 23

உள்ளியதீ வினையனைததுந தனிததிருததி வகைவகையே யுரைதது நீபோய், அளளியிடும பொருளகவரா தானையினமேற் கவண் சிலைபோ மளவுந தநதால, கொளளுதிநீ பினபோன கூலியையும் பெறுதியெனுக் கூறித நீப, வெளளிதனை யுடனகூட்டி மீண்டுமழைத் தொருவாய்மை விளமப லுறறான.

இ-ள. தான எண்ணின தீயசெய்கைகளெலலாம, அந்தச் சுக்கிரனைத தனியே ஒருபுறததி லிருககச்செயது வகைவகையாக இனனயினனபடி செய் யெனறுசொலலி, நீ கூடப்போய அவன அளளிக கொடுககிற பொருளை வாங் காமல் யானையினமேலிருநது கவணகல எறிநதால அது செலலு மளவுளள பொருளைக கொடுததால வாஙகிககொள பினபு நீ அவனோடு சென றதறகுள்ள கூலிப்பொருளும வாஙகிககொளளெனறு சொலலிப பொலலாத வெள்ளியென கிற சுககிரனைககூடக கூட்டி அனுபபி மறுபடியும அவனை யழைதது ஒரு வார்ததை சொல்லுகிறா விசுவாமிததிரா எ-று 24

துன்றுபசிக கடருநணி தேடுமபோ தெனககினிய சோறு வேண்டும, எனறுமொழி தநதிடினு மேலாது வேணடாவென் னிவனுண்பெறுறல, அனறுபொரு டருமுனுணற ககலேனில் லெனததத, நமமவதி வநதால, நினறமரைக கரிகுறிதது மறுதினததி னில்லாம னீவா வென்றான.

இ-ள். உனககு மிகுந்த பசிவந்தால் இலைகள் முதலானவை தேடுகிற போது எனககு நல்ல சோறுவேணுமெனறுசொல, அபபடியே கொடுத தாலும் (எனவயிறறுககு இதுபோதாது ஆதலால் வேண்டாமெனறு சொல், இவன சோறுகிடைத்து உணகிற அபபோது, போகாதேகிலலு, எனக்குப் பொருள் கொடுககுமுனபு நீ சாப்பிடககூடாதெனறு தடுதது விடு, நாமு

**கொடுத்த கெடுவந்தால் அங்கேயிருக்கிறவர்களை சாட்சிவைத்துவிட்டு (நீ சிறிதும் தாமதியாமல்) மறுநாளை இங்கே வாவென்று சொன்னார் எ - று.** 25

*அடுத்திருந்தி மனங்கலக்கி முனிககளித்த மொழிமாறி யளியே*
*னென்னு, எடுத்துரைக்கி லுன்னரசை யான்வாங்கித் தருவேனென்*
*னிசைந்தா னாகில், தடுத்தழைத்து வருதிநமக் கதுபோது மெனப்*
*பலவுஞ் சாற்றிக் கூட்டி, விடுத்தனனவிட் டரசனுக்கு விடைகொடு*
*த்து மாமுனிவன் மீண்டு போனான்.*

**இ - ள். பின்னும் நீ இவனோடு கூடியிருக்கச்சொல்லி மனத்தை கலங்கும்படிச்செய்து (அரிச்சந்திரா) விசுவாமித்திரர்க்குக் கொடுக்கிறோமென்று நீ சொன்ன சொற்றவறி நான் கொடுக்கமாட்டேனென்று ஒப்பி நீ சொல்லுவாயானால் உன் அரசாட்சியை நானே வாங்கித் தருகிறேனென்றுசொல் அதற்கு அவன் சம்மதித்தானேயானால் அவனைத் தடைசெய்து நம்மிடத்துக்குக் கூட்டிக்கொண்டுவா. நமக்கு அவ்வளவே போதுமென்று பலவகைகளுஞ் சொல்லும்படி சுக்கிரனை அரசனுடனே கூட்டிவிட்டு அரிச்சந்திரனுக்கும் விடைகொடுத்துப் பெரிய விசுவாமித்திரர் திரும்பிப்போனார் எ - று.** 26

*முனியேக மன்னவனு மூரிநெடுஞ் சேனைதனை முனிவன் றன்*
*னோடு, டினியேகு மவற்கினியா ரெனக்கினியா ரெனவழுதங்கி யாரு*
*மீண்டார், பனியேகு முனமெழுந்து பைந்தொடியு மன்னவனும்*
*பாலன் றானும, தனியேகக் கண்டமைச்சன் சத்தியகீர்த்தியு மவர்க*
*டம்பிற் சென்றான.*

**இ - ள். அப்படி விசுவாமித்திரர் போகவே, அரிச்சந்திரன் பெரிதான நெடியசேனைகளைப் பார்த்து இனி விசுவாமித்திரருடனே போங்கள், அவருக்கு நல்லவர்களே எனக்கு நல்லவர்களென்று சொல்ல, அழுதுகொண்டு அங்குநின்ற எல்லோருந் திரும்பினார்கள், உடனே பனி கலைந்துபோகுதற்கு முன்னே பசுமையான வளையலை அணிந்த சந்திரமதியும் அரசனும் புத்திரனும் வேறு துணையின்றிப் போவதைப்பார்த்து மந்திரியாகிய சத்தியகீர்த்தி யென்பவனும் அவர்களுடனே கூடப்போனான் எ - று.** 27

*வருகின்ற மந்திரியை மன்னவனுங் கண்டுவிழி வழிநீர் வார,*
*உருகினியவன்பினுட னீபோந்தா னமறைமுனிவற் குற்றாருண்டோ,*
*அருகிருந்து புவிநடத்த நின்போலங் கறிவுடையா ராருமில்லை, திரு*
*நகர்க்கே மீண்டேகென் றுரைத்திடலு மமைச்சர்பிரான் செப்ப*
*லுற்றான்.*

**இ - ள். அப்படிக் கூடவருகிற மந்திரியை அரசன் பார்த்துக் கண்களிலிருந்து நீரொழுக உருகுகின்ற இனிதான அன்பினுடனே கூடி நீ என்னுடனே வந்தாயானால் அங்கே வேதபாராயணரான விசுவாமித்திரருக்கு உற்றவர் யாரிருக்கிறார்கள்? ஆகையாலே அவரருகிலிருந்து உலகத் தரசாட்சியை நடத்துவிக்க உன்னைப்போல் அங்கே அறிவுள்ளவர்கள் ஒருவருமில்லை, இனி நீ**

அழுகுமிருந்த பட்டணத்துக்கே திரும்பிப்போவென்று சொல்லும்போது அந்த மந்திரித்தலைவன் சொல்லத் தொடங்கினான் எ - று. 28

கோதிலாப் பெருங்குணத்தாய் குற்றேவ லிந்நெடுநாள் கொடியேன் செய்தேன், ஆதலா னீயேகு மருஞ்சுரத்திற் பணிந்தபணி யார்தான் செய்வார், மாதரா ருடனேக மகனேக நினனுடன யான் வாரே னாகில், ஏதிலா னானே னென்றிடியே றுண்டமர மெனன வீழ்ந்தான.

இ - ள். குற்றமில்லாத பெரிய குணங்களையுடைய அரசனே! உம்முடைய சிறிதான ஊழியங்களெல்லாம் இவ்வளவு நெடுங்காலமும் பாவியான நான செய்துகொண்டு வந்தேன. ஆகையால், இனி நீர் போகின்ற அருமையான பாலைவன முதலிய காடுகளெல்லாம் நீர் சொன்ன ஊழியங்களை யார் அங்கே செய்வார்கள்? எங்கள் தாயான சந்திரவதியுமவர், புத்திரனுங் கூடவர, நானமாத்திரம வராதிருப்பேனானால உமக்கு அந்நியனானவனே ஆயினேன என்று சொல்லி இடியேறு விழுந்த மரமபோல விழுந்து அழுதான எ - று. 29

இடிவீழ்ந்த மரமபோல வீழ்ந்தாற்று மந்திரியை யெடுத்து மேனிப, பொடிதுடைத்து முடிதடவிப பொழிவிழிநீர் தனைமாற றிப் பொரும லாற்றிக, கடிநகரி லிவனைவிடி லுயிர்விடுவ னெனக் கதறிக் கலங்கிக காமா, வடிவழுங்க மனங்கருக வுயிர்நடுங்க வருந் தேனீ வருதி யென்றான.

இ - ள். அப்படி இடிவிழுந்த மரமபோற கீழேவிழுந்து பிரலாபிக்கின்ற மந்திரியை யெடுத்து அணைத்து, அவனுடம்பிலுள்ள புழுதிகளை யெல்லாந் துடைத்து, அவன் தலையைத்தடவி, சிந்துகின்ற கண்ணீரைப் போக்கித், துக்கித்தழுகிறதையுந் தீர்த்து, இந்தக காவலையுடைய பட்டணத்தில இவனை விடடுப் பிரிவேனேயானால உயிரைவிடுவானென்று கதறியழுது கலக்கங் கொண்டு உனதழகான உடம்புங்கெட, மனமுந்தீய, உயிரும நடுங்க, நீ வருத் தங்கொள்ளாதே, கூடவாவென்று சொன்னான அரசன எ - று 30

### கலி விருத்தம்

வாழ்வினைவ ளர்ந்தபொழு தென்னினமிக வாழ்ந்தாய்
தாழ்வினைநி கழ்ந்தபொழு தென்றனொடு தாழ்ந்தாய்
சூழ்வினைந மைக்கடுத்து சுற்றினவை யெல்லாம
ஊழ்வினையெ னச்சொலி யுடன்கொடு நடந்தான்.

இ - ள். நான வாழுங்காலத்தைப் பெறுவதான நல்வினை வளர்ந்தபோது என்னிடத்திலிருந்து மிகவும் வாழ்வையே யடைந்தாய்; எனக்குத் தாழ்வாகிற தீவினையுண்டானபோது நீயும என்னுடனே கூடித் தாழ்வையே யடைந்தாய்; ஆகையால், ஒருவர் எண்ணிச்செய்கிற செய்கைவந்து நம்மை விரைவிலே சூழுமானால அப்படிச் சூழுமவைகளெல்லாம முன்னேயுண்டான கருமமேயல்லது வேறில்லையென்று சொல்லிக் கூடக் கூட்டிக்கொண்டு போனான எ - று.

தொடர்ந்தமதி மந்திரி தொடர்ந்துபிற கேக
விடந்திகழ்க டுநதொழிலின் வெள்ளிமுன டக்க
வடந்திகழ்செ ழுநதன மடநதை யொடு மன்னன்
நடநதனன யோத்திவள நனனகர்க டநதே.

இ-ள். அப்படிப் பினனே தொடர்ந்துபோன மதிமந்திரி அரசன் முதலினோரைப் பினபற்றி வரவும், விஷத்தைப்போல கஷ்டசெய்கையையுடைய சுக்கிரன முனனே செலலவும, முத்துமாலைகள் விளங்குவதான செழுமையான கொங்கைகளையுடைய சந்திரவதியுடனே அரிச்சந்திரமகாராஜன அயோத்தியாகிய வளப்பங்கொண்ட நலலநகரைக கடநது போயினன எ-று. 32

நண்பினொடு மின்புரிசை நன்னகரை நோககி
விண்புலமெ ழுநதமதில வேலிதனை நோககிக
தண்புனல வழஙகிடுத டஙகளையு நோககித
கண்புனல்சொ ரிநதழுது காரிகைந டநதாள.

இ-ள். பிரியத்துடன மினனுகினற மதிலையுடைய நல்ல பட்டணத்தைப் பார்த்துககொண்டும் ஆகாயவரையிலுயாநதுள்ள மதிலாகிய வேலியைப் பார்த்துககொண்டும, குளிர்ந்த நீர்பாய்கிற தடாகஙகளைப் பாாததுககொண்டும் கண்ணீரை ஒழுகவிட்டழுதுகொணடு சந்திரவதி நடந்தாள எ-று. 33

பாதகம லஙகளபத றப்பதற வைததுக்
காதலிந டநதநடை கண்டரசர் கோமான்
நாதனரு ளிபபடியி ருநததெனு நககான
ஆதபன முன்றெழும ருஞசுர மடைநதாா.

இ-ள். பாததாமரைகள் துடிககததுடிகக அடி எடுததுவைததுத தனது நாயகி நடககிற நடையைக கணடு ராஜாதிராஜனை அரிசசநதிர ஈசுவரனுடைய கிருபை இப்படிககிருககதெனறு சிரிததான. பினபு சூரியனாலே கொதிப்புககொணடு தோற்றுகிற ஒரு பாலைவனததுககுளளே போனாாகள எ-று.

படிசுடவ டிககணகல பாரினெழு காய்நுண்
பொடிசுடவு டற்கணழல பொஙகுவெயின மீது
முடிசுடமி கத்துடிது டிததுமுதிா தீபபூங
கொடிசுடரெ ழுநதுபடு கொளகையின ராஞா.

இ-ள் கால்களிலே பூமிசுடவும, இவாகள செலலுகிற பூமியிலிருந்தெழுகின்ற நுண்ணிதான தூளிகள உடமபெல்லாஞசுடவும, கொதிககினற வெயிலானது தலைமேறசுடவும, மிகவும பதைபதைத்து முதிாநத நெருப்பிலே பூங்கொடியானவை சுவாலை வீசிக கசஙகுகிற கொள்கையை யுடையவாகளானார்கள் எ-று. 35

அநதநெடு வெஞ்சுரம முன்றெழுதல கண்டே
மைநதனையெ டுத்துமதி மநதிரிந டந்தான்

பைந்தொடிப டம்பரிசு கண்டுயிர்ப தைத்தே
வந்தெனது தோளினிவர் வாயென வுரைததான்.

இ - ள். அப்படி அந்நெடிதான வெப்பங்கொண்ட பாலைவனம் கொதித்துக் கிளருதலைக்கண்டு புத்திரனைத் தூக்கிக்கொண்டு மதிமந்திரியான சத்திய கீர்த்தி நடக்கலானான். அப்போது சந்திரவதி படுகிற பாட்டைக்கண்டு அரிச்சந்திரன உயிர் துடிதது (பெண்ணே!) கிட்டவந்து எனது தோளின்மேலேறிக்கொள்ளுவாயென்று அரசன சொன்னான் எ - று. 36

பூமகளு மண்மகளு மேறுதலபொ ருமல
மாமுனிவ னுக்குறவ ளித்தநின ம ணிதந்தோள
நாமநெடு வேலிறைவ நாயினிகழ் பெண்பால
ஆமெளிய ளேறினர காழுந்தழிவ னென்றாள.

இ - ள. அச்சததைதத தருவதான வேலாயுததைதயுடைய அரசனே! இலக்ஷ்மிதேவியும பூமிதேவியும ஏறிக்கொள்கிறதைத் தாங்கமாட்டாமல ஒரு பெரிய கிழவனான முனிவனுக்குண்டாகக் கொடுத்த தேவரீருடைய அழகிய தோளிலே நாயைப்போற் பிறராலே யிகழததகக பெணபாலாகிய அபலையான நானேறினால நரகிலேயழுந்தி அழிவுபடுவேனென்று சந்திரவதி சொன்னாள். எ - று. 37

என்றுமயில கூறிடவி ரங்கியெறும் மன்னன
நின்றுதளா வெய்திவிழி நீருகவு யிரதது
மன்றலசொரி கின்றகுழல வலலியனை யாயநிற
கென்றுமுள திநதவறி வென்றழுது சென்றான்.

இ - ள். என்பதாகச சந்திரவதி சொலலவே, துக்கிதது மகா வல்லவனான அரசன அங்கே நின்று தளாச்சி யுண்டாகவும கணகளில நீரொழுகவும பெருமூச்சு விட்டு, பரிமளஞ் சிந்துகின்ற கூந்தலையுடைய கொடிபோன்ற பெண்ணே! உனக்கு எப்போதும இந்தப புத்தியே யிருக்கின்றதென்று அழுதுகொண்டு போனான எ - று 38

சுட்டடிக றுததிட்டு ளககமுற நீணை
விட்டெரிகொ ழுந்தழலி னெய்சொரிவி தம்போல
கட்டெறும்பு தேளபணிக ருங்குளவி பூரம
மட்டறவ ழைததுமுனி விட்டனைவ ழிக்கே.

இ - ள. கால்கள சுடப்பட்டு உடம்புகளுங கறுப்பாய் கடுக்க முண்டாக நீண்ட நாககுகளை நீட்டி எரிகின்ற கனமான நெருப்பிலே நெய்யை யூற்றின தனமைபோல கட்டெறும்பு, தேள, பாமபு, கறுததகுளவி, பூரான ஆகிய இவைகளை அளவிலலாதபடி வரவழைதது அந்த வழியிலே தோன்ற விசுவாமித்திரனனுப்பினா எ - று. 39

பட்டமர மேடுசுழி பாறைவழி யெலலாம
அட்டையொடு முட்டைமிசை யாடரவ மொயபபக்

கட்டரவு தேளரணை கண்டவிட மெங்கும்
மட்டறநெ ருங்கியடி வைக்கவிட மில்லை.

இ - ள். பட்டுப்போன மரங்கள், மேடுகள்சூழ்ந்த பாறைகள் ஆகிய இந்த இடங்களெல்லாம் அட்டைகளுடனே முட்டைகள்மேலே ஆடிக்கொண்டு அடைகிடக்கிற பாம்புகள் மொய்க்கவும், கட்டுவிரியன், தேள், அரணை ஆகிய இவைகள் பார்த்தவிடங்களெல்லாம் அளவில்லாமல் நெருங்குதலாய் இவர்கள் கால்கள் வைக்க இடமில்லையாயின எ - று. 40

நடந்தவடி யுட்புறந லிந்திடுமெ றும்பர்
அடர்ந்தபல பூரமுட னட்டைகள் கடிக்கும்
தொடர்ந்துபல வாளரவு சுற்றியடி தீண்டும்
கடந்தகலி னும்பலக ருங்குளவி கொட்டும்

இ - ள். இவர்கள் நடக்கிற கால்களி னுட்புறத்தே எறும்புகள் கடிக்கும்; நெருங்கின பலவகைப் பூரான்களுடனே அட்டைகளுங் கடிக்கும்; கூடப்பற்றி வந்து பலவிதமான நீண்ட பாம்புகள் கால்களிலே வந்து சூழ்ந்து காலைக்கடிக்கும்; அதைக்கடந் தப்பாறபோனாலும் பலவகைக் கருங்குளவிகள் வந்து கொட்டும் எ - று. 41

அறப்பழுத்து பட்டுள மழுந்துவதி லாவி
இறப்பதினி தென்றுமன மெண்ணினுயிர் போகா
வறப்பதினு லந்தொரும ருந்துமிலை யாகம
கறுத்தழகு கெட்டிடறு டித்தனக றுத்தே.

இ - ள் மிகவும் காயங்கள் உண்டாகி மனமானது சஞ்சலப்படுவதைக் காட்டிலும் உயிர் துறப்பது இனிதென்று மனமெண்ணினால் உயிர் போகிற தில்லை, கொதிப்பான அவ்விடங்களிலே வேண்டினால் ஒரு மருந்து மகப்பட வில்லை; அதனாலே உடம்பு கறுத்து அழகுங் கெட்டு தேகமெல்லாந் துடிதுடித்தன பின்னுங் கறுப்பாகி எ - று 42

மைநடுவி ளங்குவிழி மங்கையெதிர் சீறிப
பைநடுந டுங்கவரு பல்லரவு கண்டே
மெய்நடுந டுங்கிட வயப்பையர்வெர் இருந்தும்
கைநடுந டுங்கவிரு கண்மலர்பு தைத்தார்.

இ - ள். கறுமை நடுவே விளங்குவதான கண்களையுடைய சந்திரமதி தனக்குமுன்னே சீறிக்கொண்டு படம்விரித்துத் துடிதுடிக்கக் கடிக்க வருகிற நஞ்சுப்பல்லையுடைய பாம்பைக் கண்டு உடம்பு மிகவும் நடுங்கும்போது, ஆகாயத்திலுள்ள தெய்வப் பெண்கள் பயந்து (இந்த உத்தமிக்கிப்படி வரலாமோ வென்று) தங்கள் கைகள் மிகவு நடுங்க இரண்டு கண்களாகிய மலர்களை மூடினார்கள் எ - று 43

நீருமிலை நெட்டிலையி னிழலிலை நீளவெய்த
தேரதனை நீரெனநின் றடதடிசி வந்தார்
வேரினொடு வெந்தமர நீழலவி ருமபிச
சேரினும டாநதரவு சீறியெழு மனறே.

இ-ள். காட்டிலே ஜலமுங் கிடையாமல் நீண்ட இலைகளையுடைய மரத்துக்கிழலுமில்லையாய் நீண்ட பேய்த்தேரென்கிற கானலைத் தண்ணீரென்று நினைத்து நடந்தோடிக் கால்களெல்லாஞ் சிவந்தார்கள் வேருடனே வெந்து கிடக்கிற மரத்துக்கிழலை வேண்டிப் போனாலும் அங்கே நெருங்கிய பாம்புகள் சீறிக் கடிக்க வருகின்றன எ-று. 44

காவலவ னப்பரிசு கண்டுகைய றைந்தே
யாவரெழு பாரினிது படடவாக ளென்று
மூவரையு நோக்கிலனம முனிவனையு நோக்கான
தேவரையு நோக்கிலனமுற றீவினையை நொந்தான்.

இ-ள். எல்லாரையுங் காக்கவல்லவனான அரிச்சந்திரன் அவஸ்தைகளைக் கண்டு கையைத்தட்டி இந்தச் சப்தலோகங்களிலும் யார் இப்படித் துன்பப்பட்டவர்களென்று மும்மூர்த்திகளையும் நொந்துகொள்ளவில்லை. அந்த விசுவாமித்திரரையு நொந்துகொள்ளவில்லை. மற்றத் தேவர்களையு நொந்துகொள்ளவில்லை. முன்னே தான் செய்துள்ள தீவினைப்பயனிப்படி விளைந்ததென்று வருந்தினான் எ-று. 45

சுடுந்தழலில் வெந்தொழிநெ ருலந்தரசர் சோகமான
கொடுஞ்சுரம கன்றுகுளிர் கோமதிபு குந்தான்
நடுங்கிடவி லங்கினந விந்திடுமெ லாசசெங்
கடுங்கதிர ய்ந்தலைக ருங்கடலபு குந்தான்

இ-ள். அப்படிச் சுடுகின்ற நெருப்பிலே வெந்து தன்னழகெல்லாங் குலைந்து அரசர்க்கரசனானவன் அந்தக் கொடிதான பாலைவனத்தைக் கடந்து குளிர்ந்த கோமதியாற்றின் கரைக்கே போனான். அப்போது அந்த முல்லை வனத்திலுள்ள மிருககூட்டங்கள் நடுங்கவும் அவ்வாறு வருத்தஞ் செய்யுமென்று சிவந்த கடுமையான சூரியன் பயந்து மறைகிறதுபோல கருங்கடலிலேபோய் முழுகினான் எ-று 46

மைதிகழ்கு றும்பொறைய னந்திலிழி மாலயா
றெய்திய தனவண்டு றையிழிந்துபுன லுண்டு
கைதவநி னைந்துபினி கண்களுழி சிந்தப
பெய்தமணல வண்டலிடை பேதைபோ டிருந்தான்.

இ-ள். மேகங்கள் தவழுவனவான மலைச்சாரிலுள்ள முல்லைநிலத்திலே மலையிலிருந்திறங்கி வருகிற அந்தப் பெரிய ஆற்றைக்கண்டு அதனருகேபோய் அதனது அழகான துறையின்மேல் இறங்கி நீருண்டு, விசுவாமித்திரருடைய வஞ்ச

கங்கைளை யெண்ணிக் கண்களிலே நீரொழுக வாககரிட்டுக கிடக்கிற மணல்மேட்டி னருகிலுள்ள சேற்றுநிலத்திலே சந்திரவதியுடனே இருந்திளைப்பாறினுன எ - று. 47

அந்தவமை யததடவி யுமபொழிலு நண்ணி
வநதடிவ ருநதியவ ருததமுண ராமல்
கநதமொடு காய்கனிக வாநதருகு வநதே
மநதிரியு மன்னவனமுன வைததடிப ணிநதான.

இ - ள். அந்த வேளையிலே காடுகளிலுஞ் சோலைகளிலும் போய நடந்து வந்து கால்கள் வருந்தியிருக்கிற வருத்தத்தை நினையாமல் மந்திரியான சத்திய கீர்த்தி கிழஙகுகளுடனே காயகளை பழஙகளைக கொணடுவநது சமீபமாக அரசன முன்னேவைததுப் பாதஙகளை வணஙகினுன எ - று. 48

ஆக்கணமெ டுததிறைவ னககனியு ளௌலலாம
மிக்கனதெ ரிநதுமறை விபபிரனமுன வைததே
தககனவு ரைததெனது சஞசல முணாநதே
இககனியெ டுததினித ருநதெனவி சைததான.

இ - ள். அரசனுனவன அந்தட்சணபபொழுதிலே அவைகளை எடுதது அந்தப் பழங்களிலெல்லாம் மிகுநத ருசியுள்ள பழஙகளைத தெரிநதெடுதது வைதிக பிராமணனுயக கூட வநதிருக்கிறவனுககு முனனே வைததுத தகுந்த உபசாரங்களைச சொலலி எனனுடைய சஞசலஙகளெலலாந் தெரிந்துகொணடு இந்தப பழஙகளை யெடுததுச சநதோஷமாகச சாபபிடுமெனறு சொனனுன எ - று. 49

பரிநதுற விரநதிறைப காநதமொழி கேளா
விரிநதநெடு வாயினிதழ் வெணபலின துககி
எரிநதிடுசி னததழலி ரணடுகணி னுலும
சொரிநதுளமவெ குணடுசுடு சொறகளசில சொனனுன.

இ - ள். மிகவும் பரிவுடனே அரசனசொனன இநத வாாததையைக கேட்டு அகனற வாயிலுள்ள நீணட பறகளாலே உதட்டைட மடிததுக கடிதது எரிகினற கோபாககினி இரணடு கணகளாலுஞ் சிநதுதலாகி மனததிலேகோபஙகொணடு சுடுவனவான கடுஞ்சொறகள் சில சொலலலானுன அநதச சுககிரன எ - று. 50

### கோச்சகக் கலிப்பா

நீயு முனியு நிகழ்ததுநெறி முனனுணாநது
தோயுந தயிரொநய்பால சோறறோ டருநதாமல்
காயுங கிழங்குங கனியுமிலை யுநதினறு
வாயும வயிறும வளாககிலேன மனனவனே.

இ - ள். அரசனே! நீயும அந்த விசுவாமித்திரமுனியும் பேசிக்கொண்டே கிரமங்களை முன்னமேதெரிந்து தோய்ந்துள்ள தயிர்நெய்-பால-ஆகிய இவைகளை நல்ல சோற்றுடனே கூட்டிச் சாப்பிடாமல், காய்களும கிழங்குகளும் இலைகளுந்தின்று வாயையும் வயிறறையும் வளர்த்துகொண்டிராதுபோனேன எ-று.

அப்படிக காய்முதலியவற்றை முன்னேதானே தின்று பசியாறிப் பழகியிருந்தேனேயானல் இப்போதுண்டுபோன, பழகாத நானெனப்படிச்சோறு முதலானவையில்லாமற பசியாறுவே னெனபது கருதது. 51

ஒன்று புகரியமப வேஙகிக் குலைகுலைநது
நின்று மொழிகுழறி நெஞசடைதது வாயுலாநது
சென்று பணிநது திருககரததாற றுள்பூண்டு
குன்றுஞ் சிலையுங் கரைநதுருகக கூறலுற்றான்.

இ - ள். எனறு சுககிரன சொலலவே, அரசன ஏககஙகொண்டு நடுநடுங்குதலாகிநின்று வார்த்தைகள் குளறி மார்படைப்புணடாகி வாயுஙகாய்ந்து அந்த சுக்கிரனருகேபோய வணஙகித் தனதழகிய கைகளாலே அவன பாதஙகளைப் பிடித்துககொண்டு மலையுங கலலுங கரைந்துருகுமபடி சொலலத தொடங்கினன எ - று. 52

நாடு நகரு முனிக்களிததது நானறியாக
காடு திசைநோக்கி வநதமைநீ கண்டிலையோ
வாடுந தமியேன் வருநதிப்போய்ப பாலடிசில்
தேடும பரிசுளதோ செப்பாய் தரவென்றான்.

இ - ள். எனது நாட்டையும நகரையும அந்த விசுவாமித்திருககுக் கொடுததுவிட்டு நான தெரியாத வனநதரஙகளைக குறிததுவநது வருந்துகிறதை நீர் பாாததிலீரோ! இபபடி வாடியிருககிற தனியனான நான வருத்தங கொண்டுபோய்ப் பாலுஞசோறுந தேடிககொடுபபதாகிய வகை எனனிடததுள்ளதோ சொலலும நான தருகிறதறகெனறு சொனனன அரசன எ-று. 53

கனனெஞ சராய கௌசிகனா நெஞசமபோல
வன்னெஞசோ வுனனெஞச மென்னமபி லுரைததாள
தனனெஞசு ருகியொரு சறறே தயையாகித
தின்னுங கனியருநதித தெணணீருந தான்குடிததான்.

இ - ள். அப்போது கனனெஞ்சினரான விசுவாமித்திருடைய நெஞ்சைப்போல உமமுடைய நெஞ்சும வனனெஞசுதானோவெனறு சந்திரவதியுஞ் சொனனாள். அம்மொழிககு சுககிரன தனனெஞசிளகி ஒருவகை கொஞ்சந் தயவுணடாகித தான தினனததகக கனிமுதலியவைகளைத் தினறு தெளிவான ஜலமுங குடிததான எ - று. 54

தாமங திகழ்புயனுந தையலா ளுமமகனும
மாமங் திரியு மலர்க்கரத்தா லேவாங்கித்

தேமென் கனியருந்திச் செவ்வாய் வெளுப்பேறத்
தாமும் புனலருந்தித் தாரணிமேல் கண்வளர்ந்தார்.

இ - ள். பூமாலை விளங்குகின்ற தோள்களையுடைய அரசனும் சந்திரவதியும், மகனும், பெரிய மந்திரியும், அந்தச் சுகமான கொடுத்ததைத் தங்கள் மலர்போலுங் கைகளாலேந்தி வாங்கிக்கொண்டு தேன பொருந்திய மிருதுவான பழங்களைப் புசித்துச் சிவந்த வாய் வெளுப்பேறத் தாங்களும் தண்ணீர் குடித்து மண்ணின்மேலே படுத்து நித்திரை செய்தார்கள் எ - று. 55

வேந்தன் மகனை விழிமஞ் சனமாட்டக்
காந்தண் மலர்க் கைவழியே காரிகைகண் ணீரோடச்
சாய்ந்தவிடம் பார்த்துத் தடித்துடித்துமமழைகாள்
சேர்ந்தவழிப் பெய்யமீர் சென்மினென்றன மாமுனிவன்.

இ - ள். அப்போது அரசன் மகனைப் பார்த்துத் தன கண்ணீராலே திருமஞ்சனமாட்டவும், காந்தள் மலர்போன்ற கைவழியே சந்திரவதிக்குக் கண்ணீரொழுகவும், அவர்கள் படுத்துத் தூங்குகிற சமயம் பார்த்து, மேகங்களே! மின்னியும் இடித்தும் அவ்விடத்திலே பெய்வதற்கு நீங்கள் செல்லுங்களென றனுப்பினன் தவத்திற் பெரிய விசுவாமித்திரா எ - று. 56

மண்டலமு மந்தரமு மைபோ லிருண்மூடி
அண்டபகி ரண்ட மதிர வெடித்திடித்துக்
கொண்டல டர்ந்து கொடுங்கா லடித்துநவ
கண்ட மதிரமழைக காலூன்றி வீழ்ந்தனவால.

இ - ள். அப்போது பூமியும், ஆகாசமும மையைப்போல் இருள் மூடுதலாய் அண்டபகிரண்டங்களெல்லாம நடுங்கி வெடிபட முழங்கி மேகங்கள் நெருங்கிக் கொடிதான பெருங் காற்று வீசி நவகண்டமு மதிருமபடி மழைக் காலூன்றுதலாய் மழை சொரிதலாயின எ - று. 57

மங்கை நனைந்து மகனனைந்து மன்னனனைந
தங்கை நடுங்கி யடிநடுங்கி மெய்நடுங்கிப
பங்க மதுபட்டுப பறகிடுகி டென றடிபபத
துங்க மணிமுடியான சுககிரனைப பார்த்துரைப்பான்.

இ - ள். அப்போது சந்திரவதியு நனைந்து, மகனு நனைந்து, அரசனு நனைந்து, அழகிய கைகளு நடுங்கிக, காலகளு நடுங்கிச் சரீரமு நடுங்கிச் சேற்றிலே யழுந்தி, அழுககாய்ப் பறகள கிடுகிடென்று ஆடி மோத அப்போது உயர்ந்த இரத்தினக் கிரீடாதிபதியான அரசன சுககிரனைப் பார்த்துச் சொல்லுகின்றன எ - று. 58

மாறுவது மில்லை மழைதான மறையோனே
ஆறு பெருகிடுமு னப்பாற் படுத்துமெனச்

சீறு மரவேபோற் சினத்துநீர் செலலுமூர்
தோறும வரவெனககுக காரணமென சொலலுமென்முன்.

இ - ள். ஓ பிராமணரே! இந்த மழை ஓய்கிறதிலலை ஆகையாலே ஒரு வேளை ஆறு பெருகி வந்துவிடும. அதறகு முனனே நாம்போய் தூரத்திலே படுத்துககொள்ளுவோமெனறு சொலல, அதறகுச் சுககிரன சீறுகிற பாமபைப் போற் சீறி நீங்கள் போகிற ஊருககெல்லாம் நான கூட வருகிறதற்குக் காரணமெனன சொல்லுஙக ளென்முன எ - று. 59

எங்நகரிற் புக்கே யிடாவனதலை விட்டினியோா
நன்னகரஞ சேர்நதாலந நாளே யுனககடியேன
சொன்ன பொருடருவேன் றாயோய் வருதியெனு
மன்னவனு மநதிரியு மாதுமவன் றுளபூண்டாா.

இ - ள். (ஐயா) நாஙகளெந்த ஊருககுப் போனோம? இப்படித துனப முண்டாகிற காட்டைவிடடு இனி நலல ஒருருககுப் போனால், போன அனறையத தினமே உமககு அடியேன முனனே சொனன பொருளகளைக் கொடுககிறேன. பரிசுதத குணததையுடையவரே! கூட வாருமெனறு அரச னும், மந்திரியும, சந்திரவதியும அந்தச் சுககிரனுடைய காலைப் பிடித்துக கொண்டார்கள் எ - று. 60

வநதடியிற பூண்டவதற் கன்று மறைமுனிவன்
முநதமொழிந ததறகா வெள்ளி முயனறெழுநதான்
சிநதை மகிழ்நதிறைவன் றேவிகரங கைபபிடிநதான்
மைநதன் றனையெடுதது மநதிரிமுன னேநடநதான.

இ - ள். அப்படி வநது தன கால்களைப் பிடிததுககொணட அதறகாகவும, அனறையததினம வேதமுனிவரான விசுவாமிததிரா முனனே சொனனதற காகவும்; சுககிரன முயலுதலைககொண டெழுநதிருந்தான. அதுகண்டு மன மகிழ்ந்து அரசனனவன நாயகியைப் பறறிககொணடு சென்முன. மந்திரி பிள்ளையைத தூககிககொண்டு முனனே நடந்தான எ - று. 61

காலால வழிதடவிக் கடடைமுளை வேரிடற்றி
ஆலாலங் காலு மரவின் றலைமிதிதது
மேலாறுங் கீழாறு மினவிளககத தாலறிநது
கோலான முன்னூனறிக கொடுஙகானி யாறறிழிநதார்.

இ - ள். தங்கள் கால்களாலே வழி தேடிக கட்டைகள் - முளைகள் - வேர் கள் ஆகிய இவைகளை தடுககி நஞசைக ககுகினற பாம்பு தலைகளை மிதித்துககொணடு மேனமுகமும கீழ்முகமும மினனல வெளிச்சத்தாலே தெரிந்து ஒரு தடியைககொண் டூனறியூனறி (ஆழங்கண்டு) அந்தக் கொடிதான கான ஆறறிலே இறங்கினூர்கள் எ - று. 62

சங்கந் தவழுந் தடவண்ட லுங்கயமும்
அங்கங்கே சோதித் தடிவைத் தடிவைத்துப்
பங்க மிகப்பட்டுப் பல்காலு நீர்குடித்துச்
சிங்கம் புலிதிரியுந் திண்கரையி லேறினார்.

இ - ள். அந்த ஆற்றிலுள்ள சங்குகள் கால்களிலே தடுக்கப் பெரிய மேடும் பள்ளமுள்ள சேற்று நீரை அங்கங்கே கோலாலே பரிசோதித்தறிந்து கால்களை மெள்ளமெள்ள ஊன்றியூன்றி நடந்து உடம்பெல்லாம் சேறு பூசுதலாகிப் பல தரமும் ஜலத்தைக் குடித்துச் சிங்கங்கள் புலிகள் திரிகிற கெட்டியான கரைமே லேறிப் போனார்கள் எ - று. 63

நீந்திப் பயமகன்று நெஞ்சிற் பயமகன்றவ்
வேந்த னினிநாம் விடிந்தேகத் தக்கதெனத்
தோய்ந்த கலையாறக் குழலாறச் சொரிபடுநீர்
பாய்ந்தொழுக வாண்டோர் பழுவத் துறுகின்றார்.

இ - ள். அப்படி அந்த ஆற்றை நீந்திக்கொண்டுபோய், நீரையுமவிட்டுத் தங்கள் நெஞ்சிலுள்ள பயத்தையும் விட்டு அரசனானவன் இனி நாம் விடிந்த பின்பு போகத்தக்கதென்று நீரில் நனைந்த வஸ்திரத்துடனும் தலைகளுடனும் மேலே பொழிகிற நீர் உடம்பெல்லாம் வழிந்தோடவும் அங்கே ஒரு காட்டிலே வந்து தங்குதலானார்கள் எ - று. 64

### கலி விருத்தம்

பாதவமுற் றெழுபைம் பொழி றன்னில்
ஏத மிகுத்தவ ரெய்திய நாளில்
மாதவ னேவிய வன்கண் பேயும்
பூதமும் வந்து புகுந்தன வன்றே.

இ - ள். மரங்கள் மிகுந்து வளருகின்ற அந்தப் பசிய சோலையிலே துன்பம் அதிகமாக அவர்களிருக்கிறபோது அந்த மகாமுனிவரான விசுவாமித்திர னுப்பின வலிதான கூட்டங்கொண்ட பசாசுகளும் பூதங்களும் வந்துகூடின எ-று.

மண்ணி லெழுந்து வளர்ந்த கருங்கா
விண்ணி லெழுந்தன மேனி யவிண்ட
புண்ணி லிரண்டு பதங்கா புரைந்த
கண்ணின வெண்ணில கணங்கண் மலிந்த.

இ - ள். அவைகள் அந்தச் சோலையி னிடங்களெல்லாம் எழுந்துயர்ந்து நிற்கின்றன. பின்னும் கறுத்தமேகங்கள் ஆகாயத்திலே கிளர்ந்தாற்போலும் நிறத்தை யுடையனவாயிருக்கின்றன. வெடித்த புண்கள் போலவும் இரண்டு சூரியர்களெழுந்தாற்போலவும் கண்களையுடையனவாகக் கணக்கில்லாத பூத கணங்கள் எங்குமிருந்தன எ - று. 66

பின்றி யெழும்பிறை யொத்த வெயிற்றால்
தினறி தழ்வநது தெறிகக வதுககிக
கொன்று திரங்கள குடிக்குது மென்றே
சென்று பிடுஙகின திண்கிரி யெலலாம

இ - ள. பினவளைந்து தோனறுகினற பாதிச்சந்திரனை யொத்த பற்க ளாலே இதழைக கடிததுப் பினனும் பலலு மிதழும தோனறவந்து கசககி உங் களைக கொனறு உதிரங குடிககிறோமெனறு போய மலைகளையெலலாம பிடுஙக லாயின .எ - று. 67

திண்டிறல கொணடியா செநதலை மீதே
மண்டியெ ழுநது வளாநத செழுநதீக
கொண்ட லெழுநது கொழுநது சுருண்டே
அண்ட முகடடை யடைநதன வனறே.

இ - ள். மிகுந்த பலததைககொணடு உயர்ந்த சிவந்த தலைகளமேலே நெருஙகி யெழுந்து வளாநதுள்ள செமமயிாகளாகிய செழுமையாகிய நெருபபு மேகமணடலததளவு முயாநது கொழுநதுகள் சுருளுதலாகி ஆகாய முகட்டை யுந் தாவின எ - று. 68

ஐயன ருநதசை யானயில வேணிச
செய்ய னருநதசை தினருவன யானித
தைய லருநதசை தமமி னெனககிப
பைய விளநதசை பறகெளி தெனனுமம.

இ - ள சுககிராசாரியினுடைய அருமையான மாமிசததை நான தின பேன, இநதச் சிவநத நிறததையுடையவனுடைய அருமையான மாமிசததை நான திஙபேன, இநதப பெணணினுடைய அருமையான மாமிசததை எனக குக கொடுஙகள. இந்தச சிறு பையனுடைய இளஞசதையானது பல்லுக்கு மெதுவாயிருககுமெனனும அப பசாசுகள் எ - று.

ஐயனருநதசை- அரசனது தசையெனறும, செய்யனருநதசை - மந்திரியி னுடைய தசையெனறுங கூறினுமாம. 69

சென்மி னடநது செறுததிவா தமமைக
கொனமி னெடுநதசை கூறுற மென்று
தினமினி னைததவை செமமி னெனபபோய்ப்
பினமு னெருஙகின பேயொடு பூதம.

இ - ள. நடநது கிடடப்போஙகள, நெருஙகி இவாகளைக் கொல்லுங்கள், இவாகளுடைய நெடிதான மாமிசததைப் பங்குபணணி மெனறு தின்னுங்கள், நினைததபடியெல்லாம செய்யுங்கள் எனறு சொல்லிககொணடு போய்ப் பசாசுக ளுடனே பூதஙகள பினனுமுனனு நெருஙகின எ - று. 70

சிறப்பமை சேயொடு தேவியு மன்னும
உறததழு விதத முணாசசி விடாமல
அறத்தினை நற்றுணை யாக நினைததே
இறததலெ மக்கினி தென்ன விருநதாா.

இ - ள். செலவச் சிறப்பையுடைய பிள்ளையுடனே தேவியும், அரசனும், நெருஙகத தழுவிககொணடு தங்கள நினைவு தப்பாமல தருமததையே நல்ல துணையாக எண்ணி இனிச் சாகிறதே நமககு நலலதெனறு கூடிககொண் டிருந் தார்கள எ - று. 71

சொல்லு விரமமுனி சொலலிய வணணம
கொலகவி ரெமமுயிா கொலலுதி ரேலெம
அலலலு முஙகள ருமபசி யுமபோம
விலலிலே வாளிலே வமமென விணடாா.

இ - ள். முனிவா சொலலி யனுப்பினபடி சொல்லுகிற ஓ பேய்களே! பூதங்களே! அந்த முனிவா சொனனபடியே (ஏன) எஙகளைக கொலலா திருக கிறீாகள? எஙகளுயிரைக கொலலுவீாகளேயானால, எஙகள் துனபமும் உஙக ளுடைய தீாதறகரிதான பசியுந் தீரும். எஙகளிடததிலே விலலுமிலலை வாளு மில்லை வாருஙகளெனறு சொனனாா எ - று. 72

கொனறிட மாமுனி கூறின னலலன
செனறிட ரிததனை செயதமை போதும
எனறு கணஙகளு மெண்மிகு பேயும
நின்றன கடபுல னீஙகிய வனறே.

இ - ள். அநத மகா முனிவன கொலலுமபடி சொலலுவான அலலன; பயங காட்டப் போகுமபடி சொனனதறகு இவவளவு துனபம பணணினதே போது மெனறு பூதகணஙகளும கணககில மிகுநத பேய்க கூட்டஙகளுமாக நினறவை கள் இவாகள கணகளுககுத தோறறாமல விலகிப போயின எ - று. 73

தஙகுல வளள றளாசசி யுணாநதே
செஙகதி ரோனுயா தேரினில வநதான
மஙகு னெடுநதுளி மாரி யொழிநத
கஙகுல விடிநது கழிநததை யனறே.

இ - ள். தனது குலததுப் பிரபுவானவனுடைய சோாவைத தெரிந்து சிவந்த சூரியன உயாநத தேரினமேலேறி உதயமாயினான மேகஙகள பெயத நீண்ட துளிகளாகிய மழைததாரையும ஓயநதன: இரவும விடிந்து பொழுது புலர்நதது எ - று. 74

அன்று விடிநதபி னநதலம விடடுச
செனறு செழுஙகனி நிலறய வணணிக

குன்று கடந்து குளிர்ந்த மலர்த்தாள்
கன்ற நடந்தணி கங்கை யணைந்தார்.

இ - ள். அன்றையநாள் விடிந்தபின்பு அந்த இடத்தை விட்டுப் போய்ச் செழுமையான கனி முதலியவைகளைத் தின்றுகொண்டு அப்பாற்போய் மலைகளை யெல்லாங் கடந்து சென்று குளிர்ந்த மலர்போலும் பாதங்கள் கன்றுதலாகச் சென்று அழகிதான கங்கையாற்றைப்போய்ச் சேர்ந்தார்கள் எ - று. 75

திரைதொறு முருள்வன செம்மணி யாரம்
கரைதொறு முருள்வன கார கிலாரம்
நுரைதொறு முருள்வன நுண்ணிய வண்பூ
விரைதொறு முருள்வன வெறிமது கரமே.

இ - ள். அந்தக் கங்கையாற்றி னலைகளிலெல்லாம் சிவந்த மணிகளும் முத்துகளும் புரளுகின்றன, அந்த ஆற்றின் கரையெல்லாம் கறுத்த அகில் விருட்சங்களும், சந்தன விருட்சங்களும் அசைந்துகொண் டிருக்கின்றன; அந்த ஆற்று நுரைகளெல்லாம் மெல்லிதான மலர்கள்போற் கிளருகின்றன அந்த மலர் வாசங்களெல்லாம் தேனைக் குடிக்கிற வண்டுகள்மேல் வீசுகின்றன எ - று. 76

துளைமணி வெண்பல ராமணி துத்தி
விளைமணி வெயில்விட வெண்புன லூடே
களைமணி யொடுமத கரிமணி யோடும்
வளைமணி நிலவெழும் வாலுக மெல்லாம்.

இ - ள். துவாரமிடத்தக்க வயிர இரத்தினமும், வெண்மையான பற்களையுடைய நாகரத்தினமும் நிர்மல நிறமாகத் தோற்றுகின்ற புஷ்பராக இரத்தினமும் ஒளிவீச, அந்த வெண்மையான கங்கா சலத்திலே அழகுள்ள பலவகை இரத்தினங்களும், மதயானைகளினுடைய கொம்பிலுள்ள மணியும், சங்கு மணியும் ஒளிவீசுவனவா யிருக்கின்றன அந்த மணற்குப்பல்களெல்லாம் எ - று.

நளின மரந்த நறுங்கனி நாகத்
தளிநர வம்புன லரவ மடக்கத்
தெளிநதி புக்கணி சிறைகள் புலர்த்தும்
புளின முயர்ந்தெழு புன்னை மறைப்ப.

இ - ள். செந்தாமரை மலர்களிலும், நல்ல இளமையான புன்னை விருட்சங்களிலுமுள்ள வண்டுகள் ஒலிப்பது அந்தக் கங்கையி னலையொலிகளை யடங்கச்செய்ய அந்தத் தெளிவான ஆற்றிலே முழுகிப்போய அழகிதான சிறகைக் காயச்செய்கிற பட்சிக் கூட்டங்கள் உயர்ந்து வளர்ந்துள்ள மணற்குவியல்கள் தெரியாமல் மறைந்துகொண் டிருக்கின்றன எ - று.

அரந்த - நளினமென்வும், கனி - நாகமென்வுங் கூட்டுக. 78

வெங்கய மாமத மேமிக நாறும
கங்கை வளமபல கண்டு மகிழ்நதே
செங்கைகொ டண்ணல் சிறபபுள வெல்லாம
மங்கை தனக்கு வகுததுரை செய்வான.

இ - ள. வெவ்விதான யானை மதங்களே மிகவும் வீசுவதான அந்த கங்கையாற்றினுடைய அழகுகள் பலவுங கணடு சநதோஷித்தத தன னுடைய சிவந்த கைகளாலே அரசனனவன அஙகுளள அலஙகாரங்களை யெல் லாம சந்திரவதிககு வகைவகையாகச சொலலுகிறுன் எ - று. 79

இநதிர சாப மிரண்டு படைதத
செநதிரு வாணுத லாய்தெளி நனனீர்ச
சுநதர மேவு சுழிததிர ளோர்நின
உநதியை யொபபன வுறறிடல காணாய்.

இ - ள். இந்திரவிறக ளிரணடைககொணட இலட்சுமிபோலும் ஒளி பொருந்தின நெறறியையுடையவளே! இந்தத தெளிவாகிய நல்ல ஜலததிலே அழகு பொருந்தின சுழிகள ஒபபறற உனது உந்தியை யொப்பாகச சுழிக கின்றன பார் எ - று. 80

புளளி யெழுஙகரி போய்பபுன லூடே
அளளி யெறிநதவ ராமணி யெலலாம
துள்ளி யெழுநதவி சோதி விசுமபின
வெளளி விழுநதென வீழவன பாராய்.

இ - ள். முகததிலே புளளிகள தோனறுவன வான யானைகள போய விழுந்து அநத நீரிலே நினறு வாரிவீசின நாகரததினஙகளெலலாம சிதறி யெழுநது விளஙகுகினற ஒளியையுடைய ஆகாயததிலிருநது வெள்ளி உதிரந ததுபோல உதிரககினறனவறறை நீ பாா எ - று. 81

விரிதிரை யுநதிய வெண்மலா காலால
வரிமண லுநதிய வணடலி னூடே
பிரிவுறு சேவலகள பெடையென வோடித
தெரிவுற நினறு திகைபபன காணாய்.

இ - ள. விரிவான அலைகளசைககினற வெணடாமரைமலரைத தமது கால களாலே வரிவரியாகக கீறுதலைககொணட மணறசேறறி னிடததிலே பிரிந்த ஆணபடசிகளானவை தமது பெட்டை எனறு நினைததோடி அது பூவாயிருககத தெரிந்து நினறு பெட்டையைக காணாமல மயஙகுகினறனவற்றைப பாா எ-று

புண்ணிய நீருறை புளளின நமமைக
கண்ணிடை கண்டு கலைநது பறபப
மண்ணிட மினறகல வானிட முண்டென
றெணணி விசுமபி லெழுநதன பாராய்.

இ - ள். அந்தப் பரிசுத்தமான ஜலத்திலே சஞ்சரிக்கின்ற பட்சிக் கூட்டங்கள் நம்மைக் கண்ணாலே கண்டு கலைந்து பறப்பனவானது, இந்தப பூமியினிடத்தில் நமக்கிடமில்லை. அகன்ற ஆகாசமே நமக்கிடமாக விருக்கின்றன வென்று நினைத்து ஆகாயத்திலே யெழுந்து செல்கின்றன பார் எ - று. 83

கங்கை யொருத்தி சிலம்பணி காலும்
சங்கணி கந்தர முந்துவர் வாயும்
செங்கய லுண்கணும் வெண்புளி னத்தண்
கொங்கை களுஞ்சத கோடிகள் பாராய்.

இ - ள். கங்கையாகிய ஒரு பெண்ணுக்குச் சிலம்பையணிந்த கால்களுஞ் சங்குபோலழகுள்ள கழுத்தும் பவளங்களாகிய வாயும் சிவந்த கயலகளாகிய கண்களும் வெண்மையான மணற்குவியல்களான குளிர்ந்துள்ள கொங்கைகளும் நூறுகோடிகளா யிருக்கின்றன பார் எ - று. 84

முத்தணி கொங்கை யிரண்டு முளைக்க
நித்தனை யம்பிகை நேயம் விளைத்தாள்
இத்தனை கொங்கை படைத்தரு ளென்றாய்
அத்தனை யெத்தனை யாசை விளைக்காள்.

இ - ள். முத்துமாலைக ளணிகிற ஸ்தனங்க ளிரண்டு தோன்றுதலாகி நித்தியனான பரமசிவனைப பார்வதிதேவி மிகவும் தனமே லன்பு கொள்ளச் செய்தாள், (மணற்குவியல்களான) இவ்வளவு கொங்கைகளைக் கொண்ட என்று தாயான இந்தக் கங்காதேவி அப்பரமசிவனுக்கு எவ்வளவு ஆசையை யுண்டாகச் செய்யாள். (அதிகஞ்செய்வாள் என்றபடி) எ - று. 85

மண்ணி லருந்தவ மன்ன னுரைக்க
ஒண்ணில வொத்தொளி ரொண்ணுதன் மேனாள்
பெண்ணில் விதித்த பெருந்தன மல்லால
எண்ணில கொங்கைக ளென்செய வென்றாள்.

இ - ள். இந்த வுலகத்திலே அருமையான தவத்தையுடைய அரசன அப்படிச் சொல்லவே, அழகான பாதிச்சந்திரனை யொப்பாக விளங்குகின்ற அழகிய நெற்றியையுடைய சந்திரவதியானவள் முற்காலத்திலே பெண்களுக்கு வேண்டுவனவாக இரண்டான றமைத்த பெரிய தனங்களை யல்லாமல் கணக்கில்லாத தனங்களைக்கொண்டதனாலே யாது பயனென்று கேட்டாள் எ - று. 86

ஒருமகவுய்ய வளர்க்கு மொருத்திக்
கிருமுலை யுள்ளன வின்னமு தேகேள்
வருமுயிர் யாவும் வளர்த்திடு மன்னைக்
கிருமுலை போதுவ தோவிசை யென்றான்.

இ - ள். ஓ இனிதான அமுதம்போன்றவளே! கேட்பாயாக: ஒரு பிள்ளை பிழைக்கும்படி வளர்க்கின்ற ஒருத்திக்கு இரண்டு தனங்களே உளவாகவேண

டும், உலகத்திலே தோன்றுகின்ற உயிர்க ளெல்லாவற்றையும் வளர்க்கப்பட்ட (தாயான) ஒருத்திக் கிரண்டு தனங்கள் போதுமோ! நீ சொல்வாயெனறு னரசன எ - று. 87

மங்கையு மன்னனு மற்று முளோருமு
கங்கை வளமபல கண்டு நடநதே
எங்கட வப்பய னெய்திய தெனறு
அங்கனெ டுமபுன லாடின ரன்றே.

இ - ள். இவவாறு சநதிரவதியும் அரிச்சந்திரனும் இனனுமுள்ள மூவ ரும் கங்காநதியினுடைய வளமைகளை பலவுங்கணடு கொணடுபோய் நாஙகள செய்த தவப்பயன எஙகளுககே லபிததுதெனறு அவவிடததிலேயுள்ள நெடி தான நீரிலே ஸ்நானஞ் செய்தார்கள எ - று. 88

அருமறை நூல்வழி யாடிய பின்னர்
மருவிய வண்டுறை மனனவ னேக
விரிபுன றனனி லிழிநது விரைநதே
கரைமிசை வநதொரு காவி லணைநதார.

இ - ள். அரிதான வேதசாஸதிரப்படியே ஸநானஞ் செய்தபினபு தாங கள் நீராடின அழகிதான துறையைவிட்டு அரசன செலல, (அவன பினனே) எல்லோரும அந்த விரிவான நீரிலே யிறஙகி விரைவிலே நடந்து கரைமேலேறி ஒரு சோலைககுள்ளே போய்ச் சேர்ந்தார்கள் எ - று. 89

சோலையி லன்னவர் சோர்வொடு புக்கார
வேலை புகுநதனன் வெஙகதி ரோனும
காலை யிலேகுது மெனறுக ணிததம
மாலையி லவ்விடை வைகின றனரே.

இ - ள். அந்தச் சோலைககுளளே அவாகள சோாவுடனே போய்ச் சோந் தார்கள், சூரியன கடலிலே போய மறைந்தான, விடிந்தபினபு போவோ மென்று ஆலோசித்துககொண்டு அனறிராததிரி அஙகேதானே தங்கினார்கள் எ - று. 90

அன்றிர வப்பொழி லவ்விடம் வைக
வன்றிறன மாமுனி வஞ்சனை யாலே
வென்றி மடஙகல வியன்புலி வேழம
பன்றியொ டெண்கு படாநதன வன்றே.

இ - ள். அனறிராததிரி அந்தச் சோலையில் தங்கியிருக்க, மிகுந்த சாமர்த்தியத்தையுடைய பெரிய முனிவரான விசுவாமிததிரருடைய கபடததி னாலே, ஜயம்பொருந்திய சிங்கம், பெரிய புலி, யானை, பனறியுடனே காடி இவைகளெல்லாம வந்து படர்தலாயின எ - று. 91

பொருப்பதி ரப்பிளி றிக்கை புடதநே
மருப்பை விதிர தது மலைநதக யஙகள
செருப்புலி கோளரி செஙகணுும வாயும
நெருபபுக வநது நெருஙகின வனறே.

இ - ள். யானைகள மலைக ளதிரும்படி முழஙகித துதிக்கையை வீசிக் கொம்புகளை நீட்டிப் பொருதலாயின, சணடை செய்கிற புலிகளும், சிங்கங்களும் சிவந்த கணகளிலும், வாயகளிலும் நெருப்புச் சிந்த வந்து நெருங்கின எ - று. 92

அன்றெமி னததை யறுதத பழிகருக்
கொன்று நினைக்குரு திப்புன லுண்டு
தின்று பெருமபசி தீருது மெனறே
நின்று மொழிநது நிறைநத செறிநது.

இ - ள். முனனே எஙகளுடைய கூட்டங்களையெல்லாம நீ கொன்ற பழிக்காக இப்போதுனனைககொனறு உனது இரதததைத நீராகக குடித்து மாமிசத்தைத தினறு பெரிதான பசி தீர்க்கிறோமெனறு நினறு சொல்லி எங்கும் நெருஙகி நிறைந்தன எ - று. 93

அன்னது கண்ட வரஞ்சிலா தமமைத
தின்னுவ தேயினி தென்று தெளிநதா
உன்னிய வெண்ண முணர்நதவை யெல்லாம
மன்னிய கானின மறைநதன வனறே.

இ - ள. அப்படி மிருகஙகள வந்து கூடினதைக கண்டு இவர்கள் எவவளவும் அஞ்சாதவர்களாய்த் தஙகளை மிருகஙகள் கொனறு தினகிறதே நல்லதென்று துணிவு கொணடிருந்தார்கள். இவாகள எணணிய எணணததைத் தெரிந்து அந்த மிருகஙகளெல்லாம் தாஙகளிருககிற காட்டிலேயே போய் மறைந்தன எ - று. 94

நீதி வழாதவா நீாமை யுணர்நதே
சாதி விலஙகுகள் சாாவிட நண்ண
ஓதிய வேத னுரைதத குறிபபால
வேதியன் மறறோா விசார முரைப்பான.

இ - ள். நீதிவழுவாத இவாகளுடைய குணஙகளையெல்லாந் தெரிந்து பலஜாதி மிருகஙகளும தாங்கள சஞ்சரிககு மிடததுககுப் போகக் கண்டு தனக்கு விசுவாமித்திரா சொனன குறிபபினலே கூடவந்த சுககிரன இவர்களைப் பார்த்து வேறேயொரு ஆலோசனை சொல்லுகிறன் எ - று. 95

மன்னவ கேள்வினை வநதது சற்றே
இன்னம் வரும்வினை யெல்லையி லாத

முன்னமு ணர்ந்து முனிக்களி யேனென்
றன்னர செய்துத லுத்தம மென்றான்.

இ-ள். அரசனே! கேள்; இப்போது கொஞ்சந் தீயசெய்கைகளுண்டாயின, இனி இன்னமும் வருவனவாகிய தீவினைகள் கணக்கில்லாதவைகள். ஆகையால், இப்படித் தீவினைகள் வருமுன்னே தெரிந்துகொண்டு விசுவாமித்திரனுக்கு உன் அரசாட்சியைக் கொடுக்கமாட்டேனென்று சொல்லி உன் அரசாட்சியை நீ போய் ஒப்புக்கொள்ளுகிறதே உத்தமமான காரியமென்று சொன்னான் எ-று. 96

நின்பர மீந்திலன் யானென நிற்றல்
என்பர நின்னர செய்தவ ளித்தல்
துன்பமு ணர்ந்திவை சொல்லலு ணிந்தேன்
மின்பயில் வேலவ மீளுதி யென்றான்.

இ-ள். பின்னும் கொடுக்கவேண்டிய பொருளைக் கொடுக்கமாட்டேனென்று சொல்லுகிறதொன்றே உனக்குச்சுமை, அதுசொன்னால் உன்னரசாட்சியை உனக்குக் கிடைக்கும்படி செய்கிறது எனக்குச்சுமை, ஒளிவீசுகின்ற வேலையுடைய அரசனே! நீங்கள் படுகிற துன்பங்களெல்லாம் தெரிந்து நானிப்படிச் சொல்லுதற்குத் துணிவுகொண்டேன். நான் சொன்னபடியே கேட்டுத் திரும்பென்று சொன்னான் சுக்கிரன் எ-று.

பாரம் என்பது பரமெனக்குறுகியது. 97

அந்தண னவ்வுரை கூறிட வண்ணல்
மைந்தனு மங்கையு மற்று முளோரும்
நைந்தெ னுடன்ற் றொலை வெயதினு நான்முன்
தந்தது மாறில னென்று தணித்தான்.

இ-ள். சுக்கிரன் அந்த வார்த்தை சொல்லவே, அரசனானவன் என் பிள்ளையும் என் மனைவியும் இன்னமுள்ளவர்களும் வருந்தி என்னுடனே கூடியழிகிறதானாலும் நான் முன்னே தந்ததை இல்லையென்று சொல்லேனென்று சுக்கிரனை யடக்கினான் எ-று. 98

சொன்னவை கொளகிலை சூழ்வினை யெய்தின்
அன்னவை பட்டறி யாகுல மனனு
என்ன விடிந்திரு ளேகலு மேகி
மன்ன னடந்தனன் மற்றவ ரோடும்.

இ-ள். இடம்ப குணத்தையுடைய அரசனே! நானசொன்ன வார்த்தைகளை நீ ஒப்புக்கொள்ளுகிறதில்லை, (ஆனால் ஒருவர் உண்டுபண்ணிவிடுகிற) தீவினைகள் வந்தால் அவைகளெல்லாம் பட்டபின்பு தெரிந்துகொள் ளென்று சொல்லுமளவில், இருள் கழிந்து பொழுதுவிடிந்தவுடனே அரிச்சந்திரமகாராசன் மற்றுமுள்ளவர்களுடனே அவ்விடம்விட்டுப் போனான் எ-று.

ஆகுலம் - இடம்பம். 99

வல்லையி லேகி மறித்திரள் பொங்கு
முல்லை நிலத்தினை முற்று மகன்று
புல்லை மிகக்கொள் குறிஞ்சி புகுந்தாங்
கெல்லை யிலாமலை யேறி யிழிந்தார்.

இ - ள். விரைவிலேபோய் ஆட்டுக்கூட்டங்கள் மிகுந்து மேய்கின்ற முல்லைநிலத்தை முழுதுங்கடந்து, புலிகளை மிகவுமுடையதான குறிஞ்சி நிலத்துக்குப்போய் அங்குள்ள கணக்கில்லாத மலைகளெல்லாமேறி யிறங்கி னார்கள் எ - று. 100

மேற்படி-வேறு

அரிகளு மரிகளால வீழ்ந்த ழிந்தவெங்
கரிகளுங் கரிகளான மடிந்த காலெறி
வரிநெடும் புலிகளும் புலிக ளானமறிந்
திரிதரு முழைகளுஞ் செறிவைப் பெய்தினர்.

இ - ள். சிங்கங்களும், அந்தச் சிங்கங்களால விழுந்து செத்துக் கிடக்கிற வெவ்விய யானைகளும், அந்த யானைகளாலே இறந்துகிடக்கிற காலாலே அறையத்தக்க வரிகளையுடைய நீண்ட புலிகளும், அந்தப் புலிகளாலே அறை யப்பட்டு ஓடுகின்ற மான்களும் நெருங்கின காட்டுக்குள்ளே போனார்கள் எ-று.

நானமு நரந்தமு நாறு நாண்மலாக
கானமு மாரமுங் காக துண்டமும
பானமும பாந்தளின் முடங்கும பாய்கரி
தானமுந் தெரிகில தலைம யக்கமே.

இ - ள். சவ்வாதுமணமும், கஸ்தூரிமணமும், பரிமளிக்கின்ற அன்று பூத்திருக்கிற புட்பங்களையுடைய சோலையும், சந்தனவிருட்சங்களும், அகில் விருட்சங்களும ஆகிய மணங்களை யனுபவிக்கிறதும பாமபுகளின மண்டலமும பாய்கின்ற யானைமத நாற்றமும வேறுபாடு தெரிகிறதில; எல்லாங் கலந்து நாறுதலினாலே எ - று. 102

நலலணி யரமபையர் விஞ்சை நங்கையா
மலலணி நெடுமபுய மஞ்ஞர் தமமுடன்
புலலலி னுதிர்ந்தசெந் தருவின பூக்களும
பலலவ சயனமும பார்த்துப போயினா.

இ - ள். நலல ஆபரணங்களை யணிந்த அரம்பைகளும், வித்தியாதரப் பெண்களும, வலிமையைக்கொண்ட நீண்ட தோள்களையுடைய தங்கள் நாயகருடனே அணைகிறபோது உதிர்ந்த சிவந்த கற்பகத்தருவின மலர்களும், அவர்கள் படுத்திருந்த தளிர்கள பரப்பின படுக்கைகளுங் கிடக்க அவைகளைக் கண்டு போனார்கள எ - று. 103

அழிதரு மிறுலுகு நறவு மாயமலர்ப்
பொழிதரு பிரசமும் பெருகிப் பொங்கியே
வழிதரு மருவிகள் சிவணி மாமணி
இருதலை சோணமா நதியை யெய்தினர்.

இ - ள். தேன்கூட்டினின்றும் உடைந்து சிந்துகின்றதேனும், வண்டுகள் தேடுவனவான பூவினின்றுஞ் சிந்துகின்ற தேனும பெருகிப்போகுதலாய் வழிகின்ற அருவிகளை யொப்பாகிய பெரியமுத்துகள் ஒதுங்குகின்ற சோணமாநதியைப் போய்ச சேர்ந்தார்கள் எ - று. 104

கடகரி யிழிதுறைக் கஞச முத்தமும
தடவரி யிழிதுறைச சரிந்த செமபொனும
படவரி யிழிதுறைப பதும ராகமும
இடமற மிளிர்வன விரண்டு பாலுமே.

இ - ள். மதயானைக ளிறங்குந் துறையிலே மலர்கின்ற தாமரைமுத்துகளும, பெரிய சிங்கங்க ளிறஙகுந்துறையிலே சரிந்துகிடககிற சிவந்த பொன்மணலும், படத்தையுடைய பாமபுகளிறங்குந் துறையிலே கிடககிற பதுமராகமும் அந்த ஆற்றினிருபுறத்திலும இடநதோறறுமல விளஙகுகின்றன எ - று ()

பருமணல வண்டலும பரந்த சஙகமும
கருமணற புளினமுங கடிகொள சந்தனத
திருமண மருவுநீரச சுழியுந தெண்புனல்
வருமணி வரனறிய வாலு கஙகளும.

இ - ள. பருத்த மணலையுடைய சேரும, அஙகே ஊருகின்ற சங்குகளும், கரிய மணல் மேடுகளும், மணஙகொணட சந்தன விருட்சங்களினுடைய நல்ல வாசனை பரிமளிககின்ற நீரச்சுழிகளும, தெளிந்த நீரா லொதுஙகுகின்ற மணிகளை வாரிக கொணடுவந்து எககவிட்ட வெளளை மணற குனறுகளும எ - று.

இதுமுதல் இரணடு பாடலகள குளகம். 106

குரண்டமு மனனமுங குருகு நாரையும
திரண்டபோ தாககளுந திகிரிடப புடகளும
முரண்டநீா முடுவலு முதலை யிடடமும
கரண்டமுங கமபுளுங கணட கணணெலாம.

இ - ள. கொக்குகளும, அனனஙகளும், குருகுகளும, நாரையும திரண்டிருககின்ற புறாககளும், சககரவாகப் பட்சிகளும, மாறுபட்டிருககினற நீர் நாய்களும், முதலைக கூட்டங்களும், நீரக காககைகளும், சமபங கோழிகளும் ஆகிய இவைகளையே கணடன இவர்களுடைய கண்களெல்லாம எ - று. 107

கால்கரை மேய்கினற கான மேதியின்
பால்கரைந திழிபுனற் பரபபை நீநதிபபோய்

மேல்கரை வெண்மணற் பரப்பில் வேதநன்
னூல்கரை கண்டவ னெய்தி னெய்தினான்.

இ-ள். வாய்க்கால் கரைகளிலே மேய்கின்ற காட்டெருமைகளின் பால் மடியிளகி ஒழுகுகின்ற அந்த நீர்ப் பரப்பை நீந்திக் கடந்து சென்று அந்த ஆற்றின் கரையின்மேல் வெள்ளை மணல் பரவிக் கிடக்கிற இடத்திலே நல்ல வேதசாஸ்திரங்களின் கரைகண்டவனான அரசன் விரைவிற் போனான் எ-று.

அடர்ந்தபூஞ் சோலையி னன்று தங்கியே
விடிந்தபின் னவ்விடம் விட்ட கன்றுபோய்ப்
படர்ந்த வெங் கானமும் பருப்பதங்களுங்
கடந்துபோ யமுனையின் கரையை மேவினார்.

இ-ள். அங்கே நெருங்கி இருக்கின்ற பூஞ்சோலையிலே அன்றிராத்திரி தங்கி விடிந்தபின்பு அவ்விடத்தைவிட்டுப்போய் பரவுதலான வெவ்விய காடும் மலைகளும் கடந்து சென்று யமுனா நதிக்கரையை யடைந்தார்கள் எ-று. 109

எடுத்தமன் னனைத்துறந் திருடி தன்னுடன்
அடுத்தகற் பழகிதென் றவனி மங்கையைக்
கடுத்திடித் திறைவனைக் கடிது மீள்கெனத்
தடுத்தவா றொத்துள துயமுனை தானுமே.

இ-ள். தன்னை நாளது வரையிலுந் தாங்கிக்கொண்டிருந்த அரிச்சந்திரனை விட்டுவிட்டு ஒரு முனிவனுடனே நீ கூடுவதான உன் கற்பு நன்றாயிருந்ததென்று பூமிதேவியைக் கோபித்து இடித்துவிட்டு, அரசனை நோக்கி நீ சீக்கிரத்திலே திரும்பிப்போவென்று அணைபோட்டுத் தடுத்த தன்மைபோலிருந்தது அந்த யமுனையாறு எ-று. 110

கட்டநின் னன்பொருள் கௌசி கன்கொளப்
பட்டன வதற்கிது பகுதி கொள்கென
இட்டென வமுனையா றியாணர்ச் சந்தகில்
மட்டறக் குவித்தது மணியும் பொன்னுமே.

இ-ள். அடக்கஞ்செய்து வைத்திருந்த உனது நல்ல பொருள்கள் விசுவாமித்திரனாலே கொள்ளையாயின, அதற்காக இது உனக்குக் கொடுக்க வேண்டிய பகுதிப் பொருள் நீ ஒப்புக்கொள்ளென்று குவித்திட்டாற்போல, அந்த யமுனா நதி அழகான சந்தன விருட்சங்களையும், அகில் விருட்சங்களையும், அளவில்லாத மணிகளையும், பொன்னையும் குவியல் செய்தது எ-று. 111

கொழித்தசெம் மணிகளும் பொன்னுங் கோசிகற்
கழித்திடற் கெண்மடங் கான தாயினும்
எழிற்றவ முனிவனுக் கீந்த வெல்லையி
னுழிப்பொருள் கொள்ளுந்தற் காதென் றுன்னினான்.

இ - ள். அந்த நதி அப்படி அலைகளா லொதுக்கின சிவந்த மணிகளும், பொன்னும் விஸவாமித்திரனுக்குக் கொடுக்கவேண்டிய கடனை தீர்ப்பதற்கு எட்டுப் பங்கு அதிகம உள்ளதா யிருந்தாலும், அழகான தவத்தையுடைய விசுவாமித்திரனுக்குக் கொடுத்த எல்லைகளுக்குள்ளான பூமியிலுள்ள பொருள்களை அவருக்குக் கொடுக்கிறது தகாதென்று நினைத்தான அரசன எ - று. 112

இன்னது நிகழ்வுழி யிறைவன் காளிநதி
நன்னதிக் கரையினை நணணி வைகினன
அந்நதித் துறைபடிந் தாடி வைகுமம
மனனெதிர் கௌசிகன வந்து தோன்றினன.

இ - ள். இப்படியான அலங்காரங்கள் தோன்றுவது கண்டு அரசனானவன் அந்த யமுனாநதியினது கரையை யடைந்தபின்பு அந்த நதியிலே முழுகி ஸ்நானம பண்ணிக்கொண்டிருக்கின்ற அரசனுக்கு முன்னே விஸவாமித்திரர் வந்து காணலானார் எ - று. 113

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

அரவுயிர்த்த தமணிகுற றுதரபந தனமழுத்தி யதனமேல
மரவுரித தொகைவிசிப புறநெருங கியமருங குறவிடஇக்
கரதலப பிரணவத தொழிலசெவிப புடைகலக் கமுடிமேல
குரவு நொச்சிவெ ளெருக்கலரி கொத்தி தழியுற றலையவே.

இ - ள். பாம்புகள் பெற்ற இரத்தினங்களைப் பதித்து உதரபந்தனமாகச் சூழ்ந்து அதனமேலே மரவுரியினது தொகுப்பைக் கட்டின கட்டு மிகவு நெருங்கின இடையிலே தோன்றத் தொங்கவிட்டு பிரணவத்தை யுச்சரித்தெண்ணுகிற கையானது காதிலே கூடவும திருமுடிமேலே குரவம் பூவும நொச்சிப்பூவும் வெள்ளெருக்கம்பூவும் அலரிப்பூவும கொத்துகளாகிய கொன்றைப்பூவும அசைவதாகவும எ - று.

இதுமுதல மூன்று பாடல்கள் குளகம். 114

இடைநு டங்கியு மடங்கியு மெழுந்துற வலைந்திடு செழுஞ
சடைகு லைந்துற வரிந்தணி தலந்தனில விழுந்து புரள
வடநெ டுங்கன லுமவிணடலமு மணடலமும வெந்து கருகக
கடைநெ டுங்கொடு விழித்தொறு கடுங்கனல கனனறெரியவே.

இ - ள். இடையானது துவண்டும சுருண்டும நீண்டும மிகவும் அலைதலையுடைய செழுமையான சடைகள் குலைந்துபோகவும், மறுபடியும அச்சடைகளை வரிந்து கட்டுகிற போதில அழகிய பூமியிலே விழுந்து புரளவும், நெடிதான வடவாக்கினியும் விண்ணுலகமும மண்ணுலகமும் வெந்து தீயவும், கடைக்கண்களிலே நீண்ட கொடுமைகொண்ட கண்களைத் திறந்து பார்க்குந் தோறும் கொல்லுவதான நெருப்பு கொதிப்பு கொண்டெரியவும் எ - று. 115

படைபி டித்தணி செறித்தகை பவித்திர தருப்பை நிறுவிக்
குடைபி டித்துவர மற்றொரு கைகுண்டி கைபிடித் துவரவே
மடைபி டித்தவயன மண்டல முமாநகரும வண்பொரு ளுமுன்
கொடைகொ டுத்தகரு ணைத்திரு முகக்குரி சிலைக்குறு கினான்.

இ - ள். கௌசிகராஜனு யிருந்தபோது, ஆயுதங்களைக் கொண்டு மோதிரங்களான ஆபரணங்க ளணிந்திருந்த கையிலே, பவுத்திரமுந் தருப்பையுங் கொண்டு, குடையும் பிடித்துக்கொண்டுவர, மற்றொரு கையிலே கமண்டலங் கொண்டு வருகிறவராய் நீர் பாயும் வழிகளைக்கொண்ட வயல்சூழ்ந்த மண்ணுலகத்தையும் பெரிய பட்டணத்தையும் அழகிய திரவியத்தையும், முன்னே தியாகமாகக் கொடுத்த கிருபைபொருந்தின திருமுகத்தையுடைய அரசனைக் கிட்டினன் எ - று. 116

கண்ட னன்கரு ணையங்கடல் கடுங்கௌ சிகன்வர வினை
மண்ட லத்தலை வாமந்திரி கடன்பணி மறுத்தனா கொலோ
தண்டமென் றனமிசை யுண்டென மெலிந்திரு சரண்ட முவியே
கொண்டனன் புனலிரண் டுகணுநின் றுகுதி கொண்டொ ழுகவே.

இ - ள். கிருபைக்கடலான அரசன், கடுமையான வேகத்துடனே விஸ்வாமித்திரர் வருகிறதைக்கண்டான்; கண்டவுடனே மண்டலீகரான அரசர்களும் மந்திரிகளும் தமது உத்தரவைத் தடுத்துப்பேசினார்களோ; அவர்களப்படிப் பேசினதுண்டானால் என்மேலே தண்டனையுண்டாகுமே யென்று மெலிவு கொண்டு இரண்டு கண்களிலும் நீர் குதிகொண்டொழுக அவருடைய இரண்டு பாதங்களையும் போய்ப் பிடித்துக்கொண்டான் எ - று. 117

எந்த நாயக வுனக்கெமா நெடும்பிழை யிழைத்தனா கொலோ
தந்தமா நிதியினிற் சிலகரந் துசிலந்த தவுளவோ
உந்தமே வறவறிச சிலாபிழைத் தெதிருரைத் தனர்கொலோ
வந்தகா ரணமெடுத் தினிதுரைத் தருள் வருத்த மறவே.

இ - ள். எங்கள் தெய்வமே! உமக்கு என்னைச் சேர்ந்த மந்திரி முதலாயினோர் கெடுதான குற்றங்கள் செய்தார்களோ? நான் கொடுத்த பெரிய திரவியங்களிலே சிலவற்றை மறைத்துக்கொண்டு கொடுத்தவையுண்டோ? உம்முடைய ஏவலுக்குத் தவறுதலாகச் சிலர் அபராதிகளாய் எதிர்த்துப் பேசினவர்களுண்டோ? தேவரீர் இங்கே எழுந்தருளிய காரணத்தை இன்னதென்று தெரிய உம்முடைய வருத்தந்தீர்வதாய் நன்றாகச்சொல்லி யருளவேண்டும் என்று கேட்டான் எ - று. 118

இந்தவெங் கடமனைந் துடற்றளர்ந்து யிரிடைந்தனை யெனா
நொந்தனன் மனது நொந்துபடர் சிந்தனை தணிந்திடமுனி
தந்த நாடுநகர் தந்த திலைதந்த திலையென் றுமொழிந்
தந்த நாடுதனில் வந்தரசு கொண்டுறைக வென்றருள் செய்தான்.

இ - ள். (என்று சொன்ன அதற்கு) விசுவாமித்திரர் இவ்வெவ்விதான காட்டிலேவந்து உன்னுடைய உடம்புதளர்ந்து மனமும வருந்தினையென்று நான் மனம் வருந்தினேன; இப்படி வருந்தின துன்பம என மனத்தை விட்டுப்போகாமுனனே நீ கொடுத்த நாடும நான கொடுத்ததிலலை; நகரும் கொடுத்ததில்லையென்று ஒரு வார்த்தையிற் சொலலிவிட்டு அந்த நாட்டுக்கு வந்து உன பட்டணத்திலிருந்து அரசாட்சி கைக்கொண்டு வாழக்கடவையென்று அருளிச் செய்தார் எ - று. 119

எந்த நல்லுயிருமென் கிளைஞரின் னுயிரு மன்னுயிர்களுடம
நந்தி னும்முடல் பதைக்க நரகத்தினி லிருத்தி விடினும்
முந்த வந்தண ரறிந்திட மொழிப்படி யளித்த பொருளைத்
தந்த தில்லையென வுன்றனெதிர் நின்றுரை செய்த தகுவதோ.

இ - ள். (அதற்கு அரசன) எங்களுடைய நல்ல உயிரும் என் உறவினருடைய இனியவுயிரும் (ஏனைய) நிலைபெற்ற வுயிர்களும் கெட்டாலும், எங்களுடம்பு பதைக்க எங்களை நரகத்திலே கொண்டுபோ யமிழ்த்தினாலும முனனே பிராமணர்களெல்லாரு மறிய உமமுடைய சொற்படி கொடுத்த பொருள்களை உமக்கு முன்னே கொடுத்ததிலலையென்று நான சொல்லத்தக்கதோ? எ - று.

கடிஞை யிட்டபலி யைக்கையி லெடுத்தடு பசிக்கு நுகரும
மிடியரிப் புவியிடத் திலையெனக் கிதுவிதித் தகலவென
றடிகளிற் கரமிறுக வினனிறுக விடமறுத் தரசன்முன்
கடிபசொற் கொடுவினைக் கௌசிகப் பெயரினன கழறுவான்.

இ - ள். பாத்திரத்திலே யிட்ட பிச்சையை (பிச்சையிட்ட) தங்கள் கையாலெடுத்து, வருத்துகின்ற பசிக்குச் சாப்பிடுகின்ற தரித்திரரை இந்த வுலகத்திலே நான கண்டதிலலை, அப்படி நான கொடுத்ததைத் திரும்பவு நானே அனுபவிக்கும்படி எனக்கு இப்படி உத்தரவு செய்கிறது தகாத காரியமென்று அவர் பாதங்களிலே தன கைக ளிறுகும்படிப் பிடித்துக் கொண்டான. அப்படிப் பிடித்துக்கொள்ளவே அவனை விலக்கி அந்த அரசனுக்கு முனனே கடுமையான சொலலைக்கொண்டு கொடுமையுள்ள விசுவாமித்திரர் சொல்லுகின்றார் எ - று. 121

தொக்க பற்பல விலங்குக டொடர்ந்துடல் பிளந்து நலியும
புக்க விக்குடி ஞைபிறகுடிஞை பற்பல பொருப்பு மலைதால்
இக்க டத்தினி லவத்திலெளி திற்புகுத றக்க தலதென்
மக்க ளோத்திரு மணஞ்செய்து புணர்ந்து நின்வளம பெறுதியால்.

இ - ள். ஒரு சேர்க்கையாகப் பலபல வகைகளான மிருகங்கள் வந்து தொடர்ந்து உங்களுடம்பைக் கிழித்து வருத்தஞ் செய்யும்; நீங்கள் வந்திருக்கின இந்த ஆற்றிலே பல பட்சிசாதிகளைக் கொண்டதா யிங்குள்ள மலைகளும், அவ்வகை மிருகங்களை யுடையனவே யாகையால், இப்படிப்பட்ட காட்டிலே வீணாகவந்து அலட்சியமாக எண்ணிச் செல்லுதல் தகுந்த காரியமன்று இனி

என் பெண்மக்களைத் திருக்கலியாணம் பண்ணிக்கொண்டு கூடி உன்னுடைய அரசாட்சியை நீயே பெறறுக்கொள் எ - று. 122

கண்ணி லாதமத னபபிணி கருததிடை பெருததி டின்மனத
தெண்ணி லாதுயி ரிறுததிடு மிடததினு மிடுகக ணுறுவார
மண்ணி லாசையும நிதிபபெரு வளததினிடை வைதத மனமும்
பெண்ணி லாசையு மொருத்தாகை பிடிதது விடுதற குரியரோ.

இ - ள். கண் தெரியாமையைச் செய்கிற காமநோயானது மனத்திலே அதிகமானால் மனததிலே ஒனறையும் எண்ணவொட்டாமல் உயிரை யழிக்கும். அல்லது அந்தக் காமததை மறைததுக்கொண டிருந்தால் துன்பப்படுவார்கள். ஆகையால், மணணிலுளள ஆசையும, திரவியமாகிய பெரிய தனமையிலே கொணட மனததாசையும, பெணணினிடததிலே கொணட ஆசையும ஒருவா கைககொணடு திரும்பிவிடக கூடுமானவோ? எ - று. 123

குக்கி புககது செருககொடு குடறகரு வருபபு வரவே
ககி விட்டது புசிபபவர் கடறபுவி யிடததி லுளரோ
தக்க சொறறிற முறைததிலை சழக்கின னெனப்பெய ரிடும
இக்க ருததையினி விடடுவிடு விட்டுவி டெனகக புறறினன்.

இ - ள். வயிறறுககுளளே போனது மததுடனே குடலுககு அருவருப்புத் தோனற வாந்திசெய்த அதை மறுபடியும் உணகிறவாகள இககடல் சூழ்ந்தவுலகத்தி லுளராவரோ? இல்லையாகையால, நீர தகுதியான சொற்றிறங்களைச் சொல்லவில்லை. எனனைக காவமுடையவனெனறு பெயரிடுகிற இந் நினைவை விட்டுவிடும். இனனமும விட்டுவிடுமெனறு அரசன சொனனன எ - று. 124

இடுத லுநதவிர்த லுமமிட மறிநதியல் பறிநதொ ருதாம
விடுத லுநதொடுத லுமவினை யறிநது வினையும வினைவறிந
தடுத லுமபடுத லும்மள வறிநதடை வறிநது செயலால்
கெடுத லுணடிறுத லுண்டவை யறிநதுணர் தரிறகெ டுவரோ.

இ - ள். ஒருதாம பிச்சையிடுகிறதும, பிச்சை யிடாதிருககிறதும் கொடுககுமிடமுந் தெரிந்து தன சுபாவமுந் தெரிந்து செய்யவேணடும. இனி செய்யுங் காரியமுந் தெரிநது, அது செய்தா லுண்டாகுகினற முடிவுந் தெரிந்து அந்தக் காரியததை விடவேணடும. அல்லது பறறவேண்டும், தனனளவுந் தெரிந்து இனி வருமளவுந் தெரிந்து பகைவனைக கொலல வேணடும், அல்லது தான சாவவேணடும. இவவளவு ஆலோசிததுச் செய்தலிலும கெடுதல வருகிறது முண்டு; அந்தக கெடுதி தீருகிறதுமுணடு. ஆகையா லககாரியங்களெல்லாந் தெரிந் துணாவார்களேயானால அவாகள் கெடுதலடைவாாகளோ? அடையாரகளென்றார் விசுவாமித்திரா எ - று. 125

இந்த வுத்தரமு னக்கினி யெனக்குரை செயதத குவதோ
வெநத புறகுளினை விட்டிடினும் வெட்டிவகி ரிட்டு விடினும

மூந்து வன்பினுட னென்வயின் முனிநதமுனி விற்க டியனேன்
தந்து விட்டபொருள் கொள்வதில் விருப்ப மொருசற்று மில்லையே.

இ-ள். இந்த மறுமொழி இனி எனக்குச் சொல்ல உமக்குத்தகுமோ! என்னை வெப்பமான நெருப்பிலே போட்டாலும், என்னை வெட்டி யிருபிளவு செய்தாலும், முனனேபிரியத்துடனே நீர் எனனிடத்திலே கோபித்து கோபத் துக்கஞ்சி அடியேன் கொடுத்துவிட்ட பொருளகளை மறுபடியும் வாங்கிக்கொள்ளு கிறதில் கொஞ்சமேனும் எனக்கு விருப்பமில்லை யெனறு னரசன எ-று. 126

புனித நின்சொலை மறுத்தலில் வெறுததிடல பொறுதத ருளெனப்
பனித வழ்நதபொழி விற்படி விழுநதடி பணிநது தொழலும்
முனிவெ குண்டிருவி ழிக்கடை சிவபபுறு நெருப்பெ ழமுனிந
தினிவ ருமபரிசு கண்டிடுக வென்றவ னகன்ற னனரோ.

இ-ள். (பினனும) பரிசுத்தமான முனீந்திரரே! உமமுடைய சொல்லை நான் தடுத்துப் பேசுகிறதினாலே எனனை வெறுததுவிடாமல் பொறுத்தருள வேணுமென்று அந்தப் பனிமொயத்திருக்கிற சோலையிலே பூமியிலே விழுந்து அவரடியை வணங்கிக் கும்பிடும்போது, விசுவாமித்திரர் கோபித்து இரண்டு கடைக்கண்களிலுஞ் சிவப்புணடாகி மிகவு நெருப்புத் தோனற பினனுங் கோபங்கொண்டு இனி நடக்கிற காரியங்களைத் தெரிந்துகொள்ளென்று கூறி அவவிடம் விட்டுப் போனார் எ-று. 127

மாத வன்கடித கன்றிட வருங்கொடு மையைக் கருதியே
சீத பங்கயமு கங்கருகி யெண்மடி தெளிநத துடனே
பூத லமபெறுவ துமபுலைம டநதையா புணாசசி யுமலலால்
ஏது வநதிடினு நனறென விருநதன னிருநத பொழுதே.

இ-ள். அபபடி அநத மகா தவததையுடைய விசுவாமித்திரர் விரை விலே அவவிடமவிட்டுப் போகவே, இனி வருவதான கொடுமைகளை யெண்ணிக் குளிர்நத தாமரைமலாபோலு முகங் கறுததுக் கருகுதலாய்ப் பின்னும எட்டுப்பஙகு தெளிவு தோனறுதலுடன உலகததைப் பெறுகிறதும அல்லது நீசபபெண்களைக் கூடுகிறதும ஆகிய இரணடையுமல்லாமல் இனி எதுவந்தாலும நலலதேயென்று ஆலோசிததுக்கொண்டிருந்தான அரசன. அப்படி இருக்கிறபோது எ-று. 128

கலி விருத்தம்

இறையவ னின்னண மெய்து மெல்லையில்
நிறைமலர்ச சோலையின் மறைநது நின்றுழி
அறைகழற் கௌசிக னரசன்பா னின்ற
மறையவன் வரும்படி மனததி னெண்ணினான்.

இ-ள். அரசனனவன இவவாறிருக்கையில், விசுவாமித்திரர் நிறைந்த மலர்களையுடைய அந்தச் சோலையிலே மறைந்து நினறுகொண்டு சத்தியா

நின்ற வீரகழலையுடைய அரிச்சந்திரனிடத்திலே நிற்கிற பிராமணனை சுக்கிரன தனனிடத்ததுக்கு வருமபடி மனத்திலே எண்ணினர் எ - று. 129

மாதவ நினைத்திட மறைய வனவிரைந
தாதரின் மயங்குறு மரசை நீஙகியே
ஏதமும வஞ்சமு மிழைகக வெண்ணியே
பாதக னினறபூம பழுவத தெய்தினன.

இ - ள பெரிய தவத்தையுடைய விசுவாமித்திரா நினைக்கவே, அறிவில்லாதவாபோல மயஙகுகினற அரசனை சுக்கிரன விரைவிலே விட்டுப்போய இனனமும பல துனபஙகளையும், வஞ்சனையையும செய்ய வெண்ணிக கொண்டு பாதகனன விசுவாமித்திரா நிற்கிற பூஞ்சோலைக்குள்ளே போனன எ - று. 130

வெஞசினக கௌசிகன வேதி யன்றனை
வஞசினத தழைததடல் வலல நாவியை
நஞ்சினிற மேறுயததே போல நன்கிலா
நெஞசினுக குறுவினை நிகழத்தி யேகினன.

இ - ள வெவவிதான கோபத்தையுடைய விசுவாமித்திரா மிகுநத கோபததோடு சுக்கிரனைக கூப்பிட்டு (தாம பண்ணியிருக்கிற சபத நிமித்தமாகக) கொலலுகிறதிலே வலலதான பசசை நாவியை நஞசிலே கலநதாற் போல அவனுடைய நனமையிலலாத நெஞ்சுக்கு மிகுந்த செய்வினைகளைச் செய்யுமபடி சொல்லிவிட்டுப போனா எ - று. 131

இனனது கௌசிக னியமபிப போனபின்
மனனனை மறையவன வநது நண்ணினன்
நன்னதி பெருககுநீ ரற்ற நாளிலே
அநநதி தனனைவிட டகன்று போயினா.

இ - ள். இப்படிபபட்ட செயகையை விசுவாமித்திரர் சொல்லிவிட்டுப் போனபினபு அரசனைச் சுக்கிரன வந்து கூடினன. பினபு அந்த நல்ல நதியிலே பெருகுவதான நீா வறறியிருக்கிற சமையத்தில அந்த நதியைக கடந்தப்பாற போனர்கள எ - று. 132

கனனியு மனனனுங காதன் மைநதனும்
நனனதி யமுனைவிட டேகு நாளிலே
சென்னியைத துளககிக்கண் சிவநது கௌசிகன
வனனியை வருகென மனததி லுனனினன்.

இ - ள். சந்திரமதியும அரசனும பிரியமுள்ள புத்திரனும அந்த நல்ல நதியாகிய ஆற்றைக கடந்துபோகுமபோது, விசுவாமித்திரர் தலையை யசைத்துக கண்கள சிவந்து அக்கினிபகவானை வரவேணுமென்று மனத்திலே நினைத்தார் எ - று. 133

வருகென நினைத்தலு மலர்த்தண் சூழலில
இருபிறப பாளனாய் விரைவி னெய்தியே
அருமறை மாதவ வெனைய ழைத்தவக்
கருமமே துரையெனக கனலவி னமபினுன்.

இ - ள். வரவேணுமென்று நினைத்தவுடனே அந்த மலர்களையுடைய குளிர்ந்தசோலையிலே அக்கினிபகவான பிராமணரூபத்தை யுடையவனாகி அதிசீக்கிரத்திலே வந்து, அருமையான வேதங்களெல்லாம் தெரிந்த பெரிய தவத்தையுடையவரே! என்னை வரவழைத்த அந்தக காரியம் யாது? சொல்லு மென்று கேட்டான எ - று. 134

கடுநெருப பின்னணம பகரக கௌசிகன்
நெடுவனம் பொடிபட வெரிதது நீமறித
தடுதிறன மன்னனை யடாநது கோளொடும
சுடுகென வுரைததன னவனுஞ சொலலுவான்.

இ - ள. கடுமையான அககினிதேவன இப்படிச் சொலலவே, விசுவாமித்திரா இநத நெடிதாகிய காடுகளையெலலாம எரிதது நீ தடுத்து, பகைவரைக கொல்ல வலலவனான அரசனை நெருஙகிககொள்ளுதலுடனே கூடச் சுட வேணுமென்று சொல்ல, அககினிதேவன சொல்லுகிறான எ - று. 135

கறபினின் மிககவள கன்னி நன்னெறிப்
பொறபினன மன்னன்யான சுடவும போகிலேன்
வெறபினின றருநதவ வெளிய டககினின
சொறபடி மறுககிலேன சுடுவனயா னென்றான்.

இ - ள. சநதிரவதியோ பதிவிரதாதருமததிற சிறநதவள; அரசனோ நன மார்ககமான அழகினாலே சிறநதவன. ஆகையால, நான அவாகளைச் சுடுகிறதற காகப் போகமாட்டேன. மகாமேருவிலே நினறு அரியதவஞ செய்கிறவரே! நான இந்த வெளிகளெலலா மடஙககொணடு உமமுடைய சொல்லினபடியே சுடுகிறேன என்று சொனனான அககினிதேவன எ - று. 136

இவவகை கேட்டபின முனிவ னேகினன
அவவழி நீஙகியே யகல வெய்திட
வெவவழன மறிததினி திருக்க வேநதனும
நவ்வியன் னாளுட னடநது போயினான்.

இ - ள். இந்தப்படி அகினிதேவன் சொல்லக் கேட்டபின்பு விஸ்வாமித்திரர் போனார். அங்கே அந்த இடத்தைவிட்டுத் தூரப்போய் கொடுமையான அக்கினிதேவன வழியை மறித்துககொண்டு சந்தோஷித்திருக்க, அரசனும் மான்போற் கண்களையுடைய சநதிரவதியுடனே நடந்து அவவிடத்திற்குப் போனான எ - று. 137

வெறிகமழ் சோலையும் வெற்பும் வெண்டிரை
எறிபுனற் பொய்கையு நீங்கி யேகியே
செறிகழை வனத்திடைச் செல்லச் சேணிடைப்
பொறிகளுங் கரும்பெரும் புகையுந் தோன்றின.

இ-ள். வாசனை பரிமளிக்கின்ற சோலைகளும், மலைகளும், வெண்மையான அலைகளை வீசுகின்ற நீர்க்குளங்களும் கடந்து சென்று, நெருங்கின ஒரு மூங்கில்வனத்திலே செல்லும்போது, தூரத்திலே நெருப்புப்பொறிகளும், கருமையான பெரிதாகிய புகைப்படர்ச்சியும் தோன்றுதலாயின எ-று. 138

கண்டனர் புகைவதே தென்னுங் காலையில்
மண்டலம் வளர்ந்துயர் வானைத் தாவியே
அண்டரண் டங்களும் வெடிக்க வார்த்தழல்
மண்டல மெங்கணும் வளைந்து கொண்டதே.

இ-ள். அதைக் கண்டார்கள், அங்கே புகைகிறது யாது காரணத்தினாலே யென்று நினைக்குமளவிலே அந்தப் பூமியிலே நின்று வளர்ந்து உயர்ந்த ஆகாயத்தையளாவி அண்டரண்டங்களெல்லாம் வெடிக்கும்படி முழங்கி அக்கினி கோட்டையாக எவ்விடத்தும் சூழ்ந்துகொண்டது எ-று. 139

இடஞ்சிறி தில்லையென வெண்டி சாமுகம்
படர்ந்தன விலங்கெலா மிரிந்து பாறிடக்
கடந்தவத் தொகுதியைக் கடிது நாடியே
தொடர்ந்தன வெனவழற் சுடரெ ழுந்ததே.

இ-ள். கொஞ்சமேனும் இடமில்லை யென்னும்படி எட்டுத் திக்கினிடங்களும் பரவுதலாயிருந்த மிருகங்களெல்லாம் ஓடி யொளிக்கும்போது, அப்படி ஓடுகிற அந்தக் கூட்டங்களை விரைந்தோடித் தொடர்ந்து வருகிறதுபோல் அக்கினிகொழுந்து வீசியது எ-று. 140

அவ்வழல் வளர்ந்திட வரசர் கோமகன்
இவ்வழ லெவ்வழ லென்று கூறலுஞ்
செவ்வழ லயிற்படைச் செல்வ கேளென
வெவ்வழ லனையசீர் வெள்ளி கூறுவான்.

இ-ள். அவ்வக்கினி அப்படிச் சூழ்ந்துக்கொள்ளும்போது ராஜாதிராஜனான அரிச்சந்திரன் இந்தநெருப்பு எந்தநெருப்பென்று கேட்குமளவில் சிவந்த அக்கினிபோற் சொலிக்கிற வேலாயுதத்தையுடைய அரசனே! கேளென்று வெப்பமாகிய நெருப்புக்கொப்பான குணத்தையுடைய சுக்கிரன் சொல்லுகிறான் எ-று. 141

சண்டவெம் பசியினு லழலாறு தாவியே
அண்டகோ ளத்தினை யடர்ந்த செந்தழல்

மண்டலத் தரசர்தம் மரபி லோருயிர
உண்டல தேகில தென்று ணர்ததினன்.

இ-ள். வேகமான வெவ்விய பசியினாலே கொதித்துததாவி அண்ட கோளத்தையும் நெருங்கின சிவந்த நெருப்பானது இந்த உலகத்துள்ள அரசர் குலத்திலே ஒரு உயிரையாவது சுட்டுததின்றாலல்லது வீணேபோகாதென்று சொன்னான் எ-று 142

ஒருவரை யாருயி ருண்டு போகிலயான
ஒருவனே யிறபபனீ ருய்நது போமெனத
திருவையு மகனையு நோககிச செஙகணீர
வரவர வனலெதிர் மன்ன னேகினான்.

இ-ள். ஒருவருடைய அருமையான உயிரைப புசித்து இந்த நெருப்புத தணியுமேயானால நான ஒருவனை சாகிறேன; நீஙகள தபபிப போஙகளெனறு சந்திரவதியையும மகனையும பாரத்துச் சிவந்தககண்களிலே நீரொழுக வொழுக அந்த நெருப்புககெதிரே அரசன சென்றான எ-று 143

புரவல னடிகளைப பூண்ட மைசசனோர
உரையிது கேட்டியா னொருவ னிறகவே
அரசழி வதுனல னனறு நிறறிநீ
விரைகொடு கனலிடை வீழவல யானெனறான.

இ-ள். அப்போது மநதிரியானவன அரசனுடைய பாதஙகளைப் பிடித்துககொண்டு அரசனே! இதொரு வாரத்தையைமாததிரம கேளும்; நானொருவ னிருககுமபோது அரசனிறககிறது நீதியலல, நீர நிலலும்; நானொருவனே விரைவுடனேபோய் அந்த நெருப்பிலே விழுகிறேனெனறான எ-று. 144

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

அன்னவை யுரைகக வண்ண லவனைமாா பிறுகப புலலி
மன்னவர் தமமை யனறி மறறவ ருயிரை யுண்ணு
தென்னவுங கேடடேன யானீ யிறககினு மிறக்க வேண்டும
உன்னுயிர விடாம லெனற னுருயிர விடுத னனறே.

இ-ள். அநத வாரததைகளை மந்திரி சொலலவே அரசன அவனை மார புடனே இறுக அணைததுககொணடு அரசரையலலது மறறோருயிரைப புசியாது இந்த நெருபபெனறு சொலலககேட்டேன ஆகையாலே நீ இறந்தாலும் அரசனான நான உடனே சாகவேணடிவரும அதறகாக உனனுடைய உயிரை விட்டு விடாமல் எனனுயிரை விடுகிறதே நலலது எ-று 145

இருவரு மிறநதோ மாகி லிவரையோா பதியிற் சோக்க
ஒருதுணை யுணடோ சொல்லா யுறுபொரு ளுணர்நதோ யென்று
மருமலர் நறுநதாா மனனன மறுதலைந துரைககு மெல்லை
திருவெழில வடமீன கறபின றிருநதிழை செபப லுறறாள.

இ-ள் இனிவருங் காரியந் தெரிந்த மதிமந்திரியே! நாமிருவரும் இறந்தோமேயானால் இந்த இரண்டுபேரையும் ஒரூரிலே கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டுமே? அதற்காக ஏதேனுமொரு துணையுண்டோ சொல்லென்று மணம் பொருந்திய திவ்வியமான மாலையணிந்த அரசன் தடுத்துச் சொல்லும் போது லட்சுமிபோலும் அழகும்; அருந்ததிபோலுங் கற்புமுள்ள திருத்தமான ஆபரணங்களை யணிந்த சந்திரவதி சொல்லலானாள் எ-று. 146

மாந்தரா லிறத்தல் வாழ்தன் மாதராக் கென்று மேனாள்
ஆய்ந்தநூ லறிந்தோர் கூறக் கேட்டன னாத லாலே
வேந்தனை விடாது காத்தி யண்ணனீ யானிவ் வெந்தீப்
பாய்ந்துயிர் விடுவே னென்னாப் பைந்தொடி முந்திச் சென்றாள்.

இ-ள். புருஷராலே பெண்களுக்குச் சாவும் வாழ்வுமென்று முன்னாளிலே சாஸ்திரங்களை ஆராய்ந்துணர்ந்தவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆகையால் பெருமை பொருந்திய சத்தியகீர்த்தியே! நமதரசனை விட்டு விடாமற் காத்துக்கொள். நான் இந்த வெப்பமான நெருப்பிலே விழுந்து உயிரை விடுகிறேனென்று கூறிச் சந்திரவதி முந்தி நடந்தாள் எ-று. 147

அன்னைதா னேக மைந்த னலறிச்சென் றடிவீழ்ந் தன்னாய்
என்னைநீ பயந்தீ ருங்க ளிடுக்கணுக் குதவ வன்றோ
முன்னையூழ் விதியி னாலே முந்தியா னழலில் வீழ்வேன்
பின்னைநீ பிழைமி னென்றான் பெருகுநீ ரருவிக் கண்ணான்.

இ-ள். அப்படித் தாயானவள் போகும்போது புத்திரன் அலறிக் கொண்டுபோய்க் காலிலே விழுந்து தாயே! உங்களுக்கு வந்த துன்பத்திற் குதவியாக வேண்டியல்லவோ என்னை நீங்கள் பெற்றீர்கள். பூர்வ காமானு குணமாக முன்னதாக நானே நெருப்பிலே போய் விழுகிறேன். பின்பு நீங்கள் தப்பித்துக்கொள்ளுங்களென்று பெருகுகின்ற நீரருவிபோன்ற கண்ணீரை யுடையவனான லோகிதாசன் எ-று. 148

தையலா ளச்சொற் கேட்டுத் தனயனைத் தழுவி மோந்து
செய்யவாய்ப் பல்வீழ்ந் தில்லாய் செழுமுலை மறந்தா யல்லை
ஐயவித் துணிவு மிந்த வறிவுமெங் கடுத்த தென்னாக்
கையினான் முகத்தின் மோதிக் கண்ணினா லருவி சோர்ந்தாள்.

இ-ள். சந்திரவதியானவள் அந்த வார்த்தையைக் கேட்டுப் புத்திரனை அணைத்துக்கொண்டு உச்சிமுகர்ந்து ஐயனே! இன்னமும் உன்னுடைய சிவந்த வாயினின்றும் பல் விழாதிருக்கிறாய்? செழுமையான முலைப்பால் குடித்து மறக்காதிருக்கிறாய்? அப்பனே! உனக்கு இவ்வளவு துணிவும் இப்படிப்பட்ட புத்தியும் எப்படி யுண்டாயிற்றென்று தன் கைகளாலே முகத்திலே அடித்துக்கொண்டு கண்களிலே நீரானது அருவிபோ லொழுகவிட்டுக்கொண்டு நின்றாள் எ-று. 149

செய்தவப் பயத்தி னாலே தோன்றிய செல்வ செய்த
கைதவ முண்டே னம்மைக கடுங்கனல் கொல்லு மல்லால்
உய்தக வுதவு முள்ளம் வருநதலே யொழிநீ யென்று
மொய்தழ றன்னைச சென்று முடுகிநின் றினைய சொல்வாள்.

இ-ள். நாங்கள செய்த தவப்பயனாலே தோனறின புத்திரனே! நாமேதேனு மொருவருககு வஞ்சனை செய்திருந்தோமானால் இந்த நெருப்பு நம்மை கொல்லுமேயல்லாமல் வேறொரு வகையாலு நம்மைக் கொல்லாது உனக்கு மேலான யோக்கியதை யுண்டாகத் தப்பிககொள்வை. மனம் வருந்தாதை. நீ தூரப்போவென்று நெருங்கி வருகிற அந்த நெருப்பின் முன்னே போய் விரைவுகொண்டு நின்று இவவாறதை சொல்லுகிறாள் சந்திரவதி எ-று.

மறைவழி கடநதே மாகில் வருமவிருந திகழ்நதே மாகில்
முறைவழி செய்யே மாகின் மூப்பரை யிகழ்ந்தே மாகில்
பிறர்மனை நயந்தே மாகிற் பிறர்மனம வைததே மாகில்
குறைசில செய்தே மாகிற் கொல்லெனக் கனலிற் பாய்நதாள்.

இ-ள். வேதநெறியைக் கடந்து நாஙகள் நடந்தோமானாலும், வருவதான விருந்தினரை இகழ்ந்தோமானாலும், நீதிவழியே அரசு நடத்தா திருந்தோமானாலும், பெரியோர்களை இகழ்ந்தோமானாலும், பிற மனையாளை இச்சித்தோமானாலும், பிறபுருஷனிடததிலே மனததனபு கொண்டோமானாலும, இன்னம் வெவ்வேறான சில குறைகள் செய்திருந்தோமானாலும நீ கொலலககடவை யென்று அந்த நெருப்பிலே போய விழுந்தாள் எ-று. 151

மதுரமென் மொழியாள் கற்பு வளர்நெடு வடவைத தீயின்
முதிர்தழ லதுதா னென்னைச சுடுமென முழஙகு செநதீ
அதிர்குர லாறபு மாறி யடங்கிநா வொடுஙகிக காலைக்
கதிரவன் வரவு கண்ட விருளெனக கழிநத தன்றே.

இ-ள். மதுரமான மிருதுபாஷியாகிய சந்திரவதியினுடைய கற்பென்று வளருகிற வடவாககினியிலு முதிர்ந்த நெருப்பானது எனனைச் சுடுமென்று சொன்னவுடனே முழங்கி யெரிகிற அந்த நெருப்பானது தான அதிரு கினற குரற் சப்தமாறி நாவுமொடுங்கி அலங்குதலாய் உதயகாலத்து சூரியனைக் கண்ட இருள்போ லாறிப்போயிற்று எ-று. 152

மண்டழ றணிநது மூங்கில் வனமெலாம வாவி யாகி
முண்டகங் குமுத நீல முளரிக ணிறையப் பூப்பக்
கண்டகங் குளிர்நது கற்பிற் கரசியைப் புகழ்நது போற்றி
வண்டலின் மணிகொ ழிக்கும் வாரண வாசி சேர்நதார்.

இ-ள். அப்படி நெருஙகின நெருப்பாறி, அந்த மூங்கிற் காடெல்லாம் குளமாகி வெண்டாமரை, குமுதம, நீலம், செந்தாமரையாகிய இவைகள் நிறைய மலர்ந்து தோனறக்கணடு மனஙகுளிர்ந்து பதிவிரதா சிரோமணியைத்

தோத்திரஞ் செய்து கொண்டாடி, 'சேற்று நிலமெல்லா முதனுகளை ஒதுக்குவதான வாரணவாசியைப் போய்ச் சேர்ந்தார்கள் என்று. வாரணவாசி யென்பது காசிக்ஷேத்திரத்திற் கோர்பெயர். 153

வாரண வாசி நண்ணி வணிதுறை யதனின் மூழ்கி
ஆரண நெறிநீ ராடி யந்நதி யகன்று போகிப்
பூரணக் கொங்கை மாதும் புதல்வனும் பின்னே போதக்
காரணத் தமைச்ச னோடுங் காசிநன் னாட்டைச் சேர்ந்தான்.

இ-ள். அரசன், அந்த வாரணவாசிக்குப் போய் அங்குள்ள அழகிதான தீர்த்தத் துறையை யடுத்து வேதமார்க்கப்படி தீர்த்தமாடி அந்த நதியையுங் கடந்து சென்று பூரண கும்பம் போன்ற தொங்கைகளையுடைய சந்திரமதியும் புத்திரனும் பின்னேவரத் தன்னிடத்திலிருக்கத்தக்க கூடவருகிற மந்திரியுடனே காசியென்கிற நல்ல நாட்டைச் சேர்ந்தான் எ-று. 154

நகர்நீங்கிய காண்டம் முற்றிற்று.

ஆக விருத்தம் - 906

---

## ஏழாவது

## காசி காண்டம்

மாவெலா மளிகள் பாட மகிழ்ந்துநல் வாச மன்னும்
பூவெலாஞ் செழுந்தே னக்கப் பூவையுங் கிளியும் போதும்
பாவெலா முருகக் கேட்டுப் பலகனி பரிசி னல்கிக்
காவெலாந் தலைய சைக்குங் காசிநாட் டியல்பு சொல்வாம்.

இ-ள். வயல்களெல்லாம் வண்டுகள் சந்தோஷித்துப் பாடிக்கொண்டிருக்கவும், நல்ல மணம் பொருந்தின மலர்களெல்லாம் செழுமையான தேன் பெருகவும், நாகணவாய்ப்புள்ளும் கிளிகளும் பாடுகின்ற பாடல்களை யெல்லாம் மனமுருகுவதாகக் கேட்டு அவைகளுக்குப் பலவித பழங்களையும் வெகுமானமாகக் கொடுத்துச் சோலை முழுதும் தலைகளை யசைக்கத்தக்க காசிநாட்டினது வளமையைச் சொல்லுவோம் எ-று. 1

தேவியுங் கோவு மெய்த்த திருப்புச் செழுங் கமலப் போதும்
காவியுங் குமுதப் போதுங் காமரு செங்கி டையுந் தண்ணீர்
வாவியுங் காட்ட வார்நீர் வதனமுங் காட்ட வண்டாம்
பாவியு மீதே தென்று பார்த்தவிந் தழுது மன்னே.

இ-ள். சந்திரமதியும் அரசனும் போகும்வழியில் குளிர்ந்த நீர்க்குளங்களும், (தமக்குள்ளனவாக) விளங்குகின்ற செந்தாமரை மலரும், நீல மலரும்

செவ்வல்லிமலரும், அழகிய சிவந்த "நெட்டியும்" தோனறச்செய்ய அப்ப டியே சந்திரவதியினுடைய முகமும் அவைகளைத் தோன்றச்செய்ய வண்டு என்கிற பாவியும் இது எது புதுமையாயிருக்கிறதென்று பரிதபித்தலா யலைத லாயிற்று எ - று.

பாவி - ஒகக கிளைப்பது. 2

வயலெலாஞ் செந்நெல் செநநெல் மருங்கெலாங் கயல்கள் வாவுங்
கயலெலாங் கலவை வாசங் காவெலாம புயல்கள காவிற்
புயலெலாம் புகையே யகதப் புகையெலாம பூழில் பூழில்
அயலெலா மாரமாரத் தருவெலாந தேவதாரம.

இ - ள். வயல்களெல்லாஞ் சிவந்த நெற்களும், அந்தச் சிவந்த நெற்களி னிடமெல்லாம கயற்கெணடைகளும், அப்படித துள்ளுகிற கயற்கெண்டைகள் மேலெல்லாம் பலவாசக கூட்டுமணமும், சோலைகளெல்லாம் மேகஙகளும் அந் தச் சோலையிற் படிகிற மேகங்களெல்லாம் ஓமப புகைகளே! அந்த ஓமப் புகைக ளெல்லாம் அகில் விருட்சங்களினருகே, அந்த அகில் விருட்சங்களி னருகெல் லாம் சந்தன விருட்சங்கள்; அந்தச் சந்தன விருட்சஙகளி னருகெல்லாம் தேவதார விருட்சஙகள் எ - று. 3

நுரைமண நாறுஞ் சீத நுண்டுளித திரளகள் சிநதும
திரைமண நாறு மீனத திரண்மண நாறுஞ செநதா
மரைமண நாறும் வெள்ளை வளைமண நாறும வாவிக
கரைமண நாறு மாதர் கனதனக் கலவை யமமா.

இ - ள். நீராடுகிற பெணகளுடைய கனமான கொஙகைகளிலே பூசின கலவைச்சந்தன வாசனையாகவே குளததுநீர நுரைகளும வாசம வீசும், குளிர்ந்த சிறிய துளிக கூட்டங்களைச் சிதறுகினற அலைகளும வாசம் வீசும், மீனினங்களும் வாசம வீசும, செந்தாமரை மலாகளும வாசம வீசும, வெள்ளைச் சஙகுகளும் வாசம் வீசும, அந்தக குளககரையும் வாசமவீசும எ - று. 4

கரும்பினை யொடிதது மள்ளர் கடாவினை யடிக்கச சிநதி
நிரம்பின முதத மெங்கு நீணிலாக கதிரப ரபபித
திருமபின திசைக டோறுந திகழ்தலா ற செறிநது பன்மீன்
அருமபிய வானு மநநாட் டேசனியு மொத்த வனறே.

இ - ள். உழவாகள் கரும்பை ஒடிதது எருமைககடாககளை அடிக்க அக் கரும்பினின்றுஞ் சிதறி கிரமபுதலான முத்துகள் எவவிடததும் நெடிதான சந்திரப்பிரபையை விரித்து திருமபிய்யாககிற திசைகளெல்லாம் விளங்குகிற தினாலே நெருங்கிப் பல நட்சததிரங்கள் பூதத ஆகாயமும அவவாகாய நாட்டி லுள்ள இடியையு மொப்பாயிருந்தது எ - று. 5

காய்ந்தவெஞ் சினக்க டாக்கள் கமலங்கள் சிதைத்த மூந்திச்
சாய்ந்தவக் குழிகளெல்லாஞ் சங்கினஞ் சரிவமேதி

தோய்ந்த பூந்தடங்க ளெல்லாந் துள்ளுவ*வாளைகாளை
பாய்ந்தவக் குழிகளெல்லாம் பறிவன பலவின்றூறல.

இ-ள். அப்படி உழவராலே அடிக்கப்பட்ட வெவ்விய கோபத்தை யுடைய எருமைக்கடாக்கள் தாமரை மலர்களைக் கெடுத்து அழுந்துதலாகி சாய்ந்து கிடக்கிற கழிகளிலேயெல்லாம் சங்குக்கூட்டங்கள் சரிந்து கிடக்கின்றன எருமைகள் படிந்த பூங்குளங்களெல்லாம் இளவாளைமீன்கள் துள்ளுவன வாகிப் பாய்ந்த அந்தக் குழிகளெல்லாம் பலாப்பழத் தேன வந்து நிறைவன வாகும் எ-று. 6

கடைசியர் குரவை கேட்டுக் கலங்கிமே மயங்கிக்காவி
னிடையிடை மறைவதே போலிரி வனகிளிகளெல்லாம்
மடையிடை சரியுமுத்தம வளரிள நகைகண் டஞ்சி
உடைபெரும புனலிலோடி யொளிப் பனபோன்ற வன்றே.

இ-ள். அந்த நாட்டிலுள்ள உழத்திகளுடைய குரவைப் பாட்டைக் கேட்டுக் கலங்கி மயங்கிச் சோலையிலுள்ள மரத்தினிடை விடங்களிலே மறைந்து கொள்ளுகிறதைப்போற கிளிகளெல்லாம் ஓடலாயின நீர்மடைகளிலே ஒதுங்குகின்ற முத்துக்கள் அந்த உழத்திகளுடைய ஒளிவளருகின்ற இளமையான தந்தவரிசைகளைக்கண்டு பயந்து கரையை உடைக்கிற பிரவாக ஜலத்துக் குள்ளே ஓடியொளித்துக்கொள்ளுகின்றன போன்றன எ-று. 7

இன்விளை மதுவுண்மள்ள ரிருந்துநாள் கொண்டு வித்தி
முன்விளை செந்நெல்கொய்து வருமுதன முதிர்ந்து காய்ந்த
பின்விளை கதிர்களாலைப பெருக்கினின முளைபபவெல்லாம
பொன்விளை குரலிறஞ்ஞைமுமுழ வெள்ளிவால் போன்ற வன்றே.

இ-ள். தித்திப்புண்டாகும் கள்ளைக் குடித்துக்கொண்டிருக்கிற உழவர்கள் ஆலோசித்திருந்து நல்லநாள் கேட்டு விதைத்து முன்னே விளைந்த சிவந்த நெற்களை அறுத்துக்கொண்டு போனபின்பு தோன்றுகிற அந்த நெல்லின் அடிமுறறி உலர்ந்தபின்பு விளைகிற கதிர்கள் ஆலைக்கரும பின சாறுறுப்பெருக்கிறலே விளைவன. அவையெல்லாம் பொன்னிறமாக விளைகின்ற கதிர்களுக்கு வெள்ளிவால் முளைத்தாற்போ லிருந்தன எ-று. 8

இயலறி புலவோர்தம மாடடுள் ளனவில் தேர்க்கிந்த
செயலறிந் துள்நாள் கைமமா றளித்திடச்செல வோர்போல
வயலவளரு கரகக்மேனுண மழைவளரு கரந்த சீரசால்
புயல்வளர் விசும்பிற செந்நெல போயபபுர வளர்ந்தவன்றே.

இ-ள். ஈகையி னிலக்கணந் *தெரிந்த தாதாக்கள் தங்களிடத்திலுள்ள பொருள்களையெல்லாம இரப்போர்க்குக் கொடுத்த செய்கை தெரிந்து தமக் குண்டான போதில் அப்படி முன் கொடுத்தவர்களுக்குப் பிரதியுபகாரஞ் செய்யப்போகிற நல்லோரைப்போல, வயலிலே விளைவுண்டாக முன்னுளில மழை

பெய்கிறதாலதிகமான சிறப்புமிக்க அந்த மேகங்க ளுலாவுகின்ற ஆகாயத்திலே சிறந்த சிகரங்கள்போய் முட்டுவதாக வளர்ந்திருக்கின்றன எ - று. 9

இத்தகை யாயநன் னாடெல் லைகண் டொல்லை யேகி
மைத்தவழ் கபாட வாயின மணிநிழல் வந்து நண்ணிக்
கொத்தலர் குழலி யோடுங் கோளொடுங் குமர னோடும்
மெய்த்திற லமைச்ச னோடும் வித்தகன் காசி புக்கான்.

இ - ள். இப்படிப்பட்ட பெருமையை யுடையதான அந்த நல்ல நாட்டின எல்லைமுழுதுங் கண்டுகொண்டு விரைவிலேசென்று மேகந்தவழுவதான கதவுபூண்ட கோட்டைவாயிலின் அழகுதான நிழலிலே வந்துகூடி கொத்துகளை விரிக்கக் கூந்தலையுடைய சந்திரமதியுடனே சுக்கிராசாரியும் புத்திரனும் மெய்க்கீர்த்தியென்கிற பெயரையுடைய மந்திரியுமாக அரிச்சந்திரன் காசிப்பட்டணத்துக்குள்ளே போனான் எ - று. 10

ஆரண சாலை கோடி யாவண வீதி கோடி
தோரண வாயில் கோடி சூடாமணி மாடங் கோடி
பூரணகும்ப மின்னிப் பொலியுமண் டபங்கள் கோடி
வாரண பந்தி கோடி வயப்பரிப் பந்தி கோடி.

இ - ள். வேதாத்தியயன சாலைகள் கோடி. கடைவீதிகள் கோடி. தோரணங்கட்டின வாயில்கள் கோடி. ஒளிபொருந்தின சூரியகாந்தக்கல்லாற்செய்திருக்கிற வீடுகள்கோடி. நிறைகுடங்கள் விளங்கிப் பொலிவு கொண்ட மண்டபங்கள் கோடி. யானைச்சாலைகள் கோடி குதிரைலாயங்கள்கோடி எ - று. 11

ஆடுமங் கைய ரனந்த ராடுவா ராடல் காண
ஓடுமங் கைய ரனந்த ருலாவுமங் கைய ரனந்தர்
பாடுமங் கைய ரனந்தர் பயிறரு வீதி யெல்லாம்
வாடுமங் கையுமயோத்தி மன்னனுங் கண்டுபோனார்.

இ - ள். ஆடுகின்ற பெண்கள் அநேகர் ஆடுகின்றார்கள். அவர்களாடலைக் காண ஓடுகிற பெண்கள் அநேகர்கள் அங்கே போக்குவரவா யிருக்கிற பெண்கள் அநேகர்கள். பாடுகிற பெண்கள் அநேகர்கள் இப்படியாக பழகுதலையுடைய தெருக்களை முழுதும் சோர்வுள்ள சந்திரமதியும் அரிச்சந்திரனுங்கண்டு கொண்டே போனார்கள் எ - று. 12

தொலைவிலா முதல்வ னுக்கு நேர்க்கும்பர் புணர்க்கு மாய
அலைவிலா நகரம் புக்கா ரிமைய ளளகக் காடும்
கலைவிழிக் கடலும் பிணைப்பக் கடுங்கட லாயும் பார
முலையெனு மலையும் வந்து முறிந்தன ...தாழும்

இ - ள். மனச்சோர்விலலாத தலைவனான அரிச்சந்திரனுக்கும் கூட வருகிற சுக்கிரனுக்கும் அந்த அலைச்சலில்லாத பெரிய காசிநகரத்துக்குள்ளே புகுந்து செல்லுவாரானபோது, அங்குள்ள பெண்களினுடைய கூந்தற்காடும்

மான்போல்வனவாகிய கண்களென்கிற கடலும், சுத்தமைந்த தருவதான நிதம்ப மாகிய பாமமும், சந்தத கொங்கைகளென்கிற மலைகளும் தோன்றுதலாய் முன்னே கண்டுகொண்டுவந்த தப்படியே விரைவுகொள்ளலாயின வீதிகளெல்லாம் எ - று. 13

உத்திர பதத்தி மீதிலுயர்ந்தமா ளிகையி னுற்றிச
சித்திரச் சாள ரங்க டிறந்து செந்திருவை யன்னா
வத்திரச் சிலைகள் கோட்டி மன்னனை யிலக்கா வெய்த
அத்திர மனந்த கோடி யனைத்தில வறிவுங் கருதி.

இ - ள். உத்தரவரிசைகளின் மேற்றலே உயர்ந்துள்ள வீடுகளின் முகட்டிலே அழகான சன்னல்களைத் திறந்துகொண்டு லட்சுமியையொப்பான பெண்கள் முகத்திலுள்ள புருவமாகிய வில்களை வளைவாக அரிச்சந்திரமகாராஜனை லட்சிய மாக வைத்துச் செலுத்தின கணைகளான அனந்தங்கோடி அம்புகளும் இவ்வரச னுடைய ஞானத்துக்குப் பயந்து அருகில் வந்திருங்கவில்லை எ - று. 14

அன்னவை பலகண்டேகி யணிமணிக் கோயி லண்ணி
நன்னதி புனைந்த சென்னி நாயகன் விசுவ நாதன்
சன்னிதி தன்னிற் சென்று தலையுற வணங்கிப் போந்து
மன்னவர் பெருமா னங்கோர் மணிமுடிப் பொதியில் சேர்ந்தான்.

இ - ள். அப்படிப்பட்ட அதிசயங்கள் பலவுங் கண்டு சென்று பதித்துள்ள இரத்தினமயமான கோயிலுக்குள்ளே போய் நல்ல கங்காநதியைத் தரித்த தலையையுடைய சுவாமியான விசுவநாதர் சந்நிதிமுன்னே சென்று தலைபடிய வணங்கிக்கொண்டு பின்பு வெளியே வந்து அரசர்க்கரசனானவன் அங்கே ஒரு அழகிய சிகரத்தைக்கொண்டிருக்கின்ற அம்பலச் சாவடியைப் போய்ச் சேர்ந் தான் எ - று. 15

அப்பெரும் பொதியில் புக்கா ரமைச்சரங் காடி நண்ணி
எப்பெரும் பண்டமுங் கொண் டெய்தி னிமைப்பி னட்டுச்
செப்பருந் திருவினல்லா டிருக்கையா லடைந்த வன்னம்
துய்ப்பன செய்திருந்தா ரிருந்தபி னிகழ்ந்த சொல்வாம்.

இ - ள். அந்தப் பெரிதான அம்பலச்சாவடிக்குள்ளே போனவர்களில் மந் திரியானவன் கடைவீதிக்குப் போய் அவசியமான பெரிதான சமையலுக்கு வேண்டியவைகளையெல்லாம் வாங்கிக்கொண்டு வந்தான்; வந்தபின்பு ஒரு க்ஷணப் பொழுதுக்குள்ளே சமையல்செய்து பலவுந் தரித்தான்; இலட்சுமிபோற் சிவந்த சந்திரவதியானவள் தன்னுடைய புருஷனுக்கு முன்னே படைத்த சோற்றைப் புசித்துக்கொண்டிருந்தார்கள். அப்படியிருந்த பின்பு நடந்தவைகளைச் சொல்லு கிறோம் எ - று. 16

சந்தக்கலி விருத்தம்

ஒருநாள்செல மறுநாளையி லுறுநீயினை நினையா
பொருமால்களி றுடையானொடு புகமோனம்பிக வெகுளா

முருகார்தொடை முடியாய்மறை முனிகூறிய பொருணீ
தருமாறுள தெனிலின்றது தருகென்று தடுத்தான்.

இ - ள். ஒருநாளபோக மறுதினத்திலே மிகக கொடுமைசெய்ய வினைத்துப் பொருதுவதான உயர்ந்த பட்டத்து யானையையுடைய அரசனுடனே சுக்கிரன் மிகவுங் கோபங்கொண்டு வாசனைதங்கிய மாலைமுடியையுடைய அரசனே! வைதிகரான விசுவாமித்திரருக்குச் சொன்ன பொருளகளை நீ கொடுப்பதுண்டானால் இப்போதே அதைக் கொடுத்துவிடென்று தடுத்து நின்றான எ - று. 17

அதிரப்பெரு காவதமொடு மழலகடபுகா பலகால
முதிரசசில சுடுகட்டுரை மொழியபபொரு டருமா
சதுரெப்படி யெனவெய்துதுட ...ளாரததுணை விழிமுத
துதிரசசிறி தெதிருந்தா முரையாம லிருந்தான.

இ - ள். அதிரச்சியாக மிகுகின்ற முழக்கத்துடனே கொதிக்கின்ற கண்களையுடைய சுக்கிரன பலதரமும முதிரசசியாகச் சிறிது கடுஞ் சொற்களைச் சொல்லுமபோது இனிப பொருள தருவதான புத்தி எபபடியென்று இளைத்து உடம்பு சோாவாக இரண்டு கண்களிலும முத்துபபோல நீரொழுகக கொஞ்ச மேனும மறுமொழி சொல்லாம லிருந்தா னரசன எ - று. 18

மொழியுமபழி யுணராமுகிழ் முலையாண்முதி கடனீா
பொழியுங்கயல் விழியாணமுனி பொருணலகுத றுணியா
எழுகின்றதொா பசியானலி வெருகஞ்சிய வெலிபோல
அழுகின்றதெ னரசேயென வவனுஞ்சில மொழிவான.

இ - ள். அபபடிச சுக்கிரன சொல்லுகிற பழிபபு வார்த்தைகளைக கேட்டு அரும்புபோலுந தனங்களையுடையவளாய முதிர்ந்த கடலநீரைபபோற சிந்துகின்ற கெண்டைமீனபோலுங கண்களையுடைய சந்திரமதியானவள் அரசே! விசுவாமித்திரருக்குக கொடுக்கவேண்டிய பொருள கொடுக்கிறதற்குத் துணிவு கொள்ளாமல, மூளுகின்றதான பசியினாலே வருந்துகின்ற ஒரு பூனைக்குப் பயப படுகின்ற எலியைப்போல கண்ணீர்விடக காரியமென்னவென்று சொல்ல, அரசனும மனைவியை நோக்கிச சில வார்த்தை சொல்லுகிறான எ - று. 19

மின்னஞ்சிய விடையாய்கதிா வேலஞ்சிய விழியாய்
வனனெஞ்சுடை முனிநமமுடை வளமுளளது கொணடான
எனனெஞ்சமு முனனெஞ்சமு மொன றனறியி ரணடோ
உன்னெஞ்சறி யாதெனவயி னுளதோபொரு ளெனறான.

இ - ள். மினனலஞ்சுவதான இடையும, ஒளிபொருந்தின வேலாயுதமும அஞ்சுவதான கணகளையுடைய பெண்ணே! கடினநெஞ்சையுடைய விசுவாமித்திரர் நம்முடைய செல்வமாகவுள்ள யெல்லாம கவர்ந்துகொணடார. ஆகையால், என மனமும உன மனமும ஒன்றேயல்ல திரணடாகுவதுணடோ?

(இல்லையே இனி) உன மனதிற்குத் தெரியாத பொருள்கள் என்னிடத்தி லுண்டோவென்று சொனனன அரசன அதறகு எ - று. 20

கல்லென்றுயர் தோளாய் கௌசிகனெண் ணுத லலலால்
இல்லென்பது முளதெனபது மியாமெண் ணுத றகுமோ
எல்லொன்றினி யவதிததின மெனையுமமக னையுநீ
வில்லென்றனள் கற்புகமொரு விததாகிய நிததாள்.

இ - ள. மலையென்று சொல்லலான தோள்களையுடைய அரசே! நம் மிடத்திலே பொருள்களில்லை யெனபதும் உள்ளதென்பதும் விசுவாமித்தி ரர் ஆலோசிக்கவேண்டியதே யல்லது நாம் இந்தச் சுககிரனைககுறித்து வருத்தஞ் செயகிறுனேயென்று ஆலோசிப்பது தககதல்ல; இனிக கெடு வானநாள் முடிவாகு முனனே எனனையும, புததிரனையும் நீர் விலை செய்துவிடு மெனறு பதிவிரதா தருமத்துககு ஒரு விதையாகித தோனறின சந்திரவதி சொன்னுள் எ - று.

எல்லொன்றும் - நாள் முடிவுபெறும. 21

அவ்வாறுரை செயமன்னவ னலையுஙகுறை யுயிர்கொண்
டெவ்வாறுமை விலைகூறுவலெ னவெண்ணியி டைநதான்
வெவ்வாய்வடி வேலோயெமை விலைகூறுத லரிதென்
றெவ்வாயெனின் விடுமோநம தூழின்வலி யெனறுள்.

இ - ள. அப்படிச் சந்திரவதி சொல்லவே, அரசனனவன் அலைவதான குறைவுயிரைக்கொண்டு உங்களை எப்படி விலை கூறுவேனெனறு நினைதது வருந்திப் பினனிடும்போது, வெமமை வாய்ந்த கூர்மைகொண்ட வேலையுடைய அரசனே! எங்களை விலைககு விறகிற தருமையெனறு நீர சமமதியீரேயானுல் நம்முடைய பூர்வகருமம் விட்டுவிடுமோவெனறு சந்திரவதி சொனனுள் எ - று.

தேமென்கனி வாயாளிது செபபசசெய விதுவே
யாமென்றெழ வேசெவளியு மதுவேநல னெனறுன்
மாமன்னவன் மைநதனறலை பிசையுஙகுல மடவாள
பூமென்குழன மிசையுஞசிறு புலவைததது நடநதான்.

இ - ள. தித்திப்பமைந்த மிருதுவான கனிபோனற வாயையுடைய சந்திரவதி இபபடிச் சொலலவே, இனிச் செயயததகக திதுவே சரியெனறு எழுந்தபோது, சுககிரனும அப்படி விறகிறதே நனமையெனறு சொனனன. அப்போது பேரரசனனவன புததிரன தலைமேலும் குலககொடியான சந்திர வதியினுடைய பூவையணிந்த மிருதுவான கூந்தலமேலும சிறு புல்லை வைத் துக் கூட்டிககொணடு செனறுன எ - று. 23

மெள்ளச்செல நாணஞ்செல விரையசசெல வாய்மை
தள்ளப்புதல் வனையுமமயி றனையுமமுன டததி

உள்ளத்துய ரறிவாகிய வரனுலுக விழிநீர்
வெள்ளத்தினை யடையாவிறை விலைகூறி நடந்தான்.

இ-ள். அப்படி மெதுவாகப் போகும்போது வெட்கங்கொண்டவனாகி விரைந்து செல்லும்போது வாய்ப்பேச்சுகள் தடுமாறவும், புத்திரனையும் மனைவியையும் முன்னே நடத்திக்கொண்டு மனத்திலே உயர்ந்த அறிவாகிய பலத்தினாலே சிந்துகின்ற கண்ணீர் வெள்ளத்துக்குள்ளே முழுகாமல் அதை யடக்கிக்கொண்டு அரசன் விலை கூறிக்கொண்டு காசிநகர் வீதியிலே சென்றான் எ-று.

தாலத்தற முணராதுயிர் தளருமபடி பலசெய்
மேலைப்பழ வினைபற்றிட விற்கின்றனன் வினையேன்
வாலைச்சிறு பருவத்தென்ன மரபிற்புதல வனையும
நீலக்கயல் விழியாளையு நிதியுளளவர் கொண்மின.

இ-ள். உலகத்தினது தருமம தெரியாமல் உயிர் தளர்வதாகப் பலவிதஞ் செய்த முன் கருமத்தினாலே துன்பம் வந்து தொடர அதறகாக இளமையான சிறிய பருவத்தையுடைய எனது நல்ல குல புத்திரனையும், நீல நிறத்துடனே கயற்கெண்டை போன்ற கண்களையுடைய மனைவியையும் பாவியான நான் விலை செய்கிறேன; பொருளுள்ளவர்கள் வாங்கிக்கொள்ளுங்கள் எ-று.

பூர்வ கனமந் தொடர்ந்து பிடிக்க எனக. 25

சோதித்திரு முடியாணிவை சொல்லச்சுடா மாட
வீதித்தலை நின்றோர்சிலர் மிகவுமமன மழலாப
போதிற்றிரு வனையாளிவ டனையுமபுதல் வனையும
ஏதிப்படி விலைகூறிட வெய்துந்திற மெனபாா.

இ-ள். ஒளிபொருந்தின திருமுடியையுடைய அரசன இப்படிச் சொல்லவே பிரகாசம பொருந்தின மாடவீதியிலே நின்று கண்டோர்கள் சிலர் மிகவு மனங்கொதித்து பூமிமேலிருக்கிற இலட்சுமியை யொத்தவளாகிய இந்தப் பெண்ணையும் மைந்தனையும என்ன காரணத்தினாலே இப்படி விலைக்கு விறக நேரிட்டதென்றார்கள் எ-று 26

செருவுற்றக ணயிலைப்பொரு திருவொப்பவ ளிவளும
மருவுறறணி தெரியற்புய மதனொப்பவன மகனும
ஒருவர்க்குறு விலையிற்பொரு ளுடையார்களு முளரோ
இருவர்க்குறு விலையிப்பதி யெவாநலகுவ ரெனபாா.

இ-ள். யுத்தத்துக்குத் தகுந்த வேலையொத்த கண்களையுடைய இலட்சுமிக் கொப்பானவளான இந்த மனைவியும், மணங்கொண்டழகிதான மாலையையுடைய மன்மதனை யொப்பானவனான இந்த மகனும் ஒருவனுக்குப் பாத்தியமாகத்தக்க விலையுள்ள பொருள் கொடுக்கத்தக்கவர்ளான செல்வர்களு மிங்குண்டோ? (இவவிருவரிலே ஒருவருக்கே பொருள் கொடுத்து வாங்கத் தக்கவர்கள் இங்கில்லையானால்) இவவிருவருக்கும் தகுந்த விலை கொடுத்து வாங்கத

தக்கவர்கள் இந்த வூரிலே யாருண்டென்று தமக்குள்ளே விசாரிக்கலானார்கள் எ - று. 27

தவருக்கல தயிராவத மெனுநீளகர சைலத
தவருக்கல தளகாபுரி யரசுக்கல தலைசேர்
உவரிக்கடல் புடைசூழ்கிய வுலகத்திடை யுறுவார
எவருக்கெளி திவருக்குறு விலைநல்குவ தெனபார.

இ - ள். சிலர் இவரை விலைக்கு வாங்குகிற சக்தி தவமுனிவருக்கானு லுண்டு, அல்லது ஐராவத மென்கிற நீண்ட கைம்மலையையுடைய இந்திரனுக் குண்டு, அல்லது அளகாபுரியை யாளுகிற குபேரனுக்குண்டு, அல்லது அலைகள் கூடின அவவுப்புக்கடல் பக்கத்தே சூழ்ந்த பெரிய உலகத்திலே மதிப்புத தெரிந்தவராகிய யாராலே எளிதாக இவவிருவருக்குந் தக்க விலை கொடுக்கப் படும் என்பார்கள் எ - று. 28

மண்மின்னென வருமென்மனை வியையுமமக னையுநீர
கொண்மின்னென விலைகூறிய கோமானுரை கேளா
விண்மின்னென வலையமபரி வெண்ணூலணி மாரபன
கண்முனனொரு மறையோனதி களவோடெதிர வநதான.

இ - ள். பூமிதேவிபோல வருகிற என மனைவியையும், என மகனையும் பொருளுள்ள நீங்கள் வாங்கிக் கொள்ளுங்களென்று விலை கூறிக்கொண்டு வருகிற அரசன் சொல்லைக்கேட்டு ஆகாயத்துள்ள மின்னற்போல் விளங்குகின்ற கேயூரந் தாங்கினவனுக வெள்ளை முப்புரிநூலணிந்த மார்பையுடைய அரிச்சந் திரன் கண்ணுக்கு முன்னே ஒரு வேதப்பிராமணன அதிக திருட்டுத்தனத் துடனே எதிரிலே வந்தான எ - று. 29

என்சொல்லினை முனசொன்னவை யினனமபக ரெனவே
மென்சொலலியை யிளமைநதனை விலைகூறின னெனவும
மனசொல்லலு நின்சேயையு மடமானையும விறகும
பொனசொலலெனு விறலவேலினன மறையோனொடு புகல்வான்.

இ - ள். (ஓ விலை கூறினவனே!) யாது சொன்னாய்? முன்னே சொன்ன வைகளை இன்னமொருதரஞ் சொலலென்று கேட்கவே, அரசன இந்த மிருது பாஷியான இவளையும இளமையான புத்திரனையும விலைகூறின னென்று அரசன சொல்லுமளவில், உன பிள்ளையையும பெண்டாட்டியையும் விற்ப தான பொருள் எவவளவு சொல்லென்று கேட்க, அதற்கு வெற்றிவேலைக் கொண்ட அரசன அந்தப் பிராமணனுடன சொல்லுகிறான எ - று. 30

களபப்பிடா மிசைநின்றெறி கவணிறபடு சிலைபோம
அளவுக்கிரு நிதிநல்கிடி னதுவேவிலை யென முன
உளதப்பொருண் முழுதும்முன துரையின்படி தருவேன்
தளவததிரு நகையாளொடு மகனைததரி னென்றான்.

இ - ள். யானை முதுகிலேறின் றெரிகின்ற கவணிலுள்ள கல்லானது போகுமளவுக்குச் சரியாகப் பெரிதான திரவியங் கொடுத்தால், அதுவே இவ விருவருக்கும் விலைப்பொருளென்று சொன்னான். அதற்கு அவ்வளவு பொருள் முழுதும் என்னிடத்துண்டு, உன் சொற்படியே இந்த முல்லை யரும்பு போன்ற அழகிய பல்வரிசையை யுடையவளுடனே மகனையும் நீ கொடுப்பாயானால் தருகிறேனென்று (அவ்வந்தணன்) சொன்னான் எ - று. 31

கலி விருத்தம்

இருவ ருக்குமிது விலையா மெனில
பொருள ளிப்பனின் றென்று புகன்றிடத
தருக வப்பொரு டானெனச சாறறலும்
வெருவி லந்தணன் மீளவுங் கூறுவான்.

இ - ள். இந்த இரண்டுபேருக்கு மிதுவே விலை நிச்சயமானால், நானே அவ்வளவு பொருளுந் தருகிறேன இப்போதே யெனறு சொல்ல, அவ்வளவு பொருளுங் கொடுமென்று அரசன சொல்லுமளவில், அஞ்சலில்லாத அந்தப் பிராமணன் மறுபடியும் சொல்லுகிறான எ - று. 32

உண்ம கிழ்ந்தின் றளிக்கு முறுபொருள்
கொண்மர் தம்மை யழையெனக கூறினன்
வெண்ம னததனென் வெள்ளியைக் கூவியந்
நுண்ம றைகுலத் தோன்முக நோக்கியே.

இ - ள். நான் மனமகிழ்ந்துக் கொடுப்பதான விலைப்பொருளை வாங்கிக் கொள்ளுகிறவனை இங்கே கூப்பிடென்று சொன்னான. உடனே வெள்ளைப் புத்தியனெனகிற அந்தச் சுக்கிரனைக கூப்பிட்டு, அநதச் சூட்சுமமான பொரு ளுடைய வேதகுலததுப் பிராமணனைப பார்த்து எ - று. 33

இவர்த மக்களி யென்றலு மீவனென்
றவர்த மக்கவ னங்கை யறைநதனன
உவரி சூழ்புவி மன்னவ னுற்றுநீ
கதரு மாநிதி கைபுகக தோவெனறான்.

இ - ள். இந்தப் பிராமணனுக்கு நீர் கொடுமென்று சொல்லவே, கொடுக் கிறேனென்று அந்தப் பிராமணன தனதழகிய கைபோட்டுக் கொடுததான். அப்போது, கடல்சூழ்ந்த உலகததை யாளுகின்ற அரசனான அரிச்சந்திரன் நீ என்கூட வந்து வாஙகிககொள்ளததகக பெருந்திரவியம் உமதுடைய கைவசம் ஆயிற்றோவென்று கேட்டான எ - று 34

வநத தென்பொருண் மாதையுஞ் சேயையும்
அநத ணற்களித் தாவணங் கல்கென
முந்த வாவணந் தீட்டி முடிநதபின்
மைநத னோடு மயிலை வழஙகினான்.

இ - ள் அதற்கு எனக்கு வரவேண்டிய பொருள் வந்தது, உன் மனைவி யையும் மகனையும் இந்த பிராமணருக்குக் கொடுத்து விலைச்சீட்டு எழுதிக் கொடென்று சொல்ல, முன்னே விலைசீட் டெழுதிக் கொடுத்தான். பின்பு பிள்ளையையும் மனைவியையும் கொடுத்தான் எ - று. 35

வலவி போற்றி வருந்த லெமக்கெனச்
சொல்லி வேறகட் டுளிபல சிந்திட
அலலி மாமலர்த தாள்களை யன்புடன்
புலலி வீழ்ந்து கிடந்து புலம்பினாள்.

இ - ள். அப்போது சந்திரவதி கணவனைத் துதித்து எங்களுக்காக நீர் வருத்தங்கொள்ளா திருமென்று சொல்லி, வேலபோன்ற கண்களிலே பல நீர்த்துளிகள் சிந்தத் தனது நாயகனுடைய அகவிதழ்களைக்கொண்ட பெரிய மலர்போன்ற பாதங்களைப் பிடித்துக்கொண்டு அன்புடன் விழுந்துகிடந்து புலம்பலானாள் எ - று. 36

நின்று காணு நிருபரும யானுமன்
றன்று காண வவாவுறு செமமுகம
இன்று காண்டக வெய்திய தன்றிமற்
றென்று காண்ப னினியென வேங்கினாள்.

இ - ள். நின்று உம்மைக் காணவருகிற அரசர்களும் நானும் அந்த அந்த நாள்தோறும் பார்க்கவேண்டுகிற சிவந்த முகத்தை இன்றையதினம் காணக் கிடைத்ததேயன்றி இனி என்றைக்கு நான் காணக்கிடைக்கு மென்று பல பலவிதங்களுஞ் சொல்லிப் பிரலாபித்தாள் எ - று. 37

ஏங்கி மன்ன னிடைவனென் றேபடர்
தாங்கிய நாயக தாவிடை யென்றயல
நீங்கி னுளிறை நீளகழுத தைததழீஇத
தூங்கி வாய்விட்டுத தோனறல ரற்றினான்.

இ - ள். நம்மை விலைத்து அரசன் ஏங்கி வருந்துவானென்று உள்ளே துன்பங்கொண்டு நாயகா! உத்தரவுகொடென்று தூரப்போனான். அப்போது மகன் அரசன் கழுத்தைக் கட்டிப்பிடித்துக்கொண்டு தொங்கி வாய்விட்டுக்கதறி அழுதான் எ - று. 38

எமைய வென்னையு மியாவையந தாங்கிய
சுமைபி றக்கினை யோசுக முற்றதோ
உமைய னைநதிங குறவென் றிருநதவா
றமையு மோவை யனையென் றரற்றினான்.

இ - ள். எங்களையனே! என்னையும் என் தாயையும் இரட்சித்துக் கொண்டு வந்த சுமையை யிறக்கிக்கொண்டீரோ! இப்போ தும்க்குச் சுகமாயிற்றோ? நாங்க

னும்மைச்சேர்ந்து இங்கே உறவெனறிருந்தபடி போதுமோ? என் ஐயனே; என்று மகனைவ னழுதான எ - று. 39

கழுததைப பூணடழுங காதலன் கைகளை
அழுதத மாமபற றறவிடு விநதனன்
விழிதத கடபொறி சிநதிட வேதியன
இழுததுப போயததன திலலிட மெய்தினை.

இ - ள். கழுத்தைக் கட்டிக்கொண்டழுகினற புததிரனுடைய கைகளை அழுத்தமாகிய பிடிப்புபோக நீக்குவிததவனகி திறநதுபார்க்கிற கணகளிலே நெருப்புப்பொறிகள சிநத அந்தப பிராமணன அப்புததிரன கையைப் பிடிததுத தன வீடடுக கிழுததுககொணடு போயசசேர்ந்தான எ - று. 40

கடிய வேதியன கைதொடடி ழுததவக
கொடுமை கணடு குலைகுலைந தேஙகியே
இடிவி ழுநத மராமர மீதெனும
படிவி ழுநதனன சறறும பநதததிலன்.

இ - ள. அப்படிக கடினசிததனன பிராமணன புததிரன கையைப் பறறி யிழுததுககொணடுபோன அநதக கொடுஞ் செய்கையைப்பார்தது, அரசன நடுநடுக்கமாய் அழுது இடிவிழுதலான மராமரம இதுதானெனனுமபடி கீழே விழுந்தான. சறறேனும உடமபசைதலிலலாது அப்படியே கிடநதான எ - று.

வநது மநதிரி மனனனைத தாஙகிநீ
புநதி யிலலவா போலப புலமபுவ
தெநத காரண மெனறடி போறறலும
சிநதை வாடடமுங கோடடமுந தேறினன.

இ - ள அப்போது சமீபததில மந்திரியானவன வந்து அரசனை யெடுதது அரசே! நீர புததியிலலாதவரைப்போற பிரலாபிககினறது என்ன காரணம? எனறு சொலலிப பாதஙகளை வணஙகுமபோது, அரசன மனததி லுள்ள வாட்டமும மனககோணலுந தீரநது தெளிநதான எ - று 42

அநத ணன்முக நோககி யருமபொருள
வநத தோவெனறு மனனனை விளமபயான
இநத மாநிதி பெறறன னினனமும
சிநதை யோடுரை செய்வதொன றுண்டென்றான்.

இ - ள. அப்போது அரசனாகிய பிராமணன முகததைப்பார்தது உனககு எனனலே கிடைககவேணடிய அருமையான பொருள்வந்து சேர்ந்த தோவெனறு அரசனகேடக, இநதப் பெரிதான பொருள பெறறுக கொண் டேன. இனனமும எனமனதாரச் சொலலுவதொன றுண்டெனறான எ-று.

முனிக்கு முன்ன மொழிந்தபொ னீந்தனை
எனக்குக கூலிநீ யீகுவ தென னென்ன
உனககு மீகுவன வாவென வுத்தமன
றனககுப பின்னடந் தானவி னைச சல்லியன.

இ - ள். நீ விசுவாமித்திரனுக்குக் கொடுக்கிறேனென்று சொன்ன பொருளைக் கொடுத்தாய் சரியே, கூடவந்த எனக்குக் கூலி கொடுக்கிற பொருள் எங்கேயென்று கேட்க, உமக்கும் கொடுக்கிறேன் வாருமென்று சொல்லிவே கொடுஞ் செய்கையையுடைய சுக்கிரன உத்தமனான அரசனுக்குப் பின்னே சென்றான எ - று. 44

அன்ன காலை யமைச்சனை நோக்கியே
என்னை நீவிற்றி வற்குப பொனீகென்ச
சொன்ன போதிற றுணுக்கென வேங்கியேம
மன்ன கேளென மந்திரி கூறுவான.

இ - ள். அந்தவேளையிலே, மந்திரியைப்பார்த்து என்னை நீ விலை செய்து இந்தச் சுக்கிரனுக்குக் கூலிப்பொருள் கொடென்று சொன்ன போதில, மந்திரி திடுக்கிட்டழுது எங்களரசனே! கேளுமென்று சொல்லுகிறான எ - று. 45

அன்னை யாயெம தாண்டகை யாகிய
நின்னை யான்விலை கூறுத னீதியோ
என்னை நீவிற்றி வற்குச செலுத்தகும்
பொன்னை நலகென வீழ்ந்தடி பூண்டனன்.

இ - ள். எனக்குத் தாயாகிய அரசனுமான உம்மை நான விலை கூறுகிறது நியாயமாகுமோ? நீர் என்னை விலைசெய்து இந்தப் பிராமணருக்குச் செலுத்தத்தக்க பொருளைக் கொடுமென்று கீழேவிழுந்து வணங்கிப் பாதங்களைப் பிடித்துக்கொண்டான எ - று 46

மண்ணில வீழ்ந்த வமைச்சனை மாமபணைத
தொண்ணி லாவத னத்தெதா ளி மாழ்கவே
கண்ணி னீரபுன லாட்டிக் கெளசிகன
எண்ணு நீர்மைக்கி தேற்கும் தோவென்றான.

இ - ள். அப்படி மண்ணிலே விழுந்து கிடக்கிற மந்திரியை அரசன தனமார்போ டணைத்துக்கொண்டு அழகிதான சந்திரனபோன்ற முகத்தில் ஒளி மழுங்கத் தனது கண்ணினீராலே அவனை முழுகச்செய்து விசுவாமித்திரர் ஆலோசித்திருக்கிற தகுதிக்கு இது தக்கதாகுமோ வென்றான எ - று. 47

எற்கு மோபொருட் குனனைவிற் றீகுவ
தாககு மாதவ னெண்ணம தியலாம

தார்க்கு லாவுவெள் வேலவ தாழ்க்கிலா
தூர்க்கு ளென்னைவிற் றெண்ணிதி நலகென்றான்.

இ-ள். தான கொடுக்கவேண்டிய பொருளுக்கு உன்னை விற்றுக் கொடுக்கிறது தக்கதாகுமோ? இனி எல்லோரும அந்த விசுவாமித்திரருடைய கினை வெப்படியென றறியபபடும வெற்றிமாலை விளங்குவதான வெள்ளிய வேலையுடைய அமைச்சனே! இனி நீ தாமதஞ் செய்யாமல இந்த ஊர்க்குள்ளே கொண்டுபோய் என்னை விலைசெய்து அழகிதான திரவியஞ் சுக்கிரனுக்குக் கொடுத்துவிடென்றான் அரசன் எ-று. 48

என்ன பாவமெ னக்குப பலித்ததெதன
றந்த காபபல வாவண வீதிவாய்ப
பொனனின யாமுடி மீதிறபுற சூடியே
மன்ன னைவிலை மந்திரி கூறுவான.

இ-ள். இதெதனன பாவம எனக்கு இலபித்தமானதெனறு அக்க வூரிலே பல கடைவீதிகளிலுஞ் சென்று அரசனது பொன முடி சூடுகிற பெருமை பொருந்தின தலைமேலே ஒரு புல்லைச் சூட்டி அரசனை மந்திரி விலை கூறுவானானான எ-று. 49

ஆதி நூலின ராயினு மலலது
சாதி யீனாக ளாயினுஞ சாலபுடைக
கோதி லான்றனைக கொண்மி னெனபபல
வீதி தோறும விலையது கூறினான்.

இ-ள். வேதசாஸதிரஙகளுககுரிய பிராமணரா யிருந்தாலுஞ் சரிதான்; ஜாதி சண்டாளராயினுஞ் சரிதான; சான்றாணமையையுடைய குறறமில்லாத இநத அரசனை வாங்கிக கொளளுஙகளென்று பலவாகிய வீதிகளெல்லாம விலை சொலலிக்கொணடு திரிந்தான மந்திரி எ-று. 50

வார மேதகு மந்திரி மனனனைத
தூர வேவிலை கூறிய சொறகொளா
வீர வாகுவெ னுமபெயா மேவினோன
சூர நீரமைப புலைமகன றோனறினன.

இ-ள். உரிமைத்தனத்திலே சிறந்த மந்திரியானவன அரசனைத தூரத்திலிருந்து விலைகூறி வருகிற சொல்லைக் கேட்டுக்கொணடு வீரவாகு வெனகிற பெயரைக்கொணடவனுயச சூரத்தனமையையுடைய ஒரு பறையன வந்தான எ-று. 51

குடககு ணுஙகி மயஙகிய கொளகையால்
தடககை காலவிதிர்ப புற்றத ளாசசியான
விடககின் றேறறைசை விண்டுவின றண்டினில
தொடககிக காவிய திண்பெருந் தோளினன.

இ - ள். அவன் ஒரு குடக் கள்ளுங் குடித்து மயங்கியிருக்கிற கொள்கையினாலே நீண்ட கைகளும், கால்களும நடுங்குகின்ற சோர்வையுடையவனாய் மாமிசத்தை மூடியிருக்கிற மாட்டுத்தோல் சதையாகிய இவற்றை மூங்கிற்றடியிலே கூடைமேற்கொண்டு மாட்டிக காவடி போட்டுக்கொண்டுள்ள பலமான பெரிய தோளகளை யுடையவனாய் எ - று. 52

சுமக்கும காவைத்தூத தூசொடு வாய்புதைத்
துமக்கு வேண்டு முறுபொரு ணல்கிடின்
அமைக்கும் புன்றொழி லாளரெம போல்பவர்
தமக்கும விறகத தகுதியுண் டோவென்றான.

இ - ள். தான சுமந்து வருவதான காவடியைக கீழே யிறக்கி வைத்து விட்டு இடையின வஸ்திரததாலே வாயை மூடிக்கொண்டு ஐயா! உங்களுக்கு வேண்டிய மிகக பொருளைக் கொடுததால், ஒருவா சொல்லச் செய்வதான இழிதொழிலாளராகிய எம்மை யொததவர்களுக்கும விலை செய்யத் தக்கதுண்டோவென்று கேட்டான வீரவாகு எ - று 53

அன்ன தன்மைய ரசன்ம னங்கொளா
இநந கர்க்கு ளிவனல தெம்விலைப்
பொன்ன ளிப்பவ னில்லெனப் புந்திவைத
தென்னை வில்லென்ற மைச்சற கியமபினான்.

இ - ள். அந்த வகையை அரசன் மனதுட்கொண்டு இந்த ஊருக்குள்ளே இவனையலலாமல நமக்கு விலைப்பொருள் கொடுக்கிறவ னில்லையென றாலோசித்துககொண்டு மந்திரியைப் பார்தது என்னை விலைசெய்துவிடென்று சொன்னான எ - று. 54

ஆயி னன்றென் றமைச்சனு மவவயின்
மேயினன் னினிவிற பனுனக் கென்றான்
ஏயு நல்விலை யேதெனப பொன்பதி
னாயி ரம்மென றமைச்சனி யமபினான்.

இ - ள். அப்படியானல் நல்லதென்று மந்திரியானவன அவவிடத்திலே வந்தவனாகிய வீரவாகுவைப் பார்தது நான உனக்கு விலை செய்கிறேனென்று சொன்னான. அதறகு வீரவாகு நான கொடுக்கத தகுதியான விலை யென்னவென்று கேட்க. மந்திரி பதினாயிரம் பொன கொடுக்கவேணுமென்று சொன்னான் எ - று. 55

தருகுவே னெனத தனபெய ராறபொறித
தருளி னன்புலி யற்கமைச சாவணம்
பொருளை வாங்கிப புகர்க்களித தையபோய்
வருக வென்ன மகிழ்நதவ னேகினான்.

இ - ள். அப்படி பதினாயிரம் பொன்னும் தருகிறேனென்று வீரவாகு சொல்ல, உடனே மந்திரியானவன் தன் பெயராலே விலைசீட்டெழுதி அந்தப் புலையனுக்குக் கொடுத்தான். அப்படிக் கொடுத்தபின் பொருளை வாங்கிச் சுக்கிரனுக்குக் கொடுத்து, ஐயா சுக்கிராசாரியரே! போய்வாருமென்று கூற, சுக்கிரன் சந்தோஷமாகச் சென்றான் எ - று. 56

மீளி வேந்தும் விடக்கின்ற சைசசுமை
தோளி லேறறிப் புலையற் றொடர்நதனன்
ஆளி மொய்மபின மைசசனு மனனவன்
றாளில் வீழ்நது தளாநது வருநதினான.

இ - ள். (அப்போதுடனே) வீரனான அரசன், தோலு மாமிசமுமான காவடிச் சுமையைத் தனது தோண்மேலேற்றிக்கொண்டு, அந்தப் புலையனைத் தொடர்ந்து செல்லலானான். அப்போது சிங்கம்போலும் புஜபலத்தையுடைய மந்திரியானவன் அரசனுடைய காலிலே விழுந்து தளர்ச்சியுடனே வருந்தலானான் எ - று. 57

கொற றவாநின் குளிரமலாத தாளிணை
உறற நாடொட்டு முனபணி யேசெயப்
பெற்ற மாதவப் பேறெனக் கினறொடும்
அற்ற தோவென் றயலழு தேகினான்.

இ - ள். அரசனே! உமமுடைய குளிர்ந்த மலாபோனற பாதங்களிரண்டையும் நான வந்தடைநத நாளமுதல உனனுடைய ஊழியமே செய்யப் பெற்ற எனது பெரிய தவப்பலன இன்றோடே எனககு முடிவாகிப் போயிற்றோ (இல்லை) யெனறு அரசன கூடவே அழுதுகொணடு புறமே போனான எ - று. 58

வலைய நீதத புயததிடை வைததகா
அலைய வேபின் றொடாநதரிச சநதிரன
தொலைவி லாமுடை நாறிய தொனனெறிப
புலையன் மேவும் புலைக்குடி னண்ணினான.

இ - ள். கேயூரங்களை நீக்கின தோளிலே வைதத தோற்காவடி அசைய அசைய அவன்பின்னே அரிச்சந்திர மகாராஜன் தொடர்ந்து, நீங்குதலில்லாமல் புலால் நாறுகின்ற பழைய வழியிலே செல்லுகிற அநதப் புலையனிருக்கிற புலைக்குடிசைக்குள் போனான எ - று. 59

பாரதத வர்க்குப் பசுந்தசை யாய்மறை
கோதத காவையி றக்கிக்கொ டுததபின்
ஊததைக் கொட்டிலி னுள்ளிருந தேபுவி
காத்த கோவுடன் காலனி யமபுவான்.

இ - ள். கண்ணுலே கண்டவர்களுக்குப் பசிய தசையாகி வேதத்தையே கோத்திருக்கிற காவடியை இறக்கிக் கொடுத்தபின்பு, அழுக்கடைந்த கொட்டிலுக்குள் ளிருந்துகொண்டு உலகத்தையாண்ட அரசனுடன் காலனென்கிற வீரவாகு சொல்லுகிறுன எ - று. 60

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

தூங்கிருள் கடியுஞ் செந்தீச் சுடலையிற் சுடும்பிணத்துக்
கோங்கிய புலைப்பே ருடை யொன்றுண்டு பணங்கா லுண்டு
வாங்கியீ தெனக்கு வைத்து வாய்க்கரி சியைநீ யட்டுண்
டாங்கிரு வென்று பின்னு மண்ணலுக் கவனு ரைப்பான்.

இ - ள். தாங்குகின்ற இருளைப் போக்குவதான சிவந்த நெருப்பு மூளுகிற சுடுகாட்டிலே தினஞ் சுடுவதாகிய பிணம ஒன்றுக்கு உயர்வதான புலையன் பெறுவது வஸ்திரமொன்றுண்டு, காற்பணமுண்டு இவற்றைத் தவருமல் வாங்கிக்கொண்டு அவற்றை யெனக்காக வைத்துவிட்டு வாய்க்கரிசியை மாத்திரம் நீ வாங்கி எடுத்துண்டுகொண்டு அங்கேதானே இருவென்று சொல்லிப் பின்னும் அரசனுக்கவன் சொல்லுகிறுன எ - று. 61

எனக்குநீ பணமுங் கொள்ளி யாடையு மினிது நல்கி
உனக்குவாய்க் கரிசி தந்தே றுண்டிரு பசியை நீக்கி
மனத்துளே வஞ்ச மின்றி மயானத்தி லுறைவா யென்னத்
தனக்குநே ரில்லான் றுனு நன்றெனச் சுடலை சார்ந்தான்.

இ - ள். எனக்கு நீ பிணஞ்சுடுகிற பணமும் கொள்ளி வஸ்திரமும நன்றாகக் கொடுத்துவிட்டபின்பு உனக்கு நான் கொடுத்ததாகிய வாய்க்கரிசியை மாத்திரம் நீ புசித்துப் பசியைத் தவிர்த்துக்கொண்டு உன மனத்திலே எவ்வளவும் வஞ்சனையில்லாமல் அந்தச் சுடுகாட்டிலேதானே காத்துக்கொண்டிருக்கக் கடவை யென்று சொல்ல, தனக்குச் சமானமில்லாத அரசன் அதற்கு நல்லதென்று சுடுகாட்டுக்குப் போனுன எ - று. 62

சுட்டவெம் பிணத்தோ டொக்கத் தொலைந்துவெந் தெரிந்த கொள்ளிக்
கட்டையும் பாடை சேர்ந்த கழிகளு மெடுத்துக் கூட்டிக்
கொட்டிலொன் றெடுத்து மேனுள் கொடுஞ்சவங் கொணர்ந்து போட்ட
கட்டிலொன் றேறிச் செங்கோற் காவலன் வீற்றி ருந்தான்.

இ - ள். அங்கே சுடுகிறதான வெவ்விய பிணத்தோடேகூடச் சாம்பலாக வெந்து எரிந்துபோன கொள்ளிக்கட்டைகளாலும் பாடையோடு சேர்ந்துவந்த குறுக்குக் கழிகளாலும் சேர்க்கையாகக் கூட்டி ஒரு கொட்டில் கட்டிக்கொண்டு முன்னே கொடிதான பிணத்தைத் தூக்கிக்கொண்டு வந்து போட்டுக் கிடக்கிற ஒரு கட்டிலின்மேலேறி நீதியுள்ள அரசனிருந்தான எ - று. 63

பாடையிற் கொணர்ந்து வைத்த பிணஞ்சுடு பணமுங் கொள்ளி
ஆடையும் வாங்கி யீட்டி யாண்டகைக் களித்தங் குறுங்

கூடையி னிறைத்து நாளுங் கொடுத்தவாய்க் கரிசி வைத்தாங்
கோடைமர்க் களிற்றின் மன்ன னுறைந்தன னுறைந்த பின்னர்.

இ-ள். பாடைமேலே கொண்டுவந்து வைத்த பிணத்தைச் சுடுகிற பண முமம், கொள்ளி வஸ்திரமும் வாங்கிச் சோதத்துத் தன எஜமானுக்குக் கொடுத்து விட்டு, அங்கே யிருந்து கூடையிலே தினந்தோறும் கொடுக்கிற வாய்க்கரிசியை நிரப்பிவைத்துக்கொண்டும இப்படியாக மூகபடாமணிந்த பெரிய யானைமேல வருகிற அரசன இருந்தான; அவனிப்படியிருந்த பின்பு எ-று. 64

அத்திரு நகரின் மற்றோ ரம்பலத் திரவு தங்கிச்
சத்திய கீர்த்தி யென்பான றங்கணு யகனைத் தேடிப்
புத்தியில் வருத்த நண்ணிப் புலைக்குடி லருகு தேடி
உத்தம னீமங் காக்கு மாறுகேட் டோடிச் சென்றான்.

இ-ள். அந்த அழகான பட்டணத்திலே, அங்கொரு மடத்திலே அன றிராத்திரி சத்தியகீர்த்தி தங்கியிருந்து பின்பு தங்கள் எஜமானனைத் தேடிக் கொண்டு தன மனத்திலே வருத்தமுண்டாகவந்து அந்தப் புலைக் குடிலகளி னிடமெல்லாந் தேடிப் பார்த்து உத்தமனான அரிச்சந்திரன சுடுகாடு காக்கிறது தெரிந்து ஓடிவந்தான எ-று. 65

நெருப்பெழுந் தெரியுஞ் செந்தீச் சுடுகரை நீந்தி யேகி
மருப்பயி லலங்கன் மன்னை மந்திரித் தலைவ னண்மிச்
செருப்பயில் வீர வேலான் சிறுகுடி றனிலே புக்கங்
கிருப்பது கண்டான் காணு வேங்கியே யலறி வீழ்ந்தான்

இ-ள். அங்கே நெருப்பு மூண்டு எரிவதாகி, அந்தச் சிவந்த நெருப்பி னாலே சுடுவதான சுடுகாட்டுக்கரையெல்லாங் கடந்துபோய் மணம் பொருந்தின மாலை யணிகிற அரசனை முதல் மந்திரியான சத்தியகீர்த்தி வந்துகூடி, யுத்தஞ் செய்கிற வீரவேலையுடைய அரசன அங்கொரு சிறிய குடிசைக்குள்ளே புகுந்து கொண்டு அங்கே யிருக்கிறதைக் கண்டான கண்டவுடனே, அழுது பிரலாபித் துக் கீழேவிழுந்தான எ-று 66

மன்னவ ரிடம்பொ றாது வந்துசூழ்ந் திறைஞ்சிப் போற்ற
அன்னமென் னடையா ராட வரம்பையர் பாட வைகும்
பொனநெடுங் கோயி னீங்கிப் பூதமும் பிசாசு மாடும்
இந்நெடுங் கோயி லோவந் தெய்தியதைய வென்றான்.

இ-ள். அரசர்கள் தங்களுக்கு இடம் போதாமல் வந்து மொய்த்து வணங் கித் துதிக்கவும், அன்னம்போலு மெல்லிய நடையையுடைய பெண்களாடவும், அரம்பைகள் பாடவுமிருக்கிற பொன்மயமான நெடிய அரண்மனையைவிட்டுப் பூதங்களும் பசாசுகளும் கூத்தாடுகின்ற இந்த நெடிய கோயிலோ சுவாமி! உமக்குவந்து லபித்தமானது என்றான் எ-று. 67

கதிதரு மயனு மாலுங் கடக்கருங் கொடிய நீர்மை
விதியினை யெளிய நம்மால் வெல்லலாந் தகைமைத் துண்டோ
அதிகமவந் தெய்தா மேனு ளமைந்ததே யடுக்கு மல்லால்
மதிவலோ யிதற்கு வாடி வருந்தலை யென்று சொன்னான்.

இ - ள். மோட்சத்தைத் தருகிற பிரமாவும் விஷ்ணுவும் கடத்தற்கரிதான கொடுஞ் செய்கையையுடைய விதியை எளிதான நம்மாலே வெல்லலாகிய தகுதியுள்ளதாமோ? முன்னோரிலை, அமைத்தபடியே அமைவதாகும் அல்லாமல் வேறாக அப்படிப்பட்ட விதிக்கதிகமாக ஒன்றும் வந்து கூடாது. மதிவல்லவனான சத்தியகீர்த்தியே! இதற்காக நீ வாடி வருந்தாதேயென்று அரிச்சந்திரன் மந்திரிக்குச் சொன்னான் எ - று. 68

என்னவே யமைச்சன் றேறி யிருந்தன னிருக்க வேந்தன்
முன்னமே யுய்த்து வைத்த வரிசியை முறையி னீந்தான்
இன்னமு தடுவ தற்கென் றெண்ணியே யமைச்சன் வீழ்ந்து
பொன்னடி வணங்கி வாங்கிப் புல்லினிற் பொதிந்து கொண்டான்.

இ - ள். என்று சொல்லுமளவில் மந்திரி தேறிக்கொண்டிருந்தான். அவனிருக்க, அரசன் முன்னே தான் சோரத்துவைத்திருந்த வாய்க்கரிசிகளை அளவுப்படி கொடுத்தான். அதை இனிய சோறு சமைத்தற்கென்று மந்திரி விழுந்து அரசன் பொன்னடிகளை வணங்கிக்கொண்டு சில புல்லுக் கற்றைகளுள்ளே அந்த அரிசியை முடிந்துகொண்டான் எ - று. 69

மண்டலத் திறைவ னுய்த்து வைத்தவாய்க் கரிசி தன்னைக்
கொண்டுபோய்ச் சுரபிக் கீய்ந்து கோமயத் துடனே வீழ்ந்த
தண்டுல மெடுத்துக் குத்திச் சமைத்தினி துதவ வச்சோ
றுண்டவ ருறைந்தார் பின்னை யுற்றவா றெடுத்து வைப்பாம்.

இ - ள். பூமண்டலாதிபதியான அரசன் சோத்துக்கொடுத்த வாய்க்கரிசிகளைக் கொண்டுபோய்ப் பசுவுக்குக் கொடுத்து அதுவுண்டு அதன் சாணியிலே விழுந்தான அரிசியை யெடுத்துக் குத்திச் சமைத்துப் பரிசுத்தமாக்கிக் கொடுக்க அந்தச் சோற்றை உண்டுகொண்டு அங்கிருந்தான்; பின்பு நடந்த செய்கையை இனி யெடுத்துச் சொல்லுவோம் எ - று. 70

காசி காண்டம் முற்றிற்று.

ஆக விருத்தம் - 976.

உ

கடவுள் துணை

# எட்டாவது

# மயான காண்டம்

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வல்லியு மகனுமந்த மறையவன் மனையிற் சேர்ந்து
சொல்லிய பணிக ளெல்லாஞ் சோர்வறச் செய்து பின்னும்
எல்லியோர் சாம மென்ன வெழுந்திருந் தேவன முற்றி
அல்லிரு சாமஞ் சென்றா லவனித்த கூழுண் டுறங்கி.

இ - ள். சந்திரமதியும் மகனும் அந்த விலைக்கு வாங்கின பிராமணன் வீட்டிலேபோய், அந்தப் பிராமணன் சொன்ன வேலைகளெல்லாம் குறைவில்லாமல் பொழுதளவுஞ் செய்து, மறுபடியும் அந்த ராத்திரி விடிய ஒரு சாமமிருக்கும்போதே விழித் தெழுந்திருந்து அவன் ஏவின வேலைகளெல்லா முடியச்செய்து பின்பு அந்தப் பகல் இரண்டுசாமமானால் அவனூற்றின கூழையுண்டு தூங்கி எ - று. 1

கையினி லுலக்கை பற்றிக் காந்தளி னுதிரம் பாய
மெய்யினில் வெயர்நீர் சிந்த விழியினி லருவிபாய
மெய்யினின் முடித்த கூந்த னெற்குத்துங் கொடுமை காணா
மையினிற் றிகழ்வேற் கண்ணா ரரம்பையர் மறுகிச் சோர்ந்தார்.

இ - ள். கையிலே உலக்கையைக்கொண்டு காந்தள் மலர்போன்ற அந்தக் கைகளிலே இரத்தங் கட்டிச் சிவப்பாகவும், உடம்பெல்லாம் வேர்வைநீ ரொழுகவும், கண்களிலே அருவிபோல நீரொழுகவும், முன்னே சம்பங்கி எண்ணெயிட்டுச் சீவி முடித்த கூந்தலையுடைய சந்திரமதியானவள் நெல்லுக் குத்துகிற கொடுமையைக் கண்டு மையிட்டாற்போல விளங்குகின்ற வேல்போலுங் கண்களையுடையவர்களாகிய தெய்வமாதர்களெல்லாரும் (இந்திரமதிக்கு) இப்படி வரக்கூடுமோவென்று மயங்கிச் சோர்வடைந்தார்கள் எ - று. 2

புன்கணுற் றரம்பை மாதர் வருந்தவும் புந்தி செய்யா
வன்கண னிரக்க மில்லான் மடுத்தவாய் வெடித்த சொல்லான்
தன்கண னன்பில்லான் பொல்லான் றறுகண்ணன் விலைகொண் டாளவோ
இன்கணில் லாதான் பாரி யிவனினுங் கொடிய பாவி. [ன

இ - ள். தெய்வமாதர்கள் அப்படித் துயரப்பட்டு வருத்தமடையவும், விலைக்கு வாங்கி ஆளுகிற பிராமணன் அதை ஆலோசியாத கொடுஞ் செய்கையையுடையவனாய்க் கொஞ்சமேனு மிரக்கமில்லாதவனாய் மடித்த வாயுடனே அதிர்ந்த சொல்லையுடையவனாய்த் தன்னிடத்தி லெவ்வளவும் அன்பில்லாதவனாய் அஞ்சாதவனா யிருந்தான். அந்த இனிதான முகதாட்

*புண்ணியமில்லாத பிராமணனுடைய பெண்டாட்டியோ அவனைப் பார்க்கிலு மிகவுங் கொடுமையான பாவியா யிருந்தாள் எ - று.* 3

அடியினு லஞ்சி மைந்த னனந்தலைப் பயமு ணாதத
விடியுமுன் னெழுந்தி ருந்து விளைபுலங் களைப றித்துக
கடினத் தடக்கு கொய்து காட்டமுஞ் சமிதை யும்பொன்
முடிபுனை தலையில் வைத்து முறைமுறை வருமந் நாளில்.

*இ - ள். அந்தப் பிராமணன் அடிக்கிற அடியினாலே புத்திரனான தேவதாசன் பயந்து, அப்பயமானது தூக்கத்தை விழித்தெழும்படிச் செய்ய விடிகிறதற்கு முன்னே எழுந்திருந்து அந்தப் பிராமணனுக்கு விளைகிற நிலத்திலுள்ள களைகள் பிடுங்கி அவனுடைய காவலுக்குள்ளான வனத்திலே அலைந்து திரிந்து, இலைக்கறிகளைப் பறித்துக்கொண்டு விறகும் சமித்துங்கட்டி பொற்கிரீட மணியத் தக்க தலைமேலே வைத்துச் சுமந்து இப்படித் தினந்தோறும் வருவதாகிய அந்த நாளிலே எ - று* 4

மைந்தனுஞ் சிறுவரோ டேகி வனந்தனில் விறகு கட்டித்
தந்திடு வழியி னோர்பாற் றருப்பைகண் டதுவிட் டேகில்
அந்தணன் முனிவா னென்ன வஞ்சியோர் வடத்தி னீழல்
இந்தன மிறக்கி யப்பு லிருந்திடு புற்றுகட் சென்றான்.

*இ - ள். ஒருநாள் அந்தப் புத்திரன் ஊரிலுள்ள பிள்ளைகளோடு கூடிச் சென்று காட்டிலே விறகு தேடிச் சுமைகட்டிச் சுமந்துகொண்டு வருகிற வழியிலே ஓரிடத்தில் தாப்பைப்புல் அதிகமா யிருக்கக்கண்டு இந்தத் தாப்பையைக் கண்டும் பறித்துக்கொண்டு போகாமற்போனால் பிராமணன் கோபஞ்செய் தடிப்பானென்று பயந்து ஒரு ஆலமரத்தின் கீழ்விலே அந்த விறகு சுமையை யிறக்கி வைத்துவிட்டு அந்தத் தாப்பைப்புல் முளைத்திருக்கிற துறினிடமாகப் போனான் எ - று.* 5

பறித்தனன் குசையைப் பற்றிப் பறித்தலு முன்னி வனைவக
குறித்துவந் ததனுட் டங்குங் கொடியராச் சீறி யோங்கித்
தெறித்தழல் விழியாற் சிந்தத் தீண்டுற்றுத் தீண்ட லோடும்
வெறித்தெழுந் தலறி யோடி வெருவிய தரையில் வீழ்ந்தான்.

*இ - ள் அங்கே போய்த் தாப்பையைப் பிடுங்கினான், அப்படித் தாப்பையைப் பிடித்துப் பறிக்கும்போது விசுவாமித்திர முனிவ ரேவுதலினாலே கடிக்க வெண்ணி அந்தத் தாப்பைக் குள்ளடங்கி யிருக்கிற பெரிய பாம்பானது சீறி யெழுந்து நெருப்புப்பொறி பறித்துக் கண்களினின்று முதிரக் கடித்தது; அப்படிக் கடித்தவுடனே, பயங்கித் துள்ளி அலறிக்கொண் டோடியந்து பயத் துடனே ஓரிடத்தில் வீழ்ந்தான் எ - று.* 6

வடத்தினங் கீழிருந்த தோழர் மறுகிப்போய வள்ளல் வீழ்ந்த
இடத்தினை யணுகி யையோ வென்னுற்ற துயையா யென்னப்

படத்தினற் பெரிய நாகங் கடித்தது பாருமென்று
விடத்தினு லறிவு சோர்ந்தான் விட்டுயி ரடங்கிற றன்றே.

இ - ள். அப்போது அந்த ஆலமரத்தினிழலிலே இளைப்பாறிக்கொண்டிருந்த தோழப்பிள்ளைகள் பயந்தோடிவந்து அந்தப்பிள்ளை விழுந்துகிடக்கிற இடத்தையடுத்து ஐயோ பிள்ளாய்! உனக்கு என்ன துன்பம் வந்தது சொல்லென்றுகேட்க, படத்தையுடைய பெரிய பாம்பு என்னைக் கடித்தது; நீங்கள் அதைப்பாருங்களென்று சொல்லிக்கொண்டே அந்தப் பாம்பு விடத்தினலே புத்திமயங்கினன். உயிரும் அவனுடம்பைவிட்டு நீங்கிச் சுவாசமும் அடங்குதலாயிற்று எ - று 7

ஆவிபோ யகன்றபின்னை யனைவரும் புரட்டிப் பார்த்துப்
பாவியூ ழென்னே யிந்தப் பாலக னிறந்தா னென்று
மேவியவ் விடத்தின் கீழ்வந் தவரவர் விறகுகொண்டு
காவியங் கழனி சூழுங் காசியம் பதியிற் புக்கார்.

இ - ள். அப்படி உயிர்போய் இறந்த பின்பு எல்லாப் பிள்ளைகளும் அந்த உடம்பைப்புரட்டி அசைத்துப்பார்த்துப் பாவியான விதியினலே என்ன ஆச்சரியம்! இந்தப்பிள்ளை இறந்துபோனனென்று விட்டுத்திரும்பி அந்த ஆலமரத்தின்கீழேவந்து அவரவர்கள் கொண்டுவந்த விறகுசுமையை எடுத்துக்கொண்டு நீலோற்பலங்கள் மலர்ந்துள்ள அழகிதான வயல்சூழ்ந்த காசிப்பட்டணத்துக்குள்ளே போனர்கள் எ - று. 8

பாலர்வந் தூரிற் புக்கார் பானுவுங் கடலிற் புக்கான்
மாலைவந் திறுத்த பின்னா வழியினை நோக்கி யன்னை
பாலன்வந் திலனென் றேங்கிப் பரதவித் திருகண் டாரை
காலநொந் துருகி வாயிற் கடைத்தலை வந்து பார்த்தாள்.

இ - ள் அப்படி அந்தப் பிள்ளைகளெல்லோரும் ஊருக்குள்ளே வந்து சேர்ந்தார்கள். சூரியனு மேலைக்கடலுக்குள்ளே போய்ச் சேர்ந்தான். அப்படி இராத்திரிகாலமானபின்பு பிள்ளை வருகிற வழியைப் பார்த்துப் பார்த்துத் தாயான சந்திரமதி தன் பிள்ளை யின்னமும் வராதிருக்கிறனேயென்று துக்கித்துப் பிரலாபித்துத் தனதிரண்டு கண்களிலும் நீர்த்தாரை சிந்தும்படி நொந்து மனமுருகிக் கடைத்தலை வாயிலிலே வந்து பார்த்தாள் எ - று. 9

வணங்கிய கரத்தாள் சால வாடிய மனத்தாண் மக்காள்
இணங்கியும் முடனே வந்த வென்மக னெங்கே யென்முள்
மணங்கமழ் குழலா யுன்றன் மைந்தனை யரவு தீண்டி
உணங்கியே யிறந்தா னென்று ருயிர்த்திலண் மறுகி வீழ்ந்தாள்.

இ - ள். சோர்ந்த கைகளை யுடையவளாய் மிகவும் வாடின மனத்தை யுடையவளாகி வருகிற பிள்ளைகளைப் பார்த்து, பிள்ளைகளே! உங்களுடனே கூடி வந்த என் மகனெங்கே? வரக்காணேனென்றுள். அதற்கு அந்தப் பிள்ளைகள் வாசனை பரிமளிக்கின்ற கூந்தலையுடைய அம்மே! உன்னுடைய புத்திரனைப்

பாம்பு கடித்து அதனாலே சோர்ந்து மடிந்துபோனானென்று சொன்னார்கள். அதுகேட்டு மூர்ச்சையில்லாதவளாய் மயங்கிக் கீழே விழுந்தாள் சந்திரவதி எ-று.

மடத்தகை வல்லி பின்னு மைந்தரை நோக்கி யெந்த
இடத்திலே யிறந்தா னென்ன யாமவரும வழியி னிற்கும
வடததினுக் கயலே சற்றே வடக்கினிற் குசைப டர்ந்த
தடததினிற் றெறகே யென்று சாற்றியே யவர்கள் போனார்.

இ - ள். அப்படி மயங்கி விழுந்து பின்னும் அந்த யௌவனத தகுதியை யுடைய சந்திரவதியானவள் அந்தப் பிள்ளைகளைப் பார்த்து, பிள்ளைகளே! என பிள்ளை எந்தவிடததிலே இறந்து கிடக்கிறானென்று கேட்கப் பிள்ளைகள் நாங் கள் வருகிற வழியிலே நிற்கின்ற ஆலமரத்திற்குப் பக்கத்தே கொஞ்சம வடக் குத் திசையிலே தர்ப்பை படர்ந்து முளைத்திருக்கிற மேட்டுக்குத தெனபுறத் திலே இறந்து கிடக்கிறானென்று சொல்லி அந்தப பிள்ளைகள் போய்விட்டார் கள் எ - று. 11

அறுதியீ தென்று சால வறிவழிந் துருகி வீழ்ந்து
மறுகினா ளுடையோற கஞசி வாய்திறந் தாற்றாண் மாழ்கிச
சிறுதொழின் முழுதுஞ செய்து தீர்ந்தபின தேடிச சேறல
உறுதியென் றுளத்தி னுள்ளே யொடுக்கிவந தகத்திற புக்காள்.

இ - ள். முடிவு இப்படியாயிற்றென்று மிகவும் புத்தி மயங்கி மனமுருகிக் கீழே விழுந்து மயங்கினவளாகித தன்னை விலைக்கு வாங்கின பிராமணனுக்கும் பிராமணத்திக்கும் பயந்து வாயைத் திறந்து கூவி யழாதவளாய்ப் பின்னுஞ் சோர்வுடனே தான செய்வதான சிறிய பணிவிடைகள் முழுதுஞ் செய்து முடிந்தபினபு இறந்துகிடக்கிற பிள்ளையைத் தேடிக்கொண்டு போகிறதே இனித் தகுந்த காரியமென்று தன மனத்துக்குள்ளே அப்படிப்பட்ட துன பத்தை ஒடுங்கக் கொண்டுவந்து வீட்டுக்குள்ளே போயினாள் எ - று. 12

முறைமுறை பணிக ளெல்லாஞ செய்தற முடித்துப பின்னர்
மறையவன் றன்னை யேத்தி வாய்புதைத் தழுது விம்மி
இறைவகே ளரவந் தீண்டி யெனமக னிறந்தான் யானச
சிறையிலே சேறற் குன்றன றிருவுள மறியே னென்றாள்.

இ - ள். அப்படி வீட்டுக்குள்ளே வந்து கிரமங கிரமமாகத் தான செய்வ தான ஊழியங்களெல்லாஞ செய்து முடிய முடித்துப் பினபு அந்தப் பிராமண னைத தோத்திரஞ செய்து, வாயை ஒரு கையால் மூடிக்கொண்டு, அழுது துக் கித்து சுவாமி எஜமானே! கேட்பீராக: என பிள்ளை பாமபுகடித்த இறந்து போனான்; ஆகையா லினிநான் அந்த இடத்துப்போக உம்முடைய திருவுள்ள மெப்படியோ தெரிகிலேனெ சொல்லுமென்றாள் சந்திரவதி எ - று. 13

சினக்கடுஞ் சொல்லாற் சீறித் திடுக்கிட வுரப்பி வீணீ
ஏனக்குறு குறையே யன்றி யென்பொருட் கழிவு வந்தால

உனக்குறு குறைதா னுண்டோ வுறுவிலைப் பட்ட பையல்
றனக்கொரு தாயு முண்டோ தவிர்கநீ போவ தென்றான்.

இ - ள். அதுகேட்டு கோபங்கொண்ட கடுஞ்சொற்களுடனே சீறி சந்திரவதி திடுக்கிடும்படி அதட்டி அடீ பயனபடாதவளே! என பொருளுக்கு கெடுதி நேரிட்டால் எனக்கு இருந்த குறைவேயல்லது உனக்கு வருவதான குறைவு ஏதேனுமுண்டோ? எனக்காக விலையான அந்தப் பையனுக்கு ஒரு தாயானவளுமுண்டோ? (இல்லை) நீ போகவேண்டாமென்று சொன்னான் எ - று. 14

அடிமையே யெனினு மையா வநதரத் திறநதா னென்றால்
கொடியனேன் றனக்குப் பெற்ற வயிறுதான் கொதிததி டாதோ
படியின்மே லிறநதான றனனைப் பார்ததெடுத் தடக்கிக் கங்குல்
விடியுமுன் வருவே னல்கு விடையெனத தொழுது வீழ்நதாள்.

இ - ள். (அதற்கு) ஐயரே! உமக்கு அடிமைதான ஆனாலும் என கண்காணாத வனாந்திரத்திலே அந்தப் பையன் இறந்துபோனானென்று சொல்லக் கேட்டால் பாவியான எனக்குப் பெற்ற வயிறுதான கொதிப்புக் கொள்ளாதா? ஆகையால், எங்கேயோ ஓரிடத்திலே இறந்து கிடக்கிறவனைத் தேடிக் கண்டு பிடித்து எடுத் தடக்கஞ்செய்து பின்பு இந்த இராத்திரி விடிவதற்கு முன்னே வந்துவிடுகிறேன் நீர் தயவுசெய்து உத்தரவு கொடுத்தருளுமென்று வணங்கிக் கீழே விழுந் தழுதாள் எ - று. 15

மாலையங் குழலாள கூற மறையவன் மனமபொ ருநதி
வேலைகண் மிகவு முண்டு முடியுமுன் வருவா யாகில
நீலவேல் விழியா யேகு நீயென வொருகாற சொனன
காலையே யெழுநதி ருநது கடிநகா கடநது போனான.

இ - ள். பூமாலையணிந் தழகுகொண்ட கூந்தலையுடைய சந்திரவதி இவ்வாறு சொல்ல, அந்தப் பிராமணன மனஞ் சம்மதித்து நீலமலர்போலவும் வேல்போலவுங் கண்களையுடையவளே! நாளையத்தினம் என வீட்டிலே அதிகமாக வேலைகளிருக்கின்றன; அவைகளெல்லாஞ் செய்வதற்காக நீ விடிகிறதற்கு முன்னே வருவாயேயானால் போவென ஒருதரஞ் சொன்ன அப்பொழுதே எழுந்திருந்து அந்தக் காவல்கொண்ட பட்டணத்தைக் கடந்து போனாள் எ - று. 16

பாவியேன் மகனே யெனபள் பதைப்பண்மென் முகததின் மோதித
தாவியே விழுவ ணின்று தயங்கியே மயஙகி வீழ்வள
காவியங் கண்ணீர் பாயக் கதறுவள் பதறி யேங்கி
ஆவியைத தேடித் தேடி யலமரு முடல மொத்தாள.

இ - ள். பாவியான எனது புதல்வனேயென்று கூவுவாள்; போகும்போதே பதை பதைத்துக் கீழே விழுவாள்; மிருதுவான தன் முகத்திலே

அடித்துக்கொண்டு தாவிப்போய் அப்புறத்தே விழுவாள்; அங்கே கிடந்து தயங்கியு மயங்கியும் விழுவாள், நீலமலர்போன்ற கண்களிலே நீர் சிந்தக் கதறுவாள்; அப்படிக் கதறியும் பதறியும் எங்குந்தனுயிரைத்தேடி யலைகிற உடம்புபோலானாள் எ-று. 17

ஆறெலா மடிகள் வைத்த வடியெலா மிழிநீர் நின்ற
தூறெலா மரிவை சென்ற சுவடெலாங் குருதி தோட்ட
மாறெலாங் கூந்த லன்று வனமெலாந் துணிகள் யார்க்குந்
தேறெலாந் தகைமைத் தன்றிச் செடியெலாந் தேடிச் சென்றாள்.

இ-ள். அவ்வாறு அவள் போகிற வழிகள் முழுதும் அவள் கால்கள் பதிந்திருக்கின்றன; அந்தக் கால்கள் பதிவாகிக் கிடக்கிற இடமுழுதும் கண்ணீ ரொழுகுவன வாயின. அங்குள்ள முள்ளுச் செடிகள் உடம்பைக் கிழிப்பதனாலே அந்தச் சந்திரமதி போகின்ற காற்சுவடுகள் முழுதும் இரத்தம் சிந்துதலாயின. பின்னு மச்செடிகளின் மாறுகள் கூந்தலைப்பற்றி யிழுக்கவும், அந்த நெருங்கின காடெல்லாம் இடையிலுள்ள கந்தைச் சீலைத் துணிகள் கிழிந்து கிடக்கவும் இன்னபடியென்று எப்படிப்பட்டவர்களுந் தெரிந்து சொல்லொணாதபடி அந்தச் செடிகளுள்ள காடுகளிலே தேடிக்கொண்டு போனாள் எ-று. 18

ஓடினா ளுள்ள மெல்லா முருகினாள் கருகி மேனி
வாடினாள் விறகு வைத்த வடத்தினுக் கருகே வந்தாள்
நாடினாள் கழுகும் பேயு நரிகளுங் குறளுந் துன்றிக்
கூடிய குழுவி னுப்பண் குமாரனைச் சென்று கண்டாள்.

இ-ள். அப்படி தேடிக்கொண்டோடினாள், மனமெல்லா முருகிக் கரைந்தாள்; உடம்பெல்லாங் கருகி வாடினாள்; விறகுச்சுமை வைத்துக் கிடக்கிற அந்த ஆலமரத்தி னருகே வந்தாள். அங்கே வந்து தேடினாள், கழுகுகளும் பேய்களும், நரிகளும், பூதங்களும் நெருங்கிக் கூடியிருக்கிற கூட்டத்தி னிடையே தன் பிள்ளையைப் போய்க் கண்டாள் எ-று. 19

கண்டனள் கதறி வீழ்ந்தாள் கழுகெலா மிரியல் போகக்
கொண்டதோர் மகவி னாசை யாவியைக் கொள்ளை கொள்ள
முண்டகக் கரத்தா லேந்தி முருகனை மடிமேல் வைத்தே
அண்டரு மறுகி யேங்க வாய்திறந் தரற்ற லுற்றாள்.

இ-ள். அப்படிக் கண்டவுடனே அங்குள்ள கழுகு முதலியனவெல்லாம் பயந்தோடிப்போக ஓவென்று கதறிக்கொண்டு கீழே விழுந்தாள். தான் கொண்டதான ஒரு புத்திரனென்கிற வாஞ்சை அவளுயிரைக் கொள்ளை கொண்டுபோவதாகத் தனது தாமரை மலர்போன்ற கைகளிலே பிள்ளையை யெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு தேவர்களு மயங்கிப் பிரலாபிக்கும்படி வாயைத் திறந்து அழலாயினாள் எ-று. 20

### எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பனியான னைந்து வெயிலாலு லர்ந்து பசியால லைந்து முலவா
அனியாய வெங்க ணரவாலி றந்த வதிபாவ மெனகொ லறியேன்
தனியேகி டந்து விடநோய்செ றிந்து தரைமீது ருண்ட மகனே
இனியாரை நம்பி யுயிர்வாழ்வ மென்ற னிறையோனும யானு மவமே.

இ - ள். (மகனே!) பனியினாலே உனனுடம்பு நனைதலாகியும், பின்பு வெயிலினாலே காய்தலாகியும், பசியினாலே வருந்துதலாகியும், நீ சாவாமல (யாரையுங் கடிப்பதான) அநியாயச் செய்கையையுடைய வெவ்விய கண்களோடு கூடின ஒரு பாம்பினாலே நீ யிறந்து போகலான அதிக பாவம் யாது செய்தாயோ நான தெரிகிலேன இங்கே நீ ஒருவனாககிடந்து விடமாகிய வியாதிபிடித்து மணமேற் புரண்டுகிடககிற புத்திரனே! இனி யாரைவேண்டி உயிர் வாழக்கடவோம்? எனது தலைவனும நானும உயிர்வாழ்தல வீணான காரியமே எ - று. 21

நிறையோசை பெற்ற பறையோசை யறறு நிரையாய் நிறைநத கழுகி[ன்
சிறையோசை யுற்ற செடியூடி றகக விதியாரி ழைதத செயலோ
மறையோனி ரக்க வளநாட ளைதது மவழுவாத ளிதத வடிவேல்
இறையோன ளித்த மகனேயு னக்கு மிதுவோவி திதத விதியே.

இ - ள். நிறைந்த ஒலியைககொண்ட வாத்தியஙகளின முழக்கங்களிலலாமல் வரிசையாய் நிறைந்திருககிற கழுகுகளினுடைய சிறகடிததுக கொள்ளுகிற சப்தத்தினைககொண்ட செடிகளுககுள்ளே நீ யிறந்துபோகப் பிரமதேவரானவா செய்த செய்கைதானோ? ஒரு பிராமணன யாசிகக தனது வளப்பஙகொண்ட நாடு முழுதுங் கொடுதத கூரிய வேலாயுததைதயுடைய அரசனபெற்ற புத்திரனே! உனககுககூட இபபடிதானோ லபிதமான லபிவாயததது எ - று. 22

வானின்றி ழிநது சொரிகின்ற தாரை மழைபோல வீழ விழிநீர்
ஊனின்றி மேனி யுதிரங்கள் சிநத வுயிரின்றி வெமபு தழலின்
மேனின்று வெநத தளிரபோலு யஙகி விதியாரை நொநது தனியே
யானினறி ரஙக வேனென்ப திலலை யிதுவோவு னீதி மகனே.

இ - ள். எனது புததிரனே! ஆகாயததிலிருந திறங்கிப் பொழிகினற மழைததாரையைப் போற கண்ணீரொழுகவும, எனனுடமபிலே மாமிசமென்ப திலலாமல இரத்தங்க ளொழுகவும், பிராணபலமு மிலலாமல் வெப்பமாகிய நெருப்பின மேலே விழுந்த வெந்தளிரைப் போல வாடிப பிரமதேவனை நொந்து கொள்ளுகிறதாய் நான ஒருததியாக நினறு பிரலாபிகக என பிரலாபிக் கிற யெனபதில்லாமல் நீ கிடககிறதான இதுதானோ உனக்கு நியாயமாக முடிந்தது எ - று. 23

செங்கோ லறததின்மு றையேசெ லுததது திறலோனெ வர்க்கு
முரவோன், வெங்கோப யானை விறன்மன்ன னம்மை விடுவிக்க

வெண்ணி வருநாள், பங்கேரு கதது மலாபோல்வி ளங்கு வதனும
கிழ்நத பரிவால, எஙகேயெ ளுசை மகனெனறு ரைககி னியேது
சொலவன மகனே.

இ - ள். தாமரைமலாபோலு முகததையுடைய மகனே! தருமமாககப படியே செங்கோல செலுததுகினற சாமாததியனுகியும எப்படிப்பட்டவாக ளுககும அறிவாற சிறந்தவனுகியும வெவவிய கோபததைககொணட யானையை யுடைய வெறறியானமிகக நமதாசன நமமிருவரையும (தானவாஙகின பொரு ளாக கொடுதது) மீட்டுககொளள வருமபோது தான மீட்கவகநத சநதோஷதகி ஞலே எனனுடைய பிரியமுளள புததிர னெஙகேயென றெனனைக கேட்டால் அப்போது யான மறுமொழி யாது சொலலககடவேன? எ - று. 24

நீராள வாவி செறிநாட னைதது நிறைமாத வறகு தவினும்
பாராளு நீர்மை தொடாபறற தனறு படியாளு மெநதை முடியில
காராள சோகள கடவோசை யோய்வில கனஞ்சி நாட தனைமேல
ஆராள வல்ல ரவமேவ னததி லரவாலி றநத மகனே.

இ - ள். ஐயோ! வீணுக இநதக காட்டிலே ஒரு பாமபினுலே யிறந்துபோன குமாரா! நீ நிரமபக குளஙகளை நெருஙகின கோசலநாடு முழுதும நிறைவாக பெரிய தவமுனிககுக கொடுததுவிட்டாலும, உலகத்தை ஆளுவதான சமபத துத தனமை உனககிலலாமற போனதலல உன பிதாவைபபோலவே ஒரு நாட்டையாளுகிற என பிதா காலமுடிவு பெறறால, வேளாளாகள ஏாகளை வோட்டுகிற ஓசை ஓயாதிருநதுளள கனஞ்சி நாட்டைப் பினபு நீ யலலது இனியாா ஆளவாாகள எ - று. 25

நல்லோாவ குதத முறையாம றஙக ளுலெட்டி லொனறு குறையேம
இலலோாை யறப மிககழாமி றுககு மிறையனறி யேற லுகம்வம
சொலலோா மறுதது முனையோமு ரைதத துறவோாகள புததி கட
எலலோா தமககு மினிமேதவி ளாபப மெதாக வநத திதுவே. [மேவம

இ - ள். நனனூலுணாநத பெரியோாகள சொனன தருமஙகள முபபததி ரணடிலே, ஒரு தருமமாயினுங குறையாது செயதோம. எளியவாகளைக கொஞசமேனு மிகழசசி செயதிலோம, (நாஙகளாசராகையால) கொடுததுத தீாபபதான பகுதிபபொருளான ஆறிலொரு பஙகையலலது அதிகமாக விரும பினுமல்லோம, பொய சொலலி யறியோம, கேட்டவாகளுககு இலலை யெனறு மறுததுச சொலலிலோம, துறவறததாாகள சொனன புததியைக கடநது சென றிலோம், யாவருககும நனமையையே செய்துவந்தோம். இபப டிக கிருககசசெயதே எநதக காரணததிலே யெஙகள் பிளளை இப்படிப் பாமபு கடித்துச் சாகலாயின? எ - று. 26

மறைநீதி யுறறு புறநாட ழிதது வருசேனை யாள்வ தறியேம
அறைநீதி முறறு முணராவ ஷமசசை யணிவாயில வைநது மறியேம

குறையே யிழைத்து வினையே விளைத்த குடிவைத் திருந்து மறியேம்
இறையேத வத்தின விளைவேயெ மக்கு மிதுவோவி தித்த விதியே.

இ - ள். வேத நீதிப்படியே நடக்கிற அங்கியா நாட்டைக் கெடுத்து அங்கிருந்துவந்து கூடுவனவான சேனைகளை ஆளுஞ் செய்கையைத் தெரிந்தோமல்லோம், பெரியோர்கள் சொன்ன நீதி முழுதுந் தெரியாத மந்திரியையெங்களழகிதான அரண்மனைவாயிலிலே வைத்தாளவுந் தெரிந்திலோம், குறைவானவைகளையே செய்து பாவச் செய்கைகளையே மேன்மேலும் வளர்க்கிற குடிகளை எங்கள் நாட்டிலே குடிவைக்கவுந் தெரிந்திலோம், (இப்படிக் கிருக்கச் செய்தே) எங்களுக்கும் ஓ ஓ தெய்வமே! எங்கள் தவப்பயனே! நீங்கள் அமைத்த அமைப்பு இப்படி பாம்புகடித்திறப்பதோ சொல்வீர்கள் எ - று. 27

கனமுந்த ருக்கள குலமுந்த ரித்த கரமுமபெ ருத்த வுரமும்
தினமுஞ்சி றக்கு முகமுந்த ரித்த சிகையுங்கி டக்கு முறைகண்
டினமுந்த ரித்த துயிரான பாவி யிறவாம லென்றன் மகனே
மனமுந்த ரிப்ப தில்லைநொந்து பெற்ற வயிறுந்த ரிப்ப திலையே.

இ - ள். (கைம்மாறு வேண்டாது கொடுக்கிற) மேகச்செய்கையையும், கற்பக முதலான தெய்வ விருட்சங்களினுடைய செய்கையையும் கொண்ட கையும், பெரிதான சாமர்த்தியமும், எப்போதும் சிறந்துள்ள முகமும், தலையிலே கொண்ட குடுமியும், மண்மேற்கிடக்கிற வகைகளைக் கண்டும் இன்னமும் என் பாவியான உயிர் சாகாமலிருக்கிறதாயிற்று மகனே! நீ இறந்ததனாலான என் துன்பத்தை இனி என் மனமும் தாங்குகிறதாயில்லை. வருந்திப்பெற்ற என் வயிறுந் தாங்குகிறதாயில்லை எ - று. 28

பரவாதி கட்கு மிகவேவி ளைத்த படிபோலு ளத்தி லறமே
விரவாத துட்ட முனிகௌசி கற்கு வினையோமி ழைத்த குறைபோல
கரவேபி டித்து வறியேன ளித்த களிறுவி செற்ற கடுவாய்
அரவேயு னக்கு முளதோப கைக்க வளியேனி ழைத்த வினையே.

இ - ள். ஒரு சமயவாதிகள் மற்றொரு சமயவாதிகளுக்கு மிகவும் இடர் செய்கிறதுபோல, எங்கள் விஷயமாகத் தமது சிந்தையிலே தருமகுணங்களை யெவ்வளவுங்கொள்ளாத கொடுஞ் செய்கையையுடைய கௌசிக முனிவருக்கு நாங்கள் பண்ணின குறையைப்போல, எளியவளான நான் பெற்ற இளையானை போன்ற புத்திரனுயிரை மறைந்திருந்து போக்கின விஷவாயையுடைய பாம்பே! இப்படி விரோதஞ் செய்யவதான உனக்கும் பிறரால ஐயோவென்ன நிரங்கத்தக்க நான் செய்த குறைவுண்டோ? எ - று. 29

என்னுய கன்றன மணிமாா யி மேலேறி விளையாடு கின்ற வெழிலோய்
முன்னுய்வி ளைந்த கனனமேழக வெம்பின முதலைந டந்த மதலாய்
செந்நாய்தி ரண்டு செறிகானி ருந்து தெளியாதி ரங்கு மெனைநீ
அன்னுய்வ ருந்த லையெனுத தின்ற னறிவுகக டாது மகனே.

இ - ள். எனது நாயகனுடைய அழகிதான மார்பிலேறி விளையாடத்தக்க செல்வக்குமாரா! முன்னே மூண்ட நெருப்பிலே எங்களுக்கு முன்னேபோய் விழப்போன குழந்தாய்! செந்நாய்கள்கூடி நெருங்கின இந்தக் காட்டிலேயிருந்து மனந்தெளியாமல் அழுகின்ற என்னைப் பார்த்து தாயே வருந்தி யழாதேயென்று சொல்லாமற் கிடக்கிறது உன் புத்திக்குத் தக்கதல்லவே ஓ புத்திரா எ - று. 30

மறவாளெ யிற்று மணிமாசு ணத்தின் வலியாலி றந்து ளவனோ
டிறவாதி ருக்கு மதிபாவி தன்னொ டுறவேதெ னக்கு ருதியோ
திறவாய் சிவந்த கனிவாயு ரைத்தல் செய்கிலாய் முகத்து விழியாய்
பிறவாத நித்த னடியேவ ழுத்து பெருமான ளித்த மகனே.

இ - ள். பிறத்தலில்லாத கடவுள் திருவடிகளையே துதிக்கின்ற பெருமையையுடைய அரசன்பெற்ற குமாரா! கோபத்தையுடைய வாள்போலும் பற்களைக் கொண்டதாய் இரத்தினத்தையுந் தலையிலே கொள்வதான ஒரு பாம்பினது விஷபலத்தினாலே இறந்துகிடக்கிற என்னுடனே கூடச் சாவாதிருக்கிற அதிக பாவியானவளுடனே உறவுகொள்ளுகிறதினாலே என்ன பிரயோசனமென்று நினைத்தோ உனது சிவந்த கனிபோன்ற வாயால் ஒருசொல் சொல்லாதிருக்கின்றாய். என் முகத்திலும் விழியாதிருக்கின்றாய் எ - று 31

வடியேறு வெற்றி நெடுவேன்ம லாக்கை மகனோடி றந்து மடியாக்
கொடியேன்மு கத்தில் விழியாமு னிக்கு வளநாட ளித்த கொடை
இடியேற டாத்த மரமாகி மண்ணி னிடையேயு ழைத்த லழகோ [யார
அடியேனை யொக்க முடியா திருத்த லநியாய மிக்க யமனே.

இ - ள். கூர்மையேறின வெற்றிகொண்ட நீண்ட வேலைப்பிடிக்கிற மலர்போலுங் கையையுடைய மகனுடனேகூடச் செத்துப்போகாதிருக்கிற பாவியான என் முகத்திலே இனி விழிக்கமாட்டாய். (அவரியாமொன்றல,) ஒரு முனிவருக்குத் தனது வளநாடு முழுதுங்கொடுத்த பிரபுவானவர் இடியேற்றினாலே பட்டுப்போன மரம்போலாகி மண்ணிலே கிடந்து நான் வருந்துதல் ஓ இயமனே! உனக்கு அழகாயிருக்கின்றதோ? என்னையுங்கூட நீ கொல்லாதிருக்கிறது மிகவும் அநியாயம் எ - று. 32

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

என்மறுகி யிவனுடனே யிறந்தே போகி
லின்னையெடுத் தெரித்திடக்க வுரியா ரில்லை
மனமுருகா னமைவிலே கொணர்ந்தேன் சால
வன்கண்ணன் மனைவியவன் றனினமா பாவி
சினமுடையார் விழுப்புமுதற் றொலைவிலே றுகிற
செறுவரிவன் றனைக்கருக்கிச் செல்வை னென்று
தனதுதிரு மகனையெடுத் தணிதோ ளாமைத்துத்
தள்ளாடி மதிதயனார் தனையை மீண்டாள்.

இ - ள். என்று பிரலாபித்து இந்த மகனுடனேகூட நானும் செத்தேனே யானால் இந்தப் பிள்ளையை யெடுத்துக்கொண்டுபோய் தகனஞ்செய்து அடக்கஞ் செய்யத்தக்கவர்க ளொருவருமில்லை நம்மை விலைக்கு வாங்கினவன் இது கண்டு மனமிரங்கான; மிகவும் பொல்லாதவன். அவன் பெண்டாட்டியோ அவனிலும் பெரும்பாவி. அவவிருவரும் மிகவும் கோபமுள்ளவர்கள். விடிவதற்குமுன்னே நான அங்குப் போகாதிருந்தால், அதிக தண்டனை செய்வார்கள். ஆகையால், இந்தப் பிள்ளையை விரைவிலே கொண்டுபோய்த் தகனஞ்செய்விதத்துப் பிணபு போகக்கடவேனென்று தனது புத்திரனையெடுத்து அழகான தோளின்மேலே சாய்ந்ததுக்கொண்டு (திருக்குமாரனைத் தூக்கமாட்டாமல தடுமாறித) தளர்ந்தவளாகச் சந்திரதய ராஜனுடைய குமாரியான சந்திரவதியானவள் மயானமநோக்கிச் சென்றாள் எ - று. 33

காடுமே டுஞ்செறிந்த செந்நாய முன்னே
 கௌவியிழுத்த திடப்பறந்து கழுகு மோதப
போடுபோ டெனப்பலபேய் தொடாரக கொண்டு
 போகேனீ யெனக்கொடிய பூதஞ் சூழ
மாடுதோ றும்பறிக்க நரிக டாவ
 வாருகுழலுஞ் சோராதுகிலும வனநதொட டாகக
ஈடுபா டித்தனையும படடு நீண்முள
 ளிடுகாடு நீந்திநெடுஞ் சுடுகா டுற்றாள்.

இ - ள். காட்டிலும மேட்டிலுந் திரண்டு திறகின்ற செந்நாய்களுக்கு முன்னே வாயாறகுத்தி யிழுப்பதற்காகப் பறந்துவந்து கழுகுகள் மோதவும், கீழே போட்டுவிடு, போட்டுவிடென்று பலவிதமான பசாசுகள் தொடரவும், நீ கொண்டுபோகாதேயென்று கொடுமையான பூதங்கள் சூழவும், பக்கங்களெல்லாம வந்து பிள்ளையைப் பிடுங்கிக்கொண்டு போகுதற்கு நரிகள் தாண்டி விழவும், நீண்ட கூந்தலையும், அவிழ்ந்து தொங்குகிற வஸ்திரத்தையும் காட்டிலுள்ள முள்ளுகளும மாறுகளும சிக்கியிழுக்கவும இப்படித் தடைபடுகிற இவ்வளவும்பட்டு நீண்ட முட்கள் தைப்பதான காடுமுழுதுங்கடந்து நெடிதான சுடுகாட்டைப் போயச் சேர்ந்தாள் எ - று 34

பிணங்கள்சுடுங் கடும்புலைய ராவத தாலும
 பிளந்துதலை வெடித்திடுமே ரமலை யாலும
நிணங்கருகிச் சுறுநாறு முடையி னாலும
 நெடுங்கனலின் கொழுந்தெழுந்த நிவப்பி னாலும
கணங்கண்மிகக் களித்தாடுந் துழனி யாலும
 கனற்பொறியின மலிவாலும புகையி னாலும
சுணங்குபல பிணங்குபெருங் குரைப்பி னாலும
 தோகையறிந் துணாந்துகொடுஞ் சுடலை சார்ந்தாள்.

இ - ள். அங்கே பிணங்களைச் சுடுகிற கடுமையான பறையர்களுடைய சப்தத்தினாலும், அந்தப் பிணங்களின் தலைகள் பிளந்து வெடிக்கிற பெரிய

தான சப்பத்தினாலும், பிணங்களினுடைய கொழுப்புகள் கருகிச் சுறுசுறு வென்று நாறுகிற புலால்நாற்றத்தினாலும், நீண்ட நெருப்பின் கொழுந்து கிளருகிற உயர்ச்சியினாலும், பூதமுதலான கூட்டங்கள் மிகவுஞ் சந்தோஷித்துக் கூத்தாடுகிற சப்தத்தினாலும், நெருப்புப்பொறிகளின் மிகுதியினாலும், புகையினாலும் பலநாய்கள் ஒன்றோடொன்று விரோதித்துக்கொள்ளுகிற பெரிய சப்தத்தினாலும் சந்திரமதி சுடுகாடென்று தெரிந்து நிதானித்து அந்தக் கொடிதான சுடுகாட்டைப்போய் நெருங்கினாள் எ - று. 35

கண்டனள்ளீ தீமமெனக் கருதத்தி லுன்னிக்
கடவுளர்தங் காவலிற்றன் மகனை வைத்துப்
பண்டுவெந்து கரிந்தகுறைக் கட்டை யெல்லாம்
பலதிசையும் விரைந்தோடிப் பார்த்தெடுத்துக்
கொண்டுவந்து பிணங்கள்சுடுஞ் சுடலை நண்ணிக்
கொள்ளியெடுத் தோடியனல் கூட்டி மூட்டி
மண்டுதழற் கட்டையின்மேன் மகனை வைத்தாள்
வளர்ந்தெரியுங் கனலவிளக்க மன்னன் கண்டான்.

இ - ள். அப்படி நெருங்கப் போய்க் கண்டாள். இதுதான் சுடுகாடென்று மனதிலேயெண்ணி அங்கே தெய்வங்களினுடைய காவலுக்குள்ளாகத் தன் பிள்ளையை வைத்துவிட்டு, முன்னே வெந்து தீய்ந்து கிடக்கிற குறைக்கொள்ளிக் கட்டைகளை யெல்லாம் பல திக்குகளிலும் அதிசீக்கிரத்தி லோடியோடிப் பார்த்தெடுத்துக்கொண்டுவந்து, பின்பு பிணங்களைச் சுடுகிற சுடலையினிடத்திலேபோய் அந்தச் சுடலையில் ஒரு கொள்ளிக்கட்டையை யெடுத்துக்கொண்டோடிவந்து நெருப்பைச் சேர்த்து மூளப்பண்ணி அப்படிப் பற்றி யெரிவதான நெருப்புக்கட்டையின்மேலே மகனை வைத்தாள். அப்போது மூண்டெரிகிற நெருப்பு வெளிச்சத்தினாலே அதை அரிச்சந்திரனாகிய அரசன் பார்த்தான் எ - று. 36

அரவுகடித் தரசிளங்கோ விறந்தானென் ப
தறியாமல் வெகுண்டிறைவ னாரே யிந்த
இரவுதனிற் பிணஞ்சுடுவா ரறிவோ மென்று
வெழுந்திருந்து விரைந்தோடி யேடி மூடி
தரவுரிய பொருளெனக்குத் தாரா தே நீ
தனியேயிப் பனியிருளிற் சவங்கொ ணர்ந்து
கரவினழற் சுடுவதெனக் கடைவோ வென்னக்
கால்வீசிக் கான்முளையை யெடுத்தெறிந்தான்.

இ - ள். பாம்பு கடித்ததுதத் தன தரசுக்குரிய இளங்குமாரன் மடிந்து போனானென்பதைத் தெரியாமல் அரசனானவன் கோபங்கொண்டு இந்த இராத்திரியிலேவந்து பிணஞ்சுடுகிறவர்கள் யார்? அவர்களை இன்னாரென்று தெரிவோமென்று எழுந்திருந்து அதிசீக்கிரமாக விரைந்து ஓடி வந்து என்னடி மூடத

தன்மையானவளே! நீ தருதற்குரிய பொருளை எனக்கு முன்னே கொடுக்காமல் நீ ஒருத்தியாக வந்து இந்தப் பனிக் கம்முதலையுடைய இராத்திரியிலே ஒரு பிணத்தைக்கொண்டுவைத்து எங்களுக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாக நெருப்பைமூட்டிச் சுடுகிறது உனக்குத் தக்கதோவென்று தன பிள்ளையைக் காலாலே தூக்கித் தூரத்தே யெறிந்தான் எ - று. 37

எறிந்திட லு முயிரோங்க வேங்கி வேனி
லிடிவிழுந்தாற் படிமிசையே யடிசாய்ந் தாடி
முறிந்துவிழு மரம்போற்சென் றடிமேல் வீழ்ந்து
மொழிகுழறி விழியருவி சொரிய வல்லி
அறிந்துமில னிவ்வூரில வழங்கு நீதி
யருவினையே னருமிலி யறவும பாவி
மறிந்தமகன் றனைச்சுடநான் வந்தே னையா
வறியேற்குப பொருளுளவோ வழங்க வென்றாள்.

இ - ள். அப்படி எறிந்தவுடனே சந்திரவதியானவள் உயிர் சோர்வதாக அழுது, கோடையிடிவிழுந்து, அதனாலே, பூமியிலே அடிவேரற்று அசைதலாகி முறிந்துவிழுகிற மரத்தைப்போற போய் அவன காலமேல் விழுந்து வார்த்தைகள் குழறுதலாய் கண்களிலே அருவிபோல் நீரொழுக ஐயா! இந்த வூரிலே வழங்குவதான நியாயக்கிரமத்தை எவ்வளவும் நான தெரிந்தேனல்லேன. தீராத பாவஞ்செய்துள்ள நானோ ஆருமற்றவள். மிகவும பாவி, இறந்துபோன எனபிள்ளையைச் சுடுதற்கு நானொருத்தியாகவே வந்தேன். ஆதலால், ஐயனே! எளியவளான உமக்குக் கொடுக்க என்னிடத்திலே எப்படிப் பொருளுண்டாயிருக்கும என்று சொன்னாள எ - று 38

பொருளுடையேன றமருடையே னானு விந்தப
புத்திரனைத் தோண்மீது வைத்துப போந்திவ
விருளிடையிற சுடலையிலவந தெய்து வேனோ
வெரிந்தகுறைக கடடையினி லேறறு வேனோ
தெருளுடையா யறமுடையாய் வினையே னீனற
சிறுவனையான் சுடக்கருணை செய்யாய் தேயா
அருளுடையா யாதார மற்றேற குனற
னடியினையே தஞ்சமென வலறி வீழ்ந்தாள்.

இ - ள். பொருளுள்ளவளாய் உறவினரையு முடையவளானால், நான இந்தப்பிள்ளையை எனதோளினமேலே சாத்தித் தூக்கிக்கொண்டுவந்து இந்த இருட்டிலே சுடுகாடு வந்துசேருவேனோ? இனனமும எரிந்தவிந்து கிடக்கிற குறைக்கொள்ளிக் கட்டைகளை அடுக்கி அதனமேல பிள்ளையை வைப்பேனோ? இதெல்லாந் தெளிந்து கொண்டவரே! தருமந்தெரிந்தவரே! பாவியான நான பெற்ற பிள்ளையைத் தகனஞ்செய்வதாக நீர் கிருபைசெய்யவேணும், குறையாத இரக்கமுள்ளவரே! யாதொரு ஆதாரமுமில்லாத எனக்கு உம்முடைய

பாதங்க ளிரண்டுமே ஆதாரமென்றுசொல்லி அரசன் கால்மேலே அலறிக்கொண்டு போய்விழுந்தாள் எ - று. 39

பொன்னனையாய் விடுவிடுயான் புலைய னென்னிற்
புலையனுமல் லேன்புலையற கடிமை கண்டாய்
என்னடிநீ தீண்டுவது தகாது நீதா
னிபபொருட்கி யானுரிய னலேனென் னையாளவோன
சொன்னபணங காலுண்டு கொளளி யாடைத
துண்டமுமொன் றுண்டுதநது சுடுதி யனபால
அன்னவன்றன படியாக வெனககுத தநத
வாயககரிசி யானளிபபே னறிதி யென்றன.

இ - ள். (அப்படி விழுந்து காலைப்பிடிககிறதைக கணடு) ஓ இலட்சுமிக கொப்பானவளே! என காலை விட்டுவிடு, நான சுடுகாட்டுககுச் சொந்தமான பறையன என்று கொள்வாயானால், அநத எஜமானுன பறையன நானல்லேன; நானே அந்தப்பறையனுக கடிமையானவன, நீ என காலைத தொடுகிறதுனக்குததகாது, இந்தப் பொருளுககு நான சொந்தககார னல்லேன; எனனை அடிமையாகக கொணடவன சொலலியிருககிற காறபண முணடு கொள்ளித் துணடு வஸதிர மொனறுண்டு; ஆக இவவிரண்டையு நீ கொடுததுவிட்டுப் பிரியததுடனே சுட்டுககொள்; அந்த எஜமானுகிய பறையன எனககிப்படிச் செலவாகக கொடுதத வாய்ககரிசியை (வேணுமானு லுனககுப் பிரியததுடனே நான கொடுககிறேன. (இந்தப்படிதான இவவூரச் சுடுகாட்டிலே நடககிற வழககம்) தெரிந்துககொள்ளென றரசன சொனனுன எ - று 40

துஞ்சியமைந தனையெடுததுச் சுமநது போநது
சுடுவாரற றிடுகாட்டிற றோண்மே லேறறிப
பஞ்சிபடும பாடுபடும பாவி யேற்குப
பணமேது கொளளிமுறிப பாதி யேது
நெஞ்சுதளாந தருவினையேன வருநதுக கண்டு
நீயிரங்கா யெனவிரநது நிறகுங காலை
வஞ்சிதிரு மணிமிடறறில வயஙகா நின்ற
மஙகலநாண் கண்டிறைவன் மறிததுஞ் சொல்வான்.

இ - ள். இறந்துபோன புததிரனைத தூககிச் சுமந்துகொண்டு வந்து சுடுகிறவர்களில்லாமல் சுடுகாடுவரையிலும் தோள்மேலே தூககிப் பஞ்சபடுகிற பாடெல்லாம் பட்டு இனனமும அப்படியே படுவதான பாவியான எனனிடத்தில் எப்படிப் பணமுணடாகும்? கொளளி வஸதிரததுணடு எபபடிக கிடைப்பதாகும்? மனந்தளர்ந்து தீரவதில்லாத பாவியான நான வருததபபடுகிறதைக் கண்டு நீரே தயவுசெய்யவேணுமெனறு நலல வாரததை சொல்லிககொணடு நிற்கிறபோது அந்தச் சந்திரமதியினுடைய அழகிதான திருக்கழுத்திலே விளஙகுகினற திருமஙகிலிய சூஸதிரததைக கண்டு அரசன பினனுஞ்சொல்லுகிறன் எ - று. 41

நல்லைநல்லை யறச்சமர்த்தி நீயே கண்டே
னன்னுதலா லனைவரினு மிந்த்ர சாலம
வல்லைவல்லை விறகுகளுங் களவே செம்பொன்
மங்கலநா ணுன்கழுத்தி லிருக்க வேதும்
இல்லையென சொல்லுவது சற்று மேலா
திதனையெனக் கீவாயென் றியமப வேடர்
பல்லமுயிர் நிலைவாயிற்பட்ட மான்போற
பதைபதைத்துப் பைந்தொடியாள பதறி வீழ்நதாள்.

இ - ள். நீ நலலவளே; நல்லவளே; மிகவுஞ் சமர்த்துள்ளவள் நீயே நான் பார்த்தேன! நல்ல நெற்றியையுடைய பெணகள் எல்லாரிலும இந்திரசால வித்தையில வல்லவளா யிருக்கிறுயென்று (புகழ்வதுபோ லிகழ்ந்து) நீ அடுக் கின விறகுகள்கூட திருடியே கொண்டுவந்திருககிறுய். சிவந்த பொனனுற் செய்த திருமங்கிலியம் கயிற்றுடனே உனகழுத்தி லிருககச்செய்தே ஒன்று மில்லையென்று சொல்லுகிறது சிறிதும பொருந்தாது இந்தத் தாலியை எனக் குக கொடுககவேண்டிய பொருளாகக கொடுவெனறு சொல்லவே, வேடர்க ளுடைய அம்புகள்மிகக குறிச்சி வாசலிலே அகப்பட்ட மானைப்போல துடி துடிததுச் சந்திரமதியானவள் பதறி விழுநதாள் எ - று. 42

### கலி விருத்தம்

வாடி னளடர்ந் தாண்மலர் மாமுகம
கோடி னுள்குலைந தாளலைந தாளகொடுங்
கோடி நாளவநத தென்றுகி லேசமெய்
மூடி னுணெடு மூசசெறிந தாளரோ.

இ - ள். உடமபெல்லாம வாடினுள்; தளர்ச்சியாயினுள்; தாமரை மலர் போலும் பெருமை பொருந்திய தனது முகங் கோணுதலானுள்; பயந்தாள்; வருந்தினுள்; கொடிதான கெடுதலிபபோது வநது சேர்ந்ததெனறு துனபத தையே உடம்பு கிரமபமூடுதலானுள்; பெருமூச்சும விட்டாள எ - று 43

அலைவி லாவரிச் சநதிரற் கல்லது
தொலைவில யாவாககுந தோறறரு மஙகலம
புலையன் காணவும போதுவ தோவெனு
உலையின் மீது மெழுகொத துருகினுள்.

இ - ள். எககாலததும் வருந்துதல் கொளளாத அரிச்சந்திர மகாராஜ னுக்கேயல்லாமல் வருந்துதலையுடைய எல்லாருக்கும் காணப்படாத எனது திரு மங்கிலியமானது ஒரு பறையன காணவுமாயிற்றேயெனறு கொல்ல னுலையின மேலிட்ட மெழுகையொப்பா யுருகினுள் எ - ற. 44

இருள றுங்குணத தெந்தைக்கு நல்வரம்
அருளுங் காலத் தரவணிவே ணியான்

